முஸ்லிம்

# தமிழ்ப் புலவர்கள்



அப்துற்-றஹீம்

யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்,
155/156, அங்கப்ப நாயக்கன் தெரு,
சென்னை-1.

# அர்ப்பணம்

*தமிழ் கூறும் நல்லுலகு வாழ்*
*முஸ்லிம்களின் முழுமுதற் கவிஞராம்,*
*மிஃறாஜ்மாலை பாடியருளிய மேதகையாம்,*
*என் மூதாதையர்*

ஆலிப் புலவர் அவர்களுக்கு
*இந்நூலை அர்ப்பணிக்கின்றேன்.*

# பதிப்புரை

குமரிக் கண்டத்தில் பிறந்து, தென் மதுரையிலும் கபாட புரத்திலும் மதுரையிலும் வளர்ந்து, சங்கப் புலவரின் அன்பு மடியில் தவழ்ந்து, மக்கள்தம் இன்பத் தோளில் புரண்டு, பொலிவும், புகழும், வளமும் வனப்பும் பெற்றுயர்ந்தது நந்தம் செந்தமிழ்.

இளமையின் செழுமையும் பருவத்தின் மெருகும், பெருமையின் பூரிப்பும் பெற்றிலங்கும் அதனை, புலவரும் புரவலரும் காவலரும் நாவலரும் கண்ணின்மணி போற் பேணிக் காத்தனர்; விழியின் ஒளி போன்று விரும்பி யுவந்தனர். இனிமையும் எழிலும் ஒன்றுகலந்தமைந்த அதன் உடல் முழுதும் ஒளி பொழியும் மணி மாலைகளும் அழகு தவழும் அணிகலன்களும் அள்ளிப் புனைந்து கண்டு மகிழ்ந்தனர். கன்னித் தமிழின் அழகிற் கட்டுண்டு காதல் வயப்பட்டோரில் முஸ்லிம் பாவாணர் பலராவர். அவர்தம் தேனினுமினிய தீம்பாவினத்தில் புராணங்களும், கலம்பகங்களும், பிள்ளைத் தமிழ்களும், மாலைகளும், நாயகங்களும், படைப்போர்களும், அந்தாதிகளும் அமுதமனைய இன்னபிறவும் இயற்றித் தமிழணங்கின் பொன்மேனி யெங்கும் அணிவித்தனர். தாமணிவித்த அணிகலன் கண்டு பூரிப்படைந்தனர்; புளகாங்கிதமுற்றனர்.

தம் பாவாலான மாமணிகளை, நாவிற் பிறந்த அணிகலன்களைத் தமிழுக்குச் சூட்டிக் களித்திட்ட அப் புலவர் பெருமக்களைத் தமிழ் கூறும் நல்லுலகு இதுவரை மறந்தே யிருந்தது. எனினும் தமிழ் மீண்டும் மணிக்காலமளி ஏறி அரசோச்சப் போகும் நல்லோரை நெருங்கும்போது தமிழுக்கு அழகுசெய்து வையமெங்கும் அதன் புகழ் பெய்து வாழ்ந்த—வாழ்கின்ற அப் புலவர் பெருமக்களை நினைவு கூரும் முகத்தான் "முஸ்லிம் தமிழ்ப் புலவர்கள்" என்ற இந் நூல் வெளிவருவது மிகவும் சிறப்பேயாகும்.

இந் நன்முயற்சி வெற்றிபெற வேண்டுமென விரும்பியவர் எண்ணற்றோர். இந் நற்பணி இனிதே நிறைவேறுவதற்கு உதவியவர்கள், தமிழ் வழங்கும் வையமெங்கும் பரவி வாழும் பல பல பெருமக்கள். அவர்கள் அனைவர்க்கும் நம் இதயம் கனிந்த நன்றி.

இதோ பெருமைமிகு இந்நூலைத் தமிழ்ப் பெருமக்கள் முன்னிலையில் சமர்ப்பித்துவிட்டோம்.

———

# உட்பொதிந்தவை


முன்னுரை 5

1 உமறுப்புலவர் 27

2 சேகனாப்புலவர் 89

3 காசிம்புலவர் 133

4 ஆலிப்புலவர் 150

5 ஜவாதுப்புலவர் 161

6 சையிதுமுகிய்யித்தீன் கவிராஜர் 194

7 சையிது முகம்மது அண்ணாவியார் 208

8 வண்ணக்களஞ்சியப்புலவர் 221

9 குஞ்சுமூசுப்புலவர் 237

10 ஐதுறூசுநயினார்ப்புலவர் 255

11 குலாம்காதிறு நாவலர் 262

12 பிச்சை இபுறாகீம்புலவர் 285

13 சதாவதானி செய்குதம்பிப் பாவலர் 300

14 மு. ரு. முகம்மது இபுறாகீம் சாகிபு புலவர் 331

15 சையிதுமுகம்மது ஆலிம்புலவர் 361


## புலவர் ஞானிகள்


16 தற்கலை பீர்முகம்மது சாகிபு 397

17 ஞானியார் சாகிபு 409

18 குணங்குடி மஸ்தான் 417

அநுபந்தம் 445

# முன்னுரை

பழம் பெரும்பூமி என்று மண்நூல் ஆராய்ச்சியாளர்க
ளாலும் மற்றையோராலும் போற்றப்படும் என்தாய்த்
திருநாடாம் இத்தமிழகம் இஸ்லாமிய வரலாற்றின்படியும்
முதல் மனிதராகிய ஆதம் (அலைஹி) அவர்கள் விண்ணுல
கிலிருந்து மண்ணுலகில் அடிவைத்த பொன்னாடாகும்.
அரபி வரலாற்று ஆசிரியர்களால் 'சரந்தீப்' என்று
அழைக்கப்பட்ட முற்காலத் தமிழகத்தின் ஒரு பாகமாகிய
தற்கால இலங்கையிலே ஓரே இறை வணக்கத்தை மேற்
கொண்ட உத்தமத் திருநபியாம் அம்முதல் மனிதர் அடி
வைத்த அம் மாமலையானது இன்றும் ஆதம்மலை என்ற
அழகுசால் பெயருடன் அவனிக்கொரு பெரும்
புதுமையாகக் கம்பீரமாகக் கூம்பு நீட்டிக் காட்சி
வழங்கிக் கொண்டுள்ளது. விண்ணிலிருந்து அன்னா
ருடன் மண்ணிலே இறக்கிவிடப்பட்ட அவர்களின் துணைவி
யார் ஹவ்வா அவர்கள் அரபுநாட்டின் தற்போதைய
துறைமுகப் பட்டணமாகவுள்ள ஜித்தாவிலே அடிவைத்த
னர் என்றும் அம்மாநபியும் அவர்கள் தம் அருமை மனைவி
யாரும் இருநூறு ஆண்டுகள் பிரிந்திருந்து தங்களின் பவம்
துடைத்து ஆட்கொள்ளவேண்டுமென்று கன்னங்களிலே
கண்ணீர் ஆறு கரைபுரண்டோட அழுது இறைஞ்சிய பின்
அளப்பரும் அருளாளனும் அன்புடையோனுமாகிய அல்
லாஹ் அவர்களை மன்னித்து மக்காவின் அருகிலுள்ள அர
பாத் என்ற குன்றின்மீது ஒன்றுசேரவைத்தான் என்றும்
அதன்பின் அவர்கள் தமிழகம் திரும்பி, நன்மக்களை ஈன்
றெடுத்தனர் என்றும் இஸ்லாமிய வரலாறு கூறுகிறது.
இதனையே ஜார்ஜ் சேல் என்பார் தாம் எழுதிய திரு
குர்ஆன் மொழிபெயர்ப்பின் முகவுரையிலும் குறிப்பிடுகின்
றார். இவ் வரலாற்றினுக்கு ஏற்ப ஆதம் (அலைஹி) அவர்
களின் மக்களான ஆபில், காபில் (Abell & Cain) ஆகிய இரு
வருடைய சமாதிகளும் இராமேஸ்வர ரயில் நிலையத்தி
லிருந்து ஒரு நூறு கஜத் தொலைவிற்கப்பால் இன்றும் காட்சி

வழங்கிக்கொண்டுள்ளன* அவர்களின் மற்ற மக்களெல்லாம் இத் தமிழகம் முழுவதும்பரவி ஒரே இறைவனை வணங்கும் உத்தமத் திரு அடியார்களாக விளங்கிவந்தனர். தமிழ்ப் பெருமக்கள் ஒரே இறை வழிபாட்டையே மேற்கொண்டிருந்தனர் என்றும், ஒன்றே குலம் என்பதும் ஒருவனே தேவன் என்பதும் அவர்களின் அறநெறியாக இருந்தன வென்றும் பழந்தமிழ் நூல்கள் பறைமுழக்குவதும் இதற்குச் சிறந்த சான்றாகும். உருவ வழிபாடு தமிழகத்தில் நுழைந்தது ஆரியர்கள் தமிழகத்தில் நுழைந்ததன் பின்தான் என்பது ஆராய்ச்சி வல்லுனர்களும் ஒப்புக்கொள்ளும் உண்மையாகும். மேலும் நம் இன்பத் தமிழகத்தில் எக்காலத்திலேயாயினும் தமிழைத் தவிர வேறு எம்மொழியும் பேசப்பட்டதாக ஆராய்ச்சி அறிவிற்கு எட்டாததாலும் ஆதம் (அலைஹி) அவர்களுக்கு இறைவன் எல்லா மொழிகளையும் கற்றுக்கொடுத்திருந்த போதினும் அன்னார் முதன்முதலில் அடி வைத்தது இத் தமிழகமாகவே இருப்பதால் அவர்கள் முதன்முதலாக இம் மண்ணிலே மொழிந்தது தமிழ்மொழியாகவே இருக்கலாமென்றும் சிலர் கருதுகின்றார்கள்.

பின்னர் ஆதம் (அலைஹி) அவர்களின் வழித்தோன்றல்கள் வாழையடி வாழையாகப் பெருகி, உலகின் நாலா திக்கும் திகாந்தமும் பரவி, பல்வேறு மொழிகளைப் பேசி பல்வேறு பழக்க வழக்கங்களை மேற்கொண்டு வாழ்ந்துவந்தனர். எனினும் ஆதி மனிதர் ஆதம் (அலைஹி) அவர்கள் அடிவைத்த நற்பேறோ என்னவோ சரந்தீபும் அதன் சூழலும் எழில் கொழிக்கும் வளங் கொழிக்கும் இன்ப மண்ணாக விளங்கின. அவ் வளங்களை அள்ளிச் செல்வதற்காக கிரேக்கரும், உரோமானியரும், எகிப்தியரும், அரபிகளும், சீனரும் ஏனையோரும் திரைகடலோடித் திரண்டுவந்தார்கள்.

---

* Vide Illustrated Weekly of India vol LXV No 43 page 25 dated October 22, 1944 published with a picture with head lines "Link with Biblical History"

"This Muslim mosque about 100 yards from Rameswaram Railway Station is reputed to contain the tombs of Cain & Abell."

நபி சுலைமான் (அலைஹி) அவர்களின் காலத்தில் இந்தியாவிலுள்ள ஓபிர் (Ophir) என்ற துறைமுகத்திலிருந்து மெஸபடோமியாவிற்குத் தந்தமும் தங்கமும் மந்திகளும் மயிற்றோகைகளும் ஏற்றுமதி செய்யப்பட்டன என்று பைபிளின் பழைய ஏற்பாடு பகர்கிறது. அதன்பின் கிரேக்க, உரோமப் பேரரசுகளுடன் இந்தியாவின் வணிகத் தொடர்பு பன்மடங்கு அதிகமாகியது. அவை டிண்டரிஸ் என்று அழைக்கும் தொண்டிப் பட்டினத்துடனும் கொற்கை, காவிரிப்பூம்பட்டினம் ஆகியவற்றுடனும் வணிகத் தொடர்பு கொண்டிருந்தன. அகஸ்டஸ் ஸீஸர் என்ற ரோமானியப் பேரரசனின் அவைக்கு அவனின் சமகாலப் பாண்டிய மன்னன் ஒருவன் தூது அனுப்பிவைத்தனன் என்று மேல்நாட்டாசிரியர் ஒருவர் கூறுகின்றார். தமிழகத்தில் நெய்யப்பட்ட மூங்கில்தோல் போன்ற துணிகளையும் தமிழர்கள் செய்த அழகிய அணிகலன்களையும் ரோமானிய வனிதையர் வெகு ஆவலுடன் பெரும் பொருள் கொடுத்து வாங்கி அணிந்து மகிழ்ந்தனரென்றும் எனவே தங்களின் நாட்டுக் கருவூலம் வறண்டுவிடுமோ என்று அஞ்சிய அந்நாட்டு அரசியலார் இந்தியப் பொருள்களின் இறக்குமதிக் குறைவுக்கு ஒரு விதி செய்தனர் என்றும் தெரியவருகிறது. இந்திய நாடு ஏராளமான செல்வத்தைத் தங்களின் நாட்டிலிருந்து கவர்ந்து கொள்கிறது என்று பிளினி என்ற உரோம வரலாற்று ஆசிரியர்வயிறெரிந்து எழுதுகிறார். மலையாளக் கரையிலுள்ள கொடுங்களூரில் (Crancanore) ரோமர் குடியேற்றப்பகுதி ஒன்று இருந்ததென்றும் அலெக்ஸாண்ட்ரியாவில் இந்தியக் குடியேற்றப் பகுதி ஒன்று இருந்ததென்றும் தெரியவருகிறது. இந்தியாவின் பழம் துறைமுகப்பட்டினங்களிலே இன்றும் பல ரோமானியப் பேரரசர்களின் நாணயங்கள் தோண்டி எடுக்கப்பட்டு சென்னை பொருட்காட்சிசாலையில் வைக்கப்பட்டிருக்கின்றன.

வாணிபத்தின் பொருட்டு தமிழகம்புக்கிய வேற்று நாட்டு மக்களை நம் மக்கள் "புலம்பெயர் மாக்கள்" என்றும் 'வம்பமாக்கள்' என்றும் அழைத்தனர். அவர்கள் கொணர்ந்த பொருள்களும் புரவிகளும் நம் நாட்டுத் துறைமுகங்களிலே இறக்குமதியாகி நல்விலை பெற்றன. இதனையே பட்டினப் பாலையில்,

"நீரில் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலில் வந்த கருங்கறி மூடையும்"

என்று கவினுறக் குறிப்பிடப்படுதல் காண்க. அவர்களை நம்மக்கள் 'மாக்கள்' என்று அழைத்திருப்பதிலிருந்து அவர்கள் நம் மக்களைவிடப் பண்பாட்டில் குறைந்தவர்கள் என்பது நன்கு தெளிவாகின்றது. அம்மக்களை நம் மக்கள் 'யவனர்' என்ற அடைமொழியிட்டும் அழைத்தனர். முல்லைப் பாட்டு என்னும் நூலில் அவர்களைப் பற்றிக் கூறுங்கால் அவர்கள் நீண்ட அங்கியை அணிந்து, உடற்கட்டுடன் பயங்கரத் தோற்றமாகக் காட்சி வழங்கினர் என்பதனை

"மெய்ப்பை புக்க வெருவரும் தோற்றத்து
வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்"

என்று எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அவர்களுக்குத் தமிழ்மொழி தெரியாததலால் சைகை மூலமே அவர்கள் தங்களின் உளக் கருத்துக்களைத் தெரிவித்தனர் என்பதனையும் அவர்கள் சட்டை அணிந்திருந்தனர் என்பதனையும்

"உடம்பின் உரைக்கும் உரையா நாவில்
படம்புகு மிலேச்சர்"

என்று அந்நூலில் மொழிந்திருப்பதிலிருந்து நாம் அறியவருகிறோம். 'நெடுநல்வாடை' என்னும் பழம் இலக்கியத்தில் அதன் ஆசிரியரான நக்கீர தேவர்,

"யவன ரியற்றிய வினைமாண் பாவை
கய்யேந் தய்யக னிறைய நெய் சொரிந்து"

என்று கூறியிருப்பதிலிருந்து நம் நாட்டு மன்னர்களின் அரண்மனைகளை யவனச் சிற்பிகள் செய்த பாவை விளக்குகள் அணி செய்தன என்று அறிகிறோம்.

இந்த 'யவனர்' என்ற சொல்லானது பொதுவாக வேற்று நாட்டவரைக் குறிப்பிட்ட போதினும் சிறப்பாக

அரபிகளையே குறிக்குமென்பது செந்நாப்போதாரின் நன்னூலுக்கு உரை தந்த நன்னூலினர், நச்சினார்க்கினியர், யவனர் என்ற சொல்லுக்கு 'சோனகர்' என்று உரை எழுதியிருப்பதிலிருந்து நன்கு விளங்கவருகிறது.

கி. மு. 178—ஆம் ஆண்டில் நம் தமிழகத்திற்குப் போந்த அகதார்சைட்ஸ் என்ற கிரேக்கப் பிரயாணி ஒருவன் நம் தமிழகத்திலே ஸபேயியா (Sabaea) என்ற ஓர் ஊர் இருந்ததாகவும் அது பெரும் வாணிபத்தின் இருப்பிடமாக விளங்கியதாகவும் அங்கு அரபிகளுக்கு மிகுந்த செல்வாக்கு இருந்ததாகவும் குறிப்பிடுகின்றான். உண்மையில் கூறப்போனால் சீனாவிலிருந்து அரேபியா வரையிலுமுள்ள கப்பல் வாணிபம் அரபிகளின் கையிலேதான் தனிப்பெரும் உரிமையாக இலங்கிவந்தது. ஐரோப்பாவிற்கும் கீழ்நாட்டிற்கும் அவர்கள் தாம் தொடர்பு கூட்டும் சங்கிலித்தொடர் போன்று விளங்கிவந்தனர். பருவக் காற்றின் பலன்களை உலகில் முதன்முதலாக அறிந்தவர்கள் அவர்களேயாதலின் தென்மேற்குப் பருவக்காற்று வீசும்பொழுது தங்கள் நாட்டிலும் அதன் சூழலிலும் உள்ள பட்டுத் துணிகள், கண்ணாடிப் பொருள்கள், வாசனைத் திரவியங்கள் முதலியவற்றை ஏற்றிக்கொண்டு கேரள நாட்டின் துறைமுகப் பட்டினங்களான கள்ளிக்கோட்டை, கொடுங்கோளூர், கொல்லம் ஆகியவைகளில் விற்று அதன்பின் பாண்டியநாட்டுத் துறைமுகப்பட்டினமான காயலுக்குச் சென்று அங்கிருந்து தொண்டி, பாசிப்பட்டினம் ஆகியவற்றைக் கடந்து இலங்கை செல்வர். அதன்பின் வடகிழக்குப் பருவக்காற்று வீசும் காலத்து இங்குள்ள அகிலையும், துகிலையும், சந்தனத்தையும், முத்தையும், மிளகையும், ஏலத்தையும் தங்களின் மரக்கலங்களில் ஏற்றித் தங்களின் தாயகம் கொண்டு சென்று அங்கிருந்து மேலை நாட்டுக்கும் அனுப்பி வாணிபம் செய்வர். இவ்வாறு பல நூற்றாண்டுகள் உருண்டோடின.

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் அரேபியாவிலே ஒரு புது வித ஞான ஒளி தோன்றியது. மறம் போக்கி அறம் புகுத்த அவனிக்கொரு புதுமையாக அண்ணலெம் பெருமான் முகம்மது தங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் திருத்தோற்றம் வழங்கினார்கள். அவர்களின் அன்பொழுகும் திருவதனத்தாலும் அறம்காட்டும் திருநெறியாலும் ஈர்க்கப்பட்ட அவ்வரபிகள் புத்துணர்ச்சி பெற்றார்கள். புது

வாழ்வை எய்தினர். உலக வரலாற்றின் போக்கையே மாற்றியமைக்கவல்ல செயற்கரிய செயல் செய்தனர். இருளில் தட்டுத் தடுமாறி உழன்றுகொண்டிருந்த மக்களுக்கு அருள் ஒளியை, ஆன்மீக வழியை, அல்லாஹ்வின் வழியைக் காண்பித்தனர். 'எல்லா நாடும் அல்லாஹ்வுடையது; அல்லாஹ்வுடையதெல்லாம் நம்முடையது' என்ற மாபெரும் தத்துவத்தால் ஈர்க்கப்பட்டு, 'யாதானும் நாடாம், யாதானும் ஊராம்' என்று உலகின் எண்கோணங்களிலும் சென்று குழுமினார்கள். அவ்விதம் வந்தவர்களில் முகம்மதெங்கள் நபிகள்கோமான்(ஸல்) அவர்களின் திருத் தோழர்களில் ஒருவரான தமீம் அன்சாரி அவர்கள் ஸஆதத் பந்தர் என்ற கோவளத்திலும் மற்றொருவரான உக்காஸா ஸஹாபி அவர்கள் முஹம்மதுபந்தர் என்ற பரங்கிப்பேட்டையிலும் அடங்கப் பெற்றுள்ளார்கள்.* அவர்கள் இருவரின் அடக்க இடங்களும் இன்றும் அவ்விருஊர்களிலும் காட்சி வழங்கிக்கொண்டுள்ளன.

இக்காலத்திலேதான் பதினெண்சித்தர் கூட்டங்களுடன் இருந்துவந்த இராமதேவர் என்ற ஒரு சித்தர் மக்கா சென்று முகம்மதெங்கள் நபிகள்கோமான்(ஸல்) அவர்களைத் தரிசித்து இஸ்லாத்தைத் தழுவி யாக்கூப் என்னும் பெயரும இடப்பட்டு பின்பு சதுரகிரி மலைக்கு வந்து சித்தர் கூட்டங்களுடன் சேராமல் தனித்து வாழ்ந்துவந்தனர் என்பது சித்தர் பாடல்களால் நன்கு விளங்கவருகிறது. மேலும் யாகோபு வைத்திய சிந்தாமணி என்னும் நூலில் மேற்படி யாக்கூபே தம் வரலாறு முழுவதையும் தெளிவாகக் கூறுகின்றார். இதற்கு ஆதாரமாக இன்றும் சதுரகிரி மலை மேலுள்ள ஒரு மொட்டை மலைக்கு துலுக்கன் மொட்டை மலை என்றும், அம் மலையினுச்சியில் எக்காலத்தும் வற்றாக் குளம் ஒன்றிற்கு துலுக்கனூருணி என்றும் பெயர் வழங்கி வருகிறது.

ஒன்பதாவது நூற்றாண்டில் புகழ்பெற்ற வரலாற்றுநூல் வல்லுனர்களான இப்னு குர்தாத்பாஹ் அவர்களும் மஸ்

---

* உக்காஸா ஸஹாபி, முஹம்மது ப்ந்தரில் அடங்கப் பட்டிருப்பதாக அக்பர்ஷாகான் நஜீப் ஆபாதி என்பவர் தாம் எழுதிய 'ஆயினயெ ஹக்கீகத் நுமா' என்னும் நூலில் 47-வது பக்கத்தில் குறிப்பிடுகின்றார்.

ஊதி அவர்களும் தமிழ்நாடு போந்தனர். அக்காலை இங்கு அம்மான், பஸரா ஆகிய அரபு நகரங்களிலிருந்து வந்து வாணிபம் செய்துவந்த அரபிகளைக் கண்டு அளவளாவி அவர்களைப் பற்றிய குறிப்புகளை எழுதிவைத்துள்ளார்கள்.

இதே நூற்றாண்டில்தான் ஆதம் மலையைத் தரிசித்துச் செல்வதற்காக அரபு நாட்டிலிருந்து பிரயாணக் குழு ஒன்று கிளம்பி இந்தியாவின் மேலைக் கடற்கரையிலுள்ள கொடுங் கோளூர் துறைமுகத்தில் வந்து நங்கூரமிட்டது. அக் குழு வின் தலைவரான ஷெய்கு ஐ(க்)கியுத்தீன் என்பவரை அக் கொடுங்கோளூரில் செங்கோல் செலுத்திவந்த சேரமான் பெருமாள் என்னும் மன்னர் தம் அரண்மனைக்கு வரவழைத்து அளவளாவினார். அவர் பிறந்த நாட்டினைப் பற்றியும் அங்குள்ள மக்களின் பண்பாடுகளைப் பற்றியும் வினவினார். அப்பொழுது ஷெய்கு ஐ(க்)கியுத்தீன் என்னும் அப்பெரியார், அரபிகளாகிய தங்களின் மூதாதையர் அற நெறி தவறி மறநெறியில் அடியெடுத்துவைத்து அழிச்சாட் டியங்களிலும் அட்டூழியங்களிலும் ஈடுபட்டுவந்தனர் என்றும் அப்பொழுது அவனிக்கொரு அருட்பெருங்கொடையாக அளிக்கப்பட்ட முகம்மது நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் தோன்றி எவ்வாறு மாக்களாக வாழ்ந்துவந்த அர பிகளை மக்களாக மாற்றியமைத்துவந்தார்கள் என்பதனையும் அன்னாரின் பொன்னே போன்ற அறவுரைகளையும் உவகை பொங்க உணர்ச்சியுடன் எடுத்துரைத்தனர். அதைக் கேட் டதும் சேரமான் பெருமாளின் நெஞ்சம் நெகிழ்ந்து நெக் குருகியது. அப் புதுமதம் தோன்றிய நாட்டினையும் அங் குள்ள மக்களையும் நேரில் பார்த்தறிய விரும்பிய சேரமான் பெருமாள் ஷெய்கு ஐக்கியுத்தீனை நோக்கித் தம்மையும் அவர் திரும்பும்பொழுது அரபு நாட்டுக்கு அழைத்துச்செல் லுமாறு வேண்டினார். இவையெல்லாம் மறைமுகமாக நடந்தன.

கி. பி. 825-ஆம் ஆண்டு ஆகஸ்ட் திங்கள் ஓரிரவு சேர மான் பெருமாள் துயின்றுகொண்டிருந்த தம் மனைவியைத் தட்டி எழுப்பி, தாம் வெளியூர் செல்ல இருப்பதாகவும் எனவே, அரசபாரத்தை ஏற்றுக்கொள்ளுமாறும் கூறினார். அவள் மறுக்கவே தம் மருமகனுக்குக் கைச்சாத்திட்டு எழுதி அரசபாரத்தை ஒப்படைத்துவிட்டு இலங்கையிலிருந்து திரும்பி வந்திருந்த அந்த அரபியப் பிரயாணக் குழுவுடன்

அவ்விரவே புறப்பட்டுவிட்டார். கப்பல் காற்றினும் கடிதாகச் சென்று தர்மபட்டணத்தை அடைந்து அங்கிருந்து புறப்பட்டுப் பாரசீக வளைகுடாவிலுள்ள ஷஹ்ர் என்ற துறைமுகத்தை வந்தடைந்தது. இச் செய்தியை இப்னு பதூதா, பரிஷ்தா முதலிய அரபிப் பிரயாண நூலாசிரியர்கள் குறிப்பிடுகிருர்கள். இதுமுதல்தான் மருமக்களுக்குச் சொத்துரிமை செல்லும், மருமக்கள் தாயப்பழக்கம் மலையாள நாட்டிலே ஏற்பட்டது. சில ஆண்டுகளுக்கு முன் வரை முடி புனையும் திருவாங்கூர் மகாராஜாக்கள், 'மறைந்த சேரமான் பெருமாள் திரும்பி வரும்வரை இதனைப் புனைந்து வருகிறேன்' என்று கூறும் வழக்கமுடையவர்களாகவே இருந்தார்கள். சேரமான் பெருமாள் மறைந்ததிலிருந்துதான் கொல்லமாண்டு துவங்குகின்றது என்றும் கூறுவர்.

ஷஹ்ர் என்னும் ஊரை அடைந்த சேரமான் பெருமாள் அங்கேயே இஸ்லாமாகி அப்துர் ரஹ்மான் என்னும் அழகு சால் திருப்பெயரிடப்பட்டு இரண்டாண்டுகள் தங்கி வாழ்ந்தார். அதன்பின் அரேபியாவிலுள்ள புண்ணியப் பதிகளையெல்லாம் தரிசித்து பின்னர் ஸபர் என்ற ஊரில் தங்கி நான்காண்டுகள் வாழ்ந்துவந்தார். அங்கேயே அவர் நோய்வாய்ப்பட்டும் இறந்துவிட்டார்; அவ்வூரில் இன்னும் அன்னாரின் அடக்க இடம் காட்சி வழங்கிக்கொண்டுள்ளது.

அப்துர் ரஹ்மான் சாமிரி இறக்குமுன் தம்முடைய சகாக்களுக்கு மலையாள நாடு சென்று இஸ்லாத்தைப் பரத்து மாறு கூறியதோடல்லாது, அம் மலையாள நாட்டு மன்னர்களுக்கும் அறிமுக முடங்கல் வரைந்து கொடுத்தார். அவற்றைப் பெற்றுக்கொண்டு ஷரப் இப்னுமாலிக், மாலிக்இப்னு தீனுர், மாலிக் இப்னு ஹபீப் முதலியோர் வங்கம் ஏறி மலையாளக் கரையிலே இறங்கினுர்கள். அவர்களுக்குக் கொடுங்கோளூர் மன்னர் எல்லாவிதமான வசதிகளும் செய்து கொடுத்து ஆதரித்தார். அவர்கள் மனைவி மக்களுடன் பல இடங்களில் தங்கி பள்ளிவாயில்களைக் கட்டி மாமறையின் மணிமொழிகளை மலையாள நாடு முழுவதும் பரத்தினுர்கள். அவர்களின் அடிதழுவி பற்பல அரபிக் குடும்பங்களும் மலையாள நாட்டிலே குடியேறி அதனையே தங்களின் தாயகமாகக் கொண்டு வாழ்ந்துவந்தனர். அவர்களின் வழித்தோன்றல்களே மாப்பிள்ளைமார்களாவர். மாப்பிள்ளை என்பது மகா பிள்ளை என்ற மலையாள மொழியின் மருஉ

என்று சிலரும், செல்வாக்குள்ளவர்கள் அல்லது வெற்றி வீரர்கள் என்றும் பொருள்படும் முப்லாஹ் என்ற அரபியின் சிதைவு என்று மற்றும் சிலரும், அவர்கள் மலையாள மக்களின் பெண் மக்களை மணந்துகொண்டதால் அவர்களுக்கு மாப்பிள்ளை என்று பெயர் ஏற்பட்டது என்று வேறு சிலரும், மா என்றால் அரபி மொழியில் தண்ணீர் என்று பொருள்படுவதால் தண்ணீர் வழியாக அவர்கள் கப்பலோட்டி வந்ததன் காரணமாக மாப்பிள்ளை என்று பெயர் ஏற்பட்டதென்று வேறு சிலரும் கூறுகின்றனர். எனினும் அவர்கள் அரபிகளின் வழித்தோன்றல்களே யன்றி வேறில்லை.

இந்த ஒன்பதாம் நூற்றாண்டிலேதான் எகிப்தில் வாழ்ந்து வந்த சில அரபிக் குடும்பங்கள் ஹஜ்ஜாஜ் இப்னு யூசுபின் கொடுங்கோலுக்கு அஞ்சி வங்கம் ஏறி பாண்டியநாடு புகுந்தனர். அக்காலத்தில் பாண்டியநாட்டை ஆண்டுவந்த மன்னனின் அவை நண்ணி, தங்களின் அவல நிலையை எடுத்துரைத்ததும், அவன் அபயம் தேடியவர்களுக்கு அடைக்கலம் நல்கினான். சீர்குலைந்த அன்னாரின் வாழ்க்கையைச் சீர்செய்ய வேண்டி பல்வேறு உரிமைகளையும் சாதனங்களையும் நல்கித் தாமிரப்பட்டயமும் எழுதித்தந்தான். அப் பட்டயம் தமிழரின் தனிப் பண்பினையும் மாண்பினையும் தாரணி முழுவதும் பறைசாற்றும் ஒரு பொன்னேடாக விளங்குகிறது. அதன் சில பகுதிகளைக் கீழே தருகிறேன்.

"அறபிநாட்டு மிஸ்று(எகிப்து)தேசாதிபதியின் கொடுங்கோலுக்கு அஞ்சி மரக்கல யாத்திரையாய் கர்த்தர்களின் தேசச் செம்பிநாட்டில் பாசறை வகுத்து கர்த்தர்களின் சமுகம் கொடுத்து அந்நாட்டில் குடியேறி இருக்கத் தாமிரப் பட்டயம் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டவர்களின் வம்சமும் எண்ணிக்கையும் கீழ்வருமாறு:

ஆசிம் வம்சத்தார் (23), நாச்சியார் பெண்டு (9) பெண் (6), அடிமை (4); பாருக் வம்சத்தார் (43), நாச்சியார் பெண்டு(16), பெண்(9), அடிமை(7). பக்கிரி வம்சத்தார் (39), நாச்சியார் பெண்டு (24), அடிமை (12). உமையா வம்சத்தார் (14), நாச்சியார் பெண்டு (5), அடிமை(2), இராணுவ யுத்தர் (16), க்ஷவரகன் (3).

இவர்கள் ஒருமனப்பட்டு முஹம்மது கல்ஜிக்குத் தாமிரப் பட்டயம் கொடுக்கக் கேட்டுக்கொண்டபடியால் அந்தக் குடியானவர்கள் மிஸ்ரு தேசத்து காயிருன் ஊரில் வசித்துவந்தவர்களானபடியால் தாமிரப்பட்டயம் கொடுக்கும் ஊருக்கு 'காயிறூன் பட்டணம்' என்ற நாமமும், மரக்கல யாத்திரையாக வந்ததால் இவர்களுக்கு மரக்கலராயர் என்ற நாமமும் நாம் சூட்டித் தாமிரப் பட்டயம் கொடுக்க உத்தரமருளி அரண்மனையார் கற்பித்தது.

முகம்மதுகல்ஜி மரக்கலராயன் வசதியான தலங்கண்டு குடியேறி இருக்கும்படி கர்த்தனுகிய ஜெயவீரு ராஜாக்காரு நாயனி இந்தத்தாமிரபட்டயம் கொடுத்தோம். திருவண்ணாமலை, பழனிக்கார், மீனாட்சி, பற்பனுபர், நெல்லையப்பர், சுப்பிரமணி, மாரியம்மன், மும்மூர்த்தி, அகஸ்தியர், இராமச்சந்திரர் இந்தச் சாமிகள்மேல் சத்தியம் தப்பாது.''

இந்தச் சாசனம் கி. பி. 875-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் எழுதிக் கொடுக்கப்பட்டது என்று தெரியவருகிறது. இந்த முகம்மது கல்ஜி அவர்களின் வழித் தோன்றல்கள் இன்றும் காயல்பட்டினத்தில் வாழ்ந்துவருகிறுர்கள்.

பின்னர் பதிமூன்றாவது நூற்றுண்டில் பெரும் மண்நூல் நிபுணர் அல்இத்ரீஸ் இந்நாட்டிற்கு வருகை தந்தார். 1273-ஆம் ஆண்டில் திமிஷ்கைச் சேர்ந்த அபுல்பிதாவும் நம் இந்தமிழ் நாட்டில் சுற்றுப்பயணம் நிகழ்த்தினுர். அவர்கள் எழுதி வைத்துச்சென்ற குறிப்புகளிலிருந்து முஸ்லிம்கள் இங்குச் செல்வாக்குடன் வாழ்ந்துவந்தனரென்றும்தங்களின் கலைகளைத் தமிழர்களுக்குக் கற்றுத்தந்து தமிழர்களின் கலைகளைத் தாங்களும் கற்றுக்கொண்டார்களென்றும் தெரியவருகிறது.

இதன்பின் பன்னிரண்டாம் நூற்றுண்டில் ஒருநாள் சிலுவைப் போர்வீரர் சுல்தான் ஸலாஹுத்தீனின் கீழ் மதினமாநகரின் கவர்னராகப் பணியாற்றிவந்த சையித் இபுருஹீம் என்பாரின் கனவில் முகம்மதெங்கள்நபிகள்கோமான் (ஸல்) அவர்கள் திருக்காட்சி நல்கி தமிழ்நாடு புக்கி தீனுல் இஸ்லாத்தைப் பரத்துமாறு பணித்துவிட்டு மறைந்தனர்.

*இதனையே வண்ணக்களஞ்சியப் புலவர் தாம் பாடிய 'தீன் விளக்கம்' என்னும் நூலில் அழகாகக் கூறுகிறார்:*

சிறந்திடும் மதீனம் என்னும் இப்பதிக்குத்
தென்கிழக் காகிய திசையில்
அறைந்திடும் மிகுதூ ரத்தினில் ஒருநாடு
அதன்பெயர் பாண்டி நாடாகும்
திறந்தரும் அரசு பதியெனும் மதுரைத்
தென்னக ராகும் இக்காலத்(து)
உறைந்தருள் அதனின் மிகுவள நகராய்
ஓர்நகர் தோன்றி அங்குளதே

*என்றும் அதற்கு பவுத்திர மாணிக்கம் என்று பெயரென்றும், அந்த*

ஓதிய நகரம் மீதிருந் தோர்கோல்
ஓச்சி ஒன்னலர் தமைத்தடிந்து
கோதகன் றிடும்செந் தமிழ்நலம் சிறந்து
குலவு தென்னாட்டினைப் புரப்போன்
தீதகன்றிடும் வேம பணிபுயன் உயர்சேர்
கொடியினன் திங்களங் குலத்தோன்
மேதகு மணிகள் அணிமுடி புனைந்த
விக்கிரம பாண்டியன் தானே

*என்றும் அந்நகர் புகுந்து அம் மன்னனையும் அவன் கீழுள்ள மக்களையும் இஸ்லாத்தைத் தழுவச் செய்யுமாறு முகம்மதெங்கள் நபிகள் பெருமான் (ஸல்) அவர்கள் கனவில் பணித்துவிட்டுச் சென்றதைச் சிரமேற்கொண்டு சையித் இப்ராஹீம் அவர்களும் துருக்கியப் படைத் தளபதியான அப்பாஸ் அவர்களும் ஜித்தாவின் கவர்னராயிருந்த சிக்கந்தர்*

துல்கர்னேன் அவர்களும் நம் நாட்டில் வந்து கரையிறங்கி இஸ்லாமியப் பிரச்சாரம் செய்தனர். பவுத்திரமாணிக்க நகரை ஆண்டுவந்த விக்கிரமபாண்டியன் தன் தம்பியாகிய குலசேகர பாண்டியனுக்குப் பங்குகொடாததால் குலசேகர பாண்டியன் சையிது இபுருஹீம் அவர்களை அணுகித் தமக்கு உதவியருள வேண்டினான். அதற்கிணங்கி சையிது இபுரு ஹீம் அவர்களும் விக்கிரமபாண்டியனை அணுகி குலசேகர பாண்டியனுக்குரிய பங்கைக் கொடுத்துவிடுமாறு அறிவுரை பகர்ந்தனர். அவர்கள் எவ்வளவோ எடுத்துரைத்தும் அதற்கிணங்க அவன் மறுக்கவே குலசேகரபாண்டியனுடன் சேர்ந்து சையிது இபுருஹீம் அவர்களும் அவர்களின் படை யினரும் விக்கிரமபாண்டியனை எதிர்த்துப் பொருதனர். போர்க்களத்தில் விக்கிரமபாண்டியன் மாண்டான். அதன் பின் சையிது இபுருஹீம் அவர்கள் குலசேகர பாண்டியனுக் குச் சேரவேண்டிய பகுதியைக் குலசேகரபாண்டியனுக்குக் கொடுத்து முடிசூட்டிவிட்டு, ஏனைய பகுதிகளுக்குத் தாமே அரசராக இருந்து கி. பி. 1195 முதல் 1207 வரை பன்னி ரண்டு ஆண்டுகளும் ஏழு மாதங்களும் செங்கோல் செலுத்தி னர். அதன்பின் விக்கிரமபாண்டியனின் உறவினனான திருப்பாண்டியன் ஆந்திர மன்னனின் உதவியுடன் வந்து சையிது இபுருஹீம் அவர்களுடன் பொருதான். போரில் சையிது இபுருஹீம் அவர்கள் உயிர் துறந்தனர். அன்னாரின் அடக்க இடம் இன்றும் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள ஏறுவாடியிலுள்ளது: அதன்பின் பட்டத்திற்கு வந்த திருப் பாண்டியன், சையிது இபுருஹீம் ஷஹீத் அவர்களின் சிறப் பான ஆட்சியைப் பாராட்டியும் அன்னாரின் மகனுக்கும் வழித்தோன்றல்களுக்கும் பல மான்யங்களை வழங்கிக் கௌரவித்தான். இன்று மதுரையிலுள்ள காஜியார் குடும் பத்தினர் அந்த சையித் இபுருஹீம் ஷஹீது வலியுல்லாவின் வழித்தோன்றல்கள்தாம். அவர்கள் இன்னும் அந்த மான் யங்களிலிருந்து வரும் பலனை நுகர்ந்துவருகின்றனர். மேலும் அம் மேதகையின் நினைவுக்குறியாக இபுருஹிம் என்ற பெயரையும் புனைந்துவருகிறார்கள்.

இதன்பின் பதின்மூன்றாம் நூற்றாண்டின் துவக்கத்தில் எகிப்தை ஆண்டுவந்த கொடுங்கோல் மன்னன் முகம்மது இப்னு கலாவூனின் கொடுமை தாங்க இயலாது சில அரபிக் குடும்பங்கள் சையித் ஜமாலுத்தீன் அவர்களின் தலைமையில்

கடல் கடந்து வந்து காயல்பட்டினத்தில் வந்து குடியேறின. அக்காலத்தில் பாண்டியநாட்டில் சுந்தரபாண்டியத் தேவர் என்பவர் செங்கோலோச்சிவந்தார். இவரைத்தாம்மார்கோ போலோ 'ஸௌண்டர்பாண்டி டேவர்' என்று குறிப்பிடு கின்றார். இவரையே வரலாற்று ஆசிரியர்கள் 'இரண்டா வது ஜாதவர்மன் சுந்தரபாண்டியன்' என்று கூறுகின்றார்கள். இந்நெறி நீதிமன்னர் அபயம் தேடிய அம் முஸ்லிம்களுக்கு ஆதரவு நல்கினார். அவ்விதம் செய்ததோடல்லாது குதிரை வாணிபத்தின் தனிப்பெரும் உரிமையையும் சையித் ஜமா லுத்தீனுக்கு நல்கினார். அவரின் உடன்பிறந்தாரான சையித் தகிய்யுத்தீனின் அறிவாற்றல்களைக் கண்டு வியந்து அன்னா ரைத் தம்முடைய முதல் அமைச்சராகவும் ஆக்கிக்கொண் டார். மேலும் கி. பி. 1286—ல் சையித் ஜமாலுத்தீனை சீனப் பேரரசன் குப்ளாய்கானின் அரசவைக்கு சுந்தரபாண் டிய மன்னர் அனுப்பிவைத்தார். இலங்கைப் படையெடுப் பின்போது தம் நாட்டுப் பெரும் சேனையின் தனிப்பெரும் தளபதியாக சையித் ஜமாலுத்தீனையே அவர் நியமித்தார். சையித் ஜமாலுத்தீன் பாண்டியநாட்டுக்குச் செய்த சேவை யைப் பாராட்டி காயல் கிராமத்தை சையித் ஜமாலுத்தீ னுக்கு அன்பளிப்புச் செய்தார். இவை மட்டும் அவர் செய்யவில்லை. தமக்குப் பின் அரியணை ஏறத் தமக்கு மக்க ளில்லாததால் சையித் ஜமாலுத்தீனே அரியணை ஏறவேண்டு மென்று ஆணை பிறப்பித்துவிட்டு உயிர் நீத்தார். அவ்வாறே சையித் ஜமாலுத்தீனும் பாண்டியநாட்டு அரியணைமீது ஏறி அரசோச்சினார். அதுமுதல் 'மலிக்குல் இஸ்லாம், சுல்தான் சையிது ஜமாலுத்தீன்' என்றே அவர் அழைக்கப்படலு மானார். அவரின் வழித்தோன்றல்கள்தாம் இன்றும் 'பிரபு' என்ற பட்டம் தாங்கிக் காயல்பட்டினத்தில் வாழ்ந்து வருகின்றனர்.

முஸ்லிம்கள் சேர, சோழ, பாண்டிய மன்னர்களிடம் போர் வீரராகவும் பணியாற்றி வந்தனர். மைசூரை ஆண்ட ஒய்சளமன்னனாகிய வீர வல்லாளனிடம்கூட அறு பதினாயிரம் முஸ்லிம் வீரர்கள் இருந்தனர் என்று இப்னு பதூத்தா கூறுகின்றார்.

முஸ்லிம்கள் போரணியில் மட்டும் பணிபுரியவில்லை. நகரப் பாதுகாப்பாளர்களாகவும், பொற் காசுகள் செய்து

தருவோராகவும், வணிகராகவும் செயலாற்றினர். அவர்கள் செய்த பொன் நாணயங்களுக்கு அரபிப் பெயர்களே இருந்துவந்தனவென்றும் தெரிகிறது. பராந்தக நெடுஞ்சடையன் காலத்தில் கோவிலுக்கு நெய் விளக்கேற்ற ஒரு பிராமணப் பெண் பத்துத் தீனார்கள் காணிக்கை நல்கிய தாகத் திருப்பத்தூர் சாசனம் ஒன்றில் காணக்கிடக்கின்றது. ஜடாவர்மன் ஸ்ரீ வல்லபன் காலத்தில் வழங்கிய நாணயங்களில் திரம்மா என்ற பெயருள்ளதும் இருந்ததாக வரலாற்று ஆசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் கூறுகின்றார். திரம்மா என்பது திர்ஹம் என்ற அரபிச் சொல்லின் திரிபேயாம். ஜடாவர்மனுக்குப் பின் ஆண்ட பராக்கிரம பாண்டியன் காலத்தில் இயற்றப்பெற்ற 'திருமகள் புராண'த்திலும் திரம்மா என்ற நாணயத்தின் பெயர் காணப்படுகிறது.

'கொற்கை, தொண்டி ஆகிய கடற்றுறைப் பட்டினங்களில் ஆண்டுதோறும் பதினாயிரம் அரபிக் குதிரைகள் வந்து இறங்கின' என்று அக்காலத்தில் பாண்டிய நாட்டுக்கு வந்த 'வஸ்ஸாப்' என்ற முஸ்லிம் ஆசிரியர் கூறுகிறார். மேலும் தொண்டியின் அருகில் முஸ்லிம் குடியேற்றம் ஒன்று இருந்ததாகவும் தெரியவருகிறது. அக் குடியேற்றத்தில் வாழ்ந்த முஸ்லிம்கள் பாண்டிய மன்னர்களுக்குச் செய்துவந்த பேருதவிக்காக அம் முஸ்லிம்களில் யாரேனும் குற்றமிழைத்துவிட்டால் அங்கிருந்த முஸ்லிம்களின் பொது மன்றமே விசாரித்துத் தீர்ப்பளித்துக்கொள்ளலாமென்று தனி உரிமை அளிக்கப் பட்டிருந்தனர். பல இந்து அறநிலையங்களுக்கும் முஸ்லிம்களே நிர்வாகிகளாக இருந்தனர். மதுரை மீனாட்சியம்மன் கோவிலுக்கும் சையிது இஸ்மாயில் என்ற ஒரு முஸ்லிமே நிர்வாகியாக இருந்தார். அவர் கட்டிய பள்ளிவாயிலே மதுரையிலுள்ள தாசில்தார் பள்ளிவாயிலாகும். அவரின் வழித் தோன்றல்கள் இன்றும் மதுரை மூன்றுசாலை (முனிச் சாலையில்) வாழ்ந்துவருகின்றனர். முத்துக் குளிப்பதிலும் சிறந்து விளங்கிய முஸ்லிம்கள் ஆழ்கடல் மூழ்கி அரிய முத்துக்களை எடுத்துவந்து பாண்டிய மன்னர்களின் கருவூலங்களை நிரப்பினர்.

''முப்பெரும் தமிழ் வேந்தர்களின் மெய்ப்பாதுகாவலர்களாகவும் முஸ்லிம்கள் இருந்துவந்தனர். அவ் வேந்தர்கள்

வேட்டையாடக் கானகம் புக்கின், முஸ்லிம்களையும் தங்களுடன் அழைத்துச் செல்வர். ஏதாவதொரு பிராணியை அறுக்கவேண்டியதிருந்தால் முஸ்லிம்களையே அவற்றை அறுத்துத் தருமாறு கூறுவார்கள்'' என்று மார்க்கோ போலோ தம்பிரயாண நூலில் கூறுகின்றார்.

இவ்வாறு தமிழர்களும் தமிழ்ப் பேரரசர்களும் காட்டிய நன்றியைத் தமிழகத்திலே குடி புகுந்து தமிழரோடு தமிழராக வாழ்ந்துவந்த அம் முஸ்லிம்கள் மறக்கவில்லை. மதுரையில் வீரபாண்டியன் அரசு செலுத்திய அக்காலத்தில் டில்லி சுல்தான் அலாவுத்தீன் கில்ஜியின் பெரும் படையானது மாலிக்கபூரின் தலைமையில் மதுரைமா நகரத்தின்மீது படையெடுத்தது. அப்பொழுது மாலிக் கபூரின் தூதுவரொருவர் வீரபாண்டியனின் குதிரைப்படைத் தளபதியாகிய ஒரு முஸ்லிம் மாமகனை அணுகி, முஸ்லிம் என்று உரிமை பாராட்டி, தாங்கள் நாளை மதுரையைத் தாக்கப்போவதாகவும் அப்பொழுது பாண்டியனின் குதிரைப்படை வீரர்களாகிய ஐயாயிரம் முஸ்லிம்களும் போரில் பங்கு கொள்ளாது ஒதுங்கி இருந்துவிடவேண்டுமென்றும் கூறினர். அதைக் கேட்டதும் பாண்டிய முஸ்லிம் தளபதியின் கண்கள் கொவ்வைக் கனிபோல் சிவந்தன.

'தூதுவரே! நாங்கள் முஸ்லிம்களாயினும் பாண்டிய நாட்டின் மக்கள். இந் நாட்டின் வெற்றி எங்களின் வெற்றி. இந் நாட்டின் தோல்வி எங்களின் தோல்வி. இஸ்லாம் எங்கள் நாட்டுக்குத் துரோகம் செய்யக் கற்றுக்கொடுக்கவில்லை. ஆதலின் இக்கணமே இவ்விடத்தை விட்டகன்றுவிடும். நாளை நாம் போர்க்களத்தில் சந்திப்போம்' என்று மறுமொழி பகர்ந்தார்.

இவ்வாறு மறுமொழி பகர்ந்த அம் முஸ்லிம் பெருமகனின் உளப்பாங்கை அறிந்துகொள்ளும் அறிவாற்றல் இல்லாது அக்கால வரலாற்று ஆசிரியனொருவன் 'குஸ்ரு' என்பவன், 'இவர்கள் பாதி இந்துக்களே; மத வைராக்கியமோ ஒழுக்கமோ அற்றவர்கள். இறப்புத்தான் அவர்களுக்குச் சரியான தண்டனை. எனினும் 'கலிமா'ச் சொல்ல அறிந்திருந்தபடியால் பிழைத்தார்கள்' என்று ஏளனமாக எழுதியுள்ளான்.

*ஆனால் அவன் ஏளனமாக எழுதிய இவ் வாக்கியங்கள் அக்காலத்தில் தமிழ்நாட்டில் வாழ்ந்துவந்த முஸ்லிம்களின் ஏற்றத்தையும் பண்பாட்டையும் எழிலுற எடுத்துரைக்கின்றன.*

*இவ்வாறு நாட்டுப் பற்று நனிசிறக்க தமிழ்நாட்டில்வாழ்ந்து தமிழ் மக்களை மணந்து, தமிழர்களாகவே மாறிவிட்ட அவ்வரபி முஸ்லிம்கள் மொழிப்பற்று மிகுந்தவர்களாகவே மிளிர்ந்தனர். ஜெயவீரராஜுகாரு நாயனி என்னும் மன்னன் தங்களுக்கு அளித்த மரக்கலராயர் என்ற தமிழ்ப் பட்டத்தையும் அவர்கள் அணிந்துவந்தார்கள். அதுவே பிற்காலத்தில் மரக்காயர் என்று மருவி நின்றது. மேலும் தங்களின் கடவுளர்களுக்கும் தங்களுக்கும் குதிரையை அடக்கியாண்டதன் காரணமாகச் சிறப்புப் பெயராக விளங்கிய * இராவுத்தர் என்பதனை அக்காலத் தமிழரசர்கள் அரபுநாட்டிலிருந்து குதிரைகளுடன் வந்த வீரர்களாகிய அரபிகளுக்கு நல்கி, அவர்களை இராவுத்தர் என்று அழைத்தனர். அதனையும் அம் முஸ்லிம்கள் மகிழ்ச்சியுடன் ஏற்றுத் தங்க*

---

* தமிழ்ப்பெருமக்களால் குதிரையேற்றம் அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்றாகக் கருதப்பட்டது. அதில் சிறந்து விளங்கியவர்களுக்குத் தமிழ்மக்கள் தனிப்பெரும் மதிப்பு அளித்துவந்தனர். மாணிக்கவாசகரின் அன்புக்கு இரங்கி பாண்டியனுக்குக் குதிரைகளை அளிக்கவந்த வரலாற்றை பெரும்பற்றப்புலியூர் நம்பி என்ற புலவர் தாம் பாடிய திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தில் சிவபெருமானைப் புகழும்பொழுது 'துய்ய பேருலகுக்கெல்லாம் துளங்கி ராவுத்தராயன்' என்று குறிப்பிடுகின்றார். மேலும் குதிரைகளைப் பெற்றுக்கொண்ட பாண்டியன் குதிரை வீரராக வந்த சிவபெருமானுக்கு வரிசை வழங்கவேண்டுமென்றெண்ணி ஓர் அழகிய ஆடையை அளித்தான் என்பதை,

'இங்நெறி மன்னர் மன்னன் இனிமைகூர்ந் திராவுத்தற்கு

*ளின் பெயருடன் புனைந்துவந்தனர். மேலும் அவர்கள் தங் களில் ஒருவர் மற்றொருவரைத் 'தோழர்' என்று பொருள் படும் 'சாஹிபு' என்றும் அழைத்துவந்தார்கள். ஒரு முஸ் லிம் மற்றொரு முஸ்லிமை அழைப்பின் அரபிகளின் மரபுப் படி 'இதோ அடிபணிந்தேன்' என்று பொருள்படும் 'லப்பைக்கும்' என்றும் மறுமொழி பகர்ந்துவந்தார்கள். இதன் காரணமாகச் சில முஸ்லிம்கள் 'லெப்பை' என்றும் அழைக்கப்படலாயினர்.*

*இவ்வாறு அவர்கள் பலவிதப்பட்ட பெயர்களுடன் விளங்கியபோதிலும் ஒரே இறைவனாகிய அல்லாஹ்வைத் தொழும் உத்தம அடியார்களாகத் திகழ்ந்து தாங்கள் பேசும் தமிழ் மொழியையே தேன்மொழியாகக் கருதிப் போற்றி வந்தனர். அவர்கள் இந்நாட்டில் குடியேறி வாழ்ந்ததன் காரணமாகப் பல அரபி, பார்ஸி, உர்து மொழிகள் தமிழ் மொழியோடு கலந்து தமிழ் மொழியாக மாறி, தமிழ் மொழியை வளப்படுத்தின. (விவரம்: அனுபந்தம் 1—ல் காண்க.)*

*இஸ்லாமியக் கருத்துக்களைத் தமிழில் கூற விரும்பிய அவர்கள் அரபி எழுத்துக்களால் அக் கருத்துக்களைத் தமி ழில் எழுதினர். இதனை இப்னுகல்தூாம் என்னும் அக்கால*

நன்மைகூர் வரிசைத்தூசு நல்குவமென்று நல்க' என்று அவ்வாசிரியர் இயம்புகின்றார்.

மேலும் திருப்பெருந்துறைப் புராணத்தில்

'கோட்டமில் லாமா ணிக்கவா சகர்முன்

குதிரைரா வுத்தனாய் நின்று'

என்றும் கூறப்பட்டுள்ளது. கந்த ரலங்காரத்தில் முருகக் கடவுளை அருணகிரிநாதர் 'மாமயிலேறும் இராவுத்தனே' என்றும் துதிக்கின்றார்.

திருவானைக்காவிலுள்ள ஒரு சிலாசாஸனத்தில் 'ராஹுத்த ஜாஜல தேவர்க்கு' என்ற தொடர் காணப்படு

வரலாற்று ஆசிரியர்கூடக் குறிப்பிடுகின்றார். அவர்கள் அரபுத் தமிழில் இயற்றிய நூல்கள் பல. அதுமட்டுமல்லாது தமிழுக்குத் தங்களாலான சேவைகள் செய்யவேண்டுமென்ற பெருநோக்குடன் தங்கள் மதப் பெரியார்களின் வரலாறுகளையும் பொன்னுரைகளையும் தூய இன்பத் தமிழில் மழை சிந்தும் காப்பியங்களாக இயற்றினர். அவை புராணம் என்றும் நாயகம் என்றும் மாலை என்றும் படைப்போர் என்றும் பிள்ளைத் தமிழ் என்றும் அந்தாதி என்றும் அம்மானை என்றும் நாமா என்றும் மசலா என்றும் திருப்புகழ் என்றும் ஏசல் என்றும் சிந்து என்றும் கும்மி என்றும் ஆனந்தக் களிப்பு என்றும் முனாஜாத்து என்றும் பல்வகைப்படும். (விவரம் அனுபந்தம் 2-ல் காண்க.) செய்யுள்களால் ஆக்கப்பட்ட இவைகளேயன்றித் தமிழ் உரைநடையிலும் முஸ்லிம்கள் பல நூல்களை இயற்றியுள்ளனர். முதன்முதலாக முஸ்லிம்களில் யார் தமிழில் உரைநடை எழுதினர் என்பது விளங்கவில்லை. நபிமார்களின் வரலாறுகள் அடங்கிய கசசுல் அன்பியா என்னும் நூலின் ஒருபகுதி பவளமாநகரம் காலிமுகம்மது ஜான்சாகிபு லெப்பை ஆலிம்சாகிபு அவர்களாலும் மற்றொரு பகுதி மேற்படி ஊர் முகம்மது அலி லெப்பை ஆலிம் சாகிபு அவர்களாலும் அரபியிலிருந்து தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு பாசிப்பட்டினம் நெய்னாமுகம்

---

கிறது. அப் பெயரினையுடையார் ஒரு மன்னர் என்றும் தெரியவருகிறது. ராஹுத்தர் என்பது ராவுத்தர் என்பதன் திரிபேயாகும். ஈரோட்டிலுள்ள சாசனம் ஒன்றில் 'மகாமண்டலேச்வரன் பர்த ராவுத்தர்' என ஒரு சிற்றரசன் பெயர் உள்ளது.

இராவுத்தர் என்ற சொல்லானது இராஜபுத்திரர் என்ற சொல்லின் திரிபாக இருக்கக்கூடும் என்று சிலர் எண்ணுகின்றனர். அது எப்படியிருந்தபோதினும் குதிரை ஏற்றத்தில் சிறந்தவர்களின் சிறப்புப்பெயர் இதுவென்பதில் ஐயமில்லை. மன்னர்களிடம் குதிரை வீரர்களாக இருந்த சில இந்துக்கள்கூட 'ரவுத்' என்ற பெயருடன் இப்பொழுதும் வாழ்ந்துவருகின்றனர். இராவுத்தர் என்பதன் திரிபே ரவுத் என்பதாகும்.

மது சாகிபு வலியுல்லாவின் வழித்தோன்றலாகிய செய்கு முகம்மதுப் புலவராலும் காயல்பட்டினம் ஒளி மீறா சாகிபு அவர்களாலும் சென்னையிலிருந்த தங்களின் சொந்த அச்சகமாகிய முகம்மது சமயவிளக்க அச்சுக்கூடத்தில் கி. பி. 1865-ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. அதன்பின் கண்ணகுமது மகுதூம் முகம்மதுப் புலவர் சில உரை நடை நூல்களை எழுதியுள்ளார். பின்னர் தெளிவான உரை நடை எழுதத் துவங்கியது நாகூர் குலாம்காதிறு நாவலர்தாம். அவர் தாம் எழுதிய கன்சுல் கராமாத், உமறுபாஷா சரித்திரம் ஆகிய நூல்களில் கையாண்டிருக்கும் உரைநடை இன்றும் பாவலர்முதல் பாமரர்ஈறாக எல்லோராலும் மெச்சத்தகும் நிலையில் அமைந்துள்ளது.

முதன்முதலாக முஸ்லிம் தமிழ் காப்பியங்கள் 'அச்சேறியது சீறாப் புராணத்தை அச்சிட்டு வெளிப்படுத்திய செய்கப்துல்காதிர் நயினார்லெப்பை ஆலிம் அவர்களிலிருந்தே துவங்குகின்றது என்று கொள்ளலாம். அதன்பின் அன்னாரின் அடி தழுவி அன்னாரின் மாணாக்கரான சைனுத்தீன் புலவர் அவர்களும் பழம்புலவர்களின் பெருநூல்களை அச்சடிக்கும் வேலையில் ஈடுபட்டிருந்தனர். அதன்பின் அப் பணியில் ஈடுபட்டது கண்ணகுமது மகுதூம் முகம்மதுப் புலவரேயாவார். அவர் முகம்மதிய மார்க்க வித்தியாசாலையின் செயலாளராகவும் வேறு பதிப்பகங்களில் அலுவலாளராகவும் செயலாற்றும்பொழுது அவர் முஸ்லிம் தமிழ் இலக்கியங்களுக்குச் செய்த தொண்டு அளப்பரியதாகும். எவ்வாறு உ. வே. சாமிநாதய்யர் பழந்தமிழ் நூல்களைத் தேடித் திரிந்து கண்டுபிடித்து அவற்றை அச்சேற்றி வெளிப்படுத்தினாரோ அதேபோன்று கண்ணகுமது மகுதூம் முகம்மது புலவரும் முப்பதாண்டுகளாகப் பாடுபட்டு ஏட்டளவிலே இருந்த ஐம்பதுக்கு மேற்பட்ட இஸ்லாமிய இலக்கியங்களை அச்சேற்றி அவற்றை அழிந்துபடாமல் காத்தார். அவரின்றேல் அவ்வரும் பெரும் இலக்கியக் கருவூலங்களெல்லாம் செல்லுக்கும் கறையானுக்கும் இரையாகியிருக்கும் என்பதில் ஐயமில்லை.

அவர் சீறாப்புராணத்தின் இறுதியில் உமறுப் புலவரின் வரலாற்றை எழுதி முடித்தபின், தாம் இன்னும் பல முஸ்லிம் தமிழ்ப் புலவர்களின் வரலாறுகளை எழுதி வெளியிட

எண்ணியுள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார். ஆனுல் எக்காரணத்தால் அவை அவரால் எழுதப்படாமல் போயின என்பதை நான் அறியேன். அதன்பின் சதாவதானி செய்கு தம்பிப் பாவலர் இத்துறையில் முயன்ருர். ஆனுல் அவர் ஆலிப் புலவர் அவர்களின் வரலாற்றை மட்டும் எழுதினுரே தவிர வேறு எப்புலவரின் வரலாற்றையும்எழுதவில்லை. அவ் வரலாறு 'முஸ்லிம்' தினத்தாளில் கட்டுரை வடிவில் வெளிவந்தது. இதன்பின் புலவர்பெருமக்கள் இம் முயற்சியில் ஈடுபடும் கருத்தினைப் பல்லாண்டுகளாகக் கொண்டிருந்தனர். எனினும் அளப்பரும் அருளாளனுகிய அல்லாஹ் அடியேனுகிய என்னை இப் பணியை ஆற்றுவதற்கான அடியானுகத் தேர்ந்தெடுத்து எனக்கு இம் முயற்சியில் ஈடுபட வேண்டுமென்ற உதிப்பையும் உண்டுபண்ணி ஊக்குவித்தான். அவனின் திருவருளையே துணையாகக் கொண்டு, வானவர்கள் அஞ்சக்கூடிய இடத்தில் முட்டாள்கள் முன் பாய்வது போன்று இப் பணியில் ஈடுபட்டேன். இந் நூலை எழுதுவதற்குச் செய்திகள் கிடைக்குமா என்று நான் துவக்கத்தில் அஞ்சியது போக, பின்னர் நூல் பெரிதாகப் போய் விடக்கூடாதே, செய்திகளைச் சுருக்கி எழுதவேண்டுமே என்று நான் அஞ்சவேண்டியதாயிற்று. நான் சென்னையிலிருந்துகொண்டே இதற்கான ஆதாரங்களைச் சேகரிக்கும் முயற்சியில் ஈடுபட்ட போதினும் அளப்பரும் அருளாளனுகிய அல்லாஹ் தமிழ்நாட்டின் பற்பல ஊர்களிலும் வாழும் ஆர்வமிக்க முஸ்லிம் இளவல்களை என்னுடைய கண்களாகவும், காதுகளாகவும் கைகளாகவும் மூளையாகவும் பயன் பெறச்செய்தான். அவர்கள் பல இடங்களில் சுற்றித் திரிந்து, பார்க்கவேண்டியதைப் பார்த்து, கேட்கவேண்டியதைக் கேட்டு, தேடவேண்டியதைத் தேடி, தள்ளவேண்டியதைத் தள்ளி, எழுதவேண்டியதை எழுதி எனக்கு அனுப்பி வைத்தார்கள். அவர்கள் அனைவருக்கும் நான் என்றென்றும் கடப்பாடுடையவனுயுள்ளேன். (விவரம் அனுபந்தம் 3-ல் பார்க்க)

முஸ்லிம் தமிழ்ப் புலவர்களின் வரலாறு பற்றிப் போதிய ஆதாரங்கள் அதிகமாகக் கிடைக்காதபோதிலும் கர்ண பரம்பரையான கதைகள் பல கிடைத்தன. அவற்றில் அறிவிற்குப் பொருத்தமானவற்றை மட்டும் தெள்ளித் தெளித்து இந் நூலில் பயன்படுத்தியுள்ளேன். பாமரனுகிய

(Layman) நான் பாமரர்களுக்காக இதனை எழுதியுள்ளபோதி னும் புலவர் உலகம் இதனை 'இத்துறையில் ஒரு துவக்க முயற்சி' என்ற முறையிலாவது வரவேற்கும் என்று நம்பு கிறேன். இறுதியாக இந்நூலை இனிதே நிறைவுறச்செய்து தந்த எல்லாம்வல்ல அல்லாஹ்விற்கு என் மனம் வாக்குக் காயம் அனைத்தும் ஒன்றுபட்டு ஆயிரமாயிரமுறை நன்றி வணக்கம் செலுத்துகின்றேன்.

# உமறுப் புலவர்

-யூசுப்-

வைகறையிலே மெல்லிய பூங்காற்று மிதந்துகொண்டிருந்தது. மதினமா நகரின் பள்ளிவாயிலிலே முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் வைகறைத் தொழுகையைத் தோழர்களுடன் தொழுது முடித்து அவர்களுக்கு அறத்தாற்றின் நெறி முறைகளை அறிவுறுத்திக்கொண்டிருந்தார்கள். புறங்காட்டும் வஞ்சகர்க்கும் மறங்காட்டும் கொலைஞருக்கும் மறைகாட்டும் அறநெறிகளை மொழிந்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது அப்துல்லா இப்னு பாகிர் என்னும் வயோதிக அரபி தள்ளாடித் தள்ளாடி பள்ளிவாயிலை வந்தடைந்து மன்னவர்க்கும் மதிவலார்க்கும் நாயகமாய் மேன்மை கொண்ட வள்ளலார்க்குச் சலாம் உரைத்து நின்றனர். ‘யாது செய்தி’ என்று வினவினர் ஆண்டகையார். அதற்கு அந்த அரபி ‘இறைவனின் திருவருளை நிறைவுறப் பெற்ற நாயகமே! என் குறை தவிர்த்தருள்வீர்! என் கண்மணி மகளாம் கதீஜா என்னும் கன்னிகை பூப்பெய்தி இன்றோடு மூன்றாண்டுகள் பூர்த்தியாகிவிட்டன. அவளுக்கு மணமுடிக்க ஓர் ஆண்மகனைத் தேர்ந்தெடுத்தேன். அவனோ மணமுடித்தால் இன்றே இப்பொழுதே முடியுங்கள்; இல்லையெனில் நான் வாணிபத்தின் பொருட்டு சிரியா செல்லுகின்றேன். திரும்பி வர இரண்டு மூன்றாண்டுகளாகலாம். அப்பொழுதிருக்கும் சூழ்நிலைக்

கேற்றவண்ணம் என் கண்ணுக்கினியாளை என் மனத்திற்கு உவந்தாளை நான் மணமுடித்துக்கொள்கிறேன் என்று கூறுகின்ருன். இப்பொழுது என் கையில் அரைக் காசுமில்லை; கடன் கொடுப்பார் யாருமில்லை. இந்நிலையில் என்செய்வதென்றே எனக்கு விளங்கவில்லை' என்று உள்ளங் கலங்கித் தத்தளித்து உணர்வு மயங்கிக் கூறி நின்ருர். இதைக் கேட்டதும் அருளிதயம் படைத்த அண்ணலாரின் செழுங் கண்கள் அவரின் வாடிய வதனத்தை ஒருமுறை ஏறிட்டுப் பார்த்தன. அடுத்தகணம் அவை அருகே அமர்ந்திருந்த கணக்காயரின் கண்களிலே போய் ஒட்டி அவரை 'வருக' என்று அழைத்தன. அவரும் வந்தார். உடனே அண்ணல் அவர்கள் அவ்வரபியை நோக்கி, 'நல்லது; இன்றே தங்களின் அருமை மகளுக்குத் திருமணம் செய்து மகிழுங்கள்' என்று கூறிக் கணக்காயரைப் பார்த்து, 'திருமணத்திற்கான பொருள்கள் எவை எவை தேவை என்று அவரிடம் கேட்டெழுதி அதற்கான முழுத் தொகைதனைக் கூறுக' என்று பணித்தனர். அவ்வாறே கணக்காயரும் கணக்கெழுதி முழுத் தொகை முப்பது வராகனுகும் என்று கூறினுர். அப்பொழுது அண்ணல் அவர்கள் முழுமதியை நிகர்த்த தம் திருமுகத்தை அப்துல்லா இபுனு பாகிரின் பக்கம் திருப்பிப் புன்முறுவல் பூத்தவண்ணம், 'என்ன அப்துல்லா! அவ்வளவு தானு? நன்ருகச் சிந்தித்துக் கூறுங்கள். பின்னர் அது இல்லை, இது இல்லை என்று வருந்தி நிற்கவேண்டாம். நாளும் அதிகமில்லை; அலுவல்களோ அதிகமிருக்கின்றன' என்று அமுதவாய் மலர்ந்தார்கள். அதற்கு அந்த அரபி, 'நாயகமே! நன்ருகச் சிந்தித்து ஒன்றேனும் விடாதுதான் கூறியுள்ளேன். இனிமேல் வேறொன்றும் தேவையில்லை' என்று மறுமொழி பகர்ந்தார். உடனே அண்ணலவர்கள் கருவூலக் காப்பாளர் உக்காசு அவர்களை அழைத்து 'அப்துல்லா இபுனுபாகிருக்கு முப்பது வராகன் கொடுக்குமாறு பணித்தனர். அந்த முப்பது வராகனும் அப்துல்லா இபுனுபாகிரின் கையிலேறியதும் அவர் உடல்முழுதும் ஒரு மின் ஆற்றல் ஊடுருவிப் பாய்ந்தது. கண்பெற்ற வான்முகம் போன்று அவருடைய முகம் மலர்ந்தது. நீர்பெற்றுயர்ந்த நிறை புலன் போன்று அவருடைய நெஞ்சம் பூரித்தது. அண்ணல் அவர்களை வாயார வாழ்த்தினுர்; மனமாரப் போற்றினுர். அன்றிரவு நடக்கும் தம் அருமை மகளின் திருமணத்திற்கு அண்ணல் அவர்கள் தம் தோழர்கள் புடைசூழ வந்து மண

மக்களை வாழ்த்தி அவர்களுக்காக இறைவனிடம் இறைஞ்ச வேண்டுமென்றும் வேண்டினர். அண்ணலவர்களும் 'சரி' என்று இணக்கம் தெரிவித்தார்கள்.

அப்துல்லா இபுனுபாகிரின் இல்லத்தில் அன்றிரவு மண விழா கோலாகலமாக நடந்துகொண்டிருந்தது. ஊரவர்களும் உறவினர்களும் ஒருங்குவந்து குழுமியிருந்தார்கள். அண்ணலெம் பெருமானும் தம்அன்பர்கள் புடைசூழ அங்கு வந்தமர்ந்தனர். பொங்கும் மகிழ்வும் மங்கள வாழ்த்தும் எங்கணும் எதிரொலித்துக்கொண்டிருந்தன. அப்பொழுது அப்துல்லா இபுனு பாகிரைத் திடீரென ஓர் ஏக்கம் கவ்விப் பிடித்தது. மணமகளுக்குப் பூச நறுமணம் எங்கே, எங்கே என்று மங்கையர் அவர்மீது வினா அம்பு விடுத்தபொழுது அவருக்குத் திக்குமுக்காடுவதைத் தவிர வேறு வழியில்லை. அழகுக்கு அழகுசெய்யும் அரும்பெரும் பொருளல்லவோ நறு மணம்! அதனை வாங்காது விட்டுவிட்டீரே என்ற கண்டனக் கணைகள் அவர்மீது பொழியப்பட்டன. யாது செய்வதென அறியாது, யாதும் கூற வாயில்லாது, வாது செய்யும் மன மில்லாது வகையொன்றறியும் திறனில்லாது அவர் மெய்யயர்ந்து நிற்பதை அண்ணலவர்களின் கருணை வீற்றிருந்த செங்கமலக் கண்கள் கண்டன. 'அப் துல்லா, ஒன்றிற்கும் கவலற்க! மணமகளை மண அறைக்கு அழைத்துச்செல்லும். இறைவனருளால் நறுமணம் கமழும்' என்று பணித்தனர் அண்ணலார். அதனைத் தலைமேற் கொண்டு செயலாற்றினர் அவ்வரபி. என்ன விந்தை? அரு ளாளன் அன்புடையோன் அல்லாஹ்வின் திருவருளால் அவ் வில்லம் முழுதும் அடுத்த கணம் நறுமணம் கமகமவெனக் கமழலாயிற்று. மணவிழா மனமங்களமாய் நிறைவுற்றதும் அகிலத்திற்கோர் அருட்பெருங் கொடையாக வந்த அண்ண லார் தம் திருக் கரமேந்தி, 'இறைவனே! இம் மணமக்களின் வழித்தோன்றல்களை என்றென்றும் மணமுள்ள மக்களாக வாழ அருள்பாலிப்பாயாக' என்று இறைஞ்சினர். அவர்க ளின் அவ்விறைஞ்சுதலை இறைவனும் ஏற்றுக்கொண்டாற் போன்று அம் மணமக்களின் வழித்தோன்றல்கள் அனைவரும், மன்னர்மன்னர்களும் மதிக்கக்கூடிய நறுமணப் பொருள் களை உற்பத்தி செய்பவர்களாகவும் விற்பனை செய்பவர்களா கவும் விளங்கினார்கள். அவர்களில் செய்கு பரீதத்து அத்தார்

என்பவர் இந்தியாவில் வந்து குடியேறி தங்களுக்கு இறையருள்பாலித்த நறுமணத் தொழிலை இனிதே நடத்திவந்தனர். அந்தக் குலக்கொடியில் பூத்த நறுமணமலர்தான் செய்கு முகம்மது அலி என்னும் பெருமகனாவார். அப்பெயர் வழக்காற்றில் தேய்ந்து சேகுமுதலி என்று மருவி, மரியாதை விகுதியாகிய 'ஆர்' என்பதுடன் இணைந்து சேகுமுதலியார் என்று திரிந்தது.

சேகு முதலியார் என்றழைக்கப்பட்ட அப் பெரியார் கல்வி, கேள்விகளில் சிறந்து விளங்கிய மேதகை. தம் முன்னோர் மேற்கொண்டிருந்த நறுமணத் தொழிலையே இவரும் இனிது நடாத்திவந்தார். பாண்டிநாட்டுப் பாளையப்பட்டு அரசர்களிடம் தம் நறுமணப் பொருள்களை வாணிபம் செய்யலாமெனக் கருதி அவர்தம் குடும்பத்துடன் எட்டையாபுரத்தை யடுத்த நாகலாபுரத்தில் குடியேறினார். அவரின் நறுமணப் பொருள்களின் நற்றன்மையை நன்கு உணர்ந்த எட்டையாபுர மன்னர், அவரிடம் அவற்றை ஏராளமாக விலைக்கு வாங்கியதோடு தம் ஊரிலேயே வாழ்ந்து வருமாறும் அவரை வேண்டிக்கொண்டார். அவ்வண்ணமே அப் பெரியாரும் நாகலாபுரத்திலும் எட்டையாபுரத்திலுமாகத் தம்முடைய வாணாளை இனிது கழித்துவந்தனர். அப்பொழுது அவரின் குலம் தழைக்க, குடி தழைக்க, தமிழ் தழைக்க, நெறி தழைக்க உலகத்திற்கோர் புதுமையாக ஓர் ஒப்பற்ற ஆண் மகவு அவருக்குப் பிறந்தது. அதற்கு இஸ்லாத்தின் இணையற்ற வீராதி வீரராம், நெறி நீதி தவறாத நேர்மைமிக்க செங்கோலராம் உமறுப்பெருமான் அவர்களின் திருப்பெயரைச் சூட்டிச் சீராட்டிப் பாராட்டி வளர்ந்து வந்தனர்.

உமறுக்கு ஏழு வயதானபொழுது சேகுமுதலியார் தம் அருமந்தமைந்தனும் அவரைத் தமிழ் பயிலத் திண்ணைப்பள்ளி ஒன்றிற்கு அனுப்பிவைத்தார். உமறும் அங்குச் சென்று செவிவாயாக நெஞ்சுகளனாகக் கேட்டவை கேட்டவை விடாதுளத்தமைத்துப் பயின்றுவந்தார். இவ்வாறு இரண்டு மூன்றாண்டுகள் உருண்டோடின. ஒருநாள் அவர் பள்ளி விட்டதும் தம் ஏட்டுச் சுவடிகளைத் தோளிலே மாட்டிக்கொண்டு தம் தோழர்களுடன் வீடு திரும்புங்கால், அரசவையிலிருந்து இல்லந் திரும்பிக்கொண்டிருந்த அவரின் தந்தையாரும்

கடிகை முத்துப் புலவரும் அவரின் முன் எதிர்ப்பட்டனர்; அப்பொழுது உமறுவின் அருளொழுகும் திரு நுதலும் அன்பொழுகும் பால்முகமும், அறிவொளிரும் திருநோக்கும் முத்துப் புலவரின் கண்களை அவர்பால் ஈர்த்து நின்றன. அப்பொழுது முத்துப்புலவர் சேகுமுதலியாரை நோக்கி 'அந்த முஸ்லிம் சிறுவன் யார் என்று' வினவினர். அதற்குச் சேகுமுதலியார் அவன் தம் காதற்றிருமகன் உமறுதான் என்று கழன்றதும் முத்துப்புலவருக்குத் தம் காதுகளையே நம்ப இயலவில்லை. 'அவ்வாறாயின் ஏன் அவனை இதுகாறும் என்னிடம் கல்வி பயில அனுப்பவில்லை' என்று அன்பு ததும்பிய சினத்துடன் வினவினர் முத்துப் புலவர். சேகு முதலியாருக்கு யாது கூறுவதென விளங்கவில்லை. 'அண்ணே! நாளைமுதல் தங்களிடமே அனுப்பி வைக்கிறேன் என்று மறுமொழி பகர்ந்தார் சேகு முதலியார். அதைக் கேட்டதும் முத்துப்புலவரின் முகம் மலர்ந்தது.

இல்லம் சேர்ந்த சேகுமுதலியார் தம் குலக்கொழுந்தான உமறை அழைத்து, 'மகனே, நாளைமுதல் முத்துப் புலவரின் வீடு சென்று அவரிடம் கல்வி பயின்றுவா. அவரைப் 'பெரியஐயா' என்றும், அவரின் மனைவியாரைப் பெரிய அம்மா' என்றும் அவருடைய மக்களை 'அண்ணன் தம்பி' என்றும் முறை செப்பி அழைத்துவா' என்று அன்புக் கட்டளை பிறப்பித்தனர். அவ்வாறே அடுத்தநாள் வைகறையில் உமறு இறைவனைத் தொழுது, பசியாறிவிட்டு முத்துப் புலவரின் இல்லஞ் சென்று சித்திரப்பாவையினத்தடங்கி, 'பெரிய ஐயா, தந்தையார் என்னைத் தங்களிடம் வந்து கல்வி பயிலுமாறு பணித்தார்கள்' என்று கூறி நின்றனர்; புலவரும் அவனை அன்புடன் முகமன்கூறி வரவேற்றுஅவரின் அறிவின் ஆழத்தை அறியும்பொருட்டு முன் பள்ளியில் பயின்று மனனம் செய்திருக்கும் செய்யுட்கள் சிலவற்றைப் படித்துக்காட்டுமாறு கூறினார். அவ்வளவுதான். கோடைமழையின் காரணமாகத் திடீரென்று ஆற்றில் வெள்ளப் பெருக்கு ஏற்பட்டது போன்று உமறின் வாயிலிருந்தும் மளமளவென்று செய்யுட் பெருக்கு வழிந்து உருண்டோடியது. அந்த வெள்ளப்பெருக்கிலே மூழ்கி அவரின் மதியளவை நன்கு நிதானித்துக்கொண்ட முத்துப்புலவர் முன்னைவிடப் பன்மடங்கு அவர்மீது அன்பு செலுத்தி அவருக்குக் கல்வி புகட்டிவந்தார். இவ்வாறு மூன்றாண்டுகள் ஓடின. ஒரு நாள்,

'ஆசிரியப் பெரும! நான் சென்று வருகிறேன்' என்று பின்புறத்திலிருந்து கம்பீரமாக முழங்கியது ஒரு குரல்.

உள்ளம் சோர்ந்து, உடல் சோர்ந்து என் செய்வதென அறியாது புறத்திலே கட்டிய கையுடனும் நிலத்திலே படும் பார்வையுடனும் தம் இல்லத்திலே அங்குமிங்கும் உலவிக் கொண்டிருந்த முத்துப் புலவரின் செவிகளிலே இம் மொழி கள் வீழ்ந்ததும் தலையை நிமிர்த்தி ஏறிட்டுப்பார்த்தார் அவர். இளவல் உமறு ஏறுபோல் அங்கு நின்றுகொண்டிருந் தார்.

'உமறு, என்ன செய்தி? எங்கே சென்றுவரப்போகிறாய்' என்று ஏக்கத்துடன் வினவினார் ஆசிரியர். தம் கண்மணி மாணுக்கனாகிய உமறு இந்தத் துன்பச் சூழலில் தம்மைத் தனியே விட்டுவிட்டு எங்கே செல்லப்போகின்றான் என்று அவரின் உள்ள ஆழியில் எழுந்த துயர எண்ணங்கள் அவரின் வதனத் திலே அலைவீசின.

'ஆசிரியப் பெரும! அரசவைக்குச் செல்லத் தங்களுக்கு தற்பொழுது வசதியில்லையாயின் என்னை அனுப்பிவையுங் கள், நான் சென்றுவருகிறேன். வென்றுவருகிறேன்' என்ற மிடுக்கான மொழிகள் அந்த இளவலின் வாயிலிருந்தும் மின் னல் வேகத்தில் வெளிவந்தன.

இதைக் கேட்டதும் சோக முகில் கவ்விக்கொண்டிருந்த ஆசிரியரின் வதன அடிவானமாகிய இதழ்க் கோடியில் ஒரு புன்முறுவல் பளிச்சிட்டு நெளிந்து மறைந்தது.

'உமறு நீ அறியாது பேசுகின்றாய். உன் இளமை இவ் வாறு உன்னைப் பேசச்செய்கின்றது. வந்துள்ள வாலைவாருதி எங்கே? நீயெங்கே? அவனோ வண்டமிழ் இலக்கண, இலக் கிய வாருதியெல்லாம் புகுந்து உழக்கியவன். வடமொழிக் கடலில் சண்டமாருதமெனச் சுழன்று சுழன்று வீசி அமுது எடுத்தருந்தியவன். வாக்கில் வல்லுனன்; வாதத்தில் இணை யிலான்; அறிவு வானின் இடியேறு. வடநாட்டில் வல்லு னர்களென வீற்றிருந்த புலவர்பெருமக்களையெல்லாம் தன் அறிவாற்றலாலும் வாக்கு வன்மையாலும் வென்று வெற் றிக்கொடி நாட்டி விருதுகள் பெற்று எட்டுத் திக்கும் ஏத்த, நம் தமிழகம் புகுந்துள்ளான். சின்னாட்களுக்கு முன் நம் அரசவைக்கும் வந்து நம் அரசர்பெருமானைத் தரிசித்து

அரசவையில் தன் பொழிவை நிகழ்த்த ஓர் அரிய வாய்ப்புத் தனக்கு நல்கவேண்டுமென்று இறைஞ்சினனும். நான் அப் பொழுது அரசவையில் இல்லை. பின்னர் நான் அரசவை அடைந்தக்கால் மன்னர் இதனை என்னிடம் மொழிந்தார். அவனுடைய இறைஞ்சுதலைத் தாம் ஏற்று அன்றிருந்து எட்டாம் நாள் அவனுடைய பெரும் பொழிவைத் செவிமடுப்பதாய் இணக்கம் பகர்ந்திருப்பதாகவும், அன்று அந்தாணி மன்றத்திற்கு அவசியம் நான் வரவேண்டுமென் றும் ஆணை பிறப்பித்தார். வந்துள்ள நாவலனுகிய வாலை வாருதியோ மந்திரம், தந்திரம் தெரிந்த மாயாவி. இமிழ்ப் புள தமிழ்மொழியைப் பற்றி அவன் என்னிடம் வின வின் யானோ என்னுல் இயன்ற அளவு அவனுக்கு விடை யிறுக்கலாம். ஆனல் மந்திரம் பற்றி வினவின் என்திறம் செய்வது? அதனுடைய அகர ஆகாரங்கள்கூட எனக்கு விளங்காதே. அவன் தன் மந்திர ஆற்றலினுலேயே மன் னர் மன்னர்களின் மதிப்பிற்குரிய புலவர் பெருமக்களையெல் லாம் மண்ணைக் கவ்வுமாறு செய்து மானிலவலம் வருவதாக வும் கேள்வியுற்றுள்ளேன். இந்நிலையில் என்செய்வதென்றே எனக்கு விளங்கவில்லை. என் மனமும் என்னவென்னவோ எண்ணிப் புண்ணுகிவிட்டது. அபயமளிக்கும் ஓர் உபாய மேனும் எனக்குத் தெரியவில்லை. அதன் காரணமாக உள் ளம் நைந்து, உடல் நலிவுற்றுச் சின்னுட்களாக அரச வைக்கே நான் செல்லவில்லை. இதனை நீயும் அறிவாய். இன்றுதான் அவனுடைய பொழிவு நாள். அவனும் அரசவைக்குத் தன் அடிவருடிகள் புடைசூழ ஆடம்பரத் துடன் வந்து வீற்றுள்ளானும். மந்திரிகள், தந்திரிகள், படை நடத்தும் தளபதிகள், மாண்புமிக்கப் பெருமக்கள் அனைவரும் வந்து அமர்ந்துள்ளனராம். நான் இன்னும்வாராதிருப்பதைக் கண்டு என் உடல் நலிவுதான் அதற்குக் காரணமாக இருக்குமெனக் கருதி மன்னர் தாம் பவனிசெல்லும் சிங்கமுகச் சிவிகையை அனுப்பி என்னை அழைத்துவர ஆளும் அனுப்பியுள்ளார். இந்நிலையில் யாது செய்வதென அறி யாது அனலிடைப்பட்ட புழுவென என் உளம் துடிக்கின் றது. செல்லாதொழிந்தாலோ அரசரின் சீற்றத்திற்கு இலக் காக நேருமே என்று என் உள்ளம் வெதும்புகிறது. சென்று வந்தாலோ இழிவுக்கு இலக்காகி இடர்ப்பட ஏதுவாகுமோ என்று என் மனம் ஐயுற்று ஐயுற்று அஞ்சுகிறது. சிவிகையோ எனக்காக வெளியில் காத்துக்கொண்டுள்ளது. இந்நிலையில்

என் செய்வதென்றே எனக்கு விளங்கவில்லை' என்று கூறினார் முத்துப்புலவர்.

'ஆசிரியப் பெரும! எல்லாம் நான் நன்கு அறிவேன். காத்திட ஒருவன் காத்து நிற்கும்பொழுது கவலை நமக்கேன்? இறைவனை நம்பியவர்களுக்கு அவன் போதுமானவன். அளப்பரும் பொருளாகிய இறைவனின் அருட்பெரும் செயல்மீது நம்பிக்கை வைத்து என்னை வாழ்த்தியனுப்புங்கள், நான் சென்றுவருகிறேன்' என்ற திடமான மொழிகள் அந்த இளவலின் இதய ஊற்றில் ஊறி வெளியே பாய்ந்தன.

ஆசிரியர் சற்றுச் சிந்தித்தார். என்றுமில்லாவண்ணம் உமறு இவ்விதம் பேசுகின்றானே. அவன் இவ்வண்ணம் பேச அவனுக்கு எவ்வண்ணம், எங்கிருந்து நெஞ்சுரமேற்பட்டது? இறைவனின் மறைவான ஆற்றலல்லவோ இதில் வேலை செய்வது போன்றுள்ளது. நல்லது; அவனையே அனுப்பி வைப்போம். அவன் யாதேனும் தவறிழைத்துவிடின் சிறியோர் செய்யும் பெரும்பிழையெல்லாம் பெரியோராயின் பொறுப்பது கடனே என்று அங்குள்ளோர் பொறுத்துக் கொள்வர்' என்ற எண்ணம் ஆசிரியரின் உளத்தே கோடிழுத்தது. அவ்வளவுதான். ஆசிரியரின் பொன்மேனி முழுவதும் ஒரு மின் ஆற்றல் ஊடுருவிப் பாய்ந்தது போன்ற உணர்வு ஏற்பட்டது. விரைந்தெழுந்தார். அரசவைக்குத் தாம் செல்லுங்கால், அணிந்துகொள்ளும் விருதுகளையும் மணிமாலைகளையும் எடுத்துவந்து இளவல் உமறின் இளம் மேனியில் சாத்தினார். அதன்பின் அன்பொழுகும் கண்களால் அவ்விளவலின் அழகை ஒருமுறை பருகி 'உமறு! இறைவன் அருளால் இனிதே சென்றுவா' என்றும் வாழ்த்தினார். தாம் உடல் நலிவால் வர இயலாதுபோனமையின் தம் மாணுக்கனை அனுப்பிவைத்திருப்பதாக அரசரிடம் சென்று முன்னறிவிப்புச் செய்யுமாறும் ஒரு பணியாளனை விரட்டினார். சிவிகை அரசவையை நோக்கிச்சென்றுகொண்டிருந்தது. அதிலே பதினான்டு வாலைப் பருவத்தினராகிய உமறு, வாலைவாருதியைச் சந்திக்க வீறுடன் சென்றுகொண்டிருந்தார்.

அரசவையில் திங்களைச் சூழ்ந்த விண்மீன்கள் போன்று அமைச்சர்களும் அறிஞர்களும், அறிவுசால் பெருமக்களும்

அரசவைரச் சூழ அணியணியாக வந்தமர்ந்திருந்தது, விண்ண கத்தேயுள்ள 'பால்வீதி' தான் இம் மண்ணகத்தே வந்துற் றதோஎன்று ஐயுறுமாறு இருந்தது. ஆனால் அப் பால்வீதியின் கண் புரவலருக்கு வலதுபக்கல் புலவர் அமர்வதற்கென ஓர் இடம் காலியாகக் கிடந்தது எல்லோருடைய கண்களிலும் குத்தி அவர்களுடைய கருத்திலும் ஊடுருவிப் பாய்ந்து கொண்டிருந்தது. 'எங்கே முத்துப்புலவர், எங்கே முத்துப் புலவர்' என்ற மொழிகள் எல்லார் வாயிலும் அடிபட்டன. அதுமட்டுமல்ல, 'எங்கே முத்துப்புலவர், எங்கே முத்துப் புலவர்' என்று எல்லோருடைய கண்களும் தேடத் துவங் கின. அரசரின் செவ்வரி படர்ந்த கண்களும் 'எங்கே முத் துப் புலவர், எங்கே முத்துப்புலவர், எப்பொழுது வருவார் அவர்' என்ற ஏக்கத்துடன் இமைகொட்டாது வாயிலையே நோக்கிக்கொண்டிருந்தன. அப்பொழுது ஓர் இளவல் குகை யிலிருந்து சிங்கம் வெளியே பாய்வதுபோன்று சிவிகை விட் டிறங்கி காலணிகளையும் கழற்றாது கம்பீரமாக இரத்தினக் கம்பளத்தின்மீது பீடுநடை போட்டு நடந்து அரசருக்கருகா மையில் முத்துப்புலவருக்கென ஒதுக்கப்பட்ட இடத்தில் வந்தமர்ந்து தம் பணியாளனை அழைத்துத் தம் காலணி களைக் கழற்றிச்செல்லுமாறு சைகை செய்ததும், அங்கு வீற் றிருந்தோர் அனைவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கண் மொழிகளால் ஏதேதோ பேசிக்கொண்டார்கள். அரசரின் கண்களோ சினத்தால் செங்கண்களாயின. 'வரட்டும், வாருதியின் குறடாப்பிடியில் இவன் நிச்சயம் மாட்டியே தீர்வான். அப்பொழுது அக் குறடாவை என் கையிலே வாங்கி இவனுடைய பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்டமிட்டுப் பகைஞன் முன்னே அவன் திமிர் ஒடுங்க, அவனின் தலை நொறுங்க அடிக்கிறேன்' என்ற வெஞ்சின எண்ணங்கள் அரசரின் உள்ளின் உள்ளே கொந்தளித்துக் குமுறிக்கொண் டிருந்தன. அரசர் வாலைவாருதியை நோக்கி, 'என் அத்தாணி மன்றப் புலவரான முத்துப்புலவர் உடல் நலக்குறைவால் வர இயலாமையின் அவர்தம் மாணுக்கரை அனுப்பிவைத் துள்ளார். ஆதலின் நீவிர் உம் பொழிவைத் துவங்குக' என் றார். அதன்படி வாலைவாருதியும் தன் பொழிவைத் துவங் கினான்.

முத்துப் புலவரின் மாணுக்கனை அந்த இளங்காளை தன் னைக் கிள்ளுக்கீரையென எண்ணிக்கொண்டு செருக்குடன்

வந்ததானது வாலைவாருதியின் உச்சி முடியையும் பிடித்து ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டது. 'என்ன திமிர்? என்ன திமிர்!! இந்த இளைஞனுக்கு என்ன திமிர்!!! இந்தத் தலைக் கிறுக்குச் சிறுவனை என் மந்திராயுதத்தினால் 'வாயினிற் பிளந்து குத்தி மணிக்குடல் எடுத்து மண்டை ஆயிரம் சுக்கு லாக அடிக்கிறேன், பார்' என்று தன் மனத்திற்குள்ளே சூளுரை பகர்ந்துகொண்டு தன்னுடைய சொற்பொழிவைத் துவங்கினான். வாலைவாருதி வாயைத் திறந்ததும் முத்தமிழ்க் கடலிலே அகோரமான சண்டமாருதம் சுழன்று சுழன்று வீசி அக் கடலைக் கலக்கி அதனடித்தளத்திலே மறைந்து கிடந்த முத்துக்களையும் மணிகளையும் அதன் கரையிலே அடித் தொதுக்குவது போன்றிருந்தது. அவன் தன் கையிலே அணிந்திருந்த பொற் கடகத்தை அசைத்து அளவற்ற ஆங் காரத்துடன் 'என்னை வாலைவாருதி என்றறியாயோ, பிள் ளாய்' என்று உறுமினான்.

இதைக் கேட்டதும் இளவல் உமறின் இரு விழிகளும் சிவந்து கனற்பொறி கக்கின. தம்மைப் பிள்ளாய் என்று தம் இளமை நோக்கி வாலைவாருதி இழித்து விளித்ததானது உமறின் முகத்தைக் கொல்லனின் உலைக்களம் போலாக்கி யது. 'நீ வாலையாக இருந்தால்தான் எனக்கென்ன, வாருதியாக இருந்தால்தான் எனக்கென்ன? இறைவனின் அருளில் நிறைவான நம்பிக்கை கொண்டுள்ள எனக்கு குறை நேருமோ என்ற அச்சமுமில்லை; குற்றம் நேருமோ என் ஐயமுமில்லை; இன்னல் நேருமோ என்ற ஏக்கமுமில்லை; இழப் பேற்படுமோ என்ற பயமுமில்லையே' என்று தம் மனத்திற் குள்ளேயே எண்ணிக்கொண்டு வீரியர் வீரம் விழுங்கிநின்ற வேலான் போன்று வாலைவாருதியின் ஆங்காரக் கூச்சலையும் தூக்கி விழுங்கும்வண்ணம் கிடுகிடுவென இடி முழங்கினாற் போன்று ஒரு பாட்டுப் பாடினர். அதிலே வாலைவாருதி யையே பிள்ளாய் என்றழைத்துத் தம் பெருமிதத்தை அவ னுடைய சிறுமதிக்கு உணர்த்தி, 'என்னை என்னவென்றெண் ணிக்கொண்டுள்ளாய்? என் பெயர் உமறு என்பது உனக்கு நினைவிருக்கட்டும். இந்த உமறு குமுறினால் அண்ட முக டும் படீரெனத் தெறித்துப் பிளந்துவிடும் என்பதை அறி வாயாக. சாக்கிரதை!' என்ற கருத்துக்களானவை பின்னிப் பிணைந்து கூம்பு நீட்டி வாலைவாருதியின் இரு செவி களிலும் சென்று கடாவி, அவனுடைய கடைவாயைக்

கிழித்து, அவனுடைய நாவை அறுத்து, அவனுடைய ஐம் புலன்களையும் அடக்கி ஒடுக்கி நின்றன.

அவ்விதப் பெருமைவாய்ந்த பாட்டுத்தான் யாது என நீ வினவுகின்றாயா? கூறுகிறேன் கேள்.

சமரதுர கததுங்க மனருஞ்ச பாசென்று
சரிசமா சனமீதிலே
அமரவொரு நரகொம்பு தினமுஞ்சு மாசெல்லும்
அமுதகவி ராஜனே
திமிரபகை வரைவென்ற பருதியெனு மெமதெட்ட
தீரணணி வாயில் வித்வான்
உமறுகுமு றிடிலண்ட முகடும்ப டீரென்னும்
உள்ளச்சம் வையும் பிளாய்.

இவ்வாறு உமறு பாடவே—இல்லை—கர்ச்சிக்கவே, அது எத்திசையும் எதிரொலி செய்து அத்தாணி மன்றத்தில் அமர்ந்திருந்த அனைவருடைய உடல்களையும் உள்ளங்களையும் ஒருங்கு சேர்த்து ஒரு குலுக்குக் குலுக்கியது. வாலைவாருதி வாயிழந்து, மெய்யயர்ந்து, கருத்தழிந்து, முகங் கவிழ்ந்து வீற்றிருந்தான். அவனுடைய கல்விச் செருக்கெல்லாம் அவனைக் காலைவாரிவிட்டு ஓடிவிட்டன. அவனுடைய மந்திர, மாய ஆற்றல்களெல்லாம் மண்ணைக் கவ்வி மண்ணோடு மண்ணாக மக்கி மறைந்துவிட்டன. மன்னர் முன்னிலையிலும் மாமக்கள் முன்னிலையிலும் வைத்து, ஓர் இளவல் தன்னைப் 'பிளாய்' என்று அழைத்து இழிவுபண்ணி எச்சரிக்கை செய்தது அவனுக்கு எதிர்பாராத பேரிடி போன்றிருந்தது. "அவர் இறைவனின் அருள் பெற்றவர் போன்று தோன்றுகிறது. இல்லையெனில் அவருக்கு இத்துணை நெஞ்சுரம்தான் எவ்வாறு ஏற்படும்? இறையருள் பெற்ற நிறையறிவு உடையவரிடம் என் மந்திர மாயங்களெல்லாம் என் செய்யும்" என்று எண்ணிக் கலங்கினான். அடுத்தகணம் அவ

னுடைய மூளையிலே ஒரு சிறந்த சிந்தனை பளிச்சிட்டது. இழித்துரைத்து இழிவைப் பெற்றோம். இனி மதித்துரைத்து மதிப்பைப் பெறுவோம் என்றெண்ணினன். அவ்வளவுதான். சரேலெனப் பாய்ந்து கட்டிளங்காளை உமறைக் கட்டித் தழுவி அவர்மீது புகழ் மழையைப் பொழிந்தான். புகழ் மகுடம் சூட்டினன்; புகழ் மாலையை அணிவித்தான். அத்துடன் அவரை விட்டானில்லை. தான் மன்னர் மன்னர்களிடம் பரிசிலாகப் பெற்ற விருதுகளையும் மணிமாலைகளையும் தன் கழுத்திலிருந்தும் கழற்றி உமறின் கழுத்தில் புனைந்தான். அதன்பின் உமறை நோக்கி, 'உமறு! நீ சொல்லேருழவன்; உன்னை வெல்ல யான் வல்லேனல்லேன்' என்று தோல்வி மொழி பகர்ந்தான். இதைக் கேட்டதும் அங்கு வீற்றிருந்த அனைவரின் உள்ளங்களும் இன்பக் கூத்தாடின. மன்னரின் மனம் மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதந்தது. அவரின் சினத் தீயெல்லாம் அவ்வெள்ளத்தில் மூழ்கி அவிந்தொழிந்தது, அடக்கமுடியா உணர்ச்சி பெற்ற அரசர் அடலேறு போன்று அரியாசனத்திலிருந்து இறங்கி உமறை நெஞ்சோடு நெஞ்சணைத்து இறுகப் புல்லினர். தம் மார்பை அலங்கரித்து அசைந்துகொண்டிருந்த விலைமதிக்கவொண்ணு வைர மாலையைக் கழற்றி உமறின் கழுத்திலே சூட்டினர். பரிசில் பல நல்கிப் போற்றிப் புகழ்ந்தார்; ஏற்றித் துதித்தார். 'பார்த்தாலும் பார்த்தேன், நும்போலப்பாவலரைப் பார்க்கவில்லை' என்று பாராட்டு மொழிகளைச் சொரிந்தார். அதன்பின் அவரைக் கைதாங்கிப் பல்லக்கிலேற்றி 'வழி வழி வந்த என் குலப் பெருமை நும் பொருட்டால் இன்று வாழ்ந்தது' என்று வாயுறை வாழ்த்து வழங்கி வழியனுப்பினர். இசைமுழக்கத்துடனும், அரச மரியாதைகளுடனும் முத்துப் புலவரின் இல்லம் நோக்கிப் பல்லக்குபவனி சென்றுகொண்டிருந்தது.

இப்பொழுது முத்துப்புலவரின் நிலைமை என்னவென்று பார்த்துவருவோம். அவர் தம்முடைய இல்லத்திலே கூனிக் குறுகிப் படுத்துக்கொண்டிருந்தார். அவர் படுத்திருந்த படுக்கையானது அவருக்கு நெருப்புப் படுக்கை போன்றும் நரகப் படுக்கை போன்றுமிருந்தது. அதிலே அவரால் நீண்ட நேரம் படுத்திருக்க இயலவில்லை. எனவே, சற்றுநேரம் அதிலே படுத்துக்கிடப்பதும், அதன்பின் தெருவை வந்து உற்று நோக்குவதுமாக அவருடைய நேரம் நத்தையுடன்

போட்டியிட்டு நகர்ந்துகொண்டிருந்தது. அரசவையில் என்ன நிகழ்ந்ததோ, யாது நிகழ்ந்ததோ! நம்மாலும் இப்பொழுது அங்குச் செல்ல இயலாதே! அங்கிருந்தும் ஒருவரேனும் வரவில்லையே என்ற எண்ணக் கணைகள் அவருடைய இதயத்தை வதைசெய்துகொண்டிருந்தன. நேரம் ஆக ஆக அவருடைய நெஞ்சத் துடிப்பும் அதிகரித்துக்கொண்டிருந்தது. அப்பொழுது சற்றுத் தொலைவிலிருந்து இசை முழக்கம் காற்றிலே மிதந்துவந்து அவருடைய காதுகளை அடைந்ததும் அவர் தம் காதுகளைத் தாழ்த்திக் கவனித்தார். வாலை வாருதி வெற்றி முழக்கத்துடன் ஊர்வலம் வருகின்றானோ என்ற ஐயம் இசையின் பெருக்கைக் கேட்ட அவருக்கு ஏற்பட்டது. ஒலி வரும் போக்கைப் பார்த்தால் அவன் தம் தெரு வழியாகவும்தான் பவனி வருவான்போல் தோன்றுகிறது என்று எண்ணினார். எனவே, என்செய்வதென அறியாது விறுவிறுவென உள்ளேசென்று தம் படுக்கையிலமர்ந்து எண்ணுததையெல்லாம் எண்ணியெண்ணித் தம் உள்ளத்தைப் புண்ணுக்கிக்கொண்டிருந்தார். அப்பொழுது பல்லக்குத் திடீரெனத் தம் வீட்டின்முன் வந்து நின்றதும் முத்துப் புலவரின் இருதயமும்நின்றுவிடும்போலிருந்தது. அவருடைய உடல் அதிர்ந்தது. அடுத்தகணம் இளவல் உமறு பல்லக்கிலிருந்து இறங்கித் தம்மை நோக்கி உவகையின் உருவாக வருவதைக் கண்டதும் அவரால் தம்முடைய கண்களையே நம்ப இயலவில்லை. கதிரவனைக் கண்ட கமலம் போன்று அவருடைய அகமும் முகமும் மலர்ந்தன.

'என்னப்பா உமறு? என்ன செய்தி?' என்று ஆவலுடன் வினவினார் ஆசிரியர்.

'சென்றேன், வென்றேன்' என்று பெருமிதத்துடன் மறுமொழி பகர்ந்தார் மாணுக்கர். அதன்பின் அரசவையில் நடந்தவை அனைத்தையும் தம்ஆசானிடம் விரிவாக எடுத்துரைத்தார். அதைக் கேட்டு ஆசிரியரின் உள்ளம் துள்ளி விளையாடியது. 'என் மானம் காத்த மாணவ! யானே மூப்பெய்திவிட்டேன். எனவே, இன்றுமுதல் நீயே அரசவைப் புலவராக அமர்ந்திரு' என்று ஆசீர்வதித்தார் ஆசிரியர்.

வழிவழிவந்து வான்புகழ் பெற்ற முகலாயப்பேரரசின் வன்மைசால் மன்னரேருக ஔரங்கஸீப் ஆலம்கீர் பாதுஷா

அரசாண்ட காலம் அது (கி. பி. 1658—1788). அக்காலை தென்னாட்டின் இருள் போக்கும் ஒளி உருவாய் ஞானவாரியில் மூழ்கி முத்துக்குளித்த மேதகையாய், கலை மலையின் உச்சிச் சிகரத்தை எட்டிப்பிடித்த ஏந்தலாய், அண்ணல் நபியைப் போற்றும் நுண்ணறிவாளர் (மாதிஹுர் ரசூல்) என்று உலகத்தினரால் புகழப்படும் பேறுபெற்றவராய் சதக்கத்துல்லா அப்பா அவர்கள் ஞானக்கதிர் வீசி ஒளிர்ந்துவந்தார்கள். அவர்களின் புகழ் ஒளியும் புகழ் மணமும் எட்டுத் திக்கிலும் வீசிப் பரவி ஔரங்கஸீப் ஆலம்கீர் பாதுஷாவின் அரசவையையும் எட்டி நின்றன. 'அடிகளாரே! தங்களைக் காண என் கண்கள் தவம் செய்கின்றன. ஆதலின் என் தலைநகராம்-தொல்பதியாம் டில்லி நகருக்கு வருகை தருவீர், வருகை தருவீர்' என்று மடங்கலுக்குமேல் மடங்கல் வரைந்தார் பேரரசர். அதற்கு அடிகளார் 'எளிய முறையில் இனிதே என் கடனை நிறைவேற்றி இங்குக் காலங்கழித்து வருகிறேன். பெரும் தொலைப் பயணத்தை ஏற்க எனக்கு இயலாது' என்று மடல் தீட்டினர். எனினும் ஔரங்கஸீப் அவர்களை விட்டாரில்லை. 'அடிகளாரே! அதனால் குற்றமில்லை. எனது வேணவாவையாவது நிறைவு செய்யுங்கள். தங்களைத் தென்னாட்டிற்கு என் பிரதிநிதியாக நியமிக்க எண்ணியுள்ளேன். அன்பு கூர்ந்து அதனையாவது தாங்கள் ஏற்றருள்வீர்களாக!' என்று இறைஞ்சினார். புளியம்பழத்தொடு தோடெனப் பொருந்தி பற்று நீங்கிய பான்மையராய்ப் பாரினில் வாழ்ந்தும் வாழாததுபோல் இருந்துவந்த அடிகளார், 'அப் பதவி எனக்கு வேண்டாம்' என்று விடையிறுத்தனர். எனினும் ஔரங்கஸீப் அவர்களை விட்டாரில்லை. 'அடிகளாரே! தங்களால் அப் பதவியை ஏற்க இயலாது போயினும் தங்களின் அருமை மகனையாவது அப் பதவியை ஏற்றுக்கொள்ளுமாறு செய்யுங்கள்' என்று வெகுவாக வேண்டி நின்றார். அதற்கு அடிகளார் ஒருவாறு இணங்கினர்.

அடிகளாரின் அன்பிற்குரிய ஆன்மீக மாணவராம் பெரியதம்பி மரக்காயரின் மகன் செய்கப்துல்காதிர் என்பவரும் சிறியதோர் வாணிபம் நடத்திவந்தனர். அண்ணல் நபியவர்களின் அறம்தவறா நெறி முறையில் அடியெடுத்துவைத்துச் செயலாற்றினமையின் கூழாங்கற்போன்றிருந்த அவருடைய வாணிபம் விரைவில் குன்றென உயர்ந்து

பின்னர் கனகமாமலையெனக் கூம்பு நீட்டி நின்றது. அவருடைய நாவாய்கள் அரும்பெரும் பொருள்களைச் சுமந்து, வானிலே திக்குவேறு திசை வேறாக மிதந்துசெல்லும் வெண் முகிலைப் போன்று நானிலத்தின் நாற்கோணங்களையும் நோக்கிப் பாய்விரித்துச் சென்றுகொண்டிருந்தன. எளிய முறையில்வாழ்வைத் துவங்கியசெய்கப்துல்காதிர் சில்லாண்டுகளுக்குள் இணையற்ற முறையில் வாணிபம் நடாத்தும் ஏந்தலானார். இல்லையென்றிரப்போர்க்கு இல்லையென்றுரையா அருளிதயம் பெற்ற எழில் வள்ளலானார். உழைத்துச் சிவந்த அவருடைய இரு கரங்களும் இப்பொழுது கொடுத்துச் சிவந்தன. ஓர் தட்டிலே பொன்னும் ஓர் தட்டிலே நெல்லும் ஒக்க விற்கும் கார்தட்டிய பஞ்ச காலத்திலே அன்னதானத்துக்கு மார்தட்டி முன்வந்தார் அத் துரைமகனார். அவருடைய புகழ்ப்பொழுது எங்கணும் ஒளிவீசிப் புலர்ந்தது. புகழ்மணம் எங்கணும் கால்வீசிப் பாய்ந்து பரவியது.

அப்பொழுது அடிகளார் சதக்கத்துல்லா அப்பா அவர்களுக்கு அரசர்க்கரசர் ஔரங்கசீப்பிடமிருந்து ஓர் அஞ்சல் வந்தது. 'வங்க நாட்டில் அரசப் பிரதிநிதியாக அமர்த்த அருங்குணமும் பெருந்திறனும் படைத்த ஒருவர் தேவைப் படுகிறார். அப் பதவியை அணிசெய்யத் தங்களின் ஆன்மீக மாணவர் செய்கப்துல்காதிர் மரக்காயர்தாம் சிறந்தோர் எனக் கருதுகிறேன். என் கருத்தைச் சீரிய முறையில் நிறைவேற்றித்தர நேரியராகிய தங்களை நான் வேண்டி நிற்கின்றேன்' என்று அதிலே அவர் பொறித்திருந்தார். அவ்வோலையைப் படித்துவிட்டுச் செய்கப்துல்காதிர் மரக்காயரிடம் அதனை நீட்டினர் அடிகளார். 'தாங்கள் என்ன ஆணையிடுகின்றீர்களோ அதனைச் சிரமேற்றாங்கிச் செயலாற்றத் தயாராயுள்ளேன்' என்று கூறினர் வள்ளல். முடிவு என்ன? சீதக்காதி என்று வழக்காற்றில் சிதைந்து நின்ற செய்கப்துல் காதிர் மரக்காயர் என்னும் முழுப் பெயர் படைத்த அந்த வணிகப் பேரரசர், ஞானப் பேரரசர் சதக்கத்துல்லாஅப்பா அவர்களின் ஆசியுடன் இந்தியப் பேரரசர் ஔரங்கசீபின் பிரதிநிதியாக வங்க நாட்டில் அரசோச்சத் துவங்கிவிட்டார்.

அவர் அரசப் பிரதிநிதியாக வங்க நாட்டில் வீற்றிருந்து அரசோச்சுங்கால் அவருடைய நுண்ணிய அறிவும் செயற்

றிறனும் சீர்திருத்த வேகமும் ஔரங்கசீபின் மனத்தைப் பெரிதும் மகிழ்வித்தன. எனினும் வங்கத்தின் தட்பவெப்ப நிலை அவருடைய உடல்நிலைக்குப் பங்கத்தை உண்டுபண்ணின. எனவே, சிலகாலம் அங்கு அரசோச்சிய பின் மக்கள் வருந்த, மாமன்னர் வருந்த அவர் அப் பதவியைத் துறந்து தம் தாயகம் திரும்பவேண்டியதாயிற்று.

வள்ளலார் சீதக்காதியின் வான்புகழானது அக்காலை சேது நாட்டில் செங்கோலோச்சி வணங்காமுடி மன்னர் என்றுபுகழ்ப்பெயர் பெற்றகிழவன் சேதுபதி என்ற விஜயரகுநாதத் தேவர் காதிலும் வீழ்ந்தது. அவர் வள்ளலாரை அணுகித் தமக்கு அவரின் உதவி தேவை என்றும் சேது நாட்டின் தலைமை அமைச்சர் பதவி ஏற்று அதனைப் பாருலகிலேயே ஒரு பொன்னுலகமாக ஆக்கவேண்டும் என்றும் வேண்டிக் கொண்டார். அவ் வேண்டுகோளுக்கு வள்ளலாரும் இணங்கினர். வள்ளலாரின் அமைச்சுக் காலத்தில் சேது நாடு சீரும் சிறப்பும் பெற்று உயர்ந்தது. மறுமலர்ச்சி பெற்று மிளிர்ந்தது. பொன்னும் மணியும் அங்கு பூத்துக் குலுங்கின. அவற்றைக் கண்டு பூரித்தார் சேது மன்னர். தம் திருப் பெயராகிய விஜயரகுநாதர் என்பதைச் சேர்த்து 'விஜயரகுநாதப் பெரியதம்பி' என்ற புகழ்ப் பட்டத்தைச் சீதக்காதிக்குச் சூட்டி மகிழ்ந்தார் சேதுபதி.

வணிக மன்னராகிய சீதக்காதி அரசியல் அறிஞராகவும் அரசோச்சும் அமைச்சராகவும் மட்டும் இருக்கவில்லை. கல்விக் குரிசிலாகவும் கற்றூர் ஏற்றும் நற்றூளராகவும் கற்றூரைக் காமுற்று நட்டாரை வாழ்விக்கும் நற்றமிழராகவும் விளங்கினர். அஃருடைய நாவில் தமிழ் நடனமாடியது. வாயில் தமிழ் மணம் கமழ்ந்தது. இல்லத்தில் தமிழ் அரியணை வீற்றிருந்தது. எனினும் அவ் வள்ளலாரின் அன்பு உளத்திலே அக்காலை ஒரு கவலை, ஒரு துயரம் சிறு கோடிழுக்கத் துவங்கியது. தேனினுமினிய தமிழில் தெவிட்டா இன்பம் தரும் முறையில் மானிலம் தனக்கோர் மணிவிளக்காய் வந்த மாநபியின் மாண்புறு வரலாற்றை எழுதும் ஆற்றலும் அறிவும் பெற்ற போற்றரும் புலவர், முஸ்லிம்களில் ஒருவரேனும் இல்லையே என்று அவருடைய இதயம் எண்ணியெண்ணிச் சிவந்து செந்நீர் சிந்திக்கொண்டிருந்தது. அவருடைய கண்கள் கண்ணீரைச் சொரிந்துகொண்டிருந்தன.

அக்காலை அவருடைய செந்நீரை நிறுத்திக் கண்ணீரைத் துடைக்கும் அரும்பெரும் வாய்ப்பும் அவரைநோக்கி விரைவாக நெருங்கிக்கொண்டிருந்தது. அவரும் அதனை நோக்கி அண்மிக்கொண்டிருந்தார்.

ஒருநாள் அரசாங்க அலுவலாக எட்டப்ப நாயக்கரின் அரசவைக்கு எழுந்தருளினார் சீதக்காதி. அங்கே அத்தாணி மன்றக் கவிஞராக அட்டாவதானம் செய்வதுமுதல் ஆசு, மதுர, சித்திர, வித்தாரக் கவிதைகள் பாடவும்வல்ல பாவல்ல நாவல்லராய் உமறு என்னும் புலவர்பெருமான் வீற்றிருப்பதைக் கண்டதும் கதிரவனைக் கண்ட கமலம் போன்று சீதக்காதியின் இருதயக் கமலமும் மலர்ந்து, இன்பத் தேன் ஒழுக்கியது. எனினும் தம்முள்ளத்திலே பன்னெடுங் காலமாகப் பதுங்கிக் கிடந்த அவ்வெண்ணத்தை அவரிடமோ அவ்வரசரிடமோ அவர்வெளியிட்டாரில்லை. ஒருநற்சூழலை உண்டுபண்ணிக்கொண்டு அந் நற்செய்தியைப் புலவர் பெருமானின் செவிப் புகுத்தவேண்டுமென்று எண்ணினர் வள்ளலார். எனவே, அங்குள்ள அலுவல்களை ஆற்றி முடித்து அரசரிடத்தும் புலவரிடத்தும் பிரியா விடைபெற்று மீண்ட சீதக்காதி, இரண்டு மூன்று திங்கள் கழிந்தபின் தம் இல்லத்தில் ஒரு பெரும் விருந்துக்கு ஏற்பாடுசெய்து எட்டயாபுர மன்னருக்கும், உமறுப் புலவருக்கும் விருந்துண்ண வருமாறு திருமுகம் விடுத்தனர். அரசாங்க அலுவல் காரணமாக அரசர் வர இயலாது போகவே தம் அத்தாணி மன்றப் புலவராகிய உமறுப் புலவரை சீதக்காதியின் விருந்துக்கு அனுப்பிவைத்தனர் அரசர். தம் இல்லம் போந்த புலவர்பெருமானை, 'வீரமும் திறனும்வாய்ந்த மென்கரத்தணைத்து மோந்தார்' வள்ளலார். பாலும் பழமும் போன்று இருவரும் பலநாள் பழகி அளவளாவினர். அப்பொழுதொருநாள் சீதக்காதிபுலவர்பெருமானைநோக்கி, புவனமும் சுவனமும் போற்றவந்த புகழுருவார் நபிகள்பெருமானின் வரலாற்றினை இன்பத் தமிழில் தேன் கவிகளாக இயற்றித் தரவேண்டுமென்று வேண்டி நின்றனர். புலவர்பெருமான் தம்மீது சுமத்தப்பட்ட பெரும் பொறுப்பினை உணர்ந்தார். சிறிதுகணம் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்தனர். அதன்பின் 'ஆண்டவன் அருள்பாலிப்பின் ஆக்குவோம்' என்று அமுத மொழி பகர்ந்தனர். அப்பொழுது சீதக்காதியின் உள்ளம் களி மிகுதியால் துளும்பியது.*

அடுத்தநாள் சீதக்காதி புலவர் பெருமானைத் தம் ஆன்மீக ஆசானும் சதக்கத்துல்லா அப்பா அவர்களிடம் அழைத்துச்சென்று அறிமுகப்படுத்திவைத்தனர். அண்ணல் நபி அவர்களின் அருமை வரலாற்றை அமுதப் பாவில் புராணமாக இயற்றித்தர அவர் இணக்கம் தெரிவித்ததை அவர்களுக்கு எடுத்துரைத்து அதற்கு உரைகொடுக்க வேண்டுமென்று வேண்டி நின்றார் சீதக்காதி. சரிகையாலான முறுக்குத் தலைப்பாகை அணிந்து தாடியின்றி கிர்தாமீசை வளர்த்து, நகங்களில் மருதோன்றி இட்டு இந்துக்கள் போன்று காட்சி வழங்கிய அப்புலவர் பெருமானை அடிகளார் ஏறிட்டுப் பார்த்ததும் அவர்களின் கண்கள் தீப்பொறியைக் கக்கின. இந்துக்களின் கோலத்தைப் பூண்டுள்ள இவரா எம்பெருமானின் எழில் வரலாற்றை இன்பந்தமிழில் இயற்றத்தகுதி வாய்ந்தவர் என்று இழித்துரைத்து அவ்

* எட்டப்ப நாயக்கரின் அரண்மனையில் அத்தாணி மன்றக் கவிஞராக உமறுப்புலவர் இருக்குங்கால், இராமாயணத்தை அவர் ஒருபஞ்சணையில் சாய்ந்துகொண்டு விரிவுரை நிகழ்த்துவதும் அவருக்குஎதிரேமன்னர் மற்றொருபஞ்சணையில்சாய்ந்து கொண்டு ஆமாப்புலவராக இருப்பதும் வழக்கமாக இருந்து வந்ததென்றும், ஒருநாள் உமறுப்புலவர் விரிவுரை நிகழ்த்தி வருங்கால், மன்னர் வேறு யாதோ பராக்காக இருந்துவிடவே உமறுப் புலவருக்குச் கடும் சினம் ஏற்பட்டுவிட்டதென்றும், உடனே உமறுப் புலவர் 'நான் யாந்தக் கழுதையின் முகத்தைப் பார்த்து விரிவுரை நிகழ்த்துவது' என்று கூறியதாகவும், மன்னர் தம் தவற்றினை உணர்ந்து புலவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு அவரின் விரிவுரையைக் கவனமாகக் கேட்டுவந்ததாகவும், எனினும் அக் கடுஞ்சொல் மன்னரின் இதயத்தைப் பெரிதும் சுட்டுவிட்டதென்றும், அதன் காரணமாக மன்னருக்கும் உமறுப் புலவருக்கும் மனத்தாங்கல் ஏற்பட ஏதுவாகிவிட்டதென்றும் எனவே அவ்வரசவையை விட்டு நீங்கி சீதக்காதி வள்ளலை அவர் அணுகியதாகவும் ஒரு கதை வழங்கிவருகிறது.

விருவர் முகத்திலும் கரியைத் தடவினர் அடிகளார்: தம்பொருட்டால் புலவர் பெருமானுக்கு இழிவு நிகழ்ந்ததை எண்ணி நெக்குருகினார் சீதக்காதி. இந்த எதிர்பாராத இழிமொழிகளானவை புலவர் பெருமானுக்கும் பேரிடிபோன்றிருந்தது. எனினும் அடிகளாரை எதிர்த்துரைப்பது தமக்குத் தகாது எனவெண்ணி அளவற்ற மனவேதனையுடன் அவ்விடத்தை விட்டகன்று பள்ளிவாயிலை அடைந்து இறைவனின் அருள்வேண்டித் தலைகுனிந்து வீற்றிருந்தனர். சீதக்காதியும் புலவர் பெருமானை எம்முகத்துடன் மீண்டும் சந்திப்பது என்று நாணமுற்று தம் இல்லம் புக்கி அல்லலுற்றுக் கொண்டிருந்தார்.

கதிரவன் மறைந்து விண்ணகத்தே தண்மதியும் தன் ஆட்சியைத் துவங்கியது. எனினும் புலவர் பெருமான் இல்லம் திரும்பவில்லை. இறைவனே! நீதான் எனக்கு இன்னருள் பாலிக்க வேண்டும் என்று எழுந்து நின்று இறைஞ்சினார்; குனிந்து நின்று இறைஞ்சினார்; குப்புறவீழ்ந்து இறைஞ்சினார், கண்ணீர் வடித்து இறைஞ்சினார்; செந்நீர் சிந்தி இறைஞ்சினார். அதன்பின் அண்ணலெம் பெருமான் பக்கல் தம் நோக்கைத் திருப்பி, 'அண்ணலீர்! அருள் கூர்வீர்' என்றிறைஞ்சி, 'நான் தங்களை என்று என் கண்குளிரக்காண்பேன்' என்று அருள்வேண்டி எண்பத்து எட்டுச் செய்யுட்களைக் கண்ணீருடனும் கம்பலையுடனும் யாத்துப் பாடிக்கொண்டிருக்கும் பொழுதே தம்மையறியாமல் துயில் புரிந்தனர். அவையே இன்று முதுமொழிமாலை* என்று வழங்கா நிற்கின்றன. அவற்றில் புலவர்பெருமான் பாடிய ஈற்றுச் செய்யுளைக் கூறுகின்றேன், கேளுங்கள்.

நானில வாழ்வை, நான்மறை வாழ்வை,
நபிகளின் வாழ்வை யென்னிதயந்
தானில வாழ்வைத், தபோதனர் வாழ்வைச்
சான்றவர் வாழ்வை மேலோகப்

பானில வாழ்வைப் பாவக வாழ்வைப்
பதிமதிஞு நகர் வாழ்வைக்,
கானில வாழ்வை, முகம்மது நபியைக்
கண்களா லென்று காண்குவனே.

இவ்வாறு பாடிக்கொண்டிருக்கும் பொழுதே கண்ணயர்ந்த புலவர் பெருமானுக்கு அன்றே அப்பொழுதே 'கவியுடைச் சான்றோர்க் கருள் கொடுத்தளிக்கும் கற்பகாடவி' யெனும் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) கனவில் திருக்காட்சி நல்கினர். அப்பொழுது புலவர் பெருமானின் உடல் முழுவதும் புளகாங்கித முற்றது. அவரின் ஆன்மா இன்பக்கடலில் மூழ்கித்திளைத்தது. 'உமறு! என்னுடைய சதக்கு உமது உள்ளத்தையறியாது உமது உடைகளைக் கண்டு உம்மை எள்ளி இகழ்ந்துள்ளார். உமது உள்ளமையை நான் இன்றிரவு அவரிடம் எடுத்துரைக்கின்றேன். நீர் வைகறைத் தொழுகை தொழுதபின் அவரிடம் செல்லும். அவர் உமக்கு என் வரலாறு பற்றிய உரைகளைத் தருவார். நீர் பாடும்' என்று கூறி மறைந்தனர். இதைக் கேட்டுத் திடுக்கிட்டு விழித்தெழுந்தனர் உமறென்னும் புலவோர். அப்பொழுது தம் கண்முன் இன்னதென்றுரைக்க இயலா எழில் மிகும் ஒளிச்சுடர் துலங்கி நிற்பதைக்கண்டு, 'திருவினும் திருவாய்' என்னும் திருக்காப்புச் செய்யுளையும், அதற்கடுத்தாற் போன்றுள்ள சில செய்யுட்களையும் பாடி எழுதினர். அதன்பின் சதக்கத்துல்லா அப்பா அவர்களின் இல்லம் நோக்கி அடியெடுத்து வைத்து நடந்தார்.

*முதுமொழிமாலை எப்பொழுது பாடப்பட்டது? சீறாவுக்கு முன்பா, பின்பா என்பது பற்றி அறிஞர்களிடையே ஐயம் ஏற்பட்டுள்ளது. எனினும் இதில் யாதொரு முத்திரை அடியும் இல்லாது எண்பத்து எட்டுச் செய்யுள்களாக இது முடிவுற்றிருப்பதிலிருந்து இத்துணை அளவு பாடி வரும்பொழுதே உமறுப்புலவர் துயிலுற்றனர் என்றும், இது சீறாவுக்கு முந்தியது என்றும் பெரும்பாலோர் கருத்துக்கொண்டுள்ளனர்.

இஃதிவ்வாறிருக்க, புலவரிடம் கூறிய உரைவழாது அன்றிரவே 'வரமருள் கிருபைக் கருணையங்கடலாம் வள்ளல்நபி' சதக்கத்துல்லா அப்பா அவர்களின் கனவிலும் திருத்தோற்றம் தந்து, 'சதக்கே! என் உமறு உம்மிடம் வந்தபொழுது அவரின் உள்ள அழகைக் கவனியாது உடைகளை மட்டும் கவனித்து எள்ளி இகழ்ந்து ஏசி அனுப்பிவிட்டீரே! அவர் இந்து அரசர் ஒருவரின் அத்தாணி மன்றக் கவிஞராக இதுவரை இருந்தமையின் அவ்விதக் கோலம் புனைந்திருந்தாரே யன்றி வேறில்லை. நாளைவிடியலில் உம்மை வந்து சந்திக்குமாறு நான் அவரைப் பணித்துள்ளேன். அவரும் வருவார். உரை கொடும்' என்று 'வளமுறுமதுவின் கனியென விருந்த அமுதவாய் விண்டு' மறைந்தார்கள்.

'அடியவர்க்கு அஞ்சலென வந்து அருள் கொடுக்கும்' அண்ணல் நபியின் திருக்காட்சியைக் கண்டு பதறியெழுந்த அடிகளார் வைகறைத் தொழுகையைத் தொழுது தம் வீட்டு வாயிலை விரியத்திறந்து வைத்துக்கொண்டு எப்பொழுது வருவார் 'அருமறை வடித்து நாத்தழும் பேறும் அஹ்மதுநபி'யின் திருப்பொருத்தத்தைப் பெற்ற புலவர் பெருமான் என்று ஏங்கி இருந்தனர். அப்பொழுது உமறு அங்கு வரவே அடிகளாரின் உளக்கடலில் களிபேருவகை கங்கு கரையற்று அலைவீசி மோதியது. எழுந்தெதிர் சென்று 'வருவீர், வருவீர், வள்ளல் நபியின் தயவைப் பெற்ற புலவீர் வருவீர்' என்று வாயாரக்கூறி உள்ளகம் தழுவி வரவேற்றனர். அதன்பின் சீதக்காதியையும் அங்கு வரவழைத்து, அண்ணல் நபி அவர்கள் அன்றிரவு தம் கனவில் தோன்றி நன்றாய்த் தம்மை இடித்துரைத்து அறிவுறுத்தியதை எடுத்துரைத்தனர். அவர்கள் தாம் கண்ட கனவைக் கூறிமுடித்ததுதான் தாமதம், உமறும் 'கண்டேன், கண்டேன்' கலைக் கடலெழுந்த மதி முகம்மதுவைக் கவினுறக் கனவிலே கண்டேன்!' என்று தம் பேச்சைத் துவங்கித் தமக்கு அண்ணலெம் பெருமான் கனவிலே தோன்றி ஆறுதல் மொழிகூறி அடிகளாரிடம் மீண்டும் செல்லுமாறு அறிவுறுத்திச் சென்றதையும் விரித்தோதினர். அதன்பின் அவர்கள் அனைவரும்' அற்புதரறியும் அற்புத நபி'யின் அற்புதச் செயலை எண்ணி எண்ணி வியந்தனர். புலவர்பெருமானும் தாம் கடவுள் வாழ்த்தாகப் பாடிக்கொணர்ந்த

செய்யுட்களை வெண்கலக்கோட்டையில் வேழம் நுழைந்து முழங்கியது போன்று முழக்கினர். அவற்றைத் தம் செவி குளிர, மனங்குளிரக் கேட்ட அடிகளார் மிகவும் களிப் பெய்தி, 'நல்லது புலவீர்! நாம் பல அரிய நூல்களை ஆய்ந்து அழகிய உரை எழுதித் தருகின்றோம், அதுவரை சற்றுப் பொறுத்திரும்' என்று மொழிந்தனர். புலவர்பெருமானும் 'சரி'யென இணங்கி அவ்வூரிலேயே ஆறு திங்கள் கழித்தனர். வரையாது வழங்கும் வள்ளியோராம் சீதக்காதி, புலவர் பெருமானுக்கு ஆங்கோர் இல்லம் வாங்கிக்கொடுத்து அங்கு ஒரு மங்கை நல்லாளைத் திருமணம் முடித்துவைத்து அவ் வூரில்* நடக்கும் ஒவ்வொருதிருமணத்திலும் 'புலவர்பணம்' என்று ஒரு மகமையையும் வசூல்செய்து அவருக்குக் கொடுத்து அவரை மகிழ்வித்தனர்.

பற்பல அரபி நூல்களை ஆய்ந்தும் போதுமான செய்தி கள் கிடைக்காதது கண்டு பெரிதும் வருந்திய அடிகளார் ஒருநாள் புலவர் பெருமானை நோக்கிப் 'புலவீர்! யானும் எவ்வளவோ முயன்றும் போதுமான செய்திகள் கிடைக்க வில்லை. அவை பொதிந்த பெருநூல்களும் இங்கு எவரிட மேனும் இல்லை. எனினும் என்னாலியன்ற அளவு பெரும் முயற்சி செய்து செய்திகள் சேகரித்துத் தொகுத்துள்ளேன். அவற்றையும் இதோ வைத்துக்கொள்ளும். என் மாணவர், அரபியல் அறிவும், தமிழியல் அறிவும் ஒருங்கே வாய்க்கப் பட்ட நல்லார், மஹ்மூதுதீபி என்றும், பிதம் மாமு நெய்னார் லெப்பை என்றும் அழைக்கப்பட்ட தகைமையாளர், கண் ணுட்டி அப்பா என்று எந்நாட்டவரும் அன்புடன் அழைக் கும் திருப்பெயரார் முகம்மது பந்தர் என்னும் பரங்கிப் பேட்டையில் வாழ்கின்றார். அவருக்கு நான் மடல் எழுதித் தருகின்றேன். அவரிடம் செல்லும். அவர் உமக்கு ஆவன செய்வார்' என்று கூறினர். அவ்வண்ணமே முகம்மது பந்தர் வந்து சேர்ந்தார் உமறு. கண்ணுட்டி அப்பாவைக் கண்டு அடிகளாரின் கடிதத்தைக் கொடுத்தார். அவற்றைத் தம் கண்களிலே ஒற்றிக்கொண்டு ஆசானின் ஆணைக்கிணங்கி அண்ணல் நபியவர்களின் அழகிய வரலாற்றை ஒருங்குசேரத்

---

* அவ்வூர் கீழக்கரையென்றும் காயல்பட்டின மென்றும் இருவேறு கருத்துக்கள் நிலவிவருகின்றன.

திரட்டித் தந்தார் அவர். பின்னர் கேட்கவும்வேண்டுமா! உமறின் வாயிலிருந்து கவி மழை பொழியத் துவங்கிவிட்டது. ஃ

திருவினும் திருவாய்ப் பொருளினும் பொருளாய்ச் சிறந்து, பல்லுயிரின் கருவிலும் கருவாய் விளங்கி, அவற்றின் உடலினுக்குயிராய் உயிரினுக்குடலாய் உறைந்த மெய்ப்பொருளாகிய இறை வணக்கத்துடன் தம் புராணத்தைத் துவங்கிய உமறுப் புலவர் 'துறந்தவர் இதயாசனத் திருந்தவன்' என்று இறைவனைப் போற்றி அவ்விறைவன் வாழும் இடத்தையும் மக்களுக்குச் சுட்டிக்காட்டுகிறார். அதன்பின் அண்ணலவர்களைப் போற்றிப் புகழ்ந்து, அவர்களின் இரு சரணம் ஏற்றித்துதித்து நம்பிய பேர்கள், வரிசைகள் நிறைந்த பேர்களாவர், எவரினும் உயர்ந்த பேர்களாவர்' என்று கூறி எங்கள் நபிகள் பெருமானின் பதத் துணையைத் தங்களின் நடுநாவில் வைத்தவர்கள்

ஃ முகம்மது பந்தரில் வாழ்ந்த காதிரசனு மரக்காயர் தாம் எழுதிய 'நபியவதாரப் படலம்—உரைகடிலகம்' என்னும் நூலின் முகவுரையில் ஒரு கதை கூறுகின்றார். அதிலே உமறுப் புலவர் தாமாகவே நபிகள் பெருமானின் திரு வரலாற்றைத் தமிழிலே புராணமாகப் பாடவெண்ணி முகம்மது பந்தர் வந்து, காலிமஹ்மூது என்று காரணப் பெயர் பெற்ற கண்ணாட்டி அப்பா அவர்களிடம் சென்று உரை கேட்டதாகவும், அவர்கள் உமறுப் புலவரின் தோற்றத்தைக் கண்டு முதலில் வெகுண்டதாகவும், எனினும் நீர் விருப்பத்தோடு வேண்டுவதால் அதற்கான உரை எழுதித் தருகிறேன். எனினும் நீர் முதலில் கடவுள் வாழ்த்தாகச் சில செய்யுட்களை எழுதிவாரும் என்று பணித்ததாகவும், அவை ஒன்றும் கண்ணாட்டி அப் அவர்களுக்குப் பிடிக்காததால் உரை தர இயலாதென்று மறுத்து விட்டதாகவும், எனவே மனம் பெரிதும் உடைந்த உமறுப் புலவர் நாகூர்சென்று அங்கு அடங்கப்பட்டுள்ள ஆண்டகையிடம் தாம் புனையவிருக்கும் கவிதைக்கான தலை மொழியைத் தமக்கு வெள்ளிதாய் அறிவித்தல் வேண்டுமென்

என்னவென்ன நற் பேறுகளைப் பெறுவார்களென்றும் எடுத்துக்காட்டுகிறார். பின்னர் முறுசலான நபிமார்களை யும், உலகின் பற்பல பாகங்களிலும் தோன்றி ஒரே இறை வணக்கத்தை அறிவுறுத்திச் சென்ற நூறாயிரத்து நாலாறு யிரத்து (1,24,000) நபிமார்களையும் வாயார வாழ்த்து கிறார். பிறகு அண்ணல் நபி அவர்களின் அருமைத் தோழர் களான அபூபக்கர், உமறு, உதுமான், அலி ஆகியோரின் பெருமைகளை எடுத்துரைத்து பாவினும் இனிய செந்தமி ழில் பாவியற்றிப் பாராட்டுகிறார். அவ்வாறு பாஇயற்றும் பொழுது அவர்கள் ஒவ்வொருவரின் பண்பாட்டுக்கு ஏற்ற வண்ணம் மெல்லிய ஓசையையோ அல்லது வலிய ஓசை யையோ பயன்படுத்துகிறார். வீரப்பெருமகனார் அலி அவர் களைப் பாராட்டும்பொழுது இதுகாறும் மதுர கவியாக விளங்கிவந்த உமறு வீரகவியாக மாறி,

றும், இல்லையேல் விடிந்தவுடன் வெம்பதியடைதல் திண்ணம்' என்றும் சூளுரை பகர்ந்து துயின்றதாக வும் அன்றிரவு நாகூர் ஆண்டகையின் பேரருளால் 'திருவினும் திருவாய், பொருளினும் பொருளாய்' என்று உருத் தோற்றமின்றி ஓரொலி கேட்டு உமறுப் புலவர் திடுக்கிட்டெழுந்து 'தெளிவினும் தெளிவதாய்ச் சிறந்த' எனத் தொடங்கி 'பெருந் தலம் புரந்த கருத்தனைப் பொருத்துதல் கருத்தே' எனச் செய்யுளை முடித்து, முகம்மது பந்தர் வந் தடைந்து கண்ணூட்டி அப்பா அவர்களைச் சந்தித்து நிகழ்ந்தவற்றை எடுத்துரைத்துச் செய்யுளையும் பாடிக்காட்டியதாகவும் அவற்றைக் கேட்டுப் பெரிதும் மகிழ்ந்து கண்ணூட்டி அப்பா உரை கொடுத்தாகவும் கூறுகின்றார். ஆனால் இக் கதைக்கு வேறு எந்நூலிலும் எவ்வித ஆதாரமும் கிடைத்தில. சீறாப் புராணத்தில் கடவுள் வாழ்த் துப் படலத்தில் பற்பல மகான்களின் அருள் வேண் டியும் செய்யுள்க ளியற்றியுள்ள உமறுப் புலவர், நாகூர் ஆண்டகையின் பேரருளை வியந்தோ அல் லது வேண்டியோ ஒரு செய்யுளேனும் இயற்றாதது கவனிக்கத்தக்கது.

படிகிடு கிடெனநாக முடிநெறு நெறெனவாரி
படுதிரை யளற தாகவே
வடவரை யசையவான முகடுடை படவருத
மழைமுகில் சிதறி யோடவே
யடையலர் கெடிகள்கோடி யிடிபடு படலதூளி
யலரியி னுடலின் மூழ்கவே
நடமிடு கடினவாசி மிசைவரு சமரசூர
நரர்புலி யலியை யோதுவோம்.

என்று உலகம் கிடுகிடுக்கும் வண்ணம் மாமேருமலையும் நடுங்கும் வண்ணம், மழைமுகில்கள் சிதறியோடும் வண்ணம் முழக்குகின்றார்.

இவ்வாறு செய்து சந்தர்ப்பத்திற்கு ஏற்ற சந்தங்களை அமைத்து மனத்தின் பல்வேறான போக்குகளையும் நிலைகளையும் சொற்களால் விவரிப்பதோடன்றி அச்சொற்களைப் பொறுக்கி ஆள்வதன் மூலம் அம்மனோ நிலையைப் படிப்பவர்களின் மனத்தில் பதியும்படி செய்வதிலும் தாம் வல்லுனர் என்பதையும் காட்டுகிறார். அச்செய்யுளைப் படிக்கும்பொழுதே ஒரு கோழையும் வீரனாய்ப் போய்விடுவான் போல் தோன்றுகிறது. அலியென்னும் புலி அமராடப் பரி இவர்ந்து செல்லும் வீரத் தோற்றமே-ஒரு போர்க்கோலக் காட்சியே நம் மனக் கண்முன் அப்படியே நிழலாடுகின்றது.

பின்னர் அலிதிருமதலையான ஹஸன், ஹுஸைன் ஆகியவர்களின் பாதகாப்பை வேண்டிநின்ற புலவர் இப்புவனத்திலேயே சுவனத்தைக்கொண்டு நன்மாராயம் பெற்ற பதின்மரையும் நினைவுகூர்கின்றார். அதன்பின் வேதவான்களெனும் நான்கு இமாம்களையும் போற்றிப் புகழ்ந்து முகியித்தீன் ஆண்டகையின் செம்மலரடி இரண்டையும் தாம் செந்தமிழ்ப்பனுவல் செய்வதற்குமுன் தம்முடை சிரமிசை இருத்தி வாழ்த்துவதாகக் கூறுகின்றார். பிறகு சதக்கத்துல்லா அப்பா அவர்களின் பண்பாடுகளை வியந்துரைத்து

அவர்களின் 'செம்மலர் அடி இரண்டும் சிந்தையில் இருத்தி னேனே' என்று மகிழ்ச்சி மிகுந்து பாவிசைக்கின்றார்.*

பிறகு கவிஞர் தம்மைப்பற்றியும் ஒருசில மொழிகள் கூறுகின்றார். அதிலே அவருடைய அடக்கம் நிறைந்து பரி ணமிக்கிறது. செந்தமிழ்ப் புலவர்கள் முன் தாம் கூறும் பாக்களானவை சண்டமாருதத்தின் முன் சிற்றெறும்பு பெருமூச்சு விடுவது போலும், இடியிடித்திடும் ஆரவாரத்தி னுக்கெதிரே ஒரு நொடி நொடிப்பது போலவும் இருக்கும் என்று அவர் கூறும்பொழுது 'உமறு, நீவிர் ஒரு புலவர் மட்டுமல்ல, மகானுமாவீர்' என்று நம்மையறியாமலேயே அவர்மீது வாழ்த்துரை பகருமாறு நம்மைச் செய்கிறது.

பாதுகாவல் தேடும் பாக்கள் நிரம்பிய இப்படலத்தை முடித்துவிட்டு அடுத்த படலமாகிய நாட்டுப் படலத்தில் நுழைகிறார் புலவர். அண்ணல் நபியவர்கள் தோன்றிய

---

* அவ்வாறு சதக்கத்துல்லா அப்பா அவர்க ளின் பண்பாடுகளை வியந்துரைக்கும் பொழுது அண்ணல் நபி அவர்களின் அறவுரைகளை அகில உலகமும் தழைக்குமாறு விளக்கம் செய்தோர் என்றும் இம்மையும் மறுமையும் பேறிலங்கிய சதக்கத்துல்லா என்றும் கூறுகின்றாரேயொழிய சதக்கத்துல்லா அப்பா அவர்கள் தம்மை ஆத ரித்து உரை தந்தார்கள் என்று ஒரு சொல்லே னும் கூறவில்லை. இத்துடன் பாதுகாவல்தேடும் பாக்கள் முடிவடைகின்றன. இதன்பின் காதி மஹ்மூது என்னும் கண்ணூட்டி அப்பா அவர்க ளைப் பற்றியும் அவர் யாதொரு மொழியும் கூற வில்லை. எனவேதான் உமறுப் புலவர் பாடியுள்ள சீறாப்புராணம் அரபிமொழியிலுள்ள எந்தச் சீறா வுக்கும் ஒத்ததாக இல்லாததாலும் சதக்கத் துல்லா அப்பா அவர்களோ, காதி மஹ்மூது அவர்களோ தமக்கு உரைதந்ததாகப் புலவர் எவ்விடத்திலும் குறிப்பிடாததாலும் அவர்கள் இருவரும் அவருக்கு உரைதந்ததாகக் கூறப்படும் வரலாற்றைச் சிலர் ஏற்றுக்கொள்ள மறுக்கின் றார்கள். நபிகள் பெருமான் பற்றிக் கர்ண பரம்

அரபு நாடோ ஒரு பெரும் மணல்வெளி. வெயிலெரிக்கும் வெம்மையான பாலைவனம். அங்கு வறட்சியே யன்றி வளமில்லை. ஆனால் உமறோ வளம் கொழிக்கும், எழில் கொழிக்கும் தமிழ்நாட்டிலே தோன்றிய தமிழ்ப் பயிர். எனினும் பாட்டுடைத் தலைவராம் அண்ணல் நபியவர்கள் அரபி மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்களாதலின் வாழ்க்கை வரலாறு என்று பொருள்படும் 'சீறா' என்ற அரபிச் சொல்லைத் தாம் எழுதவிருக்கும் புராணத்திற்குப் பெயரிட்டபோதினும் தாம் ஒரு தமிழர் என்பதை அவர் மறந்துவிடவில்லை. எனவே, தமிழ்நாட்டு மண்ணைக் கொண்டு தமிழ்க் குயவன் செய்த தமிழ்ப் பாண்டமாக அவர் சீறாப் புராணத்தைச் செய்துவிட்டார். அரபு நாட்டிலே அல்லாஹ்வின் இறுதித் தூதுவராய்த் தோன்றிய அண்ணல் நபியவர்களின் அழகிய வரலாற்றை அமிழ்தினு மினிய தமிழ்த் திருமொழியில் புராணமாகப் பாட எண்ணிய உமறு தமிழரின் தனிப்பெரும் மரபுப்படி அதனைத் தமிழ்ப் புராணமாகவே பாடிவிட்டார். அதிலே தமிழ் மணம் கமழ்கிறது; தமிழ் இசை முழங்குகின்றது; தமிழறிவு ஒளிர்கின்றது; தமிழ் உயிர் ஓடுகிறது. அவருடைய பண்பட்ட எழுத்தாணியின் பேராற்றலினால் ஒரு நொடியில் அரபுநாடு தமிழ்நாடாகிவிடுகிறது. இஸ்லாம் தமிழ் மதமாகிவிடுகிறது. முகம்மதெங்கள் நபிகள்கோமான் (ஸல்) அவர்கள் தமிழ்நாட்டில் தோன்றிய திருத் தூதராகிவிடுகின்றார்கள்.

பரையாக வழங்கிய கதைகளை வைத்துக் கொண்டும், தெரியாதவற்றை அரபிக்கல்வி தெரிந்த ஒரு சிலரிடம் விசாரித்தறிந்து கொண்டும் உமறுப்புலவர் சீறாப்புராணம் இயற்றி இருக்கவேண்டுமென்று அவர்கள் கருதுகின்றனர். எனினும் சதக்கத்துல்லா அப்பா அவர்களையும் அவர் இப்புராணத்தில் குறிப்பிட்டிருப்பதிலிருந்து அவர்களுக்கும் உமறுப்புலவருக்கும் ஏதோ தொடர்பிருந்தது என்பது வெள்ளிடைமலை. இவை அறிஞர்கள் ஆராயத்தக்கன.

இராம காதை பாடிய கம்பர் எவ்வாறு பாலகாண்டத்தில் அயோத்தியை வர்ணிக்கும்பொழுது தாம் வாழ்ந்த வளமார் சோழநாட்டை மனத்திற்கொண்டு வர்ணிக்கின்றாரோ அதுபோன்றே உமறும் நபிகள்பெருமானின் பிறப்புக்காண்டமாகியவிலாத்தத்துக் காண்டத்தில் தாம்வாழ்ந்த பாண்டிய நாட்டையே மனத்திற்கொண்டு வர்ணிக்கின்றார். அவ்விரு பெரும் புராணங்களிலும் காணப்படும் நாட்டு நகர வளங்களின் வர்ணனைகள் சில இடங்களில் ஒரே தன்மையுடையனவாகவே உள்ளன.

ஒரு நாடு வான்புகழ் பெறுவதற்கு மூலகாரணம் வான் சிறப்பு. வான் பொய்த்துவிடின் வறுமை மொய்த்துவிடும். வான் பெய்துவிடின் வளம் கொழித்துவிடும். எனவேதான் கடவுள் வாழ்த்துக்கு அடுத்தபடியாக வள்ளுவரும் தம் குறளில் வான் சிறப்பை வைத்தார். அதே போன்றே உமறும் தம் புராணத்தில் செய்துள்ளார். உமறின் உலகில் வான்வளம் உயரிய இடத்தைப் பெற்றுள்ளது. அங்கே பசுங் கடல் பரந்து கிடக்கின்றது. வெண் முகில்கள் அத்தண் கடலிலே மூழ்கிக் குளித்து நீரை முகந்து கருநிறமாகி விண்ணிலே கருங்கடல் எழுந்து பரந்து கிடப்பது போன்று விரிந்து கிடக்கின்றன. உடனே உமறுக்குத் தம் காப்பியத் தலைவராம் நபிகள் நாயகரின் நினைவு வருகின்றது. அன்னாரின் பெரும்புகழ் மண்ணகத்தின் மூலை முடுக்கெல்லாம் பரந்து பாய்ந்து விண்ணகத்தும் எழும்பி நிறைந்திருப்பது போன்று அக் கருமுகில்கள் அவருடைய கற்பனைக் கண்களுக்குத் தோற்றமளிக்கின்றன. உடனே வியந்து மகிழ்ச்சிக் கவி பொழிகின்றார். அவரின் அபாரக் கற்பனையை வியந்தோ என்னவோ கருமுகில்களும் இடியிடியென்று சிரித்துக் கண்களைச் சிமிட்டி மின்னிச் செழுமழையாக மலையிலே பொழிகின்றன. யானை, மான், புலி, அணில், உடும்பு, மந்தி போன்ற மலைவாழ் விலங்கினங்கள் குளிரால் கொடுகி நடுங்குகின்றன. வேங்கை, சந்தனம், சண்பகம், நெல்லி, கோங்கு, அசோகு, ஆசினி, தேக்கு ஆகிய மரங்கள் வேரற்று வீழ்கின்றன. விலங்கினங்கள் தங்கள் குலத்தொடும் குழுவொடும் வெருண்டோடுகின்றன. பறவைகள் பதைபதைத்து அங்குமிங்கும் சிதறிச் செல்கின்றன. பழங்கள் சிந்துகின்றன. தருக்கள் வேரோடு சாய்கின்றன;

இவ்வாறு மலையினில் பொழிந்த மழை நீர் மலைவாழ் இனத்தவரான குறத்தியரின் பரண்களையும் மனைகளையும் தினைகளையும் வாரிச் சுருட்டிக்கொண்டு அவர்களின் வீணைகளையும் பறைகளையும் பாறைகளில் மோதி நொறுக்கிக் கொண்டு அருவியாக வழிகின்றது. அதனை உமறின் கண்கள் கண்டதும் அவருடைய கற்பனை உள்ளம் விசும்பிலே சிறகடித்துப் பறக்கத் துவங்கிவிட்டது. அச்சமயத்தில், தாம் எச்சமயமோ இராமாயணம் ஆற்றுப் படலத்தைப் படிக்கும்பொழுது 'மலையிலுள்ள வெலாங்கொண்டு மண்டலால், விலையின் மாதரை யொத்ததவ் வெள்ளமே' என்று கம்பன் கூறியுள்ள உவமையானது அவருடைய மனக்கண்முன் நிழலாடுகிறது. உடனே தாமும், 'விலைமாதொருத்தி மன்னன் ஒருவனின் புயங்களைத் தழுவி அணைத்து அவனை மகிழ்விக்கின்றாள். அவனுக்குப் போதிய இன்பப் போதையை நல்கிய பின் அவனிடமிருந்த பொன்னையும், மணியையும், முத்தையும் சுருட்டிக்கொண்டு அவனை விட்டகல்கின்றாள். அது போன்றல்லவோ இவ்வருவியும் இருக்கின்றது' என்று வாயார்ந்து பின் வருமாறு கவிமழை பொழிகின்றார்.

மலையெனும் அரசன் புயங்களைத் தழுவி
மகிழ்ச்சி செய்து அவன்உழைச் சிறந்த
நிலைகெழு பொன்னும் முரசுசெம் மணியும்
நித்தில ராசியுங் கவர்ந்து
தொலைவிலாப் பண்டம் அனைத்தையும் வாரிச்
சுருட்டியே எல்லை விட்டகலும்
விலைமகள் போன்று பலபல முகமாய்
வெள்ளருவித்திரள் சாயும்.

இவ்வாறு அருவியை வர்ணித்த கவிஞர் அதன்பின் அது ஆற்றுப் பெருக்காக ஓடுவதை அழகாக வர்ணிக்கின்றார். இராமயணம் ஆற்றுப் படலத்தில் ஆற்றை வர்ணிக்கும்பொழுது ஆறு பொன்னையும் மணியையும் மரங்களையும் கொண்டு செல்லலால் 'வணிக மாக்களை ஒத்ததவ் வாரியே' என்று கம்பர் கூறியது போன்று இவரும் தாம் கற்பனை செய்துள்ள ஆறு சந்தனம், காரகில், முத்து, செம்மணி

ஆகியவற்றைச் சுமந்து செல்லலால் 'வாணிக ஞெத்தது செழுங்களை நதியே' என்று கூறுகின்ருர். ஆனல் அதற்கும் மேலாக அவர் சென்று அந் நதியை ஒரு மங்கை நல்லாளுக்கு உவமை கற்பிக்கின்ருர். அம் மங்கையான ஆற்றிற்கு வெண் நுரைகளே ஆடைகளாகும். பக்கங்களிலே பரந்துள்ள கரு மையான மணலே கூந்தலாகும். கயல்களே கண்களா கும். திரைகளே கைகளாகும். குமிழிகளே கொங்கைகளா கும். சுழிகளே உந்திகளாகும் என்றுஅவர் வர்ணிக்கின்ருர்.

மலையிலே பெய்த அம் மலை நீரானது குறிஞ்சி நிலத் தைக் கடந்து, பாலையை அடைந்து, முல்லையிற் புகுந்து மருதத்திற் பாய்கின்றது. அதன்பின் அது பல கால்வாய் களின் வழியாக ஏரிகளிலும் குளங்களிலும் நிரம்பி நிற்கின் றது. அலையெறிந்து கர்ச்சித்துவந்த அதனை அம் மருதநில மக்கள் குளங்களில் நிறைத்ததானது மத யானைக் கூட்டங் களை வீரர்கள் படுகுழியில் வீழ்த்திப் பிடிப்பதை ஒத்திருக் கின்றது. நீர் நிலைகளிலே நீர் நிறைந்திருப்பது உடல்களில் உயிர் நிலைத்திருப்பது போன்று தோன்றுகிறது என்று வாயாருகிருர் புலவர்.

இவ்வாறு ஆறில்லாப் பாலையாகிய அரபு நாட்டில் ஆற் றைக் கற்பித்து அங்கு குறிஞ்சி, மருதம், முல்லை ஆகியவற் றையும் கற்பனை செய்து சொற்சிலம்பம் விளையாடுகின்ருர் கவிஞர்.

உமறின் உலகத்திலுள்ள மருதநில உழவர்கள் நீர்வளம் கண்டதும் சேரி விட்டெழுந்து அணிகலன்களை அணிந்து, கள்ளுண்டு கதிரவனைக் கைகூப்பித் தொழுகின்ருர்களாம். அதுமட்டும் அவர்கள் செய்யவில்லையாம். தங்களின் குல தெய்வங்களையும் பூசிக்கின்ருர்களாம்; நிலத்தினை வாழ்த்து கின்ருர்களாம். அதன்பின் அதனை உழுது ஒருவரையொரு வர் வலக்கரம் குலுக்கி பொன்மழை பொழிவதுபோல் நெல் முளை விதைக்கின்றனராம். இவ்வாறு தமிழர்களின் பண் பாட்டையும் தமிழர்கள் கதிரவனையும், உருவச் சிலைகளையும் கைகூப்பித் தொழும் வழக்கத்தையும், 'ஒருவனே நாயன் மற்ருெழிந்த தேவதம், இருமையும் பேறிலா திழிவு கொண் டது' என்று உரைக்கப் போந்த மறைநபியின் மாண்புறு வரலாற்றின் நாட்டுப் படலத்தில் உமறு கூறுகின்ருர். அவர்

அரபு நாட்டின் வளத்தை வர்ணிப்பதாக எண்ணிக்கொண்டு இவ்வாறு தம்மைமறியாமல் தமிழ்நாட்டையே வர்ணித்து விடுகின்றார்.

முளை விதைத்தபின் நாற்று தலை கிளப்பி வளர்ந்தோங்குகின்றது. அதனைக் கவிஞர் தம்முடைய கற்பனைக் கண்களால் காண்கிறார். அவருடைய கற்பனை உலகமாகிய நிலத்தில் அருமையான உவமை இலை விரிக்கிறது. அவ்வளவு தான், அதனை அப்படியே கவிதை உருவில் வடித்தெடுத்து அந்தச் சிறு உவமையின் மூலம் உலகிலுள்ள ஒவ்வொருவரும் பின்பற்றத் தகுந்த பெரும் வாழ்க்கைத் தத்துவத்தையே தந்துவிடுகின்றார். வளம் கொழுமிய அரபு நாட்டிலே மணம் கமழும் மலர்கள் பூத்த வயற் காடுகளில் நீண்ட இலைகளின் நாற்று செறிந்து நிறைந்து வளர்கின்றது. அது எதைப் போல வளர்கின்றது தெரியுமா? சில மனிதர்களைப்போல. அவர்கள் எத்தகைய மனிதர்கள் என்று வினவுகின்றாயா? இதோ அதற்கான விடையைப் புலவரே முழங்குகின்றார் கேள்.

> அருமறை நெறியும் வணக்கமும் கொடையும்
> அன்பும் ஆதரவும் நல் அறிவுந்
> தருமமும் பொறையும் இரக்கமும் குணமும்
> தயவும் சீரொழுக்கமு முடையோர்

என்று அவர்களை வர்ணிக்கின்றார். அதன்பின்னர் அவர்கள் எவ்வாறு செல்வமிகுத்து சீரும் சிறப்புடனும் குடியும் கிளையும் பெருத்து இனிது வாழ்வோர்களோ அது போன்று வயல் வரப்பெலாம் நீண்ட தாள்களையுடைய நெல் நாற்றானது நெருங்கி வளர்ந்தது என்ற கருத்தை,

> பெருகிய செல்வக் குடியொடு கிளையும்
> பெருத்தினி திருந்து வாழ்வனபோல்
> மருமலர்ப் பழனக் காடெலா நெருங்கி
> வளர்ந்தது நெட்டிலை நாற்றே.

என்று கவியில் அமைத்துப் பாடுகின்றார் கவிஞர். எத்துணை அழகிய கவி! எவ்வளவு அருமையான கருத்து!! இவ்வாறு பாடிய கவிஞர் தாம் ஒரு திறமைசால் புலவர் மட்டுமல்ல, அறிவுசால் அறிஞர் மட்டுமல்ல, தூய சிந்தையத்தோமில் குணத்தவர், உயரிய குறிக்கோள் கொண்ட உன்னத மனிதர் என்பதையும் சொல்லாமல் சொல்கின்றார். இவ்வித ஒழுக்கமில்லாதவர்களின் செல்வம் மாய்ந்து அவர்களின் குடியும் கிளையும் வீழும், மாளும் என்று நாவால் விளம்பாது மறைவாக விளக்குகின்றார். உலகில் ஒருவன் செல்வம் கொழித்து, குடியும் கிளையும் செழித்து இனிது வாழ விரும்புவானாயின், அவன் மேலே கூறப்பட்ட நற்பண்புகளைப் பெற்றிருக்க வேண்டுமென்று இக் கவியில் ஆணித்தரமாக அறைகின்றார் அவர்.

இவ்வாறு உமறுப் புலவர் கற்பனை வெள்ளத்தில் மிதந்து அரபு நாட்டை உற்று நோக்கி வரும்பொழுது வள்ளல் சீதக்காதி வானுலகடைந்தார் என்ற செய்தியானது பேரிடி போன்று அவருடைய செவியிலே வந்து வீழ்ந்தது. அதைக் கேட்டதும் அவருடைய வாய் உலர்ந்தது; தலை குலைந்தது; நெஞ்சம் திடுக்கிட்டது! நிலை தடுமாறியது; அறிவு நீங்கியது; உணர்வு தடம் புரண்டது; யாது செய்வதென அறியாது கண்கள் கண்ணீர் மழையைப் பொழிந்தன. இச்சமயத்தில் நவாபின் படைகள் எட்டயபுரத்தின்மீது மின்னல் வேகத்தில் தாக்குதல் நடத்துகின்ற செய்தியும் அவருடைய செவிக்கெட்டியது. விட்ட கொப்புமின்றித் தொட்ட கொப்புமின்றி இடியேறுண்ட நாகம்போல் கீழே சாய்ந்தார் உமறு. அப்பொழுது ஒருவர் அவரைத் தம் தடங் கைகள்கொண்டு தழுவி எடுத்து,'புலவீர்! ஒன்றிற்கும் கவலற்க! நாம் உமக்கு ஆவன செய்கின்றோம்' என்று அருமை ஆறுதல்மொழி பகர்ந்தனர். கொழு கொம்பற்ற கொடிபோல் துவண்ட அவருக்குக் கொழுகொம்பாக வந்து காட்சி நல்கி அன்புக்கரம் நீட்டி ஆதரவீந்த அந்த அருந்தகை யார்? அவர்தாம் அங்கு அருளும் பொருளும் பெற்று வளவாழ்வு வாழ்ந்துவந்த பெருவாழ்வார், ஹுஸைன் நயினார் என்பாரின் அருமைத் திருமகனார் அபுல்காசிம் மரக்காயர் என்னும் பெயர்பெற்ற அழகுசால் துரைமகனார். தம் பெரும் பிணி தீர்க்கும் அமுத சஞ்சீவியாய், அலையெறி கடலில் நிலை தடுமாறி, மரக்கலம் உடைந்து மூழ்கும் தரு

வாயில் கரம் நீட்டிப் பிடித்துக் காத்த கருணை வள்ளலாய் அபுல்காசிம் மரக்காயரைக் கண்டார் உமறு. அவரை நாவார வாழ்த்தினர்; மனமாரப் போற்றினர். 'கையற்ற நிலையிலிருந்த எனக்குக் கை கொடுத்துதவிய உங்களின் கருணைக்கு நான் எவ்வாறு கைம்மாறு செய்யவல்லேன்' என்று கனிந்த மொழி பகர்ந்தார். அபுல்காசிம் மரக்காயரும் அவரைத் தம் இல்லம் அழைத்துச்சென்று அதற்கடுத்தாற்போலுள்ள மனையைக் காலிசெய்து அங்குப் புலவர்பெருமானைத் தங்கவைத்து அவருக்கு வேண்டிய அத்தனை வசதிகளையும் செய்தளித்து அருமை பெருமையாக அவரைக் கவனித்துவந்தார். புராண வேலையும் விறுவிறுவென்று நிகழ்ந்துகொண்டிருந்தது. ஃ

இதற்கிடையில் உமறுப்புலவருக்கும் அபுல்காசிம் மரக்காயருக்கும் இடையே நட்பு நாளொரு மேனியாக நனிவளர்ந்தோங்கி வந்தது. இருவரும் ஒருவரையொருவர் 'மச்சான்' முறைமை பாராட்டி அன்பொழுக அழைத்துப் பண்பொழுகப் பழகி வந்தார்கள். ஒருநாள் புலவர், அபுல் காசிம் மரக்காயரை நோக்கி, 'மச்சான், இப்புராணத்தை நான்பாட மூலகாரணமாக இருந்த சீதக்காதிமரக்காயர் காலமாகி விட்டதால் X தற்போது இதன் கொடை நாயகமாக விளங்கும் தங்கள் பெயராலேயே இதனை அரங்கேற்ற எண்ணியுள்ளேன்' என்று கூறினர். இதைக் கேட்டதும் அபுல்காசிம் மரக்காயர் உவகை மீக்குற்று உள்ளம் பூரித்தார். இந்நற்செய்தியை அவர் தம் அருமை மனைவியார் சப்பாகு பீவியிடத்தில் கூறியதும் தேன் மழையில் நனைந்து தொப்பலாடியது போன்று பரவசமானர், அம்மா தரசி. 'எல்லாப்புகழும் இறைவனுக்கே' என்ற மொழிகள் அவரின் உள்ளகத்தே பொங்கி நன்றியில் தோய்ந்து வெளிவந்தன.

---

ஃ சீறாப் புராணத்தை முகம்மது பந்தரிலுள்ள புதுப் பள்ளியின் அருகிலுள்ள மேடையில் வைத்து உமறுப் புலவர் எழுதியதாகச் சிலர் கூறுகின்றனர். அம் மேடை இப்பொழுதும் உள்ளது.

X உமறுப்புலவர் சீறாப்புராணத்தில் சீதக்காதியைப் பற்றி ஒரு மொழியேனும் கூறவில்லை. எனினும், சீதக்காதிமீது தனியாக ஒருவாழ்த்தும்

பலனை எதிர்பாராது அபுல்காசிம் செய்த பேருதவியைப் புலவர்மணி மறந்துவிடவில்லை. செய்யாமற்செய்த உதவிக்கு வையகமும் வானகமும் ஆற்றலரிது என்ற பொய்யா மொழியை அவர் மெய்யாக்கினார். தாம் இயற்றிய காப்பியத்தில் ஏறத்தாழ நூறுசெய்யுளுக்கு ஒரு செய்யுள் வீதம் வைத்து அபுல்காசிமின் வண்மையையும் ஒண்மையையும் வாழ்த்தினார். இலக்கியம் உள்ளளவும், இன் தமிழ் உள்ளளவும், இவ்வுலகம் உள்ளளவும் அபுல்காசிமின் பேரும்புகழும் அழியாது நிற்கும்படி அமரத்துவம் நல்கினார்.

நாட்டு வளங்களை நலமுடன் கவனித்துப் பாடிவரும் பொழுது வயல்களில் நெல் விளைந்து கொழிப்பதும்,

நானூறு கோவையும் பாடியுள்ளதாகக் கூறப்படுகிறது. ஆனால் சீதக்காதியின் திருமணத்தின்போது உமறுப்புலவர் பாடிய திருமணவாழ்த்து நூல்தான் தற்போது இருக்கிறதே யொழிய வேறு யாதொன்றும் கிடைத்தில. சீதக்காதி பேரில் நொண்டி நாடகம் என்ற நூலில்

சந்தமுத் தமிழ் தேறுங்—கல்வித்
தலைவர் மகிழ் உமறுப் புலவருடன்
செந்தமிழ்க் கந்தசாமிப் புலவனும்
சீராட்டெனத் தமிழ் பாராட்டவே
சிறந்த சிங்காதனத்தில் சீதக்காதி
சிலை மதனைப் போலக் கொலுவிருந்தான்!

என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்து சீதக்காதிக்கும் உமறுப்புலவருக்கும் இடையேயுள்ள தொடர்பு நன்கு தெரியவருகிறது. ஆனால் சீதக்காதிதாம் உமறுப் புலவரைச் சீறாப் புராணம் பாடுமாறு வேண்டிக்கொண்டார் என்பதற்கு எங்கேனும் எத்தகைய ஆதாரமேனும் கிடைக்கவில்லை.

நெல்லை ஏற்றிச்செல்ல வண்டிகள் அணிஅணியாய் வந்து நிற்பதும் கதிர் அறுவையின் போது அறுப்போர் செய்யும் அரவமும், வரப்பின் மீதுள்ள கமுகு மரங்களிலிருந்து உதிரும் பாக்குகளைச் சுமப்போர் செய்யும் கூச்சலும் ஒரே ஆரவாரமாய் இருப்பதைக் கேட்டதும் எங்கேயோ இவ்விதப் பேரிரைச்சலைக் கேட்டதுபோல் இருக்கின்றதே என்று அவர் ஒருகணம் எண்ணினார். ஆம், ஆம். வள்ளல் அபுல் காசிமின் வளமனையில்தான் இவ்விதப் பேரிரைச்சலைக் கேட்டோம் என்று மறு கணம் எண்ணுகின்றார். பின்னர் தம்மையறியாமல் போதை ஏறிப் பின் வருமாறு கவிமழை பொழிகின்றார் கவிஞர்.

செங்நெலின் பெருக்கின் கனைகுரல் சகடம்
திசைதொறு மலிந்தன செருக்கும்
கன்னல் (அ)ம் கழனி புகுந்தறுத் தடைந்த
கூலிமர்கள் ஒலிகுரல் செருக்கும்
துன்னுபூம் கமுகு சிதறுசெம் பழுக்காய்
சுமப்பவர் கம்பலைச் செருக்கும்
மன்னவன் வகுதைத் துரையபுல் காசிம்
வளமனைச் செருக்கு மொத்திருக்கும்.

இவ்வாறு வியந்துபாடி அபுல்காசிமுக்கு தம்முடைய அன்புக் காணிக்கையை, நன்றிக் கைம்மாற்றை நல்குகின்றார் புலவர்.

பின்னர் நகரப்படலத்தை முடித்து, ஆதிமனிதர் ஆதம்நபி அவர்களிலிருந்து ஐம்பத்தொன்றாவது தலைமுறையில் அண்ணல் நபி அவர்கள் பிறப்பதை வரிசைக்கிரமமாக எடுத்துரைத்துவிட்டு கோடானு கோடி சந்திரன்கள் ஒன்று சேர்ந்து ஒரே சமயத்தில் ஒளிர்ந்தால் எவ்விதம் இருக்குமோ, அவ்விதப் பிரகாசத்துடன் அண்ணல்

நபி அவர்கள் பிறந்தார்கள் என்பதை* 'பெருகிய கோடி சந்திரப் பிரகாசமாய், வருமொரு பெருங்கதிர் மதியம் போலவே' திரு நபி அவர்கள் அவதரித்தார்கள் என்று செய்யுளில் யாத்துக் கூறுகின்றார்.

அதன்பின் அண்ணல் நபி அவர்களின் அருமைத் தந்தையாரைப்பற்றிக் கூறுங்கால் உமறு வார்த்தைகளைப் பொறுக்கி விளையாடும் விளையாட்டு நம் செவிகளில் தேன் மாரி பொழிவது போன்றுள்ளது.

உலகமுழுவதும் வாழ்த்திநிற்கும் வரம்பெற்ற திரு நகராம் மக்காவென்னும் தலைநகரின் அதிபதி என்று கூறப்பட்ட மண்ணரசரும் பல நகரங்களின் மன்னர் மன்னர்களும் தாழ்ந்து வணங்கும் பேறு பெற்ற மனி தர்க்கரசருமான அப்துல்லாவென்னும் அழகுசால் பெய ரினையுடையார் என்ற கருத்தை அமுதக் கவியில் பின் வருமாறு பாடும்பொழுது நம்மையறியாமல் நமக்கு ஓர் இன்பம் பிறக்கிறது. அவருடன் சேர்ந்து நாமும் பாட லாமா என்றுகூட நமக்கு ஓர் உணர்வு ஏற்படுகிறது.

வரபதி யுலகெலாம் வாழ்த்து மக்கமா
புரபதிக் கதிபதி யென்னும் பூபதி
பரபதி யரசர்கள் பணிந்தி றைஞ்சிய
நரபதி யப்துல்லா வென்னு நாமத்தார்.

இவ்வாறு அண்ணல் நபி அவர்களின் அருமைத் தந்தை அப்துல்லா அவர்களைப் போற்றிப் புகழ்ந்த உமறு, அவர்களின் அன்புசால் அன்னை ஆமினு அவர் களைப் பற்றிக் கூறும்பொழுது இல்லம்புக்கி இல்லத் திலே எழும் திங்களென்றும், மாணிக்கம் என்றும்,

* பெருகிய கோடிசந்திரப் பிரகாசமாய் என்பதற்கு காதிரசனுமரக்காயர் தம் உரை கடிலகத்தில் 'இவ்வளவெனப்படாது விரிவுற்ற புதுமையையுடைய சந்திரன்' என்று பொருள் விரிப்பதும் கவனிக்கத்தக்கது.

பெண்களின் நாயகம் என்றும், அழகெலாம் திரண்ட பொற்கொடிகளான பெண்களின் கற்பெலாம் திரண்டு ஓர் உருக்கொண்டால் எப்படி இருக்குமோ அப்படிப் பட்ட கன்னிகையென்றும், அறத்தினுக்கோர் இல்லிடம் என்றும், அருட்கோர் தாயகம் என்றும், பொறுத்தி டும் பொறுமையில் பூமிக்கு எண்மடங்கானவர் என் றும், பிறந்த குலத்தின் கண்ணின்மணி போன்றவரென்றும், உவமை சொல்லற்கரிய ஒப்பற்ற திருமகள் என்றும் வியந்து வியந்து பண்ணிசைக்கின்றார். பொறுமைக்கு உவமை சொல்லும்பொழுது பூமியையே வள்ளுவர் உவமை கூறும் பொழுது ஆமினா அவர்களின் பொறுமையோ அப்படிப் பட்ட பொறுமையல்ல, பூமியின் பொறுமையைவிட எட்டு மடங்கு அதிகமானது என்று புகழ்மொழிகூறுகின்றார் புலவர் உமறு.

இவ்விதப் பண்பு நிறைந்த இன்ப மணமக்களின் எழில் மகவாய் இம் மண்ணுலகில் அண்ணல் நபியவர்கள் பிறந் ததைத் தேனினுமினிய தீந்தமிழில் தெவிட்டாக் கவிரசம் போல் உமறுப் புலவர் பாடிவரும்பொழுது, விளக்கானது தான் வைக்கப்பட்டிருக்கும் இடத்தில் ஒளி பரப்பாது சுற்றிலும் தான் ஒளிபரப்பும். ஆனால் அவனிக்கொரு இறுதி நபியாய் உதித்த அண்ணல் நபியவர் களோ தாங்கள் இருந்த இடத்திலும் ஒளி பரப்பி சுற்றிலும் ஒளி பரத்தினார்கள் என்ற கருத்துப் பொதிந்த சொற் றொடரான 'கிடந்தொளிபரப்பி' என்பதனைத் தனிமொழி களாகக் கொண்டு செய்யுளியற்ற முற்படுங்கால் அடுத்த சொற்றொடர்கள் வராமல் அடைபட்டனராம் அவர். கிடந்தொளி பரப்பி, கிடந்தொளி பரப்பி என்று அவர் கிடந்துகத்தியபோதினும் அதற்கடுத்த சொற்றொடர்கள் வரவில்லையாம். அந்த அருமையான சொற்றொடரை விட்டு விட்டு வேறொரு சொற்றொடரால் பாடத் தொடங்கவும் புலவ ருக்கு மனமில்லையாம். எனவே, உண்ணவுமின்றி, உறங்கவு மின்றி அதே ஏக்கமாய்க் 'கிடந்தொளி பரப்பி, கிடந்தொளி பரப்பி' என்று கூறிக்கொண்டு வெளியே சென்று பித்துப் பிடித்தவர் போன்று சுற்றித் திரிந்தாராம். இதற்குச் சின் னாட்களுக்கு முன்பு அவர் மகன் ஒழுங்காகப் படிக்கின்றா னில்லை என்பதற்காக அவனை அடித்து வீட்டைவிட்டு விரட்டிவிட்டாராம். அவனும் ஊரைச் சுற்றித்திரிந்துவிட்டு ஓரிரவில் ஓரிடத்தில் படுத்துத் துயிலுறும்பொழுது எம்பெரு

மான் ஏந்தல் நபியவர்கள் அவனுடைய கனவில் தோன்றித் திருக் காட்சி நல்கி அவனுடைய வாயில் உமிழ்ந்தனராம். உடனே எல்லா அறிவும் ஒருங்கே உளத்துறப் பெற்று வீடு திரும்பிய உமறின் மைந்தர், பிற்காலத்தில்வாவணப்புலவர் என்று வழங்கப்பெற்ற வரகவி தம் அன்னையை நோக்கி, 'அம்மா, அப்பா எங்கே' என்று வினவினராம். அன்னை நிலைமையை எடுத்துரைத்ததும் தந்தையைத்தேடி வெளியே புறப்பட்டாராம் மைந்தர். தந்தை ஒரு மரத்தின் நிழலில் அமர்ந்து தம் மகன் தம்முன் வந்து நிற்பதையும் அறியாது 'கிடந்தொளி பரப்பி, கிடந்தொளி பரப்பி' என்று கூறிக் கொண்டிருப்பதைக் கண்டதும் 'வாசம் கொப்பளித்து' என்று அடுத்த சொற்றொடரை எடுத்துரைத்தனராம் மைந்தர். அவ்வளவுதான். உமறின் வாயிலிருந்தும் அடுத்த கணம் 'கிடந்தொளி பரப்பி, வாசம் கொப்பளித் துக் கிளர்கிபுலாவை முன்னேக்கி' என்று ஊழிப் பெருவெள் ளம் போன்று ஒலித்தோடியதாம் கவி வெள்ளம். *

இவ்வாறு மனித இனத்துக்கே வழிகாட்டியாகவும் முன் மாதிரியாகவும் தோன்றிய மாநபியின் மாண்புறு பிறப்பை புதுமைக் கவிகளில் புனைந்த உமறுப் புலவர், அவற்றைச் செழுமையும் சீர்மையும் வளமையும் எளிமையும் வனப்பும்

---

* இதனையே புலவர் புராணத்தில் முத்துலுக் கப் புலவர் சருக்கத்தில் முருகதாச சுவாமிகள் பின் வருமாறு பாடுகின்றார்:

ஒருபாட்டிலிருசீ ருதித்துப்பின் மற்றொன்றுமுத [வாமையால்
வெருள்கூரலெய்தித் தவித்துள்ளகங்கார [மெலிவாதலு
மருகேயிருக்குந்தன் மகன்வாயில் வருசொல் [லதைச் சேர்த்ததாப்
பொருநீருடுக்கும் புவிக்கட்பல் புலவோர்கள் [புகல்வார்களே!

இனிப்பும் பொதிந்தனவாய்ப் படைத்துள்ளார். பாவை எப்படி யாத்தனரோ, அதில் பாகை எப்படி நுழைத் தனரோ! கவியை எப்படி இயற்றினரோ, அதில் கனிரசம் எப்படிப் புகுத்தினரோ! என்று நாம் வியந்து வியந்து இறும்பூதெய்தும்வண்ணம் அவர் அக் கவிகளைக் கரும்பு போன்றும் கற்கண்டு போன் றும் ஆக்கியிருக்கும் புதுமையைத்தான் என்னென்பேம். அக் கவிகளிலே அருளும் பொருளும் பின்னிப் பிணைந்துள் ளன. அருமறை நபியின் அழகிய பிறப்பை அவர் வர்ணிக்கும் பொழுது பா புனைவதென்றால் இப்படித்தான் புனையவேண் டுமேயன்றி, பாய் முடைவது போன்று முடையக்கூடாது என்று இலக்கணம் கற்பிப்பது போன்று அவருடைய கவி கள் அமைந்துள்ளன. கட்டுவதல்ல கவிதை; கொட்டுவது தான் கவிதை என்பதனை அவருடைய கவிகள் கூறாமல் கூறு கின்றன. இதுகாறும் மண்ணிலே நடந்து நாட்டு வளம், நகரவளம் ஆகியவற்றை ஆய்ந்து பாடிவந்த உமறு, நபியவ தாரப் படலம் வந்ததும் கவிதா வானிலே சிறகடித்துப் பறந்து அதனுடைய முகட்டையும் எட்டிப் பிடிக்கின்றார். முகம்மதெங்கள் நபிகள்கோமான் (ஸல்) அவர்கள் எப்படிப் பட்ட நபி என்று உங்களுக்குத் தெரியுமா? இதோ நான் உங்களுக்குக் கூறுகிறேன் என்று அவர் வீறுகொண்டெழுந்து அண்ணல் நபியவர்களின் திருப் பிறப்பைப் பற்றி உவமை களையும் உருவகங்களையும் அள்ளிச் சொரிகின்றார்.

எங்கள் நன்னபி உலகின் இருளறுக்கும் முழுமதி போன்று பிறந்தார்கள். எப்படிப்பட்ட முழுமதி போன்று தெரியுமா? இப்பொழுது வானிலே மறுவோடு, களங்கத் தோடு காட்சி வழங்குகின்றதே அப்படிப்பட்ட முழுமதி போன்றல்ல; மறுவற்ற, களங்கமற்ற, மாசற்ற முழுமதி போன்று தோன்றினார்கள். அவர்கள் தோன்றும்பொழுது உலகம் எந்நிலையில் இருந்தது தெரியுமா? அது விளக்கில்லா வீடு போன்றிருந்தது. அங்கு உருவ வழிபாடு என்னும் இருள் மண்டிக்கிடந்தது. மக்கள் நேரிய வழியை விட்டும்

---

இதனை உண்மையென ஏற்றுக்கொளின் மூன்றாண்டு கள் முகம்மது பந்தரில் உமறுப்புலவர் தனித்துத் தங்கிச் சீறாப் புராணம் இயற்றினர் என்ற செய்தி பொய்த்துவிடுவதைக் காண்க.

தடம் புரண்டு மௌட்டிய மயக்கத்தின் வெறியிலே கண் மூக்குத் தெரியாது அலைந்துகொண்டிருந்தார்கள். மக்கள் துறவறத்தையும் ஒழுங்காக மேற்கொள்ளவில்லை. துறவிகள் போன்று வேடம் புனைந்திருந்தார்களே யொழிய துறவிகள் மேற்கொள்ளவேண்டிய பற்றற்ற பண்பை அவர்கள் பெறவில்லை. இல்லறத்தையாவது மக்கள் இனிதே நடத்தி வந்தார்களாவென்றால் அதுவுமில்லை. வியபிசாரம் மிகுந்து இல்லறமென்ற அந்தப் பேரறமே அழிந்து ஒழிந்துவிடும் போலிருந்தது. இப்படிப்பட்ட சூழலில் உலகம் கிடந்து தத்தளிக்கும்பொழுதுதான் அங்கு மண்டிக்கிடந்த மருள்என்ற இருளை அறுத்து, அருள் என்ற ஒளியைப் புகுத்தி அறநெறி காட்டும் அருந்தகையாய் மறுவிலாதெழுந்த முழுமதியாய் மறுப்படாதெழுந்த செம்மணியாய் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) பிறந்தார்களென்று பண்ணிசைக்கின்றார் புலவர்.

> நெறிநிலை திரியா மருண்மதம் மிகுந்து
> நெடுநிலம் எங்கணும் பரந்து
> துறவறம் தவறி இல்லறம் மடிந்து
> சுடரிலா மனையது போலக்
> குறைபடுங் காலம் இருளெனும் குபிரின்
> குலமறுத் தறநெறி விளக்க
> மறுவிலா தெழுந்த முழுமதி போல
> முகம்மது நபி பிறந்தனரே!

இத்துடன் அவர் நின்றாரில்லை. இன்னும் எங்கள் நன்னபியைப்பற்றிக் கூறுகின்றேன், கேளுங்கள் என்று அவர் கிளம்புகின்றார். சிறந்த உவமைகளும் உருவகங்களும் அவரின் வாயிலிருந்தும் வெள்ளம்போல் வெளிவருகின்றன.

கதிரவன் உச்சி வானில் தன் அரியணைமீது அமர்ந்து வெங்கதிர்களை வீசிக் கொடுங்கோல் செலுத்துகின்றான். கொதிக்கும் பாலை; பதைபதைக்கும் வெய்யில்; பொறி பறக்கும் கானல். இவ்விதச் சூழலிலே அகப்பட்டுக்கொண்ட

மக்களும் மாக்களும் செஞ்சுடரின் வெஞ்சினத்தைத் தாங்க இயலாது தஞ்சம்தேடி—நிழல் தேடி அங்குமிங்கும் ஓடுகின்றனர். ஆனால் அங்கேயோ எங்கேனும் மருந்துக்குக்கூட மரமோ, தருவோ, செடியோ, கொடியோ காணப்பெறவில்லை. யாது செய்வது, எங்குச் செல்வது, எங்ஙனம் உய்வது என ஏங்கிப் பரிதவிக்கின்றனர் அவர்கள். இப் பாலைதான் தங்களுடைய புதைகுழியாகிவிடுமோ என்றெண்ணித் தவிக்கின்றனர். அப்பொழுது திடீரென ஓர் அற்புதம் நிகழ்கின்றது. ஒரு பெரும் மரம் கொம்பும் கிளையும் இலையும் பழமுமாக அங்குத் திடீரெனத் தோற்றம் வழங்கி அம் மக்களுக்கும் மாக்களுக்கும் செழுநிழல் தருகிறது. அபயமளித்து ஆறுதல் நல்குகிறது. இவ்வாறுதான் உலகத்திற்குத் திரு நபியவர்களின் பிறப்பும் இருந்தது என்று உவமை கூறுகின்றார் உமறு.

மானிட இனம், உள நோயாலும், உடல் நோயாலும் வருந்தித் துன்பத்திலும் துயரத்திலும் அழுந்திக்கொண்டுள்ளது. நலிந்து மெலிந்து நம்பிக்கையற்று உழல்கிறது. அதன் காரணமாக இழி தொழிலிலும் கொலைத் தொழிலிலும் இறங்குகின்றது. என் பவநோய் தீர இப் பாருலகிலே ஒரு மருந்தேனும் இல்லையா என்று அது ஏங்குகின்றது. அப்பொழுது அதன் பிணி தீர்க்கும் அருமருந்தாக அமுத சஞ்சீவியாக ஒரு பெருமருந்து கிடைக்கின்றது. அதனை மானிட இனம் கையில் பெற்றதுதான் தாமதம், அதன் உடலிலும் உள்ளத்திலும் இதுகாறும் ஆட்சிசெய்த பிணிகளெல்லாம் பஞ்சாய்ப் பறக்கின்றன. அவ்விதப் பெருமை மிகுந்த அருமருந்து போன்று முகம்மதெங்கள் நபிகள் கோமான்(ஸல்) இவ்வுலகில் பிறந்தார்கள் என்று உருவகம் தருகின்றார் புலவர்மணி!

விண்ணை எதிர்பார்த்து மண்ணிலே உள்ள உயிர்களத் தனையும் வாழ்கின்றன. எனினும் விண்ணிலிருந்து பெய்யும் மழை, காலந் தவறிப் பெய்தால் யாவும் தவறிவிடும். அதிகமாகப் பெய்தாலோ எல்லாம் அழிந்துவிடும். காலத்தில் பெய்யும் 'செழுமழை'யால் உயிர் தழைக்கும், பயிர் தழைக்கும். பனியால் நனைந்து, வெயிலால் உலர்ந்து வாடி வதங்கி, சுருங்கிக் கருகிக்கிடக்கும் பயிர்களுக்கு மழை என்பது இறைவனால் நல்கப்படும் ஓர் அருளாகும்.

ஓரே இறைவணக்கம் என்ற பயிரானது உருவ வழிபாடு என்னும் கொடும் வெயில் காரணமாக வாடி வதங்கிக் கிடந்தது. அப் பயிருக்கு ஊண் தரும், உயிர் தரும் செழும் மழை போன்று அண்ணல் நபியவர்கள் அவனியிலே தோன்றினார்கள் என்று அழகாகக் கூறுகின்றார் உமறு.

ஆடவருக்கு அழகு தருவது பரந்து விரிந்த நெற்றி. அதிலே திலகமிட்டால், எவ்வாறு அது அழகுக்கு அழகுசெய்யுமோ, எழிலுக்கு எழில் நல்குமோ அதேபோன்று அரபு நாட்டின் திருநுதல் போன்று விளங்கிய குறைஷியங் குலத்தின் திலகம் போன்று தன்னிகரில்லாத் தனிப்பெருங் குரிசிலாம் எம்பெருமான் இவ்வுலகில் தோன்றினார்கள் என்று உவமானம் மொழிகின்றார்.

உயிர்கள் வாழவேண்டுமானால், பயிர்கள் செழிக்க வேண்டுமானால் வெப்பமும் வெளிச்சமும் தேவை. அவை இரண்டையும் நல்குவது சூரியன். சூரியன் இன்றேல் எல்லாம் சூனியமாகிவிடும். அதுவே, மானிலத்தின் மாபெரும் விளக்கு; மணிவிளக்கு; நந்தா விளக்கு. அதுபோன்றே அகில அண்டத்து எழுந்த பல்லுயிர்க்கும் அருள் தரும் ஞானசூரியனாக, மானிலந் தனக்கோர் மணிவிளக்காக அண்ணல் நபியவர்கள் பிறந்தார்கள் என்று வாயாரக்கிறார் கவிஞர். உடனே அவருடைய வாயிலிருந்தும் கவி புறப்படுகின்றது. இதோ அவர் அதனை முழக்குகின்றார். நாமும் கேட்போம்.

பானுவின் கதிரா லிடருறுங் காலம்
படர்தரு தருநிழல் எனலாய்
ஈனமும் கொலையும் விளைத்திடும் பவநோய்
இடர்தவிர்த் திடும்அரு மருந்தாய்
தீனெனும் பயிர்க்கோர் செழுமழை எனலாய்
குறைஷியர் திலதமே எனலாய்
மானிலந் தனக்கோர் மணிவிளக் கெனலாய்
முகம்மது நபிபிறந் தனரே

இவ்வாறு உவமை, உருவகம் அமையத் தாம் நினைத்த கருத்தனைத்தினையும் கவி உருவில் வடித்தெடுத்து நம் செவிகளில் இன்பத் தேனைச் சொட்டுகின்றார்.

அண்ணல்நபி அவர்களின் அளப்பரும் மாண்பினையும், அவர்கள் எக்காலத்தில் எக்காரணத்திற்காக இவ்வுலகில் தோன்றினார்கள்? அவர்கள் தோன்றவேண்டிய அவசியம் தான் என்ன என்பனவற்றையும் உமறு உவமைநயத்துடன் எடுத்துரைக்கும் பொழுது இத்தகைய நபியை ஏற்றுக் கொள்ள யாருக்குத்தான் விருப்பம் இராது என்று தோன்றுகின்றதல்லவா? இத்தகைய நபி ஒருவர் இவ்வுலகில் தோன்றித் தம்மைப் பின்பற்றுவோராக எத்தனை எத்தனையோ கோடி மக்களை இவ்வுலகில் விட்டுச் சென்ற பின்னுமா இவ்வுலகம் இவ்விழி நிலையிலிருக்கிறது என்று நம்மையறியாமல் நாம் வியப்படைகின்றோமல்லவா?

அருமறைக் கொழுந்தாய் அவனியில் தோன்றிய அண்ணல்நபி அவர்களைப் பாலூட்ட, ஹலீமா அவர்களும் அவர்கள் தம் ஆருயிர்க் கொழுநனார் ஹாரிது அவர்களும் தம் சிற்றூர் கொண்டு சென்று தம் மனையில் புகுந்த பொழுது அவர்கள் கொணர்ந்த குழவியைப் பார்ப்பதற்காகப் பாவையர் பலரும் அங்கு வந்தடைந்தனராம். அங்கு மதியினும் தெளிந்த வடிவெடுத்தலைய பெருமதியாய் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) வீற்றிருப்பதைக் கண்டதும் வியப்புற்று அவர்களின் அணிமலர்த்தாளில் அயில்விழிவைத்து முத்தமிட்டனராம். அதுமட்டும் அவர்கள் செய்யவில்லையாம். அவர்கள் எல்லோரும் ஒருவர்பின் ஒருவராக வந்து வான் கிடந்த மதியினும் மேலாக ஒளிர்ந்த அந்த ஒளிப்பிழம்பை வாரியணைத்து முத்தமிட்டார்களாம். ஹலீமா பெற்ற பேறே பெரும்பேறு என்று போற்றிப் புகழ்ந்தார்களாம். இக்குழந்தை தூண்டா மணிவிளக்கோ, முழுமணியோ, அல்லது சுவனலோகத்துப் பெருங்கனியோ என்று வியந்து வியந்து சிந்துபாடினார்களாம். இவ்வாறு அவர்கள் சிந்துபாடுவதை ஒட்டுக் கேட்டுக்கொண்டிருந்த புலவர் உமறு மேலும் ஒளிந்திருந்து ஒட்டுக்கேட்டு அவர்கள் சந்த அரபியில் சிந்துபாடியதை அமுதத் தமிழில் பண்

*இசைத்து இதோ நம்முன் வழங்குகின்ருர், நாமும் கேட் போம்.*

வறுமையும் தீரும்நோயும் விட்டகலும்
மனத்தினில் கவலையு நீங்கும்
சிறுமையும் அகலும் புத்தியும் பெருகும்
தீவினை வந்தட ராது
தெறுபகை சிதையும் செல்வமும் வளரும்
தேகமும் சிறந்து பூரிக்கும்
உறுபவம் தொலையும் முகம்மதை எவர்க்கும்
ஒருபகல் காண்கி(ல்) என்றுரைப்பார்.

*ஹலீமாவின் திருமனையில் காரிகையர் பாராட்ட ஹாரிது சீராட்ட, ஹலீமா தாலாட்ட செங்கீரைப் பருவத்தைத் தாண்டி, சப்பாணிப் பருவத்தைக் கடந்து வாரானைப் பருவத்தை எட்டிப்பிடித்த எம்பெருமான் அவர்கள் கால்வீசி நடக்கத் துவங்கியதைக் கண்டதும் கவிஞர் உமறுக்குக் களிபேருவகை பொங்கித் ததும்பத் துவங்கி விட்டது. இனிமேல் உலகம் முழுவதும் ஒரே இறைவன் வழிபாடு நடக்கும்; மானிடர்க்கேற்ற நெறிமுறைகள் நடக்கும்; அறவழி நடக்கும்; துன்பம் தொலைந்து இன்பமே நடக்கும்; செங்கோல் நடக்கும்; குலமுறை நடக்கும்; சிறந்தோர் யாவரும் எம்பெருமான் அவர்களின் சொற்படி நடப்பர் என்று கூறிக் களிநடனம் ஆடுகின்ருர். அவருடைய களிநடனத்தை நாமும் கண்டுகளிப்போம், வாருங்கள்.*

எங்கிலம் அனைத்தும் தீநெறி நடப்ப
இயல்பெறு(ம்) மனுநெறி நடப்பத்
துன்னிய அறத்தின் துறைவழி நடப்பத்
துன்ப(ம்) அற்(று) இன்பமே நடப்பப்

பன்னரும் செங்கோல் உலகெலாம் நடப்பப்
பாரினில் குலமுறை நடப்ப
மன்னியர் எவரும் சொற்படி நடப்ப
முகம்மது நபிநடந் தனரே.

*இவ்வாறு கவிஞர் கவிபாடிக் களிகூர்ந்து களிநடனம் ஆடும்பொழுது நாமும் அவருடன் கலந்து களிநடனம் ஆடுவோமா என்று நமக்கு ஓர் உணர்வு பிறக்கின்றது.*

*அதன்பின் அண்ணல் அவர்களின் வளர்ச்சியையும், வாலைப் பருவத்தையும் கவிஞர் படிப்படியாகப் படம் பிடித்துக் காட்டுகின்றார். அவர்களுக்குத் திருவயது இருபத்தைந்து சிறப்புடன் நிறைந்தபொழுது அன்னார் எத்தகைய பண்புகளுடன் மிளிர்ந்தார்கள் என்பதனை ஒரே ஒரு கவியில் ரத்தினச் சுருக்கமாக அவர் அமைத்த பான்மையைத்தான் என்னென்பேம்! அக்கவிதா ரத்தினம் எவ்விதம் சுடர் வீசுகின்றது என்பதை அறிய அதனுடைய பற்பல முகங்களையும் பற்பல கோணங்களிலிருந்து பாருங்கள். இதோ அந்த இரத்தினம் சுடர் வீசுகிறது!*

பேரறி(வு) எவையும் செம்மை
பெருத்(து) ஒளிர் வனப்பும் வெற்றி
வீரமும், திறலும், உண்மை
விளங்கும் வாசகமும் கல்விச்
சாரமும் பொறையும் மிக்க
தருமநற் குணமும் யார்க்கும்
வாரமும் முகம்ம தின்பால்
வந்தடைந்(து) இருந்த தன்றே.

*இவ்வித அரும்பெரும் பண்புகள் நிறைந்த பெருந்தகை, யாராய் இருந்தால்தா னென்ன, எந்த நாட்டவராய்*

இருந்தால்தானென்ன? அவரை யாவரும் தம்தலைவர் நாயகமாகத் தம் தலைமீது சூடிக்கொள்ள மாட்டார்களா என்ன? என்று, நம் உள்ளின் உள்ளே ஓர் உணர்ச்சியைக் கிளப்பி விடுகின்றார் கவிஞர். தலைவர்களாக விரும்புவோர் இவ்விதத் தகுதியையும் பெற்றிருக்கவேண்டும். அவ்விதமானால்தான் அவர்கள் தலைமை தாங்கத் தகுதி யுடையவர்களாவார்கள் என்று வருங்காலத்தில் பெரும் தலைவர்களாக விழையும் இளங் காளைகளுக்கு ஓர் அறவுரையும் பகர்கின்றார்.

வாலைப் பருவத்தை எய்திய வள்ளல், தாம் உடன் பிறந்தார் ஒருவருமின்றி ஒருத்தன் தனியனாக இவ்வுலகில் நிற்பதையும், உறுபொருள் இன்றி இந்தப் பெருநிலத்தில் வாழ்வது பேதமை என்பதையும் உணர்கின்றார்களாம். ஒருகுடி பெருமை பெறுவதற்கும், ஒருகுலம் மேன்மையுறுவதற்கும் ஒருவர் பார்புகழும் பார்த்திபராவதற்கும், வறுமையில் உழலும் ஒருவர் பெருமையுறுவதற்கும் காரணம் பொருள் தான். எனவே, அப்பொருள்தனை ஈட்ட வளம் மிகுந்த சிரியா சென்றுவரத் தாம் எண்ணியுள்ளதைத் தம் பெரிய தந்தை அபூத்தாலிப் அவர்களிடம் அண்ணலவர்கள் கூறுகின்றார்களாம். இச் சமயத்தில்தான் மேலே கண்ட கருத்துக்கள் அமைந்த கவி ஒன்றை நமக்கு யாத்தளிக்கின்றார் கவிஞர். தாம் கற்பனை வானில் பறக்கக்கூடிய கவிஞனாக —இலட்சியவாதியாக இருந்தபோதிலும் கண்ணுக்கெதிரே நடப்பதைப் பார்க்கக்கூடியவன், உலகப் போக்கை உற்று நோக்கிச் செயலாற்றக்கூடிய செயல்வீரன் என்றும் காட்டிக்கொள்கின்றார். வெற்றுப் பெருமையில், வீண் பெருமையில் மயங்கிக் கிடக்காதீர்! உண்மைப் பெருமை இவ்வுலகில் இதில்தான் இருக்கிறது என்று எடுத்துக்காட்டுகின்றார். இதோ உமறு அக் கவியை ராக, தாள, சுரத்துடன் பாடுகிறார், கேட்போம்.

குடித்தனப் பெருமை சேர்ந்த
குலத்தினுக்(கு) உயர்ந்த மேன்மை
படித்தலம் புகழும் செங்கோல்
பார்த்திபர் ஆதல் தேய்ந்து

மிடித்தவர் பெரியர் ஆதல்
மிகுபுகழ் கிடைத்தல் கையிற்
பிடித்திடும் பொரு(ள்) அதன்றிப்
பிறி(து)இலை உலகத் தன்றே.

உமறு பொருளைப்பற்றிக் கூறும்பொழுது தம் கைப் பொருளைப் பிறர் கைகொடுக்கும் பேதையும் பதரே என்பதனைக் கூறுமற் கூறி, பிறரிடமுள்ள தம் பொருள்களாலோ அல்லது தம் உறவினர்களின் பொருள்களாலோ ஒருவனுக்கு எவ்விதப் பெருமையும் வந்துவிடாது. தம் கையிற் பிடித்திடும் பொருளால்தான் எல்லாப் பெருமையும் வந்துசேரும் என்று வன்மையாக முழங்குகின்றார்.

இவ்வாறு அருமை யருமையான கருத்துக்களை அள்ளிச் சொரிந்துகொண்டு செல்லும் கவிஞர், கதிஜா நாயகியவர்களுக்கும் அண்ணலவர்களுக்கும் சீரும் சிறப்புடன் திருமணம் செய்து வைத்துவிட்டுப் பின்னர் நுபுவத்துக் காண்டத்தில் நுழைகின்றார்.

அண்ணலவர்களுக்கு அரபிகள் இழைத்த இன்னல்களையும் இடும்பைகளையும் நம் கண்கள் குளமாகும் வண்ணம் எடுத்து விரித்துவரும் உமறு, குவைலிதின் அரும் பெருங்குலத்தின் தீபமாம் கதிஜா நாயகியார் தம் கணவர் பொருட்டு படும் கவலையையும் எடுத்துரைத்து அண்ணல் நபியவர்கள் அருமைத் துணைவியாருக்கு ஆற்றும் அமுதினை நிகர்த்த ஆறுதல் மொழிகளையும் அழகான பைந்தமிழில் பண்ணிசைத்துப் பாடுகின்றார். இறைவனின் அருள் தங்களிடம் என்றென்றும் தங்கி அகலாது நிறைந்திருக்கிறதென்றும் எனவே கவலை தங்களுக்கு வேண்டியதில்லையென்றும் அண்ணல் நபியவர்கள்ளுக்கு அவர்கள்தம் ஆருயிர் மனைவியார் எடுத்துரைப்பதாகவும் கவிமழை பொழிகின்றார். அதன்பின் அண்ணல் நபியவர்களின் வாயிலாக அவனியோர்க்குஆரமுதனைய நெறிமுறையையும் எடுத்துரைக்கின்றார். மண்பெரும் புவியினில் வாழும் மாந்தரில் துன்புறுதவர் இல்லை; துன்பைத் துன்புறாது இன்பமே கொள்பவர்கள்தாம் இலங்கும் பொற்பதிக்கு அன்பராய் இருப்பர் என்றும் இயம்புகின்றார். மேலும் தர்மமே பொருளெனத் தவத்தின் மேற்செல்லும்

நன்மனத்தவர்க்கு ஒருநாளும் தீங்கு என்னும் புன்மை வந்தடைந்திடாது என்றும் புகல்கின்றார்.

இவ்வாறு தம் கன்னித்தமிழ் காப்பியத்தில் எத்தனையெத்தனையோ அறவுரைகளை நம்முன் நிறுத்தி, பகருமாறு செய்துவிட்டுப் பற்பல படலங்களையும் விறுவிறுவெனக் கடந்துகொண்டு பாத்திமா நாயகியின் திருமணப் படலத்திற்கு விரைந்து வருகின்றார் உமறு.

அண்ணலவர்கள் தம் ஆருயிரனைய திருமகளார் பாத்திமாவை, வடிவமும் ஒழுங்கும் நீதி வணக்கமும் அறிவும் பூத்த கொடிமட மயிலைச் சோதிக்குலக் கொழுந்தனைய கற்புக்கரசி பாத்திமா நாயகியை வெற்றிவீரர் அலியெனும் புலிக்கு எளியமுறையில் வதுவை செய்ய ஏற்பாடு செய்துகொண்டிருப்பதைக் கண்டதும், 'நாயகமே, எண்ணறும் தவமும் கற்புப் புகழும்நின்று இறைஞ்சிஏற்றும் பண்ணரும் வேதவாய்மைப் படிதவறுத வாக்கும் நண்ணரும் தருமம் யாவும் நலமுடன் பெற்ற குயிலனைய மயில்வடிவாராம் எங்கள் பாத்திமாநாச்சியாருக்கு இவ்வாறுதானு வதுவை செய்வது' என்று ஏங்கி 'நாயகமே! அப்பொறுப்பை என்னிடம் கொடுங்கள். இவ்வுலகில் என்றுமே நடவாத இணையற்ற முறையில் விமரிசையாக வதுவை நடத்திவைக்கின்றேன்' என்று கூறிச் செயலாற்றுவது போன்று உண்மை நிகழ்ச்சி எவ்வாறிருப்பினும் இப்படலத்தில் தமிழ்நாட்டில் நடக்கும் திருமணம் போன்று பெரும் தடபுடல் செய்கின்றார் உமறு.

மாநபியின் மாண்புமிக்கப் பூங்கொடி பாத்திமா நாயகிக்கும் அபூத்தாலிபின் அருமை மகனார் அலியெனும் அடலேறுக்கும் கடிமணம் நிகழவிருக்கும் செய்தியை மதினமாநகர மக்களுக்கு முரசறைந்து முழக்க முதலில் உத்தரவிடுகின்றார் கவிஞர். அவருடைய வாயிலிருந்து உத்தரவு பிறந்ததுதான் தாமதம், முரசறையும் வள்ளுவர்கள் தெருத்தெருவாகச் சென்று விண்ணதிரும்வண்ணம் முரசு முழக்குகின்றார்களாம்.

இதைக் கேட்டதும் மதினமாநகர மக்கள் மகிழ்ச்சி மீக்குற்றுத் துள்ளி எழுந்தார்களாம். மாடங்களையும் கூடங்களையும், மனைகளையும் கூட்டிப்பெருக்கி புதுக்கிட்டார்

*களாம்; பின்னர் சுவரிலுள்ள பழம் புகைகளைத் துடைத்து முத்துக்களை நீற்றுவெண் சாந்து செய்து அச் சாந்தினைச் சுவர்களில் பூசி மெழுகி, கண்ணுடி போன்று ஒளிபெறும்படி செய்வார்களாம். அதன்முன் நிற்பவர்களின் உருவம் அதில் தெரியுமாம்; அதனைப் பார்ப்பவர்களின் கண்கள் வழுக்கிப் பதைபதைக்குமாம். இத்துணைச் சிறப்புவாய்ந்த அச்சுவர்களிலே மணிகோத்தாற் போன்று அணி அணியாகக் கோலங்கள் இடுவார்களாம். செழுங்குவளை மலர்போன்றும், செந்தாமரை மலர் போன்றும் அதில் தீட்டி, பூங்கொடிகள் படர்வது போன்று ஓவியம் வரைவார்களாம். காவணம் வகுப்பார்களாம். தோரணம் புனைவார்களாம். பந்தல்கள் போடுவார்களாம். பசுங்கொடி ஏற்றுவார்களாம். பொன்னிழைத்த பீதாம்பரத்தாலும், பசியமென்பட்டினாலும் அந்தப் பந்தல்களை அலங்கரித்து அவற்றில் மலர்த் தொகுதிகளையும், பழக்குலைகளையும், மணிமாலைகளையும் தொங்கவிட்டு அலங்கரிப்பார்களாம். அந்தப் பந்தல்களில் இன்ன பொருள்தான் இருக்கின்றது, இன்னபொருள்தான் இல்லையென்று வரையறுத்துக் கூற இயலாவண்ணம் எல்லாப் பொருள்களும் நிறைவுற்றிருந்ததால் மனிதர் தம் மனத்தினில் நினைத்தவை நினைத்தவை அத்தனையையும் கொடுக்கும் கற்பகத்தரு போன்று அப்பந்தல்கள் காட்சிவழங்கினவாம். முத்துக்கள் மலர்ந்து பொன் இதழ் விரித்துப்பூத்து மரகதமணிகள் குலைகுலையாகக் காய்த்துத் தொங்கி, புஷ்பராகங்கள் பழுத்துக் குலுங்கியது போன்று அப்பந்தல்கள் உமறின் கற்பனைக் கண்களுக்குத் தோற்றம் தந்தனவாம். உடனே அப்பந்தல்களின் சிறப்பைப் பைந்தமிழ்க் கவி ஒன்றால் பாராட்டுகின்றார் புலவர்.*

தரள மாமணி அரும்பினம் ஈன்றுதா ரணியின்
பரிவு பெற்றிடும் பொன்னிதழ்ப் பன்மலர் பூத்து
மரக தச்செழு(ம்) மணிதிரள் காய்குலை வளர்த்துப்
புருட ராகங்கள் பழுத்தன போந்தன பந்தர்.

*இத்தகைய பந்தல்கள் போட்டு, எங்கணும் சந்தனம், அகில் ஆகியவற்றைப் புகைத்து நறுமணம் கமழ*

மக்கச் செய்து மலர்தூவி மண்ணிலம் கண்ணுக்குத் தெரியாது செய்து அதனைப் பொன்னிலம் போன்று பொலிவுறச் செய்தார்களாம். பொன், வெள்ளிப் பானைகளில் அறுசுவை உண்டியை நறுமணத்துடன் சமைத்தார்களாம். அவர்கள் பொரித்த கறியின் வாசம் மடந்தையர்களின் மென் பூங்குழலிலும் செருகி, மாந்தர்களின் நாசியையும் துளாவி, மதினமா நகரின் மாடங்களையும் கடந்துசென்று வானத்திலும் கமழ்ந்ததாம். அப்படிப்பட்ட உணவையும், மினுமினுவென்று மின்னக்கூடிய முப்பழத்தினை தேனில் விரவிச் சமைத்த ஆராவமுதையும் விருந்தினர்களை வலிய வலிய அழைத்துவந்து உண்ணுங்கள்! உண்ணுங்கள்!! என்று கூறிப் பசியாற ஊட்டுவார்களாம்.

செந்தாமரை முகத்துச் சேயிழையார் புத்தாடை புனைந்து புதுமணம் பூசி செழுங்குயில் போன்று பாடுவார்களாம்; மடமயில் போன்று ஆடுவார்களாம்; அஞ்சு வண்ணக் கிளிபோன்று அழகிய குதலை மொழி பேசுவார்களாம். காளையர்கள் ஒருங்குகூடி கன்னல் மொழியால் அண்ணல் அவர்களையும் அவர்கள்தம் அருமை மருகர் அலி அவர்களையும் வாழ்த்திப் பண்ணிசைத்து வீதிதோறும் பவனி வருவார்களாம். முதியோர்கள் பலபல திரளாய்ப் பிரிந்து மதினமா நகரம் எங்கணும் திருகுர்ஆனை முழங்கிக் கொண்டு வலம் வருவார்களாம். இவ்வாறு அன்று விதம் விதமாக மதினமா நகர் காட்சி வழங்கிய சிறப்பைக் கூறி வந்த கவிஞர் மேற்கொண்டும் அதனுடைய சிறப்பை என்னால் எடுத்துரைக்க இயலாது என்று கூறாமல் கூறுகின்றார். இவ்வாறு நான் வெள்ளை மனத்துடன் கூறுவதற்காக நீங்கள் என்னை எள்ளி நினைத்துவிட வேண்டாம். வேறு எவராலும் அதன் சிறப்பை முற்றிலும் எடுத்துரைக்க இயலாது என்று ஆணித்தரமாகக் கூறி, முடிந்தால் யாரேனும் செய்யுங்கள், பார்ப்போம் என்று அறைகூவல் விடுப்பது போன்று 'புவியினில் எவரெடுத்துரைப்பார்' என்று முழங்குகின்றார்.

அதன்பின் அழகொழுகும் அலியவர்கள் மணக்கோலம் புனைந்து புரவி இவர்ந்து பவனி செல்வதை எழிலொழுகும் தீந்தமிழில் இனிமை சொட்டச் சொட்ட இசைக்கின்றார் கவிஞர். வையகத்திலுள்ள வாத்தியங்கள்

அனைத்தையும் கொணர்ந்து கடலையும் மலைக்கும்வண்ணம் வானிடியும் மயங்கும் வண்ணம் மண்ணகமும் அதிரும்வண்ணம் முழங்கச்செய்கின்றார். மக்கள் வெள்ளத்தில் மிதந்து செல்லும் மணமகனார் அலி அவர்களின் அழகைக் கன்னிப் பெண்கள் கண்ணால் பருகிக்கொண்ட மகிழ்வையும், வருத்தத்தையும், அழுக்காற்றையும் விதம்வித மாக வர்ணிக்கின்றார். இத்துணைச் சிறப்புவாய்ந்த ஏந்தலை அழகின் திருவுருவை பாத்திமா ஒருத்திதானா பெறவேண்டும், அப்படியானால் நாங்களெல்லாம் செத்து மடியவேண்டியதுதானா அல்லது யாரோ ஓர் அழகற்ற மூஞ்சியானைக் கட்டிக்கொண்டு தொலையவேண்டியதுதானா என்று கன்னிப் பெண்கள் எண்ணியெண்ணிப் புழுங்குகின்றார்களாம். அவர்களின் மனப் புழுக்கத்தை அப்படியே கவி உருவில் வார்த்தெடுத்து கனிரசம் பிழிந்தாற்போன்று இதோ தருகின்றார் கவிஞர், பருகிச் சுவையுங்கள்.

அருமறை மணத்த வாயும் அருள் அடை
[கிடந்த கண்ணும்
திருமதி முகமும்நீண்ட திரள்மணி வயிரத் தோளும்
தருவெனச் சிவந்த கையும் தாமரைத் தாளும்
[வாய்ப்பப்
பெருகிய அழகை எல்லாம் ஒருத்தியோ
[பெறுவ(ள்) என்பார்.

இறுதியாக அடலேறு அலியவர்களின் திருமணப்பவனி அண்ணலவர்களின் அருள்மனையை நண்ணிவிட்டதும், உடனே கட்டியக்காரனை அழைத்து இச் செய்தியை முழக்குமாறு கட்டளையிடுகின்றார் உமறு. அவனும்,

நரர்புலி அலியார் வந்தார்; நபிதிரு மருகர்
[வந்தார்;
அரிஅபித் தாலி(ப்) ஈன்ற ஆணினி(ன்)
[அழகர் வந்தார்;

பரிவலி வீரர் வந்தார்; பாத்திமா கணவர்
[வந்தார்.

*என்று சங்கு முழக்குகின்றான்.*

*உடனே கவிஞர், அண்ணலவர்களின் இல்லத்திற்கு ஓடோடிச் சென்று பாத்திமா நாயகியை விரைவில் பூம்புனல் ஆட்டிப் பூந்துகில் உடுத்திப் பூவின் அணைமிசை நடத்திக் கொணருமாறு சொல்கின்றார். அவ்விதமே பெண்கள் செய்கின்றார்கள். அதைக் கண்டு பெருமகிழ்வுற்ற கவிஞர் கவிதா வானில் சிறகடித்துப் பறந்து பின்வருமாறு பாடுகின்றார்.*

இறையவன் தூத(ர்) ஈன்ற இருவிழி மணியைச்
[சோதி
மறைபடா விளக்கைச் சேணின் வானிடத்
[துறையா மின்னைக்
கறைபடா மதியை நாளும் கவின்குடி இருந்த
[கொம்பைப்
பொறையென வளர்ந்த கற்பைப் பூம்புனல்
[ஆட்டி னாரால்.

மரகதச் சுடரைச் சேர்ந்த மாணிக்கக்
[கொழுந்தைப் பூவில்
பிரிவுறாப் பொன்னை மின்னைப் பெண்ணலங்
[கனியை எய்தாப்
பரகதிப் பேறை வாழ்வை பாத்திமா வென்னும்
[அந்த
அரசிளங் குயிலைப் பூவின் அணைமிசை
[நடத்தி னாரால்.

*அதன்பின் பாத்திமா நாயகி அவர்களுக்கும் அலி அவர்களுக்கும்*

*மாபெரும் மங்கள மகிழ்வு மணங்கமழ*
*சோபனம் என்னும் சுகந்த மலரால் செய்த பாமாலை*

புனைந்து முகம்மது நெயினார் வாழ்த்த, மற்ற மன்னவர்கள் வாழ்த்தப் புகலரும் கற்பின்மிக்கப் பூவையர் எவரும் வாழ்த்த மணமுடித்துவைத்து மகிழ்கின்றார் கவினார்.

இவ்வாறு பாத்திமா நாயகியின் திருமணப் படலத்தில் விஸ்தார கவியாக விளங்குகின்ற உமறு பத்ரு, உகதுப் படலங்களில் வீர கவியாக உருமாறுகின்றார். சொல்லம்புகளாலும் கவிக் கணைகளாலும் சொல்லொணுக் கூர்மை வாய்ந்த மொழி வாளாலும் அவர் வீர தீரத்துடன் அமராடவும் சமராடவும் செய்கின்றார்.

இதற்குள் உமறு சீறுவென்னும் காப்பியத்தை திராக்ஷாபாகமாகத் தீந்தமிழில் புனைந்து வரும் செய்தி தமிழ்நாட்டின் பற்பல பாகங்களிலும் வீசிப் பரிமளித்தது. 'ஓரிலட்சம் ரூபாய் வழங்குகின்றேன். அதனை என் பெயரில் நிறைவேற்றுங்கள்' என்று வேண்டி செல்வச் சீமான்கள் பலர் ஓலையும் தூதும் ஒருங்கே விடுத்தனர். அதைக்கண்டு உமறின் உள்ளமும் அலைந்தது. ஒருநாள் உமறு அபுல்காசிம் மரக்காயர் அவர்களைக் கண்டு 'மச்சான், ஒரு நற்செய்தி' என்று கூறினார். யாது என வினவினார் அபுல்காசிம் மரக்காயர். அதற்கு உமறு, 'நான் சீறு இயற்றிவரும் செய்தி செந்தமிழ் நாட்டின் பற்பல பகுதிகளிலும் பரவிவிட்டது' என்று கூறினார். 'நிரம்ப மகிழ்ச்சி' என்று மறுமொழி பகர்ந்தார் அபுல்காசிம். 'பல ஊர்களிலுள்ள செல்வச் சீமான்களிடமிருந்தும் எனக்கு மடலும் தூதும் வந்துள்ளன' என்று அடுத்தாற்போல் கூறினார் உமறு. 'அப்படியா' என்றனர் அபுல்காசிம் மரக்காயர். இப்பொழுதுதான் உமறு அபுல்காசிம் மரக்காயரின் தலையில் அணுகுண்டைப் போட்டாற்போன்ற செய்தியைக் கூறினார். மச்சான் தாங்களும் பெரும் செல்வர் அல்ல. நானும் பற்பல இன்னல்களுக்கு உள்ளானவனாய் உள்ளேன். இப்பொழுது ஓரிலட்சம் ரூபாய்வரை தந்து சீறுப்புராணத்தை ஏற்றுக்கொள்வதாகப் பெரும்பொருள் படைத்த பெருமக்கள் பலர் முன் வந்துள்ளனர். நெருக்கிப்பிடிப்பின் மேற்கொண்டும் கிடைக்கும் போலுந் தோன்றுகிறது. அதனைப் பெற்று நாம் இருவரும் ஆளுக்கு அரையளவு எடுத்துக்கொள்ளலாமென்று எண்ணுகின்றேன்' என்று கூறினார்.

இச்செய்தி அபுல்காசிம் மரக்காயரின் இரு செவிகளிலும் ஈயக்குழம்பை வார்த்தது போன்றிருந்தது. அவருடைய முகம் கருகித் தீய்ந்தது. மறுமொழி யாதொன்றும் கூறாது வருத்தத்துடன் அவ்விடத்தை விட்டும் அகன்றார் அபுல் காசிம். இல்லம் சென்ற அபுல்காசிம் தொல்லையே உரு வெடுத்தாற் போன்று வீற்றிருந்தார். அப்பொழுது அவர் களின் அருமை மனைவியார் சப்பாகுபீவி அவர்கள், அவரை அணுகி, என்றுமில்லாதவண்ணம் இன்று வதனம் வாடி வீற்றிருப்பதற்கான வரலாறு என்னவென்று வின வினர். உமறின் வாய்மொழிகளை வள்ளல் அபுல்காசிம் வருத்தத்துடன் கூறியதும் கற்புக்கரசி சப்பாகுபீவியின் கண்கள் குளமாயின. நெஞ்சம் கனமாகியது. 'உமறு இயற்றும் சீறாக்காப்பியத்தின் மதிப்பு இவ்வளவுதானோ' என்று கூறி உவமை சொல்ல இயலாத் துயரக்கடலில் மூழ்கினார்கள்.

அன்றிரவு முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் உமறின் கனவில் தோன்றி, 'உமறே, பணத்தைப் பெரிதுகாணாதீர். நீர் பாடியபோதிலும் அதனை ஏற்றுக்கொள்ள வேண்டியவர் என்பெயர் கொண்ட அபுல் காசிம் ஆவார்' என்று தேன்கிடந்த செங்கனிப் பவள வாய் திறந்து மொழிந்து மறைந்தார்கள். உடனே உமறு திடுக்கிட்டெழுந்து அபுல்காசிம் மரக்காயரை அணு கிக் கண்ட கனவை விண்டனர். அதைக் கேட்டு அபுல் காசிம் களிபேருவகை கொண்டனர். பின்னர் விரைந்து உள்ளே சென்று தம்மனைவியார் சப்பாகுபீவியிடம் அச் செய்தியைக் கூறினர். அதைக் கேட்டு அம்மாதரசி தம் இருகைகளையும் விண்ணை நோக்கிய வண்ணம் ஏந்தி எல்லாப்புகழும் இறைவனுக்கே என்று நன்றி மொழி பகர்ந்து 'விரைவில் அரங்கேற்றம் நிகழ்த்துவதற்கு ஆவன செய்வீர்களாக' என்று அன்புக்கட்டளையிட்டார்கள்.

அபுல்காசிம் மரக்காயரும் அளவற்ற மகிழ்வுடன் வெளிப்போந்து புராண அரங்கேற்றத்திற்கான ஆயத் தங்கள் அத்தனையையும் செய்யத் துவங்கினார். ஊரில் பறை அறைந்து தம் உற்றார் உறவினர்களுக்கும் இம்மங்களச் செய்தியை மகிழ்வுடன் தெரியப்படுத்தினார். பற்பல ஊர் களுக்கும் பாங்குடன் ஓலையும், தூதும் அனுப்பி குறித்த

நாளில் கூடித்திரண்டு வந்து அரங்கேற்ற அவையை அலங் கரித்துத் தம்மையும் புலவரையும் கௌரவிக்குமாறு வேண் டிக்கொண்டார். தம் இல்லத்தின்முன் தண்பந்தல் போட்டு அதனை விதம் விதமாகச் சோடினை செய்து சொலிக்குமாறு செய்தார். ஆண்கள் அமர்வதற்கெனத் தனி இடமும் பெண்கள் அமர்வதற்கெனத் தனிஇடமும் அதில் அழ குற ஒதுக்கப்பட்டிருந்தன.

குறித்த நன்னாளில் குறிப்பிட்ட நல்வேளையில் நாய கத் திருமேனி அவர்களின் நவிலொணா அற்புத வரலாற் றுக் காப்பியமாகிய சீறா என்னும் சீரும் சிறப்பும் வாய்ந்த திருப் புராணத்தின் அரங்கேற்றம் அல்லாஹ்வின் பேரரு ளால் துவக்கமாகியது. சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பெய்தது போன்று இருந்த அவ்வரங்கேற்றத்தை அங்குக் கூடி இருந்த அனைவரும் கன்னற்பாகோ, கனிரசமோ, கற் கண்டாமோ எனவெண்ணி அள்ளி அள்ளி வாயால் அல்ல, காதால் உண்டனர். அதன் காரணமாக, அவர்களின் உட லும் உளமும் ஒருங்குசேர்ந்து இனித்தன. அமுதக்கடலில் மூழ்கிய அஞ்சிறை வண்டுகள் போன்று அவர்கள் ஆனார்கள்.

அபுல்காசிம் மரக்காயரின் வாழ்க்கைத் துணைவியார் சப்பாகுபீவி அவர்களும் தங்கள் இல்லத்தின் சாளரத்தரு கில் அமர்ந்து, உமறு தரும் ஒப்பற்ற இலக்கியத்தைச் சுவைத்துச் சுவைத்து அருந்திக் கொண்டிருந்தார்கள். அப் பொழுது தொட்டிலில் கிடந்த தங்களின் அருந்தவ மக னும் 'காசிம்' என்னும் அருமந்தச் செல்வன் விழித்து அழு ததும் ஓடோடிச் சென்று பிள்ளையைத் தூக்கிவந்து மடி மீதமர்த்திப் பாலூட்டினர் சப்பாகுபீவியார். அதன்பின் தாம் பிள்ளைக்குப் பாலூட்டுவதையும் மறந்து கவிஞர் தரும் காவியச் சுவையிலேயே சொக்கி இருந்தனர் அம் மாதரசி.

அப்பொழுது நபி அவதாரப்படலம் நிகழ்ந்துகொண் டிருந்தது. பாடுகின்றவர் அக்கவிகளைக் குயிலினும் இனி தாகப் பாடிவந்தார். புலவர் அவற்றைத் தேனினும் இனிதாக விளக்கி வந்தார். நானிலம் தழைக்கவந்த நாயகத்திருமேனி அவர்களை, வள்ளலென்றுதவிப் பெயர் நிலை நிறுத்தி வளம்தரும் புகழ் அபுல்காசீம் மரக்கா

யரின் உள்ளகம் நிறைந்த செம்மலர்ப் பதத்துச் செம் மலாம் எம்பெருமானை, வானவர்கோமான் விண்ணகம் எடுத்துச் சென்று, சுவனத்து ஆறுகளில் தலைமுழுக் காட்டி மீண்டும் மண்ணகம் கொணர்ந்து ஆமினு திரு மனையில் நுழைந்து, அங்கு வீற்றிருந்த சபா என்னும் பெண்மணியின் மடியின்மீது வைத்தனர் என்று கருத் துப் பொருந்திய கவியின் ஈற்றடியாகிய 'சபாதிரு மடி மிசை கொண்டார்' என்பதனை, பாடுகிறவர், 'சபாதிரு மடிமிசை கொன்றார்' என்று பாடியதும் உமறுப்புலவர் வெஞ்சினத்தால் தம் தொடையில் அடித்தனராம். இச் சமயத்தில்தான் சப்பாகு பீவியின் மடியில் இருந்த 'காசிம், என்ற குழந்தைக்குப் பால் புரையேறி இறந் ததாம்.

இச்செய்தியை அம்மாதரசி எவரிடமும் இயம்பவில்லை. இயம்பின் எல்லாம் கெட்டுத் தொலைந்துவிடும். அவை கலைந்து அரங்கேற்றம் பாழாகிவிடும். புலவர் பெருமா னுக்குக் கிடைக்கவிருக்கும் பரிசில்களுக்கும், பொற்கிளி களுக்கும் தடை ஏற்பட்டுவிடும் எனவெண்ணி மெது வாகக் குழந்தையைத் தூக்கிச் சென்று தொட்டிலி விட்டு வந்து முன்போல் அரங்கேற்றத்தைச் செவிம டுத்துக் கொண்டிருந்தார்கள்.

அரங்கேற்றமும் ஒருவாறு முடிவுற்றது. வந்திருந்த செல்வச் சீமான்கள் அனைவரும் புலவர் பெருமானுக்குப் பூமாலைகளும் புகழ்மாலைகளும் புனைந்து, கவிமழை பொழிந்த அவர்மீது பொன்மழை பொழிந்து கௌரவித்தார்கள். அதன்பின் அபுல்காசிம் மரக்காயரும் தங்களிடமிருந்த ஈரா யிரம் வெள்ளி நாணயங்களையும் தங்களின் வாழ்க்கைத் துணைவியாரின் உடைமைகளான ஈராயிரம் ரூபாய் பெரு மானமுள்ள தங்க நகைகளையும் ஓர் அழகிய வெள்ளித் தாம்பாளத்தில் வைத்து உவகையும் உவப்பும் ஒருங்கு சேர உமறுப் புலவர்பால் அன்பளிப்பு நல்கினர். அதனைப் பூத்த செந்தாமரை வதனத்துடனும் பூரித்த செங்கமல உளத்துடனும் உமறுப் புலவர் இரு கையேந்தி வாங்கி அதி லிருந்த நகைத் திரளை ஒரு கையால் எடுத்து, 'மச்சான், என் தங்கை சப்பாகு பீவி அவர்களை நாங்கள் தங்களுக்குக் கடி மணம் செய்துதந்தக்கால் காசும் தரவில்லை; கனகமாமணி

யும் போடவில்லை. ஆதலின் இந் நகைகளை எடுத்துச்சென்று என்னருந் தங்கை சப்பாகு பீவி அவர்களுக்கு என்னுளம் மகிழ்ந்து அளித்த அன்புப் பொருளாக, அருமைப் பரிசிலாக நல்குங்கள்' என்று அமுதமொழி பகர்ந்து பணத்தை மட்டும் எடுத்துக்கொண்டு பொன்னகையைப் புன்னகையுடன், தந்தவர் கையிலேயே தந்தனர். பின்னர் சப்பாகு பீவி அவர்கள் தங்களின் மாதவத்து மைந்தன் மன்னுயிர் நீத்த செய்தியை தம் நாயகரிடம் நவின்றார்கள். அதைக் கேட்டு அபுல்காசிம் என்னும் அருங்குண வள்ளல் அவையோர் அனைவருக்கும் இந்த அவச்செய்தியைத் தெரியப் படுத்தி தம் ஒரே திருமகனின் வெற்றுடலை நல்லடக்கம் செய்தனர். இவ்வாறு அரங்கேற்றம் முடிவுற்றது. இதன் பின் உமறுப்புலவர் சீருடனும் சிறப்புடனும் தம் தாயகமாம் எட்டயபுரம் திரும்பினர். அங்குச் சென்று சில காலம் வாழ்ந்திருந்து பின்னர் மண்ணகம் துறந்து விண்ணகம் புக்கினர்.

உமறுப் புலவர் சீறாவென்னும் சீரிய காப்பியத்தைத் துவங்கி அதனை உறணிக்கூட்டத்தார் படலம்வரைமுடித்து, அரங்கேற்றும்வரை உலகிற்கொரு அருட்பெருங் கொடையாகப் போந்த முகம்மதெங்கள் நபிகள்கோமான் (ஸல்) உமறுப் புலவரின் உடல் குளிர, உளங் குளிர, கண் குளிர ஒரு நூறுதடவை அவருடைய கனவில் காட்சி நல்கி, அவருக்கு அறிவுரைகளும் ஆலோசனைகளும் நல்கியதாகவும், காட்சி காணும் நாடோறும் உமறுப் புலவர் ஒரு மண் கலத்தில் ஒவ்வொரு கல்லாகப் போட்டு வந்ததாகவும் அரங்கேற்றம் முடிந்து அவற்றை எண்ணிப் பார்க்குங்கால் அதிலே ஒருநூறு கற்கள் ஒருங்கே இருந்தனவென்றும் கூறுவர்.*

* காயற்பட்டினம் பீர்முகம்மது அவர்களின் குமாரர் மகுதூமுகம்மதுப் புலவர் அவர்கள் தாம் பாடிய மதுரவாக்கிய கீர்த்தனுரஞ்சிதம் என்ற நூலில் பின் வருமாறு பாடியுள்ளதைக் காண்க.

செந்தமிழாலே சீறா சிறப்புடன் பனுவல்செய்தே
உந்திய புகழ்பெற் றோங்கும் உமறெனும்
புலவோர்க்(கு) அன்பாய்

உமறுப் புலவர் சீருப் புராணத்தில் அண்ணல் நபியவர்களின் வரலாறு முழுவதையும் பாடவில்லை. விலாதத்துக் காண்டம், நுபுவ்வத்துக் காண்டம், ஹிஜ்ரத்துக் காண்டங்களில் தொண்ணூற்று இரண்டுபடலங்களையும், ஐயாயிரத்து இருபத்து ஏழு செய்யுட்களையும் கொண்ட அப் பெரும் காப்பியம் உறணிக்கூட்டத்தார் படலத்துடன் திடுதிடுப்பென நிற்கின்றது. அதற்கான காரணம் யாதொன்றும் தெரியவில்லை; யாதென்றும் விளங்கவில்லை. அப்பாற்பட்ட வரலாற்றை அவரது மகன் வாவணப் புலவரோ, அல்லது 'வாவணப் புலவர் தருமொரு மகவெனத் தரணியிலுதித்த களஞ்சியப் புலவரோ' காவியமாக இயற்றவில்லை.

எழுத்து முதல் பஞ்ச இலக்கணத்தை உட்பதித்து
வழுத்தும் சீருவுரையை வாகாய்க் கவிதை
[சொல்வார்
காரணப் பேரரான கவிக் களஞ்சி நன்னபி மேற்
பூரணத் தா(ல்) அம் மானைப் போற்றிப் புகல்வேனே.

என்று நபி அவதார அம்மானையை கி. பி. 1713—ஆம் ஆண்டில் பாடியதுடன் கவிக்களஞ்சியப் புலவர் என்ற அவருடைய பேரர் மனநிறைவு பெற்றுவிட்டார்.

பின்னர் இற்றைக்கு இருநூற்று முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் ஹிஜ்ரி 1145-ல் தேங்கமழ்ச் சோலைத் திருநகர் காயலில் பனீஇஸ்ராயீல் என்னும் பண்புறு குலத்தில் தோன்றிய பனீ அஹ்மது மரக்காயர் என்னும் புலவர்மணி எஞ்சிய பகுதிகளை 39 படலங்களாக 1829 விருத்தப் பாக்களில் இனிதே பாடி முடித்தனர். அது இன்றளவும் 'சின்னச் சீறு' என்ற பெயருடன் சிறப்பாக வழங்கப்பட்டுவருகிறது. அதிலுள்ள பாடல்கள் யாவும் இனிமையும், கவியழகும், கருத்தாழமும் உள்ளனவாகவுள்ளன. இந்நூலில் புலவர், பொருந்தா உவமைகளையோ வேண்டா வர்ணனைகளையோ

தந்தைபோல் வந்து நூறு தரிசனம் கொடுத்த
[பான்மை
அந்தலை தினத்தி னோர்வீர் அகுமது நபியுல் லாவே.

வேண்டுமென்றே கையாளவில்லை. உள்ளதை உள்ளவாறே வர்ணித்திருப்பது மிகவும் பாராட்டத்தக்கது. பாலையைப் பாலையாக வர்ணித்துள்ளார்; சோலையைச் சோலையாகவே வர்ணித்துள்ளார். மதினா நகர் புகும் ஒரு கூட்டத்தாரைப் பற்றிக் கூறுங்கால்,

'பானுவும் கடக்க அஞ்சும், பாலையும் கடந்து
[செம்பொன்
மேனிலை மதீன மென்னும் வியன்பதி இடத்தில்
[வந்தார்'

என்று கூறி, பரிதியும் கடக்கப் பயப்படும் அத்துணைக் கொடிய பாலைவனம் என்று அந்தப் பாலைவனத்தை வர்ணித்திருப்பது போற்றத்தக்கதாகும்.

அவருடைய வர்ணனைத் திறனுக்கு மற்றொரு சான்று கூறுகிறேன், கேளுங்கள்.

ஆழிசூழ் உலகில் விழிபோல் மிளிர்ந்த கோட்டை வாயிலில், மேகம் குடைபிடிக்கும் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் நுழைந்தக்கால் மாலை நேரம் குடை பிடித்ததாம்! இருமருங்கும் வெண்சாமரம் வீசப் பட்டதாம். சோலைகள் சூரியனை மறைத்து நிழல் நல்கியதாம். இக் கருத்தினைப் பின்னிப் பிணைந்து பின்வரும் அழகிய கவி ஒன்றை வடித்தெடுக்கிறார், புலவர்.

மாலை வட்டக்குடை கவிப்ப மருங்கிற் கவரி
[பணிமாற
ஆல வட்டக் கொடிச்சோலை அருணன் மறைத்து
[நிழல்காட்ட
வேலை வட்டப் பூமகட்கு விழிபோல் மிளிரும்
[மதில்வாயில்

நீல வட்ட முகில் கவித்தோர் நெருங்கும்
[பதாதியுடன் புகுந்தார்

இவைபோன்ற அருமை யருமையான வர்ணனைகளை அள்ளிச் சொரிந்து இக்காப்பியத்தை இயற்றியுள்ளார் கவிஞர்.

பின்னர் அவருக்கு ஏறக்குறைய தொண்ணூறு ஆண்டு கட்குப் பின் ஹிஜ்ரி 1236-ல் காயலார் தந்த நாயகப்புலவர் செய்கப்துல்காதிர் நெய்னார் லெப்பை ஆலிம் அவர்கள் தாங்கள் இயற்றிய புத்ஹூஷ்ஷாம் என்னும் பெரும் காப்பியத்தில் முதற் காண்டமாக முகம்மதியா காண்டம் என்பதனை நபிகள் நாயகம் அவர்களின் அரசுரிமைப் படலத்திலிருந்து அவர்கள் பொன்னுலகடைந்த வரை பதினொன்று படலங்களில் 965 திரு விருத்தங்களாகப் பாடினர்.

பின்னர் இற்றைக்கு சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் மொன்னுமுகம்மது காதிரி சத்தாரி என்பவர் நாயகத் திருமேனி அவர்களின் அரசுரிமைக் காலம் பனீ அஹ்மது மரக்காயர் அவர்களாலும் செய்கப்துல்காதிர் நெய்னார்லெப்பை ஆலிம் புலவர் அவர்களாலும் இரு பிரிவாகப் பிரிக்கப்பட்டிருப்பதை ஒன்றுகச் சேர்த்து அவற்றில் இல்லாத சில வரலாறுகளைத் தாமே பாடியும், சேர்த்து சீறுப்புராணம் இரண்டாம் வால்யூம் என்ற பெயருடன் ஒரு நூல் வெளியிட்டார். அதிலே சில படலங்கள் பனீஅஹ்மது மரக்காயருடைய சின்னச் சீறுவிலுள்ளவை; சில படலங்கள் செய்கப்துல்காதர் நைனார் லெப்பை ஆலிம்புலவர் அவர்களுடைய புத்ஹூஷ்ஷாமில் உள்ளவை; சில படலங்கள் மொன்னுமுகம்மது காதிரி சத்தாரியுடையவையாகும். இவ்வாறு உமறுப் புலவர் விட்டுச்சென்ற குறை இம் மூன்று புலவர் பெருமக்களாலும் நிறைவு செய்யப்பட்டது.

உமறுப்புலவர் இயற்றிய ஒப்பற்ற சீறுக் காப்பியமானது பல்லாண்டுகளாக அச்சில் வராது பல்லோராலும் பலபடஎழுதப்பட்டு வழுசில கலந்திருந்தன. இதனை உணர்ந்த காயல்பட்டினம் உவைசு நயினார் லெப்பை என்பவர் செய்கு அப்துல்காதிர் நெயினார் லெப்பை ஆலிம் அவர்களை அணுகி

எல்லோருக்கும் நன்மை பயக்கும்வண்ணம் சீறுவென்னும் சீரிய காப்பியத்தைப் பரிசோதித்துத் துளக்கற அச்சில் துலக்கப் பதித்து விளக்கவேண்டுமென வேண்டிக்கொண்டனர். பாடினோர் அன்பினையும் படிப்போர் பெறும் பயனினையும் நினைந்து அதற்கு இயைந்தனர் அன்னார். அதன்படி அவர்கள் பற்பல ஊர்களிலிருந்த சீறாப் புராணக் கையெழுத்துப் பிரதிகளைத் தருவித்து ஒன்றோடொன்று வைத்துப் பரிசோதித்து வழு நீக்கி ஒழுங்குறத் திருத்தி அச்சிற் பதிப்பித்தனர். அவ்வாறு அச்சிற் பதிப்பித்த பின்னர் கொடுத்துவிட்ட புத்தகம் மழை எப்பொழுதும் பெய்து கொண்டுள்ள முகம்மது பந்தர் ஹஸன்னைனார் மரக்காயரின் தோன்றல் தோன்றல் ஒலிசாகிபிடம் உள்ளது என்றும் எவரும் அதைப் பார்க்க விரும்பினால் பார்க்கலாம் என்றும் சீறாப் புராணத்தின் முகவுரையில் செய்கப்துல்காதிர் னைனார் லெப்பை ஆலிம் புலவரவர்கள் ஒரு செய்யுளில் கூறியிருக்கின்றார்கள். அந்நூலைப் பார்க்க அவாவுற்றே நான் முஹம்மது பந்தர் சென்றேன். ஆனால் அவர்கள் கூறியவண்ணம் அங்கு நான் தங்கியிருந்த இரண்டு நாட்களும் மழை பெய்ததேயொழிய அப் பிரதி கிடைக்கவில்லை. ஒலிசாகிபின் வழித் தோன்றல்களோ அல்லது அபுல்காசிம் மரக்காயரின் வழித்தோன்றல்களோ அங்கு ஒருவரேனும் இல்லை. எனினும் அவ்வூர் மு. கு. முகம்மது அலி மரக்காயர் அவர்களிடம்.சீறாப் புராணம் கையெழுத்துப் பிரதி ஒன்று உள்ளது. அதுதான் செய்கு அப்துல்காதிர் நெய்னார் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் குறிப்பிடும் நூலோ என்பதற்கு அதில் எத்தகைய ஆதாரமுமில்லை. அது இற்றைக்கு 225 ஆண்டுகட்கு முன் ஹிஜ்ரி 1154—ல் முகம்மது பந்தர் சையிது மரக்காயர் மகன் செய்கு நெய்னா மரக்காயரால் எழுதப்பட்டிருக்கிறது. அது ஒற்றுக்களில்லாத, மணிபோன்ற எழுத்துக்களால் எழுதப்பட்டு இன்றளவும் மங்காது காட்சி வழங்குகின்றது. அந் நூலின் முகப்பில் "இதனை எடுத்துப் படித்தவர்கள் பிழையுண்டென்றறிய வல்லபமிருந்து பிழையறிந்தால் பிழை திருத்திக் கிதாபுக்குரியவர்வசம் சேர்த்துவிட வேண்டியது" என்றும் பொறிக்கப்பட்டுள்ளது.

இந்நூல் 4969 செய்யுட்களுடன் முடிந்துள்ளது. இறுதியில் 32 தாள்கள் வெறுமனே விடப்பட்டிருக்கின்றன. 'திருவுருவா யுணருருவாய்' என்று துவங்கும் அச்ச

டித்த சீறாப் புராணத்தின் காப்புச் செய்யுள் இதில் காணப் பெறவில்லை. இதன் காரணமாகவும் அச் செய்யுளின் கரும் பாகத்தைக்கருதுமிடத்தும்அச்செய்யுள் இதனைப் பதிப்பித்த செய்கு அப்துல்காதிர் நெய்னார் லெப்பை ஆலிம் புலவரவர் களால் இயற்றப்பட்டிருக்கலாம் என்று எண்ண இடமிருக் கிறது. கடவுள் வாழ்த்துப் படலத்துக்கு இதில் சபை அலங்காரப் படலம் என்று பெயர் நல்கப்பட்டுள்ளதும் கவ னிக்கத்தக்கது.

இவ்வாறு சபை அலங்காரப் படலத்துடன் துவங்கி வள் ளல் நபியவர்களின் வான்புகழ் வரலாற்றைச் சுருங்கிய சொல்லில் விரிந்த பொருளை வைத்து, தெரிந்த மொழியில் செறிந்த நயத்துடன் மயக்கமில்லா விளக்கத்துடனும் மதி யில் படும்வண்ணமும், செம்பாகமாய்ச் சமைத்து செவிக்கு இன்பமாகவும் சிந்தைக்கு விருந்தாகவும் அமைத்து, அறம் பொருள், இன்பம், வீடு ஆகிய அனைத்தும் அடங்கிய திறம் பெறும் காப்பியமாய் உறணிக் கூட்டத்தார் படலம்வரைச் செய்தளித்த, உமறுப் புலவர் என்று ஓங்கிய நாவலரின் பூத மேனியானது இன்று எட்டயபுரத்தின் பள்ளிவாயிலை ஒட்டி யுள்ள மேற்புறத்தில் அமைந்திருக்கும் கட்டடத்தில் அடங் கிக் கிடந்தபோதினும் அங்கு எட்டயபுர மன்னரால் விளக்கு எரிக்கப்பட்டபோதினும் அவருடைய புகழ்மேனி விண்ணும் மண்ணும் வியந்தேத்தும்வண்ணம் ஒளிமயம் பெற்று அமரத்துவம் எய்திவிட்டது. அவரியற்றிய சீறாப் புராணம் பார காவியங்களின் வரிசையைச் சேர்ந்து பாரினை அலங்கரித்து மிளிர்கின்றது. முஸ்லிம் தமிழ்ப் புலவர் என் றால் உமறுப் புலவர், முஸ்லிம் தமிழ்ப் புராணம் என்றால் சீறாப் புராணம் என்று மக்கள் எண்ணும்வண்ணம் அவரின் அழகிய பெயரும் அவரியற்றிய அமுதமூறும் காவியக் கோவையும் மக்களின் உள்ளத்திலே அழியா இடம் பெற்று விட்டன. அவரும் அழியாப் பெருவாழ் வெய்திவிட்டார். வாழ்க அவரின் திருப்பெயர்! வாழ்க அவரின் பெரும் காப் பியம்!!

# சேகனாப் புலவர்

வங்கத்திலிருந்து ஒரு மரக்கலம் பாய் விரித்து வங்காள விரிகுடாவைக் கீறிப் பிளந்து தென்திசை நோக்கி வெகு வேகமாக ஓடிக்கொண்டுள்ளது. அதிலே ஓர் அழகுசால் செல்வச் சீமான்—வணிகப்பெருமகனார் ஒருவர் வீற்றிருக்கின்றார். அவருடைய கையிலே கருந்தனம் போன்று ஒரு சிறு நூல் மிளிர்கின்றது. அதிலே அரபி எழுத்துக்களும் எண்களும் அணிஅணியாகப் பொறிக்கப்பட்டுள்ளன. கட்டங்களும் வட்டங்களும் காட்சி வழங்குகின்றன. அதனை உற்று நோக்கின் அது ஒரு விண் நூல் போன்று தோன்றுகிறது. ஆம், அது ஒரு விண் நூல்தான். அந்த விண்நூலை ஒரு கணம் கண்ணால் பார்ப்பதும் மற்றொரு கணம் விண்ணை நோக்குவதுமாக அந்த வணிகப் பெருமகனார் வீற்றிருக்கின்றார். அப்பொழுது திடீரெனச் சுழற்காற்றுச் சுழன்று சுழன்று வீசத்துவங்கியது. அதே பொழுதில் அந்த வணிகப் பெருமகனாரின் உள்ளத்திலும் எண்ண அலைகள் அகோரமாக அடிக்கத்துவங்கின. அவருடைய முகத்தில் ஏக்கமும், துயரமும் நெளிந்தன. வதனமும் நுதலும் சுருங்கிச் சுளித்தன.

'என்ன, தண்டல்! வெள்ளி இரவிற்குள் நாம் காயலம்பதிக்குச் சென்றுவிட இயலுமா?' என்று வினவினார் அவர். இம்மொழிகள் அவருடைய உள்ளத்திலிருந்து துன்பப் பெருமூச்சுடன் வெளிவந்தன.

'முதலாளி! முடியும் என்ற நம்பிக்கையுடன் தான் புறப்பட்டோம். ஆனால் இறைவனின் திருவுளம் வேறு மாதிரியல்லவோ இருக்கின்றது போன்றுள்ளது' என்று கூறினான் அவன்.

அவல் இவ்வாறு கூறி வாய்மூடுவதற்குள் மலைநிகர்த்த பெரு அலையொன்று அக்கப்பலின்மீது சீறிச் சினந்து பாய்ந்தது. அதனுடைய வெஞ்சினத்தைத் தாங்கவோ அல்லது எதிர்த்து நிற்கவோ இயலாது நாவாயானது நடுக்கடலில் நாதியற்ற நிலையில் அல்லோல கல்லோலப் பட்டது. 'உன்னை மேற்கொண்டும் செல்லவிடாது இக் கடலிலேயே மூழ்கடித்து விடுவேன்' என்று கூறுமாப் போன்று அலைத்தொகுதிகள் அதன்மீது மோதிமோதி எதிர்த்து நின்றன. 'ஆனால், நீ எண்ணிக்கொண்டுள் ளது போன்று நான் அவ்வளவு இளைத்தவனல்ல' என்று சொல்வது போன்று மரக்கலம் ஆடுவதும் சாடுவதுமாக அசைந்து கொடுத்துக் கொண்டிருந்தது. ஆனால் அந்த மரக்கலத்தில் உள்ளவர்களோ நிமிடத்திற்கு நிமிடம் செத் துச் செத்துப் பிழைத்துக் கொண்டிருந்தார்கள்.

'தண்டல்! சுழற்காற்றோ தானும் விடுவதுபோன்று தெரியவில்லை, நம்மையும் போகவிடும் போன்றுதோன்ற வில்லையே' என்றார் வணிகப் பெருமகனார் வருத்தத்துடன் தண்டலை நோக்கி.

'ஆம். முதலாளி, அப்படித்தான் எனக்கும் தோன்று கிறது. நானும் எத்தனையோ ஆண்டுகள் நடுக்கடலில் நாவாய் செலுத்திச் சென்றுள்ளேன். ஆனால் இப்படிப் பட்ட இடுக்கணில் நான் எப்பொழுதுமே மாட்டிக் கொண்டதில்லை. இஃது என்னவோ ஊழிப் பெருங்காற்று போன்றல்லவோ உள்ளது' என்று கூறினான் அவன்.

இப்பொழுது அந்த வணிகப் பெருமகனின் உள்ளத்தில் எண்ணத் தொலையா கவலை எண்ணங்கள் உருண்டோடின. அவருடைய நெஞ்சம் மருண்டது.

'என்ன, இஃது இறைவனின் பெரும் சோதனை போன் றல்லவோ உள்ளது. சரி, இறைவன் செய்வதெல்லாம் நன் மைக்காகவே இருக்கும். அதோ 'ஸஆதத் பந்தர்' என்ற கோவளம் தெரிகின்றது. அங்குத்தான் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களின் திருத்தோழர்களில் ஒருவரான தமீம் அன்சாரி என்பவர்கள் அடங்கப்பட்டுள் ளார்கள் என்று கேள்விப்பட்டுள்ளேன். அவர்களின் அடக்க

இடத்தைக் காணவேண்டுமென்றும் எனக்கு நீண்டநாள் அவா. எனவே விடுகப்பலை அதனை நோக்கி' என்று கூறினார் அவர். அப்பொழுது இருள் கௌவிக்கிடந்த அவருடைய வதனவானில் திடீரென்று நம்பிக்கை மின்னல் பளிச்சிட்டு மறைந்தது தண்டலின் கண்களிலும் தென்பட்டது. அவனும் கப்பலைத் திருப்பி கோவளத்தை நோக்கிச் செலுத்தினான். விரைவில் கோவளமும் வந்து சேர்ந்தது.

கோவளம் வந்து இறங்கிய அந்த வணிகப் பெருமகனார் நேரே பள்ளிவாயிலுக்குச் சென்று, விட்ட தொழுகைகளைத் தொழுதார். 'இறைவனே! எத்தனையோ ஆண்டுகளாகக் காத்திருந்த என்னை இப்படியா நீ சோதிக்க வேண்டும். ஏன்தான் எனக்கு விண்கலையைப் போதித்து என்னைக் கொல்லாது கொல்கின்றாயோ அறியேன். அடியார்க்கு அடியானாகிய என்னை இப்படித்தானா ஆளும் இறையாகிய நீ சோதிப்பது? வெள்ளி இரவு இத்தனை மணிக்கு இணையற்ற அந்த விண்மீன் வானகம் தோன்றுங்கால் எனதாயகம் புக்கி என் இல்லாளுடன் கூடி இவ்வுலகும் அவ்வுலகும் போற்றும் ஏற்றமிகும் எழில் மகவைப் பெறவேண்டுமென்று என் நெஞ்சத்திலுற்ற நெடுநாள் எண்ணத்தை நீ அறிவாய்தானே. அவ்வாறு இருக்கும்பொழுது எனை ஏன் நீ இவ்வாறு சோதிக்கிறாய். நானோ உன் அடியாரில் சிறியேன். உன்னுடைய அளப்பரும் சோதனையை என்னால் ஒருகணமும் தாங்க இயலாது இறைவனே. ஆதலின் என்மீது அருள்கூர். என் இல்லாளை நான் அடைய இயலாத போதினும் இங்காவது எனக்கு ஓர் இல்லாளைத்தா. என் நெடுநாள் கனவை நனவாக்கிவை' என்று கல்லும் கரைந்துருகும் வண்ணம் கண்ணீர் சிந்தி இறைஞ்சினார். அதன்பின் வாடிய வதனத்துடன் பள்ளி முகப்பில் வந்து அமர்ந்திருந்தார்.

அப்பொழுது சற்றுத் தொலைவில் ஆடிஆடி ஒரு வயோதிகர் பள்ளிவாயிலை நோக்கி வந்து கொண்டிருந்தார். பள்ளிவந்த அவர் நண்பகல் தொழுகையை நிறைவேற்றிவிட்டு, அங்கு வீற்றிருந்த வணிகப் பெருமகனை அணுகி 'தாங்கள் எந்த ஊர்? வந்த அலுவல் என்னவோ' என்று வினவினார்.

என் பிறந்தகம் காயலம்பதி; கல்வாணிபத்தின் பொருட்டு கல்கத்தா சென்றுவிட்டு ஊர் திரும்புங்கால்

என் கப்பல் சூறுவளியில் சிக்கித் தவித்தது. எனவே இங்குக் கரை இறங்கினேன். என்பெயர் ஹபீபு முகம்மது லெப்பை என்பதாகும்' என்று கூறினார் அந்த வணிகப் பெருமகன். அதன்பின் அவரையே நோக்கி, 'தாங்கள் யார்' என்று வினவினார்.

'எனக்கு இந்த ஊர்தான். என் மூதாதையரெல்லாம் இந்த ஊரைச் சேர்ந்தவர்கள்தாம். நான் இங்கு மீன் பிடித்து உயிர் வாழ்ந்து வருகிறேன்' என்றார் அந்த வயோதிகர். அதன்பின் அவர் அந்த வணிகப் பெருமகனை நோக்கித் தாங்கள் வாடிய வதனத்துடன் வீற்றிருப்பதற்கான காரணம் என்ன? கப்பல் கவிழ்ந்து விட்டதோ' என்று கேட்டார்.

'அப்படி ஒன்றுமில்லை; கப்பல் கரையிலேதான் உள்ளது. எனினும் என் கவலையைத் தங்களிடம் கூறின், அதனைத் தீர்த்து வைப்பீர்களா' என்றார் அந்த வணிகர்.

'முடிந்தால், தீர்த்து வைக்கின்றேன்' என்று மதுர மொழி பகர்ந்தார் அந்த வயோதிகர்.

வணிகர் சற்றுச் சிந்தித்தார். வயோதிகரின் வதனத்தை ஓரிரண்டு முறை ஏறிட்டுப் பார்த்தார். பின்னர் அவரின் தன்மையை அறிவதற்காக அவருடன் பற்பல செய்திகள் பற்றிப் பாங்காகப் பேசிக் கொண்டிருந்தார். அதன்பின் அவரை நோக்கி, 'நல்லது; எனக்கு இங்குத் தங்களால் ஒரு மணம் முடித்து வைக்க இயலுமா?' என்று வினவினார்.

வயோதிகர் சிறிது நேரம் ஆழ்ந்த சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். திடீரென அவருடைய கண்கள் ஒளிர்ந்தன; முகம் மலர்ந்தது. 'எனக்கு ஒரு கண்மணி மகள் உண்டு; கற்பெலாம் திரண்டு உருக்கொண்டாற் போன்ற கன்னிகை அவள். அவளைத் தாங்கள் விரும்பின் தங்களுக்குக் கடிமணம் செய்து வைக்கிறேன்' என்று கனிந்த மொழி பகர்ந்தார் அந்த வயோதிகர்.

அவருடைய வாயிலிருந்தும் இம்மொழிகள் வெளிவந்தனவோ இல்லையோ அந்த வணிகரின் வாடி வதங்கி இருந்த முகம் அப்பொழுதலர்ந்த செந்தாமரையையும்

வென்று நின்றது. 'நல்லது, இதோ இந்தப் பணப்பையை எடுத்துச் சென்று திருமணத்திற்கான எல்லாப் பொருள் களையும் நிரப்பமாக வாங்கி எல்லா ஏற்பாடுகளையும் துரித மாகச் செய்யுங்கள்'' என்று அன்புக் கட்டளை பிறப்பித்தார் அந்த வணிகர்.

வெள்ளி இரவு வதுவையும் வரிசையுடன் நிகழ்வுற்றது. ஹபீப் முஹம்மது லெப்பை கரையற்ற பெரும் மகிழ்வில் மூழ்கிக் குளித்தார். 'எல்லாப் புகழும் இறைவனுக்கே. எல்லாப் புகழும் இறைவனுக்கே' என்ற நன்றி மொழிகள் அவருடைய நாவில் மகிழ்வுடன் நர்த்தனமாடின.

அங்குச் சின்னாட்கள் தங்கியிருந்தபின் ஒருநாள் அவர் தம் மனைவியை நோக்கி 'உன் மணிவயிற்றில் மாணிக்கஆண் குழந்தை ஒன்று தரித்துவிட்டது. அக் குழந்தை பிற்காலத் தில் மானிலம் தழைக்கவந்த மகானாக விளங்கும். அதனு டைய ஒளிநுதலில் மகரம் படுத்திருப்பது போன்ற மரகத மச்சமொன்று அழகுடன் காட்சி வழங்கும். அக் குழந் தைக்கு ஷெய்கு அப்துல்காதிர் நெய்னார் லெப்பை என்னும் அழகிய பெயரிட்டு அருமை பெருமையுடன் சீராட்டிப் பாராட்டிச் சிறப்பாக வளர்த்துவா. உன் வாழ்க்கைக்கும், அக் குழந்தை வளர்ப்புக்குமாக நிலபுலன்கள் வாங்கிவைத் துள்ளேன். அவற்றிலிருந்து வரும் வருவாயை வைத்துக் கொண்டு மகிழ்ச்சியுடன் வாழ்ந்துவருவாயாக. நான் இப் பொழுது வாணிபத்தின் பொருட்டு வெளியூர் செல்கிறேன்; திரும்பி வந்தாலும் வரலாம்; வராவிட்டாலும் இல்லை. ஒரு வேளை வராவிட்டால் இதோ என் முகவரியை வைத்துக் கொள். குழந்தை வளர்ந்து பெரிதாகியதும் அதனை என் னிடம் சேர்ப்பித்துவிடு' என்று கூறினார். மனைவி கண்ணீர் விட்டார். 'தங்களின் திருவுளம் என் தலைமேற் கொண் டேன்' என்று கூறினார்.

அவர் கூறியவண்ணமே பத்து மாதங்கள் பறந்தோடிய தும் ஆண் மகவு ஒன்று பிறந்தது. அதனுடைய அழகுசால் நெற்றியில் மீன் போன்ற மச்சம் ஒன்று மின்னிக்கொண்டி ருந்ததை அன்னையின் கண்கள் கண்டதும் அவருக்கேற்பட்ட

மகிழ்வுக்கு அளவில்லை. குழந்தையைக் கண்ணே போற் காத்து பொன்னே போற் பேணி வளர்த்துவந்தார். பருவம் அடைந்ததும் தம் அருமை மகனைப் பள்ளிக்கு அனுப்பி வைத்தார். ஆனால் பள்ளி சென்ற அவருக்கோ சரியாகக் கல்வி வரவில்லை. எனவே, மற்ற மாணவர்களெல்லாம் அவரை இழித்துரைக்கத் தொடங்கினர். இதைக் கண்டு அன்னை இலவுகாத்த கிளிபோல் ஆனார். இட்டமுட்டை கூழ்முட்டையாகிவிடுமோ என்றும் அஞ்சினார்.

ஒருநாள் மைந்தர் பள்ளியிலிருந்து அழுதுகொண்டு இல்லம் வந்தார். அதைக் கண்ட அன்னை, 'கண்மணியே! ஏன் அழுகின்றாய்? ஆசிரியர் அடித்தாரோ' என்று ஏக்கத்துடன் வினவினர்.

'இல்லை, அம்மா, பையன்களெல்லாம் என்னை எள்ளி இகழ்கின்றார்கள்; கேலி செய்து நகைக்கின்றார்கள். இன்று பள்ளிக்கு ஆசிரியரின் நண்பர் ஒருவர் வந்தார். அவர் பையன்களையெல்லாம் நீங்கள் யார், உங்களின் தகப்பனார் பெயர் என்னவென்று விசாரித்தார். என்னிடமும் அவ்விதமே விசாரித்தார். நான் என்னுடைய தகப்பனாரின் பெயர் யாது என்று எனக்குத் தெரியாது என்று கூறினேன். அவ்வளவுதான்; பையன்களெல்லாம் 'கொல்'லென்று நகைத்தார்கள். பள்ளி விட்டு வெளியே வரும்பொழுது எல்லோரும் என்னைச் சூழ்ந்து நின்று 'தகப்பன் பெயர் தெரியாதவன், தகப்பன் பெயர் தெரியாதவன்' என்று கூச்சலிட்டுவிட்டு ஓடிவிட்டார்கள். ஒருவன் பின்புறமாக வந்து 'தகப்பன் பெயர் தெரியாதவனுக்குப் படிப்பு வேறு? விளக்குமாற்றுக் கட்டுக்கு வெள்ளிக் குஞ்சமா' என்று கூறி ஓங்கி ஓர் அடி அடித்துவிட்டு ஓடிவிட்டான். அம்மா, இனிமேல் நான் பள்ளிக்குச் செல்லவே மாட்டேன். என் தகப்பனாரைக் காட்டு! அவர் எங்கே உள்ளார்? அவரின் பெயர் என்ன' என்று சிணுங்கி அழுதார்.

மைந்தன் அழுவதைத் தாங்க இயலாது அன்னையின் கண்களிலிருந்தும் நீர் சுரந்து மாலை மாலையாகக் கன்னங்களிலே உருண்டோடியது. அவரின் உள்ள ஆழத்திலிருந்து சூடான நீண்ட பெருமூச்சு வெளிவந்தது. உள்ளே விறுவிறுவென்று சென்று பெட்டியைத் திறந்து தம் கணவர் தம்

மிடம் தந்துசென்ற அந்தத் தாள்துண்டை எடுத்துவந்து, 'மகனே, அழாதே. அவர்கள் என்னவோ கூறிவிட்டுப் போகிருர்கள். அதைப்பற்றிக் கவலைப்படாதே. இதைப் படித்துப்பார்' என்று கூறினுர்.

மகன் அதனைக் கையில் பெற்றதும் அவருடைய கண்கள் ஒளி பெற்றன. முகம் மலர்ந்தது.

ஹபீப் முகம்மது லெப்பை,

இரத்தின வணிகர்,

மஹ்தூம் தெரு,

காயல்பட்டினம்.

என்று அவருடைய வாய் கம்பீரமாகப் படித்தது. அதைக் கேட்டதும் அன்னை தம் மகனைப் பார்த்து, 'மகனே! இது தான் உன் தந்தையின் முகவரி' என்று கூறினுர்.

அவ்வளவுதான். 'அம்மா, அப்பாவை நான் இப் பொழுதே காணவேண்டும். வா, போவோம்' என்று கூறி அழுதார் மைந்தர்.

'மகனே, காயல்பட்டினம் என்ருல் மதரஸா பட்டணம் என்று எண்ணிக்கொண்டாயா? அது இங்கிருந்து எத்த னையோ நூறு மைல்களுக்கு அப்பாலிருப்பதாகவல்லவோ பேசிக்கொள்கிருர்கள்' என்று சொன்னுர் அன்னை.

'எத்தனை நூறு மைல்கள் இருந்தால்தான் என்ன, வா, புறப்படுவோம்' என்று கூறி அழுதார் மைந்தர்.

அவருக்கு ஆறுதல் கூறி, அவரின் அழுகையை நிறுத்த அன்னைக்குப் பெரும்பாடாய்ப் போய்விட்டது. ஆனுல் தம் மைந்தர் தந்தையின் ஏக்கமாகவே இருந்து நாளடை வில் துரும்பு போன்று மெலிந்துகொண்டு வருவதை அன்னை யின் கண்கள் கண்டு கலங்கின. எனவே, அங்கு தங்களுக் கிருந்த உடைமைகளையெல்லாம் விற்று, முதலாக்கிக் கொண்டு ஒருநாள் அவர் தம் மகனைப் பார்த்து, 'மகனே! வா, நாம் உன் தந்தையைப் பார்க்கக் காயல்பட்டினம்

போவோம்' என்று கூறிக் கிளம்பினர். அம்பொழுது மக னின் உள்ளம் துள்ளி விளையாடியது.

* * *

காயல்பட்டினம், மஹ்தூம் தெருவிலுள்ள ஹபீபு முகம்மது லெப்பையின் வீட்டில் அவருடைய மூத்த மனைவி மட்டும் இருந்து தொழுதுகொண்டிருந்தார்கள். ஹபீபு முகம்மது லெப்பை வாணிபத்தின் பொருட்டு வெளியூர் சென்றிருந்தார். அப்பொழுது ஒரு சிறுவர் ஆவல் நிரம்பிய கண்களுடன் மெதுவாகக் கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்தார். நுழைந்ததுதான் தாமதம், அவரு டைய கண்கள் தூண்டித் துருவி நோக்கின. ஒரு நங்கை நல் லாள் மட்டுப் கூடத்தில் நின்று தொழுதுகொண்டிருந்தது அவருடைய கண்களில் தென்பட்டது. அவர் தொழுது முடியும்வரை அச் சிறுவரும் சந்தடி செய்யாது அங்கேயே காத்து நின்றார். தொழுது முடிந்ததும் விறுவிறுவெனச் சென்று அவரின் மடிமேல் போய் அமர்ந்துகொண்டார். இதைக் கண்டதும் அம் மாதரசிக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

இத்துணைத் துணிச்சலுடன் வந்து தம் மடிமீது உரிமை பாராட்டி உட்கார்ந்துள்ள இந்தச் சிறுவன் யார் என்று உற்று நோக்கினார் அந்த மாதரசி. அச் சிறுவன் புன்முறு வல் பூத்தான். அதைப் பார்த்தால் தம் கணவரின் முகத்தில் அரும்பும் நகை போன்றிருந்தது அவ ருக்கு. மேலும் கூர்ந்து கவனித்தார். தம் கணவரை அச் சில் வார்த்துவைத்தது போன்றிருந்தது அக் குழந்தை. அப் பொழுதுதான் அவருக்குத் தம் கணவர் முன்பொருநாள் கூறிய செய்தி திடீரென நினைவிற்கு வந்தது. உடனே வியப் புக் கண்களுடன் அவரை நோக்கி, 'மகனே! நீ யார்?' என்று வினவினார்.

'நான் உங்களின் மகன்தான். எங்களுக்கு ஊர் கோவ ளம். அப்பாவையும் உங்களையும் பார்க்க வந்தோம். என் அம்மாவும் என்னுடன் வந்துள்ளார்கள்; அவர்கள் வெளி யில் வந்து நிற்கின்றார்கள்' என்று கூறினார்.

இவற்றைச் செவியுற்றதும் அம் மாதரசி தம் மகனை உச்சி மோந்து உள்ளகந் தழுவி மார்போடணைத்துக் கொஞ்சி வாயிலண்டை ஓடோடிச் சென்று அங்கு நின்று கொண்டிருந்த கோவளத்து அம்மையாரைக் கைலாகு கொடுத்து வரவேற்று, 'இஃதென்ன இப்படி வெளியே நிற்கின்றீர்கள்? உங்கள் வீடு, உங்கள் வாசல், உள்ளே வருவதற்கென்ன?' என்று அன்புமொழி கூறி அழைத்துவந்தனர். பின்னர் சின்னாட்கள் சென்றபின் ஹபீபு முகம்மது லெப்பையும் வந்துவிடவே பாலும் பழமும் ஒன்று சேர்ந்தாற் போன்று அவர்களின் வாழ்வு இன்பம் கொழித்தது.

சின்னாட் கழிந்தபின் ஹபீபு முகம்மது லெப்பை தம் கண்மணி மகனைக் காயல்மா நகரிலுள்ள பள்ளி ஒன்றுக்கு அனுப்பிப் பயிலவைத்தனர். ஆனால் பள்ளி சென்ற மைந்தரோ பிறர் எள்ளி நகைக்கும்வண்ணம் மந்தமாக விளங்கினார். இதைக் கண்டு தந்தைக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு அளவில்லை. 'என்ன இது பெரும் புதுமையாக உள்ளது. மடையர்களெல்லாம் மணிபோன்ற பிள்ளைகளைப் பெற்றிருக்கும் பொழுது நமக்கு இத்தகைய பிள்ளை வந்து வாய்த்ததே. நாம்தாம் தவறு செய்துவிட்டோமோ? குழந்தை தவறான நேரத்தில் ஜனித்துவிட்டதோ' என்று தம் உள்ளின் உள்ளே எண்ணியெண்ணி வருந்திக்கொண்டிருந்தார்.

ஒருநாள், மகன் நண்பகல் உணவருந்த வீடு திரும்பியதும் அவனை அழைத்துப் பழைய பாடங்களைப் படிக்குமாறு கூறினார் தந்தை. அவனோ திக்குமுக்காடினான்; பேந்தப் பேந்த அங்குமிங்கும் விழித்தான். அப்பொழுது தந்தைக்கு ஏற்பட்ட வெஞ்சினத்திற்கு அளவில்லை. ஓங்கி, பளார், பளார் என்று அவனுடைய கன்னத்தில் அறைந்துவிட்டார். மகன் முகடும் தெறிக்கும்வண்ணம் கதறினான். அதன்பின் உணவருந்தாமலேயே வெளியே சென்றுவிட்டான்.

மாலையில் பள்ளி விட்டுப் பிள்ளைகள் வீடு திரும்பிக்கொண்டிருந்தனர். ஆனால் தம் மகனும் அவர்களுடன் சேர்ந்துவராததைக் கண்டதும் பெற்ற தாயின் மனம் பித்தாகியது. பையன்களிடம் சென்று 'செய்கப்துல்காதிர் நெயினார் லெப்பை எங்கே' என்று வினவினார். 'எங்களுக்குத் தெரியாது. அவன் இன்று மதியத்திற்குப் பிறகு பள்ளிக்கு வரவில்லையே'

என்று அவர்கள் அனைவரும் கையை விரித்தார்கள். அப்பொழுது அன்னையின் குலை பதறியது. 'பிள்ளைகளே! தயவு செய்து அவன் எங்காவது விளையாடிக்கொண்டிருந்தால் அன்னை கூப்பிடுவதாக அழைத்துவாருங்கள்' என்று கெஞ்சினர். அவர்களில் சிலர் நாலா திக்கிலும் சென்று அவனைத் தேடினார்கள். அதன்பின் வெருண்டோடி வந்தார்கள். அன்னை பதறிக்கொண்டு 'என்ன செய்தி, என்ன செய்தி' என்று வினவினர். 'பார்த்தோம், அவன் கப்படா பள்ளியின் அருகேயுள்ள எருக்கஞ் செடியின்கீழ் வாயைப் பிளந்துகொண்டு படுத்துள்ளான். அவனுடைய தலைக்கு மேலே ஒரு கருநாகம் படம் விரித்து ஆடி அவனுடைய நாவில் தீண்டியது. நாங்கள் கண்ணால் பார்த்தோம்' என்று மூச்சுத் திணறிக்கொண்டு கூறினர். அதைக் கேட்டதும் அன்னையின் மூச்சே நின்றுவிடும் போலிருந்தது. 'எங்கே, எங்கே?' என்று ஏங்கியழுதவண்ணம் அப்பையன்களின் பின்னே ஓடோடி வந்தார். ஆம், செய்கப்துல்காதிர் நெய்னார் லெப்பை ஓர் எருக்கம் செடியின் கீழேதான் படுத்துறங்கிக்கொண்டிருந்தான். அவனருகே ஓர் கருநாகம் நெளிந்து ஓடி மறைந்தது. அதைக் கண்டதும் அன்னை பெரிதும் குலை நடுங்கித், தம் மகனை நோக்கி ஓடோடிச் சென்று அவனை எழுப்பினார். அவன் அமைதியாகக் கண் மலர்ந்தான். அடுத்த கணம் கவிமழை பொழிந்தான். அவனுடைய வாயிலிருந்து வரும் பேச்செல்லாம் கவியாகவே இருந்தன. அதைக் கண்டு அன்னைக்கும் அவனுடைய தோழர்களுக்கும் ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

இதன்பின் செய்கப்துல்காதிர் நெய்னார் லெப்பையின் வாழ்வே வேறுவிதமாகத் திரும்பியது. அவனே பள்ளியில் முதல் மாணவனாக விளங்கினான். அவனுடைய கூரிய புத்தியும் ஆழ்ந்த அறிவும் அளவிடமுடியா நினைவாற்றலும் ஆசிரியரின் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. அவற்றைக் கண்டு தந்தையும் உவந்தார். தாயும் மகிழ்ந்தார். இது முதல் எல்லோரும் செய்கப்துல்காதிர் நெய்னார் லெப்பை என்ற பெயரை சேகனாலெப்பை என்று மருவச்செய்து செல்லப் பெயராக அழைத்துவந்தனர்.

சில ஆண்டுகள் கழித்ததும் சேகனா லெப்பையின் தாய் தந்தையர் இவ்வுலகை நீத்தனர். அதன்பின் அவர்தம்

பெரிய அன்னையின் ஆதரவிலேயே வாழ்ந்துவந்தார். ஒரு நாள் அவர்தம் பெரிய அன்னையை நோக்கி, 'அம்மா, நான் கீழக்கரை சென்று தைக்கா சாகிபு அவர்களிடம் ஓதிவருகிறேன், விடை தாருங்கள்' என்று கூறினார். அன்னையும் அதற்கிசைந்து விடை நல்கினர்.

கீழக்கரையிலே சேகனு லெப்பையும் பிற்காலத்தில் குணங்குடி மஸ்தான் என்னும் குணமென்னும் குன்றேறி நின்ற வள்ளலாரான சுல்தான் அப்துல் காதிர் அவர்களும் ஒருசாலை மாணவர்களாக விளங்கினர். இதனை சேகனு லெப்பை தாம் குணங்குடி மஸ்தான் பாடலுக்கு அளித்த வாயுறை வாழ்த்தில் 'வித்தையிற்றோழன்' என்று குறிப்பிடுகின்றார். அங்குச் சிலகால் அறிவுக்கடலில் மூழ்கித் திளைத்தபின் அதைவிட்டும் கரையேறி தனித்தனியே அவர்கள் இருவரும் வெளிக்கிளம்பினர். அப்பொழுது அவர்களிருவருக்கும் பத்தொன்பது வயதே ஆகிஇருந்தது. அவர்கள் இருவரும் ஒத்த வயதினராகவே இருந்தார்கள்.

இல்லம் திரும்பிய சேகனுலெப்பையை அவரின் பெரிய அன்னை தம் கண்ணேபோற் கவனித்து வந்தனர். அவர் பருவம் எய்தி விட்டதால் அவருக்கு மணமுடித்து மகிழவும் நினைந்தனர். எனவே தம் உறவினர் ஒருவரை அணுகி உரிமை பாராட்டித் தம் அருமை மகனுக்கு அவர்களின் அழகுசால் மக்களில் ஒருவரை மணமுடித்துத் தரவேண்டுமென்று வேண்டினர். 'என்ன, கோவளத்தாள் மகனுக்கு எங்களின் மகளை மணமுடிப்பதா? 'வெகு நன்று; வெகு நன்று' என்று இழித்துரைத்தனர் அவர்கள். இதைக் கேட்டு அன்னைக்கு ஏற்பட்ட சள்ளைக்கும், சினத்திற்கும் அளவில்லை. மறுபேச்சின்றி அவ்விடத்தை விட்டும் அகன்றார். 'என் வயிற்றிற் பிறந்த பிள்ளையாயிருப்பின் அவர்கள் இவ்வாறு நா கிளப்பிப் பேசி இருப்பார்களா? எல்லாம் நம் ஊழ்வினை' என்று எண்ணி கவலையே உருவெடுத்தாற் போன்று வீற்றிருந்தனர் அன்னையார். அப்பொழுது வெளியிலிருந்து வீடுதிரும்பிய சேகனு லெப்பை வாடிய மலர் போன்றிருந்த தங்கள் அன்னையின் வதனத்தைக் கண்டு 'அம்மா, ஏன் வாடியுள்ளீர்கள்' என்று ஏக்கத்துடன் வினவினார். அப்பொழுது அன்னை நடந்த செய்தியை நவின்றதும் 'இதற்குத்தானா இத்துணைக் கவலை? விடுங்கள் அதனை.

எனக்கு அவர்கள் பெண் தராவிட்டால் எமனுக்குக் கொடுத்து விட்டுப் போகின்றூர்கள்' என்று கூறினூர். என்ன விந்தை! அடுத்தநாள் அப்பெண் திடீரென இறந்து விட்டாள். இதற்குள் சேகனு லெப்பை கூறிய மொழிகள் அப்பெண்ணின் பெற்றேர் உற்றேரின் செவிப்பட்டதும் அவர்கள் ஓடோடி வந்து சேகனுலெப்பையையும் அவரு டைய அன்னையையும் சந்தித்துத் தங்களின் இளைய மகளை சேகனுலெப்பைக்குத் தாங்கள் மணமுடித்துத் தர விரும்பு வதாகவும், அதனை அவ்விருவரும் ஏற்றுத் தங்களின் மனத் திற்கு மகிழ்வையும், குலத்திற்கு நல்வாழ்வையும் நல்க வேண்டுமென்றும் வேண்டி நின்றனர். அதற்கு அவ்விருவ ரும் இசைந்தனர். பின்னர் என்ன? மாணவர் சேகனு லெப்பை மணவாளரானூர்.

வாழ்க்கை என்னும் கடலில் இல்லறம் என்ற கப் பலைச் செலுத்தத்துவங்கிய சேகனுலெப்பை தம்முந்தை யோராகிய மரக்கலராயன் வழியினர் மேற்கொண்ட நயம்தரும் நற்றெழிலாகிய இரத்தினத் தொழிலையே மேற்கொண்டனர். இதன்பொருட்டு அவர்கள் பற்பல ஊர்களிலும் சுற்றுப்பயணம் நிகழ்த்தினர். இலங்கைச் செலவையும் மேற்கொண்டனர். ஒருதடவை அவர் மன்னூர் சிலாபத்திற்குச் செல்லும்பொழுது இரா மேஸ்வரம் கானகத்தில் அவர் சென்ற வண்டியைக் கள்வர்கள் இடைமறித்தக்கால், சேகனுலெப்பை காசினி தழைக்க வந்த குரிசிலெம் பெருமானை நினைவு கூர்ந்த னர்.

'போர் தொடுத்த கொடிய பகைஞர்களை கரத் தெடுத்த மணலால் பொடிபடுத்திய குருவே! கருணைக்கு இருப்பிடமான நபிகள் கோமானே! அடுத்தாராலோ, அல்லது அடாத்தொழில் செய்வாராலோ நேரக்கூடிய இடுக்கண் அனைத்தையும் துடைத்து, அறநெறி வழுவா நெறிமுறையில் நடக்குமாறு என்னை ஆண்டருள்வீர்' என்று ஒரு செய்யுளில் உள்ளம் உருகிக் கதறினூர்.

மறுசெய்யுளில், 'கருவாய்த் திகழ்ந்து, உருவாய்த் தோன்றி, கதிதரும் நல்வழிகள் பிசகி, தீவினையில் உழன்று அதன்காரணமாகப் பற்பல துன்பங்களுக்கு

ஆளாகிவிட்ட போதினும், தங்களின் பதத்துணையை உள்ளம் உருகி நினைந்தக்கால் அவை பஞ்சாய்ப்பறந்து விடும் என்ற காரணத்தால் தங்களின் பதத்துணையை நினைவு கூர்ந்தேன். அருள்பாலித்தருள்வீர்' என்று அலறினர். அவை சத்துரு சங்காரம் என்று பெயர் பெற்று மிளிர்கிறது. தற்காலம் சத்துரு சங்காரம் என்று வழங்கி வரும் பாடல்களல்ல அவை. அவை,

'இசைதரும் பெருமையுடை யவனருளால்
எவ்வுலகினுக்கும் நன்மணியாய்'

என்று துவங்குகிறது. இப்பாடல்களை அவர் கண்களை மூடிக்கொண்டு உணர்வற்றுப் பாடிக் கண்களைத் திறந்ததும், கள்வர்கள் கண்ணில் காணுமல்மறைந்து விட்டனர். சேகனு லெப்பை கள்வர்களின் கொடும் பிடியிலிருந்தும் காப்பாற்றப்பட்டார்.

சேகனுலெப்பை பின்னர் புலமைத் தொழிலை மேற்கொண்டு பற்பல பாவகைவல்ல புராணங்கள் செய்யும் நாவல்லராய் விளங்கிய போதினும், தம் மூதாதையர் மேற்கொண்டிருந்த இரத்தினத் தொழிலை விட்டுவிடவில்லை. கீழக்கரை, செய்யிது முகம்மது லெப்பை ஆலிம் காக்கா அவர்களுக்கு எழுதிய மடலில்கூட அவர்கள் தங்களிடமுள்ள வைரம், மரகதம் ஆகியவற்றை அனுப்பிவைப்பின் அவற்றை நகை செய்து விற்று அதிக ஆதாயம் பெறலாம் என்றும், அதனுல் இருவருக்கும் ஊதியம் கிடைக்கும் என்றும் பின்வருமாறு கூறுகின்றுர்:

'ஏதமில் சிவப்பு மறுவிலா பச்சை வைரமிவை
இங்கண் வருகில் பெருமையாய்
ஏற்றிநகை செய்துமுறை போ(ல்) அதிக லாபமிக
ஏற்கலாம் அகமி ருந்தால்

இசையும் விலை கண்டுஅத் தளமே அனுப்பிடுகில்
எளியோர்க்கும் உபகார மாம்'

என்று வரைகின்றார்.

கலைக்கடல் கடைந்து அமுதெடுத்து அருந்திய சோட சாவதானி செய்கனுலெப்பை யாரிடம் இன்பத் தமிழ் மொழியைக் கற்றனர் என்பதற்கு நமக்கு யாதொரு சான்றும் கிடைத்தில. அவர் சென்னைபட்டணத்து ஐயா என்று வழங்கப்படா நின்ற மகா பண்டிதருக்கு எழுதிய மடலில், தமக்கு அவர் தந்த லேகியமானது அதிக நன்மை பயக்க வில்லை என்றும், வாய்வுத் தொந்தரவு இன்னும் இருந்து கொண்டிருக்கிறதென்றும், எனவே வேறொரு அருமருந்து செய்து அனுப்பவேண்டுமென்றும் கூறும்பொழுது, 'சென்ன பட்டணத்து ஐயா! என் ஐயாவெனப் பெயர்படைத்த குருபரநாதனே' என்று அவரை விளித்திருப்பதிலிருந்து, அவரிடமும் சேகனுப்புலவர் கல்வி பயின்றிருக்கலாமென்று உய்த்துணர இடமிருக்கிறது.

சீரும் சிறப்பும், செல்வமும் கல்வியும் ஒருங்கே வாய்க் கப்பெற்ற சேகனுப் புலவர் ஒருதடவை நாகூர் சென்றிருந் தக்கால் அஹ்மது சாகிபு என்னும் ஓருவர் அவரை அணுகி தவத்துறை நின்ற ஷாஹுல் ஹமீது ஆண்டகையின் வியத் தகு வரலாற்றை புராணமாகப் புனையுமாறு வேண்டிக் கொண்டார். அதற்கு இணங்கி அவ்வரலாற்று உரையை அஹ்மது லெப்பை ஆலிமிடத்தில் செவ்வையாய்ப் பெற் றுச் சிறப்புடன் புராணம் செய்தனர். அது மாணிக்கப்பூர் காண்டம், பரதேய சஞ்சாரக் காண்டம், நாகூர் காண்டம் ஆகிய மூன்று காண்டங்களில் 56 படலங்களும், 2565 திரு விருத்தங்களும் கூடிய திருநூலாக விளங்குகிறது. இதன் பின் நடந்த வரலாற்றைச் சேகனுப் புலவரே ஒரு மடலில் கூறுகின்றார், நாமும் கேட்போம்.

காரணப் புராணம் எனப்பெயர் காட்டி
ஆரணத் துறவோ ரவர்கள்சூழ்ந் திருப்பப்
பீரவர் நிறுத்தும் பெரிய மண் டபத்தின்
சீருட னரங்கம் சிறப்பித்த மகிமை

என்னுல் இயம்ப இயல்போ? கண்டோர்
தன்னுல் உரைக்கத் தகவோ? இன்றே.

காட்சிகள் அனந்தம்; கனவுகள் அனந்தம்;
மாட்சிகள் அனந்தம்; மகத்துவம் அனந்தம்;
பெரியவர் அனந்தம்; பெற்றியர் அனந்தம்;
தெரிபவர் அனந்தம்; சித்தினர் அனந்தம்;
செல்வர்கள் அனந்தம்; ஜெயத்தினர் அனந்தம்;
கல்வியர் அனந்தம்; கருத்தினில் தெளிந்தே
போற்றுனர் அனந்தம்; புகழுநர் அனந்தம்;
ஏற்றுனர் அனந்தம்; இனிதினர் அனந்தம்.

இவ்வாறு வெகு சிறப்புடன் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் அனைவரும் குழுமி அக்காவியத் தேனை மொய்த்து நின்று சுவைப்பதைக் கண்டு முகம்மதலி என்னும் தலைவன் புண்படும் நெஞ்சில் புழுக்கம் கொண்டான். எனவே, அவன் ஒருநாள் தன் சேகரத்துடன் சேகனுப் புலவர் அவர்களைச் சந்தித்து, 'தங்களின் புராண விரிவுரையைக் கேட்க ஆண்களும், பெண்களும் ஒருங்கு திரண்டு வருகின்றுர்கள்; அது நன்றன்று. ஆதலின் பகலில் விரிவுரை நிகழ்த்தின், பாவையர் வரமாட்டார்களல்லவா' என்று கூறினுன். இதற்குச் சேகனுப்புலவர் இணங்கினர். அவ்விதமே பகலில் விரைவுரை நிகழ்த்தினர். ஆனுல் ஷெய்குமார்களில் சிலர் பகலில் வர இயலாத காரணத்தால் மீண்டும் இரவிலேயே புராண விரிவுரை நிகழ்ந்தது. அப்பொழுது அதில் உச்சமான கட்டங்கள் வருந்தொறும், வருந்தொறும் வனிதையர் மெய்மறந்து குரவை முழக்கம் செய்தனர். இஃதை முகம்மதலியும், அவனுடைய சேகரத்தாரும் தங்களுக்கு இறைவனுல் நல்கப்பட்ட இனிய வாய்ப்பெனக் கருதி சேகனுப் புலவரை எங்கணும் தூற்றித்திரிந்தனர். எனினும், புராண விரிவுரை பன்னுட்களாக நடந்து புவிசுடன் முடிவுற்றது.

இதன்பின் நாகபட்டினம் வாழ்ந்த முகம்மது மஸ்தான் என்பவர்

'நற்குல நாயக, குத்பு நாயக,
சற்குண நாயக, தவத்தின் நாயக,
கற்கும் நல் லறிவளர், கருணைநாயக
பொற்புயர் நாயக, புனித நாயக'

என்று போற்றப்படும் முகிய்யித்தீன் ஆண்டகையின் முழுவரலாற்றையும் புராணமாகப் பாடித் தரவேண்டுமென்று சேகனுப்புலவரை வேண்டிக்கொண்டனர். அதற்கும் அஹ்மது லெப்பை ஆலிம் அவர்களிடமே உரை வாங்கி 'குத்புநாயகம்' என்னும் பெயருடன் அரிய புராணம் ஒன்றை 1340 விருத்தப் பாக்களில் ஹிஜ்ரி 1225ல் திறம்படத், தெளிவுறத் தேனினும் இனிதாகப் பாடி முடித்தனர் அன்னார். அவ்வளவுதான். முகம்மதலியும், அவனுடைய சேகரத்தாரும் தரங்கம்பாடியில் வாழ்ந்த 'வண்ணக்களஞ்சி' என்ற புலவரை வரவழைத்து, 'குத்புநாயகம்' என்ற பெயருடன் போட்டியாகப் பிறிதொரு புராணத்தைப் பாடச்செய்து, அதனை அரங்கேற்ற கச்சைகட்டி நின்றனர். இக்காலை கீழக்கரை ஹபீபு முகம்மது மரக்காயர் என்னும் வள்ளலார் நாகூர் வந்திருந்தனர். அவரை முகம்மதலியும், அவனுடைய சேகரத்தாரும் அணுகி, சேகனுப்புலவரைப் பற்றி இல்லாதனவும், பொல்லாதனவும் கூறி அவருக்குக் கேடு விளைவிக்க எண்ணினர். அதன்பின் ஹபீபு முகம்மது மரக்காயர் வீற்றிருந்த சபையில் வைத்து சேகனுப் புலவரின் ஏட்டையும், வண்ணக்களஞ்சியின் ஏட்டையும் தகராறு தீரும்வரை தர்காவில் வைப்பது என்று முடிவு செய்யப்பட்டது. அவ்விதமே அவ்விரண்டு ஏடுகளும் தர்காவில் வைக்கப்பட்டன.

ஆனால் அன்றிரவு ஹபீபு முகம்மது மரக்காயர் அயர்ந்து உறங்குங்கால், யாதோ சூது நிகழ்வதாகக் கனவால் உணர்த்தப்பெற்று அவ்வேட்டில் சேகனுப்புலவரின் ஏட்டைத் தம்மிடம் தந்துவிடுமாறு சாகிபுமார்களை

அணுகிக் கேட்டனர். அதற்கு சாகிபுமார்கள் இணங்கிலர். எனவே சேகனுப்புலவரைச் சந்தித்து அவரிடமிருந்த குத்புநாயகத்தின் பிரதியை வாங்கிப் பாடவும், படிக்கவும் கேட்டுப் பெருமகிழ்வெய்தினர். தமக்காக இறைவனிடம் இறைஞ்சுமாறும் வேண்டிக்கொண்டார். அதற்கிணங்கி சேகனுப்புலவரும் அவர்மீது முப்பத்து மூன்று மூதுரைக் கவிகள் பாடி அரங்கேற்றினர். இதைக் கண்டு சாகிபுமார்களில் சிலர் சினமுற்று தர்கா சென்று அங்கிருந்த சேகனுப்புலவரின் ஏட்டைச் சீறிப்பாய்ந்து கிழித்தனர். ஆனல் பின்னர் பார்க்கும்பொழுது கிழிக்கப்பட்டது வண்ணக்களஞ்சி இயற்றிய 'குத்புநாயகம்' என்ற ஏடாக இருப்பதைக் கண்டு வாயில் விரல் வைத்தனர்; தலை சுழன்றனர். மனம் கலங்கினர். அதன்பின்தான் சேகனுப் புலவரின் மகாத்மியத்தை உணர்ந்து மதிக்கலாயினர். இதனையே சேகனுப்புலவர் தாம் ஒருவருக்கு எழுதிய மடலில்

> வல்லவன் கருணை வழிவச மன்னே
> சொல்லருந் தன்மைச் சோதனை யாகப்
> பின்னர் பள்ளிப் பெரியவர் சிலர்கள்
> அன்னஏ(டு) இரண்டில் அதி(ல்)எனது ஏட்டைச்
> சின்னங்கள் செய்யச் சீறியே கிழித்தார்.
> பின்ன மாகியது பின்னர் பார்த்தளவே
> களஞ்சியன் ஏடாய்க் கண்டனர் யாரும்
> அழுங்கினர்; அகத்தில் கலங்கினர்; அயர்ந்தார்.
> ஷாகுல் ஹமீதின் தகுதியங் கிருபை
> யாக நிறைந்ததோ ரவரென யாரும்
> துதிக்கா நின்ருர்; தொல்லுல கெல்லாம்
> மதிக்கா நின்ற மாண்பினை அறிக

என்று கூறுகின்ருர்.

இதன்பின் சேகனுப் புலவரவர்கள் காயல்மா நகரம் ஹபீபு முகம்மது அவர்களும் இபுருஹீம் என்பவரும் வேண்

டிக்கொண்டதற்கிணங்கி ஏந்தல் நபி இபுருஹீம் (அலைஹி) அவர்களின் எழில்மிகு வரலாற்றை 31 படலங்களில் 2044 திரு விருத்தங்களாகப் பாடி அதற்குத் திருமணிமாலை என்னும் அழகிய பெயருமிட்டு அரங்கேற்றினர். அதில் வரும் செய்யுட்கள் தேனில் ரசம் பிழிந்தால் எவ்வாறு இருக்குமோ அது போன்று அமுதத் துளிகளாக அமைந்திருக்கின்றன. இபுருகீம் நபியவர்கள் தங்களின் குடும்பத்தினரை மக்காவில் விட்டுவிட்டு சிரியா செல்லுங்கால் இறைவனைத் 'துயரின்றிய அறிவே' என்றழைத்து இரு கரமேந்தி இறைஞ்சும் பாக்கள் கல் மனத்தையும் கரையச்செய்வனவாய் அமைந்துள்ளன. அவற்றை இதோ தருகிறேன்: பக்தியுடன் நீங்களும் படியுங்கள்.

இயல்மன்னிய மகுமூறெனும் எழில்பள்ளியி(ன்)
நேரே
வியல்மன்னிய திருவா(ய்)ஒளி மிகவீசிய நின்றன்
செயல்மன்னிய கஃபா அணி திகழ்நன்குடி
வைத்தேன்
சுயம்ன்னவ' அபயம்பல துயரின்றிய அறிவே!!

பொறிகாவல, புலன்காவல, புகழ்காவல, பிசகா
நெறிகாவல, செயல்காவல, நினைகாவல, வைத்த
குறிகாவல, மனைகாவல, குடிகாவல, என்றன்
அறிகாவல, அபயம்பல துயரின்றிய அறிவே!

திரு மணிமாலை பாடியபின் சேகனுப் புலவரின் விண்மீன் உச்சத்தை நோக்கி ஏறிக்கொண்டிருந்தது. அவருடைய புலமையின் பெருமையையும் வாக்கின் வன்மையையும் கற்ருரும் மற்ருரும் உணர ஆரம்பித்தனர். இச் சமயத்தில்தான் சேகனுப் புலவர்,

வள்ளல் முகம்மது நபியிரசூல் வரிசைக் கோத்திர
[முறைகளெல்லாம்

தெள்ளும் தமிழிஞல் உரைப்பீரெனச் சிறந்த
[நாகைமா நகரில் வாழ்வோன்
விள்ளும் அபூபக்கர் சித்தீக்ஈன்ற வெற்றிபெறும்
[பக்கீர்சாகிப்மாலீம்
கொள்ளும் அறிவிஞல் கேட்டபடி குணம்
[கொண்(டு) அறிவிஞல் கூறலுற்ருர்

*இவ்வாறு 149 செய்யுட்கள் இயற்றி அவற்றிற்குக் கோத்திர மாலை என்று பெயருமிட்டு அரங்கேற்றிஞர்* *

**இந்நூல் கை ஏட்டிலேயே இருந்தது. அக்காலத்தில் இராமனுதபுரம் ஜமீனின் நிர்வாகியாக இருந்த மகா பண்டிதர் பொன்னுசாமித் தேவரிடம் முஸ்லிம் புலவர்கள் பரிசில் வேண்டிச் செல்லுங்கால் சீருப் புராணத்திற்குப் பொருள் சொல்வீர்களா என்று அவர்களைப்பார்த்து அவர் வினவுவாராம். அவர்கள் 'ஆம்' என்றுகூறுவார்களாம். அதன் பின் பொன்னுசாமித் தேவர் அவர்களைப் பார்த்து 'சரி அஃதிருக்கட்டும். 'நபிகள் நாயகத்தின் முதல் மனைவியார் கதீஜா நாயகியின் முதல்கணவர் யார்' என்று வினவுவாராம். அதற்குமறுமொழிகூற இயலாது அவர்கள் மதியிழந்துவெளியேசென்றுவிடுவார்களாம். இதனை நேரில் கண்ட காயல்பட்டினம் செய்யிதுமுகம்மது மரக்காயரவர்கள் கண்ணகுமது மகுதூம் புலவரை அணுகி நபிகள் நாயகமவர்களின் கோத்திர வரலாறு அடங்கிய நூல் ஒன்று வெளியிட வேண்டுமென்று கூறியதின் பேரில் இவ்வரலாறு எதில் வருகின்றது என்று கண்ணகுமது மகுதூம் புலவர் விசாரித்ததில் சேகனுப் புலவர் எழுதிய கோத்திர மாலையில் வருகிறதென்றறிந்து அரபுத்--தமிழில் எழுதப்பட்டிருந்த அதனை காயல் பட்டினம் கத்தீபு இபுருகீம் சாகிபு லெப்பையிடமிருந்து பெற்று ஹிஜ்ரி 1281—82-ல் அச்சிட்டனராம்.*

*பின்னர் அவருடைய எழுதுகோல் முனையிலிருந்து பற் பல இறைஞ்சற் பாக்களும், பதங்களும், வல்லிசை, மெல் லிசை வண்ணங்களும் சொற்க நீதி என்று 33 செய்யுட்கள் அடங்கிய சிறிய நூல், சீரியநூல் ஒன்றும் வெள்ளம்போன்று வெளிப் போந்தன. சொர்க்க நீதிச் செய்யுட்கள் செம்பாக மாகமாய் அமைந்து சிந்தைக்கு விருந்து நல்கி சுவர்க்கத் திற்கு வழி காட்டுகின்றன.*

அரியதொரு வல்லவனை வணங்கவேண்டும்
அவனருளும் பணிவிடைகள் எடுக்கவேண்டும்

*கதீஜா நாயகியின் முந்தையக் கணவர்களைப் பற்றிய விவரம் கோத்திர மாலையிலுள்ள கீழ்வரும் இரண்டு செய்யுட்களால் அறியக் கிடப்பதைக் காண்க!*

முன்னர் கன்னிகைப் பருவத்தினில் முடித்தார்
[திருமணம் அவர் யாரெனில்
மன்னர் அப்துல்லா தாயார்தமை மகிழ்ந்து
[பெற்றவர் உடன் பிறந்தோர்
அன்னர் அத்தீக் என்போர் அவருக்கொரு
[அரிய மகள்ஹிந்(து) என்று ஒன்றுபெற்ருர்,
பின்னர் அவர்காலம் சேர்ந்தார்மற்றும் பெற்றி
[யுடையோர்க்கு வாழ்க்கைப்பட்டார்.
வரிசை பெரும்தமீம் எனும்கிளையில் வரும்
[அப்பாசு தன்நல்மகனுர்
பிரிச முறும்அபூ காலத்என்போர் பின்னர்
[கலியாணம் செய்திருந்தார்
இரசம் உடையார்க்(கு) இரண்டுபிள்ளை இனிய
[ஆணுடன் பெண்ணும்பெற்ருர்
திரைசெய் புவியிழந்(து) அவரும் பொன்றிச்
[சென்றபின் மயில் தனித்திருந்தார்.

பெருமைதரும் இரசூலைப் போற்றவேண்டும்
பெருகு நபிமார்க(ள்)தம்மைத் துதிக்கவேண்டும்
தெரியும் மறையோர்கள் சொல்லை மதிக்கவேண்டும்
சிறப்புடையார் திருப்பாதம் புகழவேண்டும்
வரிசைபெறும் சதீஜாதம் மெய்ம்மைநாதர்
மணிமுத்தின் மகுமூதை வாழ்த்தாய் நெஞ்சே

என்று அந்நூல் எடுத்த எடுப்பிலேயே துவங்குவதைக் கண்டு ஆம், இஃது சுவர்க்க நீதிதான்; முக்காலும் இஃது உண்மைதான் என்று நீங்களும் நானும் குரல் எழுப்பி முழங் கலாம் போன்று தோன்றுகின்றதல்லவா?

இதன்பின் சேகனுப் புலவர் நாவலர் போற்றும் நாகை யந்தாதி என்னும் நூலை நாகூரில் அடங்கப்பெற்றிருக்கும் நாயகராம் ஷாஹுல் ஹமீது ஆண்டகையின் பேரில் இயற் றினர். அந்நூல் முழுவதும் யகமம், திரிபு அழகியமைப்புடன் நிரம்பப்பெற்றுக் கரும்பாகமாய் அமைந்திருக்கிறது. அதில் காணப்பெறும் ஏகபாதச் செய்யுள் ஒன்றை இதோ நான் கீழே தருகின்றேன், படிப்பீர்களாக.

செய்வன மாதவ நாகையர் சீர்பதச் சேகரமே
செய்வன மாதவ நாகையர் சீர்பதச் சேகரமே
செய்வன மாதவ நாகையர் சீர்பதச் சேகரமே
செய்வன மாதவ நாகையர் சீர்பதச் சேகரமே

இதைப் படித்ததும் இஃதென்ன புதுமையாக இருக் கிறது. ஒரே சொற்களுள்ள அடியைத் திருப்பத் திருப்பக் கூறி ஏன் இவ்வாறு செய்யுள் இயற்றியுள்ளார் என்று நீங் கள் வினவலாம். ஆனால் இதில்தான் அப்புலவர் பெருமா னின் திறமை பொதிந்துள்ளது என்பதை அறிவீர்களாக. இதில் ஒவ்வோரடியும் ஒரே சொற்களைப் பெற்றமையாயுள்ள

போதினும் வெவ்வேறு பொருள்களை உடைத்தவை என்பதையும் உணர்வீர்களாக. இதில் முதல் அடியின் பொருள் என்னவெனில் செய்களும் வனங்களும் நிரம்பிய மாதவத்தையுடைய நாகூரில் அடங்கப்பெற்றிருக்கும் ஆண்டகையின் சீர்மை மிகுந்த இரண்டு பாதங்களும் என்பதேயாகும். மற்ற மூன்று அடிகளின் பொருள்களும் வெவ்வேறுவிதமானவையாகும். இவ்விதக் கரும்பாகமான செய்யுட்கள் நிரம்பிய நாகையந்தாதியை இயற்றி அதற்கு இயன்றவர்கள் பொருள் எழுதட்டும் என்று அறைகூவல் விடுத்து பன்னிரண்டு ஆண்டுகள் காத்திருந்ததாகவும் அதற்கு எவரும் பொருள் எழுத முன்வராமையால் அவரே அதன் பின் பொருள் எழுதி அச்சிட்டனர் என்றும் கூறுவர்.

அவர் அந்நூலில் இவ்விதச் செய்யுள்மட்டும் இயற்றவில்லை. ஈரெழுத்தால் வந்த மடக்குச் செய்யுளும் இயற்றியுள்ளார். அது வருமாறு.

காத்திகைத் தேதத்த தத்தை
　　கொக் கொக்கக் கதத்துக் கொத்திக்
காத்திகைத் தேதத்த கத்தி
　　தக்கீ தத்த கத்துக் கொத்துக்
காத்திகைத் தேதொத்தித் தாதுகத்
　　தித்தித்த காதத்தைத் தெக்
காத்திகைத் தேதத்தித தூதத்த
　　நாகைக் கத்தா துதியே

இதைப் பார்த்ததும் இவர் ஈரெழுத்தால்தாமே கவி இயற்றியுள்ளார். காளமேகம் போன்று ஓரெழுத்தால் கவி இயற்ற இவரால் சாலுமோ என்று வினவுகின்றீர்களா? இதோ உங்களுக்குப் பதிலிறுக்கும் முறையில் அவருடைய வாயிலிருந்து ஓரெழுத்து வெண்பா ஒன்று புறப்படுகிறது, பாருங்கள்.

தூதாதி தாதுதைத்தே தொத்தோதி தத்தைதுதி
தாதாதி தத்தத்தித் தாதீதா—தாதா

துதைதொத்தத் தத்தத்தா தூத்தாதித் தாதீ
தததைதத்தித் தித்தத்தே தா.

மேலும் வள்ளுவப் பெருந்தகை வாயை மூடாது சிரித்துக்கொண்டே,

எய்தற் கரிய இயைந்தக்கால் அந்நிலையை
செய்தற் கரிய செயல்.

என்று ஒரு நீரோட்டக் குறள் இயற்றியுள்ளது போன்று சேகனாப் புலவரும் அவருடைய ஈரெழுத்து மடக்குகளையும் ஓரெழுத்து மடக்குகளையும் நாம் படித்துப் படித்துப் பல் உடைபட்டும் இதழ் வலியெடுத்தும் உள்ளதைக் கண்டு நம்மீது இரக்கப்பட்டு, நாம் பல் உடைபடாமலும் நம் இதழ்கள் இரண்டும் ஒட்டாமலும் இளித்துக்கொண்டே பாடுவதற்கு நமக்கொரு செய்யுளை சிரித்துக்கொண்டே இயற்றித் தருகிறார். அதனைக் கீழே தருகிறேன். படித்துச் சிறிது உங்கள் இதழ்களுக்கு ஓய்வு கொடுங்கள்.

இன்றியதே தெல்லார்க்கண் ணெங்கடைந்தே [சத்தங்க
ணின்றியதே தாராயா யேனெஞ்சே—கன்றியதேன்
காரணத்தாற் றீதகலக் காட்சிதர நாயகன்றன்
ஆரணத்தார்க் கென்றறியா யா.

இவையன்றி சேகனாப் புலவர் நாகபந்தம், அஷ்ட நாக பந்தம், இரதபந்தம், கமலபந்தம் முதலான சித்திர கவிகளும் இயற்றியுள்ளார். அவையெல்லாம் அவருடைய திறமையை நன்கு பறை முழக்குகின்றன.*

* சேகனாப் புலவர் புவிநீத்தபின் அவர்களின் உடைமைகள் ஏலத்தில் விற்கப்பட்டன. அவற்றில் இந்தச் சித்திரக் கவிகள், வண்ணங்கள் ஆகியவை அடங்கிய காகிதக் கட்டை காயல்பட்டினம் முகம்மது இபுருகீம் அவர்கள் வாங்கினர்;

அவர்தம் பெயர் பூண்ட மற்றும் நால்வரான குணங்குடி மஸ்தான் அவர்களுடனும் கீழக்கரை தைக்காசாகிபு அவர்களுடனும், காயல்பட்டினம் தைக்கா சாகிபு அவர்களுடனும், மலையாளம் மூஸா செய்கப்துல்காதிர் அவர்களுடனும் ஹஜ்ஜுக்குச் சென்றக்கால் மக்காக் கலம்பகம் என்னும் ஓர் அரும்பெரும் காப்பியத்தைஇயற்றினர். மேலும் கஃபாவை வலம்வந்தபின் அதனைப் போர்த்தியுள்ள கருப்புநிறத் துணியைப் பிடித்துக்கொண்டு 'நண்ணுமொரு ஹறமான மெய்யகம் அடைந்துள, நலம்பெற இரக்கும் எளியேன்' ஆகிய தமக்கு அருள் புரியவேண்டுமென்று இறைஞ்சும் பாக்கள் அற்புதமாய் அமைந்துள்ளன. அவ்வாறு இரக்கும்பொழுது தம் தாய் தந்தையர், மூதாதையர் ஆகியவர்களுடையவும், மற்றுமுள்ள முஸ்லிம்களுடையவும் நினைவு அவருக்கு வருகிறது. உடனே அவர்களுக்காகவும் அவர் இறைவனிடம் பின் வருமாறு இறைஞ்சுகின்றார்.

எந்தைதம் வழியினர்கள் அணிமரபின் அவ்வழியில்
　　ஏழேழு தலைமுறையுமே
இசையுமனை அம்மரபின் ஏழேழு வழியுமனை
　　இல்வாழ்க்கை நல்வாழ்க்கையார்
தந்தைதாய் வழியும்இவர் தங்களுற வாளர்முறை
　　சார்புடையர் நேர்புடையர்மேல்
தாங்கு(ம்) உப காரமுடை யார்கருணை யாரருமை
　　தங்கிய மகார் வழியினுர்
புந்தி முஃமீன்முஸ்லி மீனிவர்கள் வெம்பிழை
　　பொறுத்தருள் சுரப்ப இனிதே
பொங்கு(ம்)எழில் நின்றன்றகு மத்தி(ன்) அக(ம்)
　　　　　　　　　　　　[அச்சமொடு
　　போற்றி யெதிர் நின்ற எளியேன்
முந்தவினை வந்தவினை எந்தவினை சிந்திவிழ
　　முக்கியநல் லருள்புரிவையே

முச்சுடரின் நின்றமனே மெய்ச்சுட(ர்) எனும்தகைய
முத்திதரு கின்ற பொருளே.

*இவ்வாறு இறைவனை ஏற்றித் துதித்துக் கண்ணீர் விட்டு இறைஞ்சி ஹஜ்ஜுச் செய்துவிட்டுத் திரும்பிய சேகனுப் புலவர் பின்னர் பார் புகழ்ந்தேற்றும் 'புத்ஹூஷ்ஷாம்' என்னும் புராணத்தைப் பனுவல்செய்தார். அது முகம்மதெங்கள் நபிகள் கோமான்(ஸல்) மதினமா நகரம் புக்கி அரசு செலுத்துவதிலிருந்து அழகுறத் துவங்குகின்றது. அறிவுடையோர் தங்களின் அறிவினுலே அறியக்கூடிய மாண்பு பெற்ற மாணிக்க நகரமாகி, நகரங்களின் மணிபோன்று திகழ்ந்து அறிவால் பெறக்கூடிய பெரும் பலன்களையெல்லாம் கொழித்து நின்று வளம்கொழுழும் திரு நகரமாகிய மதினுவென்னும் நறுமணம் கமகமக்கும் செந்தாமரைமலர் மீது செப்புதற்கரிய சிறந்த மணிபோன்று அற்புதங்கள் மலர எங்கள் நபிகள் கோமான் வீற்றிருந்தார்கள் என்ற கருத்துப் பொதிந்த*

அறிவுடையார் அறிவதனுல் அறியு(ம்) மணிநகராகி
[அறிவினுலே
அறியவசமாய பெரும் பயன்சுரந்து வரைவில்
[வளம் அனந்தம் ஓங்கும்
நெறியுடைய மதீனமெனும் மருப்பொழியும் கமல(ம்)
[எழில்நிலவு பூமேல்
நறியமணியென இனிதி(ன்) நவமலர வீற்றிருந்தார்
[நபிகள் கோமான்

*என்ற திரு விருத்தத்துடன் துவங்கும் இக் காப்பியம் முகம்மதியா காண்டம், சித்தீக்கிய்யா காண்டம், பாரூக்கிய்யா காண்டம் ஆகிய மூன்று காண்டங்களில் 61 படலங்களையும் 6786 செய்யுட்களையும் கொண்டதாக விளங்கு*

கின்றது. இதில் முகம்மதிய்யா காண்டத்தில் எம்பெருமா னாரவர்களின் அரசாட்சியைப் பற்றிய விவரங்களை விரிவா கப் பாடும் புலவர் சித்தீக்கிய்யா காண்டத்தில் இஸ்லாத் தின் முதல் கலீபா அபூபக்கர் சித்தீக் அவர்களின் அரசிய லையும் பாரூக்கிய்யா காண்டத்தில் உமறு பாரூக் அவர்க ளின் அரசுரிமையைப் பற்றியும் அவர்களின் ஆட்சியின்போது நிகழ்ந்த போர்,விவரங்களைப் பற்றியும் விரிவாகப் பாவி சைக்கின்றார். இந் நூலுக்குக் கொடை நாயகமாக விளங் கியவர் பவளக்காடு முகம்மது ஷகீது என்பவராவார். அவர் தாம் இக் காவியத்தை இயற்றுவதற்குத் தம்மீது 'நிதி மழை பொழிந்தான்' என்று புலவர் வாயார வாழ்த்துகின் றார். வாய்ப்புக் கிடைக்கும்தோறும், கிடைக்கும்தோறும் அவரைக் காப்பியத்துள்ளே புலவர் போற்றிப் புகழ்கின் றார். இப் பெரும் காப்பியம் ஹிஜ்ரி 1236-ல் இயற்றப்பட் டது.

இதன்பின் வரிசைகள் பெற்று வான்புகழ் பெற்று சீரும் சிறப்புடன் தம் தாயகம் புறப்பட்ட சேகனாப்புலவர் வழியிலுள்ள ஊர்களில் நடந்த வரலாறுகளை எல்லாம் வள் ளலார் முகம்மது சகீதுக்கு எழுதிய மடலில் குறிப்பிடுகின் றார். இதோ முகம்மது சகீது அதனைப் படிக்கின்றார், நாமும் கேட்போம்.

தாங்கள் உத்தாரம் தாங்கிஅங் கிருந்து
பாங்காய்ப் பயணம் பரிவாய் எழுந்தபின்
புதுச்சேரி தன்னில் புகமுடன் இரண்டுநாள்
மதிச்சே கரத்தின் மகிழ்வாய் இருந்தனன்.
வருந்திஅவ் வூரார் வாழ்த்திநின் றேத்தத்
திருந்திய புராணம் சிறப்பாய் உரைத்தனன்,
யாவரும் தங்களை இதயம் குளிர்ந்து
நாவினால் மனத்தால் நயம்பெறப் புகழ்ந்தார்.
அங்குநின் றெழுந்தே அடைந்தனன் கூடலூர்
தங்கிடாது இரவினில் தரித்தனன் படித்தோம்

காலையில் எழுந்து களிப்புடன் வந்தோம்
மாலையில் பந்தர் மகுமு திடத்தில்.
இவிடத்(து) இருக்கும்போ(து) இழகிக் கூடலூர்
அவிடத்துப் பிள்ளைகள் அடைந்தனர் சிலரால்,
அவர்களின் பொருட்டால் ஐந்துநாள் வரையும்
தவமணி புராணம் தான்படித் திருந்தோம்.
அவ்வூர் விடுத்தே அகன்று நாகூரில்
எவ்வூருளரும் ஏத்திட வந்தோம்.
நகுதா அவர்கள் நன்மக்க(ள்) அனைவரும்
வெகுவாகச் சொன்னார்; வேண்டினார். நானும்
ஊருக்குப் போக உவந்திருக் கின்றதால்
ஆருக்கும் விருப்பமாய் அனுப்புவீர் என்றேன்
நன்றென்று சொல்லி நாலைந்து நாள்மட்டும்
நின்றநாள் எல்லாம் நீதிசேர் காவியம்
படித்திடக் கேட்டே பண்புடன் மகிழ்ந்தார்.
அடுத்தோர் எவரும் ஆனந்தம் கொள்ளத்
தங்களை மிகவாய்த் தகையுளர் என்றும்
பொங்கிய செல்வத்தால் புகழுளர் என்றும்
போற்றிப் புகழ்ந்த புகழ்ச்சி என்சொல்வேன்!
தேற்றிய வரிசை சிறந்த ஷாஹுல்ஹமீத்
ஆண்டகை அருளால் அவிடம்விட்(டு) எழுந்தே
பூண்டமேல் வழியாய்ப் புகுந்து(உ)வந்து வந்தோம்
கனம்உயர் கீழக்கரையினில். அவிடத்து
இனமுறை யவரும் இருக்கும் மிக்கோரும்
இந்தப் புராணத்து இயல்பினைக் கேட்டுச்
சந்தோஷ மாகச் சாற்றினர் மகிழ்ந்தார்.

— — — —

— — — —

— — தங்களை

அவரவரின் மனத்தின் அருமையே போல
தவநிலை யோடே தாம்தாம் புகழ்ந்தார்
ஆதர வுடனே அவிடத்தோர் எட்டுநாள்
காதலோ டிருந்தே களிப்புடன் எழுந்தோம்
பின்னர்ஓர் தோணியில் பிரியமோடு ஏறி
நன்னயத் துடனே நாளொன்று சென்றபின்
நாயகன் அருளால் நன்மனம் போலக்
காயல்மா நகரம் கணிபெறச் சேர்ந்தோம்.
செய்யவள் மேவும் திருநகர் அதனில்
அய்யர்கள் எவரும் அருமையின் வந்து
விருப்பொடு கலந்து விளங்கு காவியத்தைத்
திருப்பய னோடே சிறப்புடன் கேட்டார்.
கேட்ட வுடனே கிளர்ந்த மகிழ்வினால்
வேட்டமாய்த் தினந்தினம் விருப்பமே பூண்டார்.
அவர்களுக்கு அதுவே ஆதரம் கொண்டார்.
எவர்களும் போற்ற எனக்(கு)இது வேலையாய்
உவப்பாய் இருக்கிறேன் உணர்ந்திவை அறிக

— — — —

= — — —

இதன்பின்னர் சேகனாப்புலவர் காயல்பட்டினம் உவைசு நெயினார் லெப்பை என்பவர் வேண்டிக்கொண்டதற்கிணங்கி சீறாவென்னும் சிறந்திடும் ஏட்டைத் திருத்திச் செப்பனிட்டு அச்சிடும் பணியில் ஆர்வத்துடன் இறங்

கினர். இதற்காக அவர்கள் மேற்கொண்ட முயற்சி சிறி தல்ல. சீறாப்புராணமோ பல்வேறு கையேட்டுப் பிரதிக ளாக இருந்து ஒரே பிழைமயமாகவும், குழப்பம் மயமாக வும் விளங்கியது. அதனைச் சீர்செய்து செப்பனிடுவது சேக னுப்புலவருக்கே சிரமமான செயலாக இருந்தது. எனினும் அந்த நாவுயர் நூலானது நனிபெருமையுடன் வெளிவர வேண்டுமென்ற ஆர்வத்தால் உந்தப்பட்டு அயராது உழைத்தனர் அன்னார். ஒருநாள் திருத்தணிகை சரவணப் பெருமாள் ஐயர் என்னும் புலவர் சேகனுப்புலவரைப் பார்க்க வந்தக்கால், இந்தச் சீறாவைத் திருத்திச் செப்ப னிடுவதற்குள் மூன்று சீறாவைப் பாடிவிடலாம் போலிருக் கிறது என்று கூறினாராம் சேகனுப்புலவர். அவ்விதமானால் அவர் எத்துணைச் சிரமத்தை மேற்கொண்டு சீறாப்புராணத் தைத் திருத்திச் செப்பனிடும் பணியில் ஈடுபட்டிருந்தனர் என்பதை உய்த்துணருங்கள். அவ்வாறு திருத்தும்பொழுது கூட அதிகப்பிரசங்கித்தனமாக, அனுவசியமாக எதனை யும் திருத்திவிடாது உமறுப்புலவர் பெருமானுக்குச் சங்கை செய்தே அதனைத் திருத்தினார். 'மகமதுநபி' என்று உமறுப்புலவர் மோனைநோக்கிக் கூறியதைத் திருத்தக்கூடச் சேகனுப்புலவரின் கைகள் கூசின. பன்மை எழுவாய்க்கு ஒருமைப் பயனிலை போட்டு உமறுப்புலவர் செய்யுட்கள் சிலவற்றை முடித்திருப்பதைத் திருத்தக்கூட சேகனுப்புலவரின் உள்ளம் நடுங்கியது. எனவே அவற்றை உள்ளவாறே விட்டுவிட்டார் அவர்.* இவ்வாறு அவர்

* சேகனுப்புலவரின் மாணவராகிய ஜைனுத் தீன் புலவர் அவர்களிடம் ஒருவர் சென்று ஷாம் ஷிஹாபுத்தீன் ஒலியுல்லா அவர்களின் பாடல்க ளைத் திருத்தித் தருமாறும் தாம் அவற்றை அச் சிட விரும்புவதாகவும் கூறியபொழுது ஜைனுத் தீன் புலவர் அழுதுவிட்டனராம். 'அந்த மகா னின் பாடல்களைத் திருத்த நானா அருகதையுள் ளவன். என் ஆசான் சேகனுப்புலவர் அவர்கள் கூட முன்னோர்கள் பாடிய பாடல்களில் கைவைக்க அஞ்சுவரே. அப்படியிருக்க, நானா அவ்விதம் செய்வேன்' என்று கண்ணீருடனும், கம்பலையுட னும் கூறினராம். இஃது இங்கு நினைவுகூரத்தக்கது;

பெரும் சிரமத்துடன் சீறாப்புராணத்தைத் திருத்திமுடித்த பின்தான் சீறாப்புராணத்தின் சுத்தப் பிரதி அவருடைய கைக்குக் கிட்டியதாம். அப்பொழுது அதனையும் தாம் திருத்தி எழுதிய பிரதியையும் ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது நாலைந்து செய்யுட்கள்தாம் அதற்கும் தம்முடையதற்கும் இடம் வேறுபட்டு இருந்தனவாம். அவ்விதமானால் சேகனாப்புலவரின் ஆற்றலையும், திறனையும் நாம் எவ்வாறு புகழ்வது? என் நாவுகொண்டு ஏற்றுவது?

சீறாப்புராணம் திருத்தி முடிவுபெற்றதும் அதனை அச்சிற் பதிப்பித்து நூல் ஒன்றுக்கு ஒரு வராகன் விலை வைத்து விற்றனர் அன்னார். அப்பொழுது திருச்சியிலுள்ள சாந்துக்கார ஷம்சுத்தீன் என்னும் ஒருவர் சேகனாப்புலவரை அணுகி ஒரு வராகன் கொடுத்து அவரின் கையொப்பத்துடன் ஒருபிரதி வாங்கிச் சென்று அதனைத் தாமும் அச்சடித்து குறைந்த விலைக்கு விற்றார். இதைக் கண்டதும் சேகனாப்புலவருக்கு ஏற்பட்ட வெஞ்சினத்திற்கு அளவில்லை. ஒருதடவை சாந்துக்கார ஷம்சுத்தீன் தம்முடைய கள்ளச்சீறாவை விற்பனைசெய்யச் சென்னை வந்திருக்கிற செய்தியை அறிந்து அவரைத் தம்முடைய இருப்பிடமாகிய அங்கப்பநாயக்கன் தெரு, 205ம் எண்ணுள்ள இல்லத்திற்கு வரவழைத்து 'தம்பி! நான் எத்துணையோ சிரமத்தை மேற்கொண்டு சீறாப்புராணத்தைத் திருத்திச் செப்பனிட்டு, அச்சிற் பதிப்பித்து வெளியிட்டு விற்பனை செய்து வருகிறேன். நீரோ என்னிடம் ஒருவராகன் தந்து அப்பிரதி ஒன்றை விலைக்கு வாங்கிச் சென்று எளிதாக அச்சிட்டு என்னைவிடக் குறைந்த விலைக்கு விற்பனை செய்து வருகிறீர். நான் விற்றுவரும் விலைக்கு நீரும் அதனை விற்று வருவீராயினும், பண ஆசை பிடித்த நீர் ஒரு பணக்காரனாகட்டும் என்று எண்ணி அதனைப் பொருட்படுத்தாதிருந்துவிடுவேன்; ஆனால் நான் அதிக விலையும், நீர் குறைந்த விலையும் போட்டு அதனை விற்றுவருவதைக் கண்டு பொதுமக்கள் என்ன எண்ணுவார்கள்? உண்மையில் நீரே பணத்தாசை பிடித்தவராக இருக்க, என்னையன்றோ பணத்தாசை பிடித்தவன் என்று இழித்துரைப்பர்! இவ்வாறு என்நிலையை ஆக்கிவிட்டீரே. மேலும் நான் என் நூலை பிரெஞ்சு இந்தியாவிலும், சென்னை மாவட்டத்திலும் பதிவு செய்துள்

ளேன். அப்படி இருக்கும்பொழுது உம்மீது நான் வழக்குத் தொடரின் எனக்குத்தானே சாதகமாக முடியும்' என்று இனிமையுடன் வினவினர். அதற்கு அந்தச் சாந்துக்கார ஷம்சுத்தீன் என்பவர் வாய்க்கொழுப்புடன் 'வேண்டுமானால் வழக்குத் தொடர்ந்து கொள்ளுங்களேன்' என்று கூறினார். அதைக் கேட்டதும் சேகனுப்புலவரின் கண்கள் இரண்டும் கொவ்வைக்கனிபோல் சிவந்தன. 'இந்த மனிதர்கள் நடத்தும் நீதிமன்றம் ஏறியா என்னை உன்மீது வழக்குத் தொடரச் சொல்கின்றாய்? அதுவேண்டாம். இறைவனின் மாபெரும் நீதிமன்றம் ஏறி அவனுடைய திருச்சன்னிதானத்தின் முன் நின்று உன்மீது வழக்குத் தொடர்கின்றேன். போ' என்று வெகுண்டுரைத்தனர். இதனைச் சிறிதேனும் பொருட்படுத்தாது சாந்துக்கார ஷம்சுத்தீனும் அவ்விடத்தை விட்டும் அகன்றார். என்ன விந்தை! சேகனுப் புலவரின் சாபத்திற்குள்ளான அவர், சின்னாட்களில் ஒரு கொலை வழக்கில் ஈடுபட்டு தூக்கு மரத்தில் தொங்க வேண்டியதேற்பட்டு விட்டது.

இதுமுதல் மக்கள் சேகனுப் புலவரின் நாவுக்குப் பெரிதும் அஞ்சினார்கள். அவரை ஆண்டவனின் அருளடியார் என்றும், மாண்புமிக்க மேதகையென்றும் உணர்ந்து அவருக்குப் பெரிதும் மரியாதை செய்யலாயினர். ஹிஜ்ரி 1260—61ல் சென்னைமாநகரில் காலராநோய் ஏற்பட்டு மக்களைச் சூறையாடிச் சென்றபொழுது முஸ்லிம்கள் ஒருங்கு திரண்டுவந்து சேகனுப்புலவரை அணுகி, இறைவனிடம் இறைஞ்சி இந்நோய் அகலுமாறு செய்யவேண்டுமென்று வேண்டிநின்றனர். உடனே புலவர் பெருமான் பதினொன்று இறைஞ்சற் பாக்களைப் பாடினர். அவர் பாடி முடித்ததும் சென்னையைப் பீடித்திருந்த அப்பெருநோய் பரிதியைக் கண்ட பனிபோன்று நீங்கிற்று. மக்கள் மகிழ்வும், நலமும் பெற்றார்கள். அந்த இறைஞ்சற் பாக்களில் ஒன்றை இதோ தருகின்றேன். நீங்களும் அதனைப்பாடி மறையளித்த இறையவனின் மேன்மைமிகும் அருட்காவலில் அடைக்கலம் புகுவீர்களாக!

வள்ளல் மகுமூ தெனுநபினார் வழியி லொழுகி உன்
னுடைய

விள்ளும் மார்க்கம் தனையெடுத்து விளக்கும் தீனோர்
ஆகையினால்
தெள்ளும் அறிவே மெய்ப்பொருளே! தெளிவே எங்கள்
கண்மணியே!!
எள்ளும் ஆபத்(து) அணுகாமல் இன்பம் புரிவாய்
றகுமானே!!

இவ்வித அருட்பாடல்களைப் பாடி தங்களின் துயர் போக்கிய சேகனாப்புலவரை மக்கள் புலவர் நாயகம் என்று போற்றிப் புகழ்ந்தார்கள். நாயகப்புலவர் என்று ஏற்றித் துதித்தார்கள். அவர் அழைக்கப்படாத திருமணங்களோ அல்லது விழாக்களோ இல்லை. திருமணத்திற்குச் செல்லின் மணமக்களை வாழ்த்தியும், அவர்களுக்காக இறைவனிடம் இறைஞ்சியும் பதங்கள் பாடுவர் அன்னார்.

ஒருதடவை புலவர் நாயகம் காயல்பட்டினத்தில் தங்கியிருக்குங்கால் அவரின் அடுத்தகத்துப் பெண் குழந்தை ஒன்றுக்கு முதன்முதலாகப் பிணைந்த குழைந்த சோற்றைத் தீற்றுங்கால் அது அக்குழந்தையின் தொண்டையில் விக்கி அக்குழந்தை இறப்பெய்தும் நிலை ஏற்பட்டுவிட்டது. உடனே அவ்வீட்டுப் பெண்கள் பக்கத்துவீட்டுக்கு ஓடோடிவந்து, பாவிசைத்துக்கொண்டிருந்த சேகனாப் புலவரை விரைவில் வருமாறு அழைத்தனர். அவ்விதமே அவரும் சென்று குழந்தையின் தொண்டையைத் தம் அருட்கரங்களால் தடவியதும் ஆண்டவன் கிருபையால் அக்குழந்தை நலம்பெற்றது. அதன்பின் சேகனாப்புலவர் அவ்வீட்டுப் பெண்களை நோக்கி, 'இனிமேல் உங்கள் குடும்பத்தில் எக்குழந்தைக்கும் இவ்விதம் செய்யாதீர்கள். இக்குழந்தையின்மூலம் உங்களின் குலம் தழைக்கும்' என்று வாழ்த்தினராம். அவ்விதமே அக்குழந்தையின் மூலம் அக்குலம் தழைத்ததென்றும், அக்குடும்பத்தில் இதுகாறும் குழந்தைகளுக்குச் சோற்றைப் பிசைந்து தீற்றும் வழக்கத்தை மேற்கொள்ளவில்லை என்றும் தெரியவருகிறது.

புலவர்நாயகம் முகம்மது பந்தருக்குச் சென்றிருந்தக்கால், அங்கிருந்த வட்டாத்தைக்கால் தண்ணீரைக்

குடித்துவிட்டு, 'வட்டாத்தைக்கால் தண்ணீரோ, வான லோகத்துப் பன்னீரோ' என்று வியந்துரைத்தனர் என்றும், அத்தண்ணீர் இன்றளவும் மதுரமாகவே உள்ளது என்றும் கூறுவர்.

அவர் முகம்மது பந்தரில் வந்திருக்கும்பொழுது ஒரு வாழைப்பழத்தை அரை அளவு கடித்து உண்டு விட்டு மீதியை அவ்வூர் அருமது மரக்காயர் அவர்களிடம் கொடுத்து, 'இதை உண்ணுங்கள்' நீங்கள் பெரும் புலவ ராவீர்கள்' என்றுரைத்ததாகவும் அவ்விதமே அவர் பிற் காலத்தில் பெரும் புலவரானார் என்றும், ஒரு குவளைப் பாலைச் சிறிது குடித்துவிட்டு, பாக்கியை செய்குநெய்னு மரக்காயரிடம் கொடுத்து 'இதனை அருந்து, நீ அரும்புல வனாய்' என்று கூறியதாகவும், அவ்விதமே அவர் பிற் காலத்தில் அரும்புலவராகி, 'கவிச்சாகரம்' என்ற பட் டமும் பெற்றார் என்றும் கூறுவர்.*

* இந்தக் 'கவிச்சாகரம்' செய்குநெய்னு மரக் காயரின் தந்தை ஹாஜி காதிர் அலி மரக்கா யரும் பெரும்புலவர். அவர் சேகனாப் புலவ ரின் மாணவர். 'முன்னுரை புத்தூருசாமை மொழிந்த என் குருவாம் எந்தை' என்று அவர் போற்றித் துதிக்கின்ற சேகனாப்புலவரின் ஆணைக் கிணங்கி அவர் ஹிஜ்ரி 1282ல்

சாமெனும் நாட்டைச் சார்ந்த தலத்தினில் துருபென்(று)
ஓதும்
பூமியும் தருபலூசூர் புகழ்மிகு கைசர் யாவும்
கோமக னுடன்போரா டிக்கொண் டசீர் வாகைக்
[கெல்லாம்
நாமம் நாட்டினன் புத்தூ குத்தூறு பெனநவில
[மாதோ.

புலவர் நாயகத்தின் நண்பர் ஒருவர் தம் அருமை மகனை அவரிடம் அழைத்து வந்து அவருக்குப் பாடம் சொல்லிக்கொடுக்குமாறு வேண்டிக்கொண்டார். அவ்விதமே சேகனுப்புலவரும் செய்யவிரும்பி அப்பையனை நோக்கி, 'பிள்ளாய்! இரும் படியும்' என்று கூறினர். என்ன விந்தை! விதிசெய்த பெரும்பிழையோ, அல்லது அவருடைய நா செய்த பெரும் தவருே அம்மொழிகள் இரண்டும் அறமாக மாறி பிற்காலத்தில் அவன் பெரிய மனிதனுன பொழுது இரும்படிக்கும் கொல்லனுகிவிட்டான்.

சென்னையில் அன்னூர் தங்கியிருக்கும் பொழுது நாயகத் திருமேனியின் பிறந்தநாள் விழா (மௌலிது) வெகு சிறப்பாக பன்னிரண்டு நாட்கள் நடைபெற்றது. ஒரு நாள் இளைஞர்கள் புலவர்நாயகத்தை அணுகி இன்று பங்கிடுவதற்குக் காணிக்கைப் பொருள் ஏதாவது அவர் அனுப்பிவைக்க வேண்டுமென்றும், இன்று அவர் அனுப்ப வேண்டிய முறையென்று தாங்கள் திட்டம் செய்திருப்ப தாகவும் கூறினர். புலவர்நாயகமும் அதற்கு இணங்கி பழக்கடை சென்று தம்புச் செட்டி என்ற பழ வணிகன் ஒருவனிடம் மாம்பழம் வாங்கிவந்தனர். அவனே மதுர மாம்பழத்தை மாதிரி காட்டி புளி மாம்பழத்தைக் கொடுத்து ஏமாற்றி விட்டான். விழா முடிவுற்றதும் புலவர்நாயகம் கொண்டுவந்திருந்த மாம்பழம் எல்லோருக்கும் வழங்கப்பட்டது. அதனை உண்ட அனைவரும் பழம் புளிக்குதே, பழம் புளிக்குதே என்று கூறி முகம் சுளித்தனர். அதனைக் கேட்டதும் சேகனுப்புலவரின் செந்தாமரை முகமும் வாடியது. தாம் அனியாயமாய் ஏமாற்றப்பட்டு விட்டதை உணர்ந்தனர் அன்னூர். உடனே பின்வரும் கும்மிப்பாட்டு ஒன்று அவரின் வாயிலிருந்து வெஞ்சினத்துடன் வெங்கனை போன்று வெளிப்போந்தது.

'கும்மியடி பெண்ணே கும்மியடி
தம்புச் செட்டி தலைதெறிக்கக் கும்மியடி'

---

இந்நூல் இவ்வித அருமையான பாக்களால் அமைக்கப்பட்டு அச்சடிக்கப்பட்ட 'புருபாக' அன்னூரின் பேரர் முகம்மது பந்தர் 5. காதிர் அலி மரக்காயரிடம் இன்றும் உள்ளது.

என்று அவர் பாடியதும், தன்வீட்டிலிருந்த தம்புச் செட்டி திடீரெனக் கீழே விழுந்து தலையில் காயமுற்றுக் குருதி சிந்தி உயிர் நீத்தனன் என்றும் ஒருகதை வழங்கி வருகிறது.

புலவர் நாயகம் கொழும்பு சென்றிருந்த பொழுது கொழும்பிலுள்ளார் அவருக்கு விழுமிய வரவேற்பு நல்கிக் கௌரவித்தனர். எனினும் இவ்வரவேற்பைக் கண்டு மனம் புழுங்கிய சிலர் அவருக்குப் பல்வேறு இடக்குகளும் இடையூறுகளும் விளைவித்து அவரின் வசை அம்புக்கு இலக்காயினர். அதன்காரணமாக அவர்கள் பல்வேறு தொல்லைகளுக்கும், துன்பங்களுக்கும் இலக்காகி அங்குமிங் கும் அலைந்து திரிந்து பிச்சை எடுக்கும் நிலையிலாயினர். இதனைச் சேகனாப்புலவரே தம் நண்பர் ஒருவருக்கு எழு திய மடலில்

நான் கொளும்பில் வந்தபின்பு நானாவித நட்புத்
தான் கொளும்பார் செய்ததுண்டு. சாற்றிடிலோ—
வான்குவிந்த
வையகமும் போதாது. வஞ்சகர்தம் செய்திசொல்லப்
பையவொரு வார்த்தை பகருவேன்—கையறமும்
கொண்டார்; வசைவம்பும் கொண்டார்; பலபிணிகள்
கொண்டார்; அலைதலுடல் கொண்டார்கள்—
மண்டுதுயர்
கொண்டார் சனிஉறவும் குன்மம்முதல்—கொண்டார்கள்

என்று குறிப்பிடுகின்றார்.

புலவர்நாயகம் கொளும்பில் தங்கி இருக்குங்கால் யாழ்ப்பாணத்து ரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவர்களில் சிலர் அவரை அணுகித் தங்களின் மாதாகோவிலில் பூசை நேரத்தில் வாத்தியங்களுடன் பாட ஒரு வண்ணம் பாடித் தரவேண்டுமென்று குணிப்புக் கொடுத்துவிட்டுச் சென்ற னர். அவர்கள் சென்றபின் புலவர் நாயகத்தின் மூளை வேகமாக வேலை செய்தது. பாடுவோமா, வேண்டாமா

என்று அவரின் மனம் எண்ணி எண்ணி அழுந்தது. 'சேக னுப்புலவீர்! பணத்திற்காகக் கிறிஸ்தவர்களுக்கு வண்ணம் பாடிக்கொடுத்து முஸ்லிம்களின் சினத்திற்கும், நிந்தனைக்கும் ஆளாகாதீர்' என்று அவருடைய மனச்சான்று அவருக்கு அறிவுறுத்தியது. எனினும், அவர் ஒரு வண்ணம் பாடிவிட்டார். சின்னாட்கள் சென்றபின் அக்கிறிஸ்தவர்கள் ஆயிரம் ரூபாய் காணிக்கையுடன் அவரை அணுகி, வண்ணம் பாடியாகிவிட்டதா என்று மரியாதையுடன் வினவினர். 'ஆம், முகம்மது நபிகள் கோமான் (ஸல்) அவர்கள்மீது ஒரு வண்ணம் பாடியுள்ளேன்' என்று புன்முறுவலுடன் மறுமொழி பகர்ந்தனர் புலவர் நாயகம். அதைக்கேட்டு பெரிதும் ஏமாற்றத்துடன் அவர்கள் வந்த வழியே திரும்பிச் சென்றனர்.

அதன்பின் புலவர்நாயகம் காலி, மாத்துறை முதலிய நகரங்களுக்குச் சென்று மிகப்பெரும் மதிப்புப் பெற்றனர். இதனை அவர் தாம் ஒரு நண்பருக்கு எழுதிய மடலில் பின்வருமாறு அழகாகக் குறிப்பிடுகின்றார்:

கொளும்பினை விட்டுக் கொற்றமே கொண்டு
மழுங்கிய காலி மாநகர் வந்து
மூன்றிரண்டு திங்கள் முற்றுற இருந்து
சான்றதோர் மாத்துறை சார்ந்தனன். அவிடம்
வாழ்ந்திடும் முசிலிமானவர் மகிழ்வின்
சூழ்ந்துஇனி(து) அன்பாய்ச் சுகம்பெறப் பணிந்தே
சங்கைகள் பலவும் செய்தனர். மற்றும்
இங்குள முதலிமார் எல்லோரும் மனதிற்
களிப்பொடு சீர்மை கனிவொடு செய்வார்.
பெரிய முதலியார் பெருமையாய் அழைத்தே
அருமை ஆசாரம் அன்பொடு செய்தார்.
காலியின் நகரக் காரிய காரர்

சீலமாய் வந்து தெரிசித்துப் போனூர்.
இரண்டுமூன்று நாளில் இறையவன் அருளால்
திரண்டவர் மகிழச் சிறப்பொடு புறப்பட்டு
உவப்பொடு வருவேம் உணர்வுடன் தெளிக!

*இவ்வாறு தாம் யாருக்கு மடல் தீட்டினூலும் கவியாகவே தீட்டும் வழக்கமுடைய புலவர்நாயகம் மக்களின் தராதரம் அறிந்து அவர்களுக்குத் தக்கவண்ணம் மடல் தீட்டும் பண்பு பெற்றிருந்தனர்.*

பொருபகைஞர் அலறியெழு வாய்குழற இடியின்நனி
புகலும் உயர் கருமே கமாய்க்
கவிகள்பொழி நாயகன் ஷெய்கப்துல் காதிறவர்
கடிதின் வரை நிருபம் இதுகாண்
கண்டவுடன் எதிர்கொண்டு தெண்டனைகள் செய்து
[முறை
கையேந்தி வாங்கி உணர்க'

*என்று தம்மினும் சிறியார்க்கு மடல் தீட்டும் அவர் தம்மினும் பெரியார்க்கு எழுதும்பொழுது*

'மண்டலத்தில்
ஷெய்கப்துல் காதிறென்று செப்பும் திருப்பெயரான்
கைகுவித்துச் சொல்லும் கடிதாகு'

*என்று குறிப்பிடுகின்றனர்.*

*தம்முடன் ஒத்த தகுதியும் வயதும் உள்ள கொழும்பு வாழ் வேலுப் பிள்ளை என்பாருக்குத் தம் உறவின்முறையான் ஒருவனை அறிமுகப்படுத்திவைத்து அவனுக்கு ஆவன செய்யுமாறு வேண்டிய மடல் ஒன்றைக் கீழே தருகின்றேன். அதிலே வேலுப்பிள்ளை குடும்ப நலனை விசாரித்துவிட்டுத்*

*தம் உறவினன் ஒருவன் ஜவுளி கொண்டு கொழும்பு வருவதாகவும் அவன் இதற்கு முன் அங்கு வந்ததில்லை என்றும் எனவே அவனுக்கு வேண்டிய ஆலோசனைகள் கூறி நலன் செய்து உதவவேண்டும் என்றும் அம் மடலில் அவர் வேண்டிக்கொள்கிறார். அது இதோ உள்ளது, படிப்பீர்களாக.*

திருமருவு மதுரமழை பொழிகின்ற வாக்குநெறி
சீர்பெறு கின்ற உளமும்
செம்மையணி கொண்டுலவு ஷெய்கபுதுல்
[காதிர்மகிழ்
சிந்தையொடு தீட்டு நிருபம்
உருமருவு பலபேத உளம்மருவும் உயிர்வகைகள்
உண்டுமொரு நாதன் அருளே
உண்டாடு வணிகர்குல நன்கொழும் பூர்தனில்
உறைவேலுப் பிள்ளை காண்க
அருமறையின் இறைவனருள் கொண்டுசுக
[முற்றநின்
அருமக்கள் மருமக்களோ(டு)
அவணுறையும் முறைமையுணர் கிற்றிலம்
[அதற்குரிமை
அங்குளது கண்டு ணர்கபின்.
ஒருமைந்தன் முறைமைந்தன் சவளிகொடு
[வருகிறான்.
ஒருபோதும் அவண் வந்திலான்;
ஒருமையொடு தற்காக்கும் ஒழுகுசொ(ல்)லி
[நயன் அணுக
உதவி நிறையே முயல்கவே.

இவ்வாறு புலவர் நாயகம் முஸ்லிம்களுடன் மட்டும் தொடர்பு வைத்துக்கொண்டிராது பிற மதத்தினருடனும் அன்பும் நட்பும் கொண்டு அளவளாவிவந்தனர். தாம் ஒருவருக்கு எழுதிய மடலில்.

சிவஞானி என்னும் சீரியர் தமக்கும்
தவஞானி வெங்கடா சலமுதலி யார்க்கும்
மற்றுளோர்க் கெல்லாம் வாசித்துக் காட்டி
நற்றுரை சலாத்தின் நனிதுஆப் பெறுமின்.

என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்து அவரின் பரந்த மனப்பான்மை தெற்றென விளங்குகின்றது. மேலும் திருத்தணிகை சரவணப் பெருமாள் ஐயர், சபாபதி முதலியார் போன்ற பெரும் புலவர்களும் புலவர் நாயகம் அவர்களைச் சந்தித்து நட்புப் பாராட்டி மகிழ்ந்தனர்.

ஆனால் ஒரே ஒரு புலவர் மட்டும் புலவர் நாயகத்தின் மதிப்பையும் மேன்மையையும் கண்டு அழுக்காறுற்று அவர் பாடிய திருக்காரணப் புராணத்தைப்பற்றி இழித்துரைத்து அஃது என்ன திருக்கு ஆரணமோ? கோணலான வேதமோ என்று கோணல் புத்தியுடன் பொருள் விரித்து இழித்தனராம். இது புலவர் நாயகத்தின் செவிப் பட்டதும் 'இவ்வாறு கோணல் புத்தியுடன் பொருள் விரிப்பதென்றால் நான் பல நூல்களுக்குக் கோணலான பொருள் கூறுவேனே. திருக்குறள் என்பதனை, திருக்கு உறள் என்றும் திருக்கோவையாறு என்பதனை திருக்கு ஒவையாறு என்றும் திருக்கோயில் என்பதனை திருக்கு—ஓயில் என்றும் இன்னும் எத்தனையெத்தனையோசொற்களை இவ்வாறு சிதைத்துசொற் கொலை செய்வேனே. ஆனால் நேரிய அறிவும் நேர்மைத் திறனும் பெற்றவர்களுக்கு இவ்விதம் செய்வது ஓர் அழகாமோ? அது அவர்களின் இழி தன்மையை யல்லவோ எடுத்துரைக்கும்' என்று கூறினாராம். அதன்பின் அப் புலவர் மீண்டும் வாயைத் திறக்கவில்லையாம்.

புலவர் நாயகம் தமிழில் பெரும் புலமை பெற்றிருந்ததோடல்லாது அரபி, பார்ஸி, சமஸ்கிருதம் ஆகிய

மொழிகளிலும் பாண்டித்யம் பெற்றிருந்தனர். ஆனால் அவர் அரபி மொழியில் ஏதாவது எழுதினரா என்பதற்கு ஆதாரமாக யாதொன்றும் கிடைத்தில. ஆனால், அரபியில் அப்துல்கரீம் ஜீலி என்பார் எழுதிய 'இன்ஸானெ காமில்' என்னும் ஞானநூலையும் முகியத்தீன் இப்னு அரபி எழுதிய புஸூஸையும் பிரதிசெய்து புலவர்நாயகம் எழுதிய கைப் பிரதிகள் இப்பொழுதும் காயல்பட்டினம் மஹ்ளராவில் உள்ளன. மேலும் அன்னர் தமிழில் தம் கைப்பட எழுதிய ஒரு கடிதமும் அங்கு உள்ளது. அது பழங்காலத் தமிழ் வசன நடையில் அமைந்துள்ளது.

ஒருநாள் புலவர் நாயம் காயல்பட்டினம் பெரிய பள்ளியில் தாம் இயற்றிய 'புத்ஹூஷ்ஷாம்' என்னும் பெரும் காப்பியத்தைப் பாடிப் பேருரை நிகழ்த்திக்கொண்டிருக்கும்பொழுது இரு வடமொழிப் புலவர்கள் புலவர் நாயகத்திற்கு வடமொழியில் உள்ள புலமையைச் சோதித்தறிவதற்காக அவரிடம் வந்தனராம். இதனை நன்கு விளங்கிக் கொண்ட புலவர் நாயகம் புத்ஹூஷ்ஷாமிலுள்ள விருத்தப் பாக்களைப் பாடி அதற்கு வடமொழியில் விரிவுரை நிகழ்த்தினராம். அவர்களின் வாயிலிருந்தும் வடமொழிச் சொற்கள் நான் முந்தி' நீ முந்தி என்று வெள்ள மடை திறந்தாற் போன்று வெளிப் போந்தனவாம். அதைக் கண்டு பிரமிப் படைந்த அப் புலவர்கள் தென்மொழியிலும் வடமொழியிலும் ஒருங்கே புலமை பெற்ற அகத்திய மாமுனிவர் பொதிகை மாமலையில் வாழ்வதாகவல்லவோ கேள்விப்பட்டோம். ஆனால் அவர் இங்குக் காயல்மா நகரிலல்லவோ இருக்கின்றூர் என்று தங்களையறியாமல் வியப்புமொழிகூறி இறும்பூதெய்திச் சென்றனராம்.

இவ்வாறு புலவர் நாயகம் அவர்களுக்கு மொழியறிவு மட்டுமல்லாது பல்வேறு திறனும் ஒருங்கமைந்திருந்தது. அவர் பலமுகத்து மேதையாக விளங்கினர். தையற் கலையில் சிறந்த நிபுணராக விளங்கியதோடு நூதனமான கருவிகளைக் கண்டுபிடிப்பதிலும் சிறந்து விளங்கினர். பலவித மான பட்டங்களைச் செய்து விண்ணிலே பறக்கவிட்டு அவற்றை ஒன்றோடொன்று மோதவிட்டுச் சண்டையிடு மாறு செய்து விளையாட்டுக் காட்டுவதிலும் அவர் வல்லுனராய் விளங்கினர். அவருடைய இவ்விதத் திறமைகளையெல்லாம் கண்டு வியந்த ஒருவர் காயல்பட்டினம் தைக்கா

சாகிபு அவர்களிடம் அவற்றைக் கூறி வாயார்ந்தபொழுது 'அவர் ஒரு அப்தால் (இறைவனை நெருங்கியவர்களில் ஒரு வகையினர்). ஆதலின் அவருக்குச் சந்ததிகள் இருக்காது' என்று கூறினராம் அப் பெருந்தகை. அவ்விதமே புலவர் நாயகம் இரு மணம் முடித்தும் ஒரு மகவும் அவருக்குப் பிறந்தில. ஆனால் அவரின் இல்வாழ்வு இன்பகரமாய்க் கழிந் திருக்க வேண்டுமென்பது அவரது இரண்டாவது மனைவி யார், முகம்மது தங்கள் நபிகள்கோமான் (ஸல்) அவர்களின் முதல்மனைவியாகிய கதிஜா நாயகியின் திருப்பெயரைப்பூண்ட தோகைநல்லார் ஹிஜ்ரி 1264-ல் இறந்தபொழுது அவர்மீது புலவர் நாயகம் பாடிய சரமகவியிலிருந்து தெரியவருகிறது. அதில்அவர் தம் மனைவியாரைப்பற்றிக் குறிப்பிடும்பொழுது,

தெருளுடைய புத்தியும் மறைநெறி விளக்கமும்
தெளிவு நடுநிலைமை யுடனும்
தேடரும் ஒழுக்கமும் ஷறகினின் நுணுக்கமும்
செய்தொழுகை முறை பேணலும்
சேர்ந்தவர்க்கு உதவியும் ஆய்ந்துள நடக்கையும்
திகழு(ம்)நற்குண நன்மையும்
தெரியும்விசு வாசமும் கணவன்சொற் பேணலும்
திருவடிக் காளாதலும்
மருளுடைந்(து) எரியு(ம்)உயர் ஒருமைவழி [நிற்றலும்
மனவாக்கு(ம்) ஒன்று படலும்
மருவிவரு நீர்மையுள எனதுமனை யார்நபிமுன்
மனைவிதிரு நாம முடையார்!

என்று புகழ்ந்துள்ளார்.

இதன்பின் புலவர் நாயகம் நீண்டநாள் இவ்வுலகில் வாழவில்லை. நான்கே நான்கு ஆண்டுகள்தாம் இவ்வுலகில் வாழ்ந்தனர். ஒருநாள் அவர்கள் சென்னையில் கப்பல்

மீராப் பிள்ளையின் வீட்டின் மேல்மாடியில் தங்கியிருக்கும் பொழுது கப்பல் மீராப்பிள்ளையைத் தனியே அழைத்து 'நான் இங்கு வந்த தவணை முடிந்துவிட்டது. இன்றிரவு நான் புறப்படுகிறேன்' என்று கூறினர். 'எங்கே' என்று வினவினார் கப்பல் மீராப்பிள்ளை. 'அல்லாஹ்விடம்' என்றனர் புலவர் நாயகம். இதைக் கேட்டதும் 'ஓ'வென்று அலறிவிட்டார் கப்பல் மீராப்பிள்ளை. அதன்பின் அவருக்கு ஆறுதல் பல கூறி, 'இன்றிரவு நான் இறந்துவிடுவேன். நாளைக் காலையில் முகம்மதெங்கள் நபிகள்கோமான் (ஸல்) அவர்களின் வழித்தோன்றலில் ஒருவர் கப்பலில் வந்து கரை இறங்குவார், அவர் வந்து என்னைக் குளிப்பாட்டி எனக்காகத் தொழுகைவைத்து என்னை என் ஆசான் குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்களின் அடக்க ஸ்தலத்திற்கு அருகே நல்லடக்கம் செய்வார்' என்று கூறித் தம் அறைக்குள் நுழைந்து தொழுது வணங்கிவிட்டு அன்றிரவு—ஹிஜ்ரி 1268—ஆம் ஆண்டு துல்கஃதா மாதம் பிறை 27 திங்களிரவு பொன்னுலகடைந்து புகழுடல் பெற்றனர்.

இக்காலை கொழும்புக்குப் பாய்மரக் கப்பலில் தம் மாணவர்களுடன் காயல்பட்டினம் மௌலானா செய்யிது அப்துர் ரஹ்மான் பகுதாதி அவர்கள் சென்றுகொண்டிருக்குங்கால் பெரும் புயல் அடித்து அவர்கள் சென்ற கப்பல் அலைகடலில் நிலை தடுமாறியது. கப்பலில் உள்ளோர் அனைவரும் உள்ளம் கலங்கித் தத்தளித்தனர். அப்பொழுது செய்யிது அப்துர் ரஹ்மான் மௌலானா அவர்கள் தம் மாணவர்களை நோக்கி 'ஒன்றிற்கும் அஞ்சற்க! சற்று நேரத்திற்கு முன்னர் எம் ஆருயிர் நண்பர் புலவர்களுயகம் அவர்கள் புவிநீத்துவிட்டனர். நான் போய் அவர்களை நல்லடக்கம் செய்யவேண்டும். ஆதலின் திருப்புங்கள் திசையை; சென்னையை நோக்கிச் செலுத்துங்கள் கப்பலை' என்று கூறினர். அவ்விதமே கப்பலும் திரும்பி, விடியலில் சென்னைத் துறைமுகம் வந்துற்றது. புலவர்நாயகம் கூறி மறைந்தவண்ணம் முகம்மதெங்கள் நபிகள்கோமான் (ஸல்) அவர்களின் வழித் திருத்தோன்றல் ஒருவர் கப்பலிலிருந்தும் இறங்கிவந்து கப்பல் மீராப்பிள்ளையின் வீட்டை அடைந்ததும் அங்குக் குழுமியிருந்த மக்களுக்குத் தங்களுடைய கண்களையே தங்களால் நம்ப இயலவில்லை. புலவர் நாயகத்தின் உண்மையான மகத்துவத்தை அப்பொழுதுதான் அனைவ

ரும் உணர்ந்தனர். அதன்பின் புலவர் நாயகத்தின் பொன்னுடலை மௌலானா அவர்களே குளிப்பாட்டி அவர்களுக்காகத் தொழுகைவைத்து குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்களின் அடக்க ஸ்தலத்திற்கு அருகே நல்லடக்கம் செய்தனர். அப்பொழுது அங்குக் குழுமிநின்ற மக்கள் வெள்ளத்தின் கண்களிலிருந்தும் கண்ணீர்வெள்ளம் கரைபுரண்டோடியது. *

இத்துணை பெருமை வாய்ந்த அன்னார் ஒரு புலவர் மட்டுமல்ல; புலவர்களின் நாயகமுமாவார். அவர் போன்று இத்துணை அதிகமான புராணங்கள் இயற்றியவர்களோ, கவி புனைந்தவர்களோ முஸ்லிம்களிலே ஒருவருமிலர். அவர் கரும்பாகச் செய்யுள் இயற்றுவதில் நிபுணர். செம்பாகச் செய்யுள் யாப்பதில் சமர்த்தர். வணிகத்தில் வல்லுனர். வணக்கத்தில் நிகரற்றவர். தொழிற்றிறம் வாய்ந்தவர்; நுண்கருவி கண்டுபிடித்தோர்; பன்மொழிப் புலவர்; திருக்குர்ஆன் முழுவதையும் திறம்பட மனனஞ் செய்தோர். இருமுறைஹஜ்ஜுச்செய்தவர்.யாவற்றிற்கும்மேலாகஇறைவனை மிகவும்நெருங்கிய, இறைவனின் உளப்பொருத்தத்தைநிறைவுறப் பெற்ற நல்லடியார். இவர்மீது நாகூர் செவத்தமரக்காய சீரியர் முப்பது மலர்களால் ஒரு தோத்திர மாலை புனைந்து சூடி மகிழ்கின்றார். அதிலே உள்ள ஒவ்வொரு நறுமலரும் ஒரு புது மணத்தை வீசிப் பரிமளிக்கின்றது. அதிலே பதினெட்டு இதழ் விரித்து, நாற்றமுடைத்த நவமணி மலர் போன்று ஒரு பெருமலர் காட்சி வழங்கி நம் கண்களுக்கும் மூக்குக்கும் மூளைக்கும் நல்விருந்து நல்குகின்றது. அது மக்களால் புலவர் நாயகம் அவர்களுக்குச் சூட்டப்பட்ட பதினெட்டுப் பட்டங்களால் நிரப்பப்பட்டுக் கண்களைப் பறிக்கும்வண்ணம் பளிச்சிடுகின்றது. அதனை நீங்களும் கண் குளிரக் கண்டு வாயாரப் படித்து, மனமார நுகர்ந்து புலவர் நாயகத்தின் மான்மியத்தை அறியுங்கள்.மகத்துவத்தை உணருங்கள்.

* இச் செய்தி காயல்பட்டினம் செய்யிது அப்துல்காதிர் மௌலானா எழுதிய 'விலாயத்துற் றகுமானியா—பீ—இம்தாதில் எத்தீமிய்யா' என்ற தமிழ் நூலில் காணக் கிடக்கின்றது.

ஜாமிலு ஆரிபு ஹாதி ஷரீபு ஜலீலு அப்தால்
ஷாமிலு ஹாமிது ஆஷிக்கு ஸாலிஹு ஷாஇறுசீர்
ஆமிலு ஷெய்கப்துல் காதிர்னை ஞர்லெப்பை
[ஆலிமெனும்
காமிலு ஹாபிலு காத்திபு ஹாஜி மஷாயிகுவே

எத்துணை இரத்தினச் சுருக்கமான அடைமொழிகள்! எத்துணை சீரும் சிறப்புமிகுந்த திருப்பெயர்கள்!! இவ்விதப் பெயர்களைப் பெற்ற அப்பெருவாழ்வினர் உயிர்நீத்து இன்றோடு 108 ஆண்டுகள் உருண்டோடிவிட்டபோதினும் அவருக்கு வழித்தோன்றல்கள், நன்மக்கள் இல்லாதபோதினும் அவருடைய அரும்பெரும் காவியங்கள் அவருடைய இலக்கிய மக்களாய் விளங்கி அன்னரின் புகழ்ப்பெயரை அவனியில் அழியாது காத்து நிற்கின்றன. புவியுள்ளவரை அன்னரே புலவர்நாயகம் என்று போற்றப்படும்வண்ணம் அவை ஒளிர்ந்து மிளிர்ந்து ஒப்புயர்வற்ற சுடர் வீசித் திகழ்கின்றன.

1) ஜாமிலு—அழகர். 2) ஆரிபு-ஞானி. 3) ஹாதி—வழிகாட்டி. 4) ஷரீபு—சிறப்பானவர். 5) ஜலீலு-கண்ணியம் வாய்ந்தவர். 6) அப்தால்—இறைவனை நெருங்கிய மகான். 7) ஷாமிலு-பண்புள்ளவர். 8) ஹாமிது-புகழ்கின்றவர். 9) ஆஷிக்கு-இறைவன்மீது அடங்காக் காதல்கொண்டவர். 10) ஷாலிஹு—நற்குணவாளர். 11) ஷாஇறு—புலவர். 12) ஆமில்-வணக்கவான். 13) ஆலிம்—அறிஞர். 14) காமில்—பூரண மனிதர். 15) ஹாபிலு—திருக்குர்ஆன் முழுவதையும் மனனம் செய்தவர். 16) காத்திபு—அழகாக எழுதக்கூடியவர். 17) ஹாஜி—மக்கா சென்று ஹஜ்ஜுச் செய்தவர். 18) மஷாயிஹு—ஞாஞசிரியர்.

# காசிம் புலவர்

அருணகிரி நாதர் அருளிய திருப்புகழுக்கு நிகரான மறு புகழை யாராலும் பாட இயலாது எனக் கருதிக்கொண்டிருந்த காலம் அது. அப்பொழுது திருவடிக் கவிராயர் என்னும் புலவரிடம் காசிம் என்னும் ஒரு முஸ்லிம் இளவலும் கல்வி பயின்றுகொண்டிருந்தார். அவருக்கு ஒரு நாள் திருப்புகழைத் திருவடிக் கவிராயர் பாடம் சொல்லிக் கொடுத்துக்கொண்டிருக்கும் பொழுது அதிலே சொன்னயமும் பொருள் நயமும் பொதிந்த பாக்கள் வருந்தொறும் வருந்தொறும் அவர் தம் மாணவர் காசிமை நோக்கி 'காசிம்! பார்த்தீரா! இவ்வித அமுதச் செய்யுட்களை, அழகுசால் கவிகளை யாராலும் பாட இயலுமா? திருப்புகழுக்கு நிகரான மறு புகழ் இல்லை என்று மக்கள் கூறுவது எத்துணை உண்மை.. எத்துணை உண்மை' என்று சொல்லிவாயார்ந்துகொண்டிருந்தார். இதனைத் திரும்பத் திரும்பக் கேட்டு காசிமின் காதுகளும் புளித்துவிட்டன. உணர்ச்சியும் மழுங்கிவிட்டது. ஒருநாள் திருவடிக் கவிராயர் பாடம் சொல்லிக்கொடுத்துக் கொண்டு வரும்பொழுது வழக்கம்போல் இவ்வாறு இயம்பவே, காசிம் அவரை இடைமறித்து, 'ஆசானே! அருணகிரி நாதர் அருளிய திருப்புகழுக்கு நிகரான மறு புகழை நான் பாடவல்லேன்' என்று கூறினார். காசிமின் இந்த எதிர்பாராத மொழிகள் திருவடிக் கவிராயரைத் தூக்கிவாரிப் போட்டுவிட்டது. அவர் ஒருகணம் வாயடைத்து வீற்றிருந்தார். அதன்பின் காசிமை வியப்புக் கண்களுடன் நோக்கி, 'அப்படியா! பாடும் பார்ப்போம்' என்று கூறினார். 'சரி, பாடிக் கொணர்கிறேன்' என்று கூறி எழுந்தார் காசிம். அத்துடன் அவருடைய மாணவ நிலையும் முடிவுற்றது. அப்பொழுது அவருக்கு வயது இருபத்தொன்று. இதன்பின் தம் தாயகமான காயலம்பதி திரும்பிய காசிமின் உள்ளத்தை பலநாட்களாகக் கவலை என்ற கறையான் அரித்துச்சல்லடை போன்று ஆக்கிக்கொண்டு வந்தது. ஆசானிடம்

அவசரப்பட்டு வாய்வலிமை பேசிவிட்டோமே என்று வருந்திஞர். அவருடைய மனம் என்னவென்னவோ எண்ணி அலுத்தது. ஓரிரவு அவருக்கு உறக்கம் வராததால் அவர் வெளிக் கிளம்பி ஊருக்கு வெளியேயுள்ள பரந்த வெளிக்குச் சென்று வீற்றிருந்து 'கவலை தீர ஒருபோது முடுகிவீடு பெற வோது கனவிலேயா் கை அடையாளம் அளிக்கும்' முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களை எண்ணித் துதித்து 'நாயகமே, நீங்கள் என் கனவில் தோன்றி எனக்கு முதற் சீர் எடுத்துத் தந்து தங்கள்மீது திருப்புகழ் பாட ஆசி மொழி பகர்ந்து அனுமதி தந்தாலொழிய நான் பாடப் போவதில்லை' என்று கூறி அழுது கெஞ்சியவண்ணம் அங்கேயே படுத்துறங்கினர். அன்றிரவு முகம்மதெங்கள் நபிகள் கோமான்(ஸல்) அவர்கள் அன்னாரின் கனவில் திருக் காட்சி நல்கி 'பகரும்' என்று பணித்துவிட்டு மறைந்தனர். அதைக் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்த காசிம் புலவரின் வாயிலிருந்தும்

பகருமுருவிலி அருவிலி வெருவிலி சிறிது
[மொருதலை
பயிலிலி துயிலிலி பருவிணுணர்விலி துணையிலி
இணையிலி—விரிவான

என்று வெள்ளப்போக்கு போன்று கவிகள் வெளிப்போந்தன.

இதன்பின் இல்லம் திரும்பிய காசிம் புலவர் அங்கு ஒரு மூலையில் அமர்ந்து கவி புனைவதிலேயே அல்லும் பகலும் ஈடுபட்டிருந்தார். இதைக் கண்டும் கேட்டும் அலுத்துப் போன அவருடைய மனைவி ஒருநாள் அவரை அணுகி 'என்னவோ பாவியற்றுகின்றீர்களே. இதோ மாதுளம் மரத்தில் இருந்து கத்திக்கொண்டிருக்கும் அணில் போன்று நீங்கள் பா இயற்றுங்களேன், பார்ப்போம்' என்று வேடிக்கையாக அறைகூவல் விடுத்தனர். ஆனால் காசிம் புலவரோ அதனை வேடிக்கையாக எடுத்துக்கொள்ளவில்லை. தம்முடைய திறனைச் சோதித்துப்பார்க்கும் உரை கல்லாக அதனைக் கருதிஞர். உடனே அவர்

பட்டுக்கச் சிட்டுத் திகழ்முலை முத்துக் குச்சுக்
[கட்டியகுழல்
பச்சைப்பொட்டு தொட்டணிநுதல்—அழகான
பத்மத்தட் புட்பத் திருமுக நச்சுப்புக் கொப்புக்
[கயல்விழி
பத்துத்திக் கொக்கப் பகலுறு—வெளியாக

என்று அணில் கத்துவது போன்று ஒரு செய்யுள் பாடினார். அவ்வளவுதான். அவருடைய மனைவி பிரமிப்படைந்து விட்டார். மாதுளம் மரத்திலிருந்து கத்திக்கொண்டிருந்த அணிலும் என்ன, நமக்கு இங்கு ஒரு போட்டி அணிலல்லவோ வந்துவிட்டது என்று அவ்விடத்தை விட்டும் ஓடிவிட்டது.

இவ்வாறு பல திருப்புகழ்ப் பாக்களை முகம்மதெங்கள் நபிகள் கோமான்(ஸல்) அவர்கள்மீது பாடிவந்த புலவர் அதன் பின் தமக்கு எந்நோயும் வரக்கூடாதென்று ஒரு செய்யுளில் அவர்களிடம் காவல் தேடுகின்றார். அதில் அண்ணல் நபியவர்களின் விண்ணேற்றத்தை அழகிய செந்தமிழில் போற்றிப் புகழ்கின்றார். பின்னர் அவர் மக்கமாநகரத்தின் நீர் வளத்தை நயமுடன் நவில்கின்றார். அங்குள்ள மடைவாய் வழியாக வரால் மீன்கள் நீந்திச் செல்கின்றனவாம். வயல்களிலே இறால்கள் துள்ளிக் குதிக்கின்றனவாம். மதகுகளிலே சுறா மீன்கள் அங்குமிங்கும் திரிந்து உழக்கித் தண்ணீரின் மேலே பாய்கின்றனவாம். மடுக்களில் உள்ள வாளை முதலிய மீன்கள் அவற்றின் ஊடேயுள்ள கமுகு மரங்களை மொய்த்து நின்று அவற்றின் பாளைகளைக் கீறிவிட்டு பூவிதழ்களைக் கீழே சொரியச்செய்கின்றனவாம். இத்துணை வளமை கொழிக்கும் மக்கமா நகரில் தோன்றிய இறைவனின் திருத்தூதர் அவர்களே (இறசூலே) என்மீது அருள்பாலியுங்கள். எனக்கு முத்தியருளுங்கள் என்று அண்ணல் நபிமீது பண்ணிசைத்துப் பாடுகின்றார் புலவர். இத்துணைச் சிறப்புவாய்ந்த செய்யுளை நீங்களும் செவியுற விரும்புகின்றீர்களா? இதோ நான் படிக்கின்றேன், கேளுங்கள்,

வெடிசூலே மேகவெட்டை குறைநோய்மூ
[வாறுகுட்டம்
விஷபாக நீர்கரப்பன்—அதிசாரம்
வெகுதாப நாவரட்சி க்ஷயமீளே வாதபித்தம்
வெறிகாச நோ(ய்)இளேப்பு—முதிர்சோகை
கடிதோஷ மேநடுக்கல் புரையோடிநீள் புண்வைத்த
கனமா வியாதி முற்றும்—அணுகாதே
கருணகரா எனக்குன் அபிமானமா(ய்) இணேத்த
கழல்வீடு சேரமுத்தி—தருவாயே
இடையூறிலா துவைத்துப் பதினலு லோகமுற்றும்
இனிதே பராபரிக்க—எனநாடி
இரவே பிரானழைத்து மறைவான காரியத்தை
எதிர்பேசி யேயனுப்ப—வருவோரே
மடைவாய் வரால்கடத்த வயலேஇருல் குதிப்ப
மதகேசுரு உழக்கி—வெடிபாய
மடுவூடு மூகநெட்டை நெடுவாளே பூகமொய்த்த
மடல்கீறி வாவுமக்க—இறசூலே

இவ்வாறு அண்ணல் நபியவர்களே ஏற்றித் துதித்துத் தமக்கு முத்தியருளுமாறு முத்துநிகர் பாக்களே உதிர்த்து நின்ற காசிம் புலவர் பல்வேறு சந்தங்களில் பல்வேறு திருப்புகழ்களே எம்பெருமான்மீது பாடிப் பரவசமடைகின்றார்.

இவ்வாறு அவர் பாடிவரும்பொழுது ஒரு செய்யுளின் ஈற்றடியிலுள்ள மக்கப்பதிக்கு என்பதற்கு அடுத்தாற்போல் வரவேண்டிய இறுதிச் சீர் வராமற் போகவே பெரிதும் துன்புறுகின்றார். மக்கப்பதிக்கு, மக்கப்பதிக்கு என்று தம்மை யறியாமல் திரும்பத் திரும்ப முணுமுணுத்துக்கொண்டு பித்துப் பிடித்தாற்போன்று, எங்குச் செல்கின்றேம் யாது செய்கின்றேம் என்பதை அறியாது அங்குமிங்கும் அலேந்து திரிகின்றார். அதன்பின் உணர்வு மாறி, மக்கப்பதிக்கு மக்கப்

பதிக்கு என்று கத்திக்கொண்டு தம்மையறியாமல் தம் ஊரிலுள்ள காட்டு மஹ்தூம் பள்ளிக் குளத்தில் இறங்கி அதிலே நடந்து செல்கின்றார். தண்ணீர் தொண்டைஅளவுக்கு வந்து விடுகிறது. இனிமேல் அவர் ஓரடி எடுத்துவைப்பினும் அதிலே அவர் மூழ்கி மாளவேண்டியதுதான். இச் சமயத்தில்தான் அடியார்க்காதரவளிக்கும் முகம்மதெங்கள் நபிகள்கோமான் (ஸல்) அவர்கள் அவருக்குத் திருத்தோற்றம் நல்கி 'என்ன காசிம்! நாம் மக்கப்பதிக்கு மட்டுமா இறசூல், உயர் சொர்க்கப்பதிக்கும் இறசூலாயிற்றே' என்று கூறி மறைகின்றனர். அவ்வளவுதான். காசிம் புலவருக்கு உடனே உணர்வு பிறக்கின்றது. 'மக்கப்பதிக்கும்உயர் சொர்க்கபதிக்கும் மா இறசூலே' என்ற மொழிகள் அவருடைய வாயிலிருந்தும் வெளிவருகின்றன. அதன்பின்தான் தாம் நடுக் குளத்தில் நிற்பது அவருக்கு நினைவு வருகிறது. காசினி தழைக்கவந்த குரிசில் எம்பெருமானின் கருணையை வியந்துகொண்டு இல்லம் திரும்புகின்றார். மறுபடியும் என்ன? மீண்டும் எம்பெருமான்மீது திருப்புகழ் பாடுவதுதான்.

இவ்வாறு அண்ணலெம்பெருமான் அவருக்கு அருட்கிருபை செய்தபோதினும் புலவர் மனநிறைவு பெறவில்லை. அவனிக்கொரு அருட்பெரும் கொடையாக நல்கப்பெற்ற அன்னார், தாம் அவர்களின் வழி ஒழுகிவரும் வண்ணம் தம்மீது அவர்களின் கடைக்கண் பார்வையை என்றென்றும் நிலையாக வைத்திருக்க வேண்டுமென்று நெஞ்சுருகிக் கெஞ்சுகிறார் பின்வரும் செய்யுளில். இச்செய்யுளில் அண்ணல் நபி அவர்களின் போர்த்திறனையும் பெரிதும் பாராட்டிப் பாமழை பொழிகின்றார்.

நினது வழியே நடக்க நினதுபெயரே வழுத்த
நினதுபுக ழேபடிக்க—மறையோதி
நினதுஜெப மேஜெபிக்க நினதடிமை யாகிநிற்க
நினதுபத மேதுதிக்க—அதனாலே
எனதுபவ மேதுடைக்க எனதுமல மேகெடுக்க
எனதுபகை யேதுடைக்க—ஒழியாத
எனதுகலி யேகெடுக்க எனதுதுய ரேதணிக்க

எனதுவச மேகடைக்கண்— அருள்வாயே.
வினைமுரச மேஒலிப்ப வணிகவிகை யேகவிப்ப
விரிகவரி காலசைப்ப—இருபாலும்
விருதடலி டால்பிடித்து வருமரசர் மோலிதந்த
விடுபடைஞர் மாளவெட்டி—அடர்சேனை
முனையழிய வீழ்பிணத்தை நரிகழுகு நாய்இழுப்ப
முடுகிநடு பேய்புசிக்க—வடிவாளால்
முழுதும்அம ராடிவெற்றி கொளு(ம்)அபுது லா,சுபுத்ர
முதல்வவர சாளுமக்க இறசூலே

என்று பண் இசைத்து விண்ணதிர முழங்குகின்றார் புலவர். மற்றும் ஒரு பாடலில் தங்களின் கண்மணியாளைய தலைமகனுடைய பெயரை நான் பெற்றிருக்கும் பொருட்டாலாவது என்னை அஞ்சல் என்று ஆதரித்து ஆண்டருள் புரியவேண்டுமென்று வேண்டிநிற்கின்றார்.

தாம் வறுமைப்பிணியாலும், உடற்பிணியாலும், பசிப்பிணியாலும், உடையின்மையாலும் கொலை, களவு, பொய், குண்டுணி, கோள் ஆகியவற்றாலும், விலை மாதருடன் உறவுசெய்து, மறநெறி வாழ்வதாலும், தங்களின் அறவழிதவறிய கொடிய பாவியாகப் போய்விட்ட போதினும் நான் தங்களின் அடியார்க்கு அடியானாகும். ஆதலின், என்னைக் கைவிட்டுவிடாது கைதந்து காத்தருள்வீர். என்மீது இரங்கி எனக்கு சுவனவாழ்வு தந்து என்னைப் புரந்தருள்வீர் என்று கெஞ்சிக் கூத்தாடி அண்ணல் அவர்களின் நற்பண்புகளைப் போற்றி மற்றொரு கவியில் செஞ்சொல் மழை பொழிகின்றார். இதோ அக்கவிமழை பொழிகின்றது, அதில் நீங்களும் நனைந்து தொப்பலாடி இன்பம் நுகருங்கள்.

வறுமையெனும் படர்தீயா லேஎனதுட லினுறும்பிணி
[நோயாலேபசி

வலியடு(ம்) இன்சுவை ஊணு, லேஇடை—புனையாடை
வகையது ஒன்றும் இலாதாலே கொலைகளவு பொய்
குண்டுணி கோளாலே தினம்
வறிதில் நிறைந்திடு தாழ்வாலே விலை—மடமானர்
உறவுசெய்(து) இன்புறு மாலாலே, கொடுமறநெறி
[வஞ்சனை சூதாலேதனி
உலகில்உழ ன்(று) அவமே வாழ்நாளதில்—உறைவேனே
உறுபகையின் கொடி யேனுனலும் நின்னடிமையை
[நின்கை விடாதேமா—மனம்
உருகி இரங்கி வினோர்மேல் வீடினி—அருள்வாயே.
அறநெறிநின்ற குணளாமா அருகுபிர்நிலை அண்டலர்
[போரேறேமுடி
அரசர் வணங்கிய கோமானேயொரு—பொருளாதி
அமுதுவிருந்திடவார் கோவே யொளிர் சுவனவரம்
[பையர்பூமானே பொறை
அறிவின் மிகுந்துயர் பேராளாவள—மதிஞ வாழ்
குறைசிகள் தங்குலதீ பாதீனவர் இனியகரும்படுபாகே
[யாருயிர்
குளிரும் அருந்தமுதேநா வாணர்கள்—தருவேசீர்
குலவுஜெயம் பெறுதாசீ மேஇறைஅரு ஷில்நடந்தெழு
[யாசீனே உயர்
குருஷினுறைந் தருள்காசீ மேநபி— இறசூலே!

*இவ்வாறு அவர் மனமுருகிக் கண்ணருவி சிந்திக் கவிபாடிவடுதைக் கண்டு இவர் துன்மார்க்கத்தில் ஈடு பட்டு பஞ்சமாபாதகங்கள் அத்தனையையும் ஒன்றையும் பாக்கிவைக்காது செய்து அதன்பின் நேர்வழிபெற்று நாயகத்திருமேனியின் நன்மலர்ப் பாதங்களில் வீழ்ந்து இவ்*

வாறு கெஞ்சிப் பிரலாபிக்கின்றார் என்று நீங்கள் எண்ணி விடவேண்டாம். அவ்விதம் இளமையில் அன்னார் பாவப் படுகுழியில் வழுக்கிவிழுந்து உழன்றனர் என்பதற்கு எவ் வித ஆதாரமும் கிடைத்தில. அவரின் வாழ்வு முழுக்க முழுக்க மாசுமறுவற்ற தூயவாழ்வாகவே இருந்ததென்று அறியக்கிடக்கின்றது. அவ்விதமானால் அவர் ஏன் இவ் வாறு பாடவேண்டும் நீங்கள் என்று வினவலாம். நீங்கள் கேட்பது சரியான வினாவேயாகும். காசிம்புலவர் தம்மு டைய நூலுக்கு முன்னூலாக வைத்துக்கொண்டது அருணகிரிநாதர் பாடிய திருப்புகழைத்தான். அருண கிரிநாதர் இளமையில் தாம் செய்த தீச்செயல் அனுப வங்களையெல்லாம் தம்முடைய திருப்புகழ்ப்பாடல்களில் எடுத்துரைத்துக் கண்ணீர்சிந்தி அவற்றிலிருந்து தப்ப தமக்கு அருள் கூர வேண்டுமென்று தாம் வழிபடும் தெய்வத்தை வழுத்துகின்றார். அவர் பாடிய திருப் புகழை முன்னூலாகக்கொண்டு காசிம் புலவரும் பாடிய மையின் அதில் வரும் கருத்துக்கள், உவமை நயங்கள் சிலவற்றைத் தாம் பாடிய திருப்புகழ்ப் பாடல்களிலும் புகுத்திப் பாடியுள்ளாரேயன்றி வேறில்லை.

இவ்விதம் முருகர்மீது அருணகிரிநாதர் பாடிய திருப் புகழே போன்று மறுதிருப்புகழ் ஒன்றை 141 செய்யுட் களில் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) மீது பாடி அதனைத் தம் ஆசான் திருவடிக் கவிராயரின் திருவடி களிலே சமர்ப்பித்தனர் அன்னார். அதனைப் படித்துக் களிப்புக்கடலில் மூழ்கித் திளைத்தார் கவிராயர். அதில் காணப்படும் சொன்னயங்களையும், பொருள் நயங்களை யும் அள்ளி அள்ளிப் பருகி உளம் மலர்ந்து உவகை பூத்தார். அதன்பின் தம்மைச்சூழ இருந்த தமிழ்ச் சங்கப் புலவர்களையெல்லாம் நோக்கித் தம்மாணவ னின் மாண்பினை எடுத்துரைத்து ஒரு கலித்துறை பாடினார். அதிலே அவர் 'ஏழு வானங்களையும் கடந்து இறைவனிடம் சென்று இரகசியம் பேசிவந்த அழகுக் குரிசிலாம் அண்ணல்நபி அவர்கள் மீது காசிம்புலவர் பாடியுள்ள செழுமை மிகுந்த கொழுங்கவியாலான திருப் புகழானது கடல்நீரை முகந்துகொண்டு புவனம் முழு வதையும் சுற்றி வலம்வந்து விண்ணிலும் கொடிகட்டி அதற்குமேலும் தாவிப்பறக்கின்றது' என்று பாராட்டிப்

பரவசமானுர். அச்செய்யுளை நாம் படிப்பதைவிட பாடிய அவர் வாயாலேயே படிக்கக் கேட்பது இனிமை யுடையதல்லவா? எனவே நல்ல வேளையாக அவர் இதோ படிக்கின்ருர். நாமும் கேட்போம்.

'வடிக்கட்டுச் சங்கத் தமிழ்ப்புலவீர்! எழு வான்கடந்த
முடிக்கட் டழகர் திருப்புகழ் வாரி முகந்து கொண்டு
படிக்கட் டுலகப் பரப்பையெல்லாம் சுற்றிப் பார்த்து
[விண்மேல்
கொடிக் கட்டித் தாவுநல் காசிம் புலவர் கொழுங்கவியே

காசிம் புலவரின் கொழும் கவிமட்டும் விண்ணிலே கொடிக்கட்டித் தாவிப் பறக்கவில்லை. அவருடைய விழுமிய பெயரும் புகழும் விண்ணிலே கொடிக்கட்டித் தாவிப்பறக்கத் துவங்கியது. அவருடைய புகழ்மணம் பாரினில் பரவி பவனி வரவும் துவங்கியது.

இதற்குச் சிறிது காலத்திற்குமுன் நச்சு நாவு படைத்த வசைக்கவிஞன் ஒருவன் புரையூர் என்னும் ஊர் சென்றிருந்தக்கால், அங்குள்ள முஸ்லிம்கள் அவனை மதித்து விருந்தூட்டாததின் காரணமாக அவர்கள் மீது வெகுண்டு அவ்வூர்ப் பள்ளிவாயிலின் பின்புறச் சுவரில்,

பானை உறங்கும் பகலடுப்புத் தீயுறங்கும்
பூனை உறங்கும் புரையூர் நன்ருட்டில்
வத்தைப் பழம்தின்பான் வயிறெல்லாம் நண்ணியிட்டுப்
பொத்தைப் பழம்போ லிருப்பான் புரையூரான்'

என்று கரியினுல் தீட்டிவிட்டுச் சென்றுவிட்டான். அவன் இவ்வாறு எக்கணம் எழுதினுனே, அக்கணத்திலிருந்து அவ்வூரிலுள்ள எந்த வீட்டிலும் சோறு சமைக்கப் பக லில் அடுப்பு மூட்டினுல் பானை உடையவோ, நெருப்பு அவிந்துவிடவோ, அடுப்பு உடையவோ செய்துவந்தது.

அதனால் அவ்வூரில் ஒரு வீட்டிலாயினும் உணவு சமைக்க இயலவே இல்லை. நெருப்பு எரிய வேண்டிய அடுப்பில் பகலெல்லாம் பூனைதான் படுத்துறங்கியது. இரவில்தான் அவர்களால் உலை வைத்துச் சோறுபொங்கிச் சாப்பிட இயன்றது. பகலில் அவர்கள் தங்களின் பசிக்கொடுமையைப் போக்க வத்தைப் பழத்தைத் தின்னவே, அவர்களின் வயிறெல்லாம் பெருத்துத் தொப்பையாகி அவர்கள் பொத்தைப்பழம் போன்று ஆகிவிட்டார்கள். அதன் காரணமாக அவர்களால் ஆடி ஓடி அவசரமாக வேலை செய்ய இயலாது போய்விட்டது. இவ்வாறு சிலகாலம் துன்புற்ற அவ்வூர் மக்கள் என்னென்னவோ மந்திர மாயங்கள் எல்லாம் செய்தும் அக்கவிராயனின் வசைமொழியை அவர்களால் அறுத்தொழிக்க இயலவில்லை. என்செய்வதென்றறியாது ஏங்கித் தவித்திருக்கும் இக்காலையில்தான் அவர்களின் செவியில் காசிம்புலவர் என்னும் கவிக்குரிசில் ஒருவர் காயல்மா நகரில் வாழ்ந்து வருவதாகவும், அவர் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களின் அன்பு ஆணையைத் தலைமேற்கொண்டு, ஆரமுதனைய திருப்புகழ் பாடி அவனியோர் ஏற்றும் வண்ணம் வாழ்ந்து வருவதாகவும் செய்தி எட்டியது. அண்ணல் நபியின் அன்புக்குப் பாத்திரமான அருங்கவியாகிய அன்னாரிடம் சென்று நம் பெரும் குறையைக் கூறுவோம். அன்னார் மூலமாகவாவது நம் கலி தீர இறைவன் கிருபை செய்தாலும் செய்யலாம் என்ற எண்ணத்துடன் அவ்வூர்ப் பெருமக்கள் சிலர் காயல் பட்டினம் வந்து காசிம்புலவர் அவர்களைச் சந்தித்துத் தங்களின் துன்ப வரலாற்றினை நீர் மல்கிய கண்களுடன் நவின்று தங்கள் மீது இரங்கி, தங்களின் ஊர் வந்து அக்கவிராயனின் அக்கவியை வெட்டிப் பாடித் தங்கள்மீது அருள்பாலிக்க வேண்டும் என்றும், இல்லையேல் தாங்கள் அனைவரும் அவ்வூரைக் காலிசெய்து விட்டு வேற்றூருக்கு வலசை கிளம்புவதைத் தவிர வேறு வழியில்லை என்றும் கூறினர். அவர்களின் அவல நிலையைக் கண்டு பெரிதும் மனம் உருகிய காசிம்புலவர், 'சரி, இறைவனருளால் வந்து என்னால் இயன்றதைச் செய்கிறேன்' என்று மறுமொழி பகர்ந்தனர். அவ்வாறே அவ்வூருக்கு எழுந்தருளவும் செய்தார்.

அன்று வெள்ளிக்கிழமை. காசிம்புலவர் அவ்வூருக்கு வருகின்றார் என்பதைக் கேள்விப்பட்டதும் அவ்வூர்

மக்கள் திரள்திரளாக வந்து பள்ளிவாயிலில் குழுமி இருந் தார்கள். காசிம் புலவரும் வந்தார். பள்ளிவாயிலின் பின் புறச் சுவரில் அக்கவிராயன் தீட்டிய நச்சுக் கவியினையும் கண்டார். அதனை நீரால் அழிக்குமாறும் கூறினார். பின்னர் மக்களுடன் சேர்ந்து 'ஜும்ஆ' தொழுதார். இறைவனி டம் இருகரம் ஏந்தி இறைஞ்சினார். அதன்பின் குழுமி இருந்த மக்களை நோக்கினார். அவர்களின் முகத்தில் துன் பத்தின் சாயல் படிந்திருப்பதையும், துயரம் நிழலாடுவதை யும் கண்ணுற்றார். அவருடைய கண்கள் கலங்கின. 'நல் லது, இன்றுமுதல் உங்களுக்கு நற்காலம் பிறக்க இறைவன் இன்னருள்பாலிப்பானாக. இதோ அந்த நச்சுக்கவியை வெட்டிப் பாடுகின்றேன், எழுதிக் கொள்ளுங்கள்' என்று சொல்லி,

பானை உறங்கா பகலடுப்புத் தீயுறங்கா
பூனை உறங்கா புரையூர் நன்னாட்டில்
வத்தைப் பழம்தின்றான் வயிறெல்லாம் நண்ணியிடான்
பொத்தைப் பழம் போலுமிரான் புரையூரான் சீமானே

என்று பாடினார். அவர்கள் சீமான்தனத்துடன் வாழ் வார்களென்றும் அவர்களை அக்கவியில் வாழ்த்தினார். அதன் பின் அவர்களை நோக்கி, நீங்கள் உங்கள் இல்லம் சென்று இனிமேல் அடுப்பு மூட்டி அமுதனைய உணவாக்கி அருந்துங் கள் என்று வாய்மலர்ந்தார். அப்பொழுது அங்குக் குழுமி யிருந்த மக்களின் அகமும் முகமும் ஒருங்குசேர மலர்ந்தன. அவர்கள் வீட்டிற்கு விரைந்து சென்று தங்களின் இல்லாட் களிடம் நடந்தவற்றைக் கூறி அடுப்பு மூட்டி உணவு சமைக் கக் கோரினர். அவர்களும் அவ்விதமே அடுப்பு மூட்டி உலை யேற்றினர். என்ன வியப்பு! அடுப்பும் உடையவில்லை; உலைப் பானையும் நொறுங்கவில்லை; தீயும் அணையவில்லை. அருசுவை உண்டியானது அடுப்பிலே தயாராகிக்கொண்டி ருந்தது. அது தயாராகும்வரை புலவரைப் பசித்திருக்கவிட லாகாது என்றெண்ணி அவர்கள், தாங்கள் இதுகாறும் பக லில் உண்டுவந்த பொரிமாவில் சர்க்கரையும் வாழைப்பழ மும் போட்டுப் பிசைந்து புலவர்முன் வைத்து 'சற்று நேரத் தில் உணவு தயாராகிவிடும், அதுவரை இதனை உண்டு பசி

யாறுக' என்று உபசரித்து நின்றனர். அவ்வாறு புலவரும் அதனை உண்டு பசியாறினர். அன்று புரையூரே ஒரு புதுக் கோலம் புனைந்து நின்றது. சோறு பொங்கியதும் வீடு தோறும் குரவை ஒலி முழக்கம் செய்தது. குழந்தைகள் துள்ளி விளையாடினர். மக்கள் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கித் திளைத்தனர். அன்று பிற்பகல் விருந்தும் வேடிக்கைகளும் கோலாகலமாக நடந்தன. எல்லோரும் வயிறுர உண்டு புலவர் மகானை வாயார வாழ்த்தினர். தங்களை வாழ்விக்க வந்த வான்முதல் என்று அவரை மனமாரப் போற்றினர். பற்பல பரிசில்கள் நல்கி அவரைக் கௌரவித்தனர், அவர் களின் அன்பான வேண்டுகோளை ஏற்று அவரும் அங்குச் சில நாட்கள் தங்கியிருந்தார்.

இதற்குள் காசிம் புலவர், கவிராயனின் சாபக் கவியை வெட்டிப் பாடி புரையூர் மக்களுக்கு நல்வாழ்வு நல்கிய செய்தி நாடெங்கணும் காற்றின் வேகத்தில்வீசிப் பரவியது. அதே கவிராயனின் சாபத்தினுல் பெரிதும் நலிந்து வயிற்றுக் கோளாறுகளினுல் சொல்லொணுத் துன்பங்களை நுகர்ந்து கொண்டிருந்த சாத்தான்குள மக்கள் புலவரிடம் ஓடோடி வந்து தங்களின் ஊருக்கும் வரவு தந்து தங்களை வாழ்விக்க வேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். என்ன செய்தி என்று வினவினர் புலவர்பெருமான். அந்த நக்சுக் கவிஞன் தங்கள்மீது பாடிய வசைக் கவியான

சாத்தான் குளத்தாரே சங்கைகெட்ட தீனவரே
சோத்தாலே நீங்கள் சுகம்பெறவே மாட்டீர்கள்.

என்பதனை அவரிடம் எடுத்தியம்பி 'நாங்கள் அவனுக் குச் சோறுண்ணக் கொடுக்காததனுல் இவ்வாறு பாடிவிட் டுச் சென்றுவிட்டான். அதுமுதல் எங்களூரில் ஒருவருக்குக் கூட உண்ட சோறு வயிற்றில் செரிக்கவுமில்லை; உடலில் சாரவுமில்லை. அனைவரும் பல்வேறு வயிற்று நோய்களால் துன்புறுகிறோம்' என்று அழுங் குரலில் கூறினர். அவர்க ளின் துன்ப நிலையைக் கண்டு பெரிதும் இரங்கிய புலவர் அவர்களின் ஊராகிய சாத்தான்குளம்சென்று பின்வருமாறு அக் கவியை வெட்டிப் பாடினர்.

சாத்தான் குளத்தாரே சங்கையுள தீனவரே
சோத்தாலே நீங்கள் சுகம்பெறவே செய்வீர்கள்.

அவர் இவ்வாறு பாடியதிலிருந்து அவ்வூர் மக்களைப் பிடித்திருந்த பீடைகளெல்லாம் பரிதியைக் கண்ட பனி போல் நீங்கின. அவர்கள் சுகமும் வளமும் செழிப்பும் வனப்பும் பெற்றார்கள்.

இதற்குச் சிலகாலத்திற்குப்பின் காசிம் புலவரின் கால் ஒன்றில் புண்ணொன்று ஏற்பட்டுப் புரையோடி அளவற்ற வேதனையை நல்கிவந்தது. என்ன மருந்திட்டுக் கட்டியும் அது ஆறவில்லை. இச் சமயத்தில் அன்னார், பூவாற்றில் பெருவளம் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்துவந்த போக்கு மூசு மரக்காயரின் அன்பான அழைப்பை ஏற்று அங்குச் சென்று தாம் பாடிய திருப்புகழை அவருடைய மனையில் மக்கள் புடைசூழ்ந்து கேட்டுக்கொண்டிருக்க விரிவுரை நிகழ்த்திக்கொண்டிருந்தனர். அப்பொழுது ஒருநாள் தம் அருகே அமர்ந்திருந்த ஒருவர் தம் காலிலுள்ள பெரும் புண்ணைக் கண்டு தம்மீது அருவருப்புக் கொள்வதைக் காசிம் புலவர் குறிப்பால் விளங்கினர். அப்பொழுது அவரின் மனம் பட்ட பாட்டிற்கு அளவில்லை. நமக்கு இறைவன் இத்துணைக் கல்வியைத்தந்து மக்கள் நம்மைப் புகழ்ந்தேற்றுமாறு செய்து, நம் காலில் ஒரு புண்ணைத் தந்து, நம்மைப் பிறர் இகழ்ந்து இழிவாக நோக்குமாறும் செய்துவிட்டான்' என்று அவரின் உள்ளம் செந்நீரைச் சிந்தியது. அதற்குமேல் அவரால் அங்கு வீற்றிருந்து பொருள் விரிக்க இயலவில்லை. அத்துடன் விரிவுரைப் பொழிவை நிறுத்திவிட்டு உள்ளே சென்று தனியாக ஓர் அறைகுட் புகுந்து கதவைத் தாளிட்டுக் கொண்டு ஊண், உறக்கமின்றி கண்ணீர் மழையைப் பொழிந்து முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களிடம் முறையிட்டுத் தம் காலடிப் புண்ணை அவர்கள் வந்து ஆற்றிவைக்கும்வரைக் கதவைத்திறந்து கொண்டு வெளிச்செல்வதில்லை என்ற உறுதிபூண்டு வீற்றிருந்தார். அப்பொழுது,

பொய்மாற என் ஒருகால் பொங்குபசும் புண் அழற்ற
கைமாற வேஅருட்கண் வைத்திடுநாள் எந்நாளோ'

என்று ஒருகணம் பிதற்றிப் பிரலாபித்தார். மறுகணம்,

ஒருகாலமும் அணுகா ஒருகால் பிணியகல
வருகாலம் எக்காலம் வருகால் அறியேனே

என்று ஏங்கித் தவித்தார்.

அதன்பின் அண்ணலெம் பெருமானை நோக்கி, 'தங்களின் பெயருள்ள எனக்கு இந்நோய் வந்துவிட்டதே. இதற்கான காரணம் என்ன? நான் அப்படி என்ன பாவம் செய்து விட்டேன். அப்புண்ணால் என் வீரியமே அழிந்து விட்டதே' என்று அழுது கெஞ்சிப் பின்வருமாறு பாடினார்.

பூரியநோய் என்ஒருகால் புண்ணிருந்து நொந்தழற்ற
வீரியமே பொன்றியுள்ளம் விள்ளா(து) அயர்வேனோ?
பேரியபேர் கொண்டஉங்கள் பேருடையோ னுக்குவர
காரியமேன் ஹாஷிம்குலக் காஸிமுஸ்த பாநபியே'

இவ்வாறு அவர் கண்ணீர்விட்டுக் கதறிக் கண்ணயரவே மாட்சிமை பொருந்திய முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் அவருடைய கனவில் காட்சி நல்கி, தங்களின் பவளவாய் திறந்து அவருடைய கால்புண்ணில் உமிழ்ந்து மறைந்தனர். அதைக்கண்டு திடுக்கிட்டு விழித்தெழுந்த காசிம் புலவர் தம்முடைய கால்புண்ணை நோக்கவே, புண் இருந்த இடத்தில் புண்ணையும் காணவில்லை; தழும்பையும் காணவில்லை. அப்பொழுது அவருடைய உள்ளம் அடைந்த மகிழ்வை நாம் என்னென்பேம். அவரே மகிழ்வு மீக்குற்று இதோ பாடுகின்றார், கேளுங்கள்.

கண்டேன் கலியாரக் கலிகடந்தேன்; கைவிலையாய்க்
கொண்டேன் சுவர்க்கபலன் கொண்டேனே—பண்டு
வடிவமைத்த நிலவுபச்சை மரகதப்பொன் மயில்வனத்தர்
தடவரைக்கண் அடிபதித்த தாள்.

இதன்பின்னர் காசிம்புலவர் பல விந்தைகள் செய்து வான்புகழ் பெற்றனரென்றும், திருச்செந்தூருக்கு அன்னார் வரும் வழியில் ஒருவன் அவரை அணுகித் தம் பயிர், மழை யின்றி வாடிக் கருகுகின்றன வென்றும், எனவே இறைவ னிடம் இறைஞ்சி மழைபெய்யச் செய்யவேண்டுமென்றும் வேண்ட, அவ்விதமே செய்து செழுமழை பெய்யச் செய் தனரென்றும், திருச்செந்தூரின் தேரோடும் வீதியிலே தேர் செல்லுங்கால் அதனை நகரவிடாமல் நிறுத்திவைத்தனரென் றும், அதன்பின் கோயில் குருக்கள்மார் ஓடோடிவந்து அன் னாரின் தாள்பிடித்துக் கெஞ்சி வேண்டியபொழுது அதனை ஓட அருள்பாலித்தனரென்றும், அவர் தம் ஆன்மீக ஆசா னாகக்கொண்ட வேதபுராணம் பாடிய நூஹுலெப்பை ஆலிம் என்ற நற்றவப் பெரியார் பூவாற்றில் பூவுலகு நீத்த செய்தியைத் தம் ஞானதிருஷ்டியால் அறிந்து காயல்மாநக ரில் இருந்த அன்னாரின் மனைவியாருக்கு எடுத்தோதினர் என்றும் இயம்புவர்.

இவ்வாறு வியத்தகும் விந்தைகள் நிகழ்த்தி, நயத்தகும் நன்னூலாகிய திருப்புகழ்பாடி, பாவலர் போற்றும் நாவல ராய், நாவலர் போற்றும் நாயகமாய் விளங்கிய காசிம் புலவர் ஹிஜ்ரி 1177ஆம் ஆண்டு துல்கஃதா திங்கள் பன்னி ரண்டில் வெள்ளி இரவில் இம்மண்ணுலகை எள்ளி இகழ்ந்து பொன்னுலகம் புகுந்தனர். அவரின் அடக்க இடம் காயல் பட்டினம் குத்பா பள்ளி அருகே இன்னும் உள்ளது. அவ ருக்குப்பின் அன்னாரின் மக்களான அப்துல்காதிர் என்பவ ரும், சுல்தான் என்பவரும் தந்தைக்கேற்ற தனயர்க ளெனத் தாரணிமெச்சும் வண்ணம் பூரணப் புலமை பெற்று விளங்கினர். அவர்களில் சுல்தான் புலவர் என்பார், காயல்பட்டினம் தைக்கா சாகிபு ஒலி அவர்கள் 'உலகத் தில் சுவர்க்கவாதிகளைப் பார்க்க விரும்பியவர்கள் இந்த சுல்தான் புலவர் அவர்களைப் பார்த்துக்கொள்ளுங்கள்' என்று சொல்லிப் புகழும் வண்ணம் அத்துணைச் சிறந்த சீர்மைசால் திருப் பண்புகளைப் பெற்று மிளிர்ந்தனர்.

காசிம்புலவர் காலம்சென்ற சில காலத்திற்குப்பின், எமனேசுவரத்தில் பிறந்த ஜவாதுப் புலவர் என்னும் புலவரேறு முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள்மீது ஏறக்குறைய இருநூறு திருப்புகழ்ச் செய்

யுட்களைப் பாடிக்கொண்டு, அவற்றை அக்காலத்தில் காயல்மா நகரில் கனகநிதி பெற்று, பேரும் புகழும் பெருவாழ்வும் பெற்று வாழ்ந்து வந்த கருத்தத்தம்பி மரக்காயர் முன்னிலையில் அரங்கேற்ற எண்ணி, காயல் மாநகரம் வந்து, கருத்தத்தம்பி மரக்காயரின் சமுகம் நண்ணி தம் உளக்கருத்தை வெளியிட்டனர். இதைக் கேட்டதும் 'நம் காசிம்புலவர் பெருமான் ஒரு திருப் புகழ்பாடியுள்ளனரே. அஃது இவருக்குத் தெரியாது போலிருக்கிறதே. இப்பொழுது இவருடைய திருப்புக ழும் வெளியானல் ஒருறையில் இருவாளிட்ட பான்மை யாகுமே என்று மனம் கலங்கினர். *எனினும் தம் மனக்கலக்கத்தை முகக்களிப்பால் மறைந்து ஜவாதுப் புலவருக்கு மேதை மரியாதை செய்து உபசரித்தனர். இரண்டுநாள் கழித்த பின் தம் வீட்டில் சபை கூட்டி, ஜவாதுப்புலவரையும் அங்கு வரவழைத்து இருக்கச்செய்து காசிம்புலவரின் திருக்குமாரர்களான அப்துல்காதிர் புலவர் அவர்களேயும், சுல்தான் புலவர் அவர்களேயும் அங்கு அழை த்துவருமாறு செய்து அவர்கள் வந்ததும் தங்களின் அருமைத் தந்தையார் பாடிய திருப்புகழிலிருந்து சில செய்யுட்களைப் பாடுங்கள் என்று வேண்டி நின்றார். அவ்விதமே அவர்கள் இருவரும் இடியேறு போன்று மனே அதிரும் வண்ணமும் கேட்போர் உளம் பரவசமடையும் வண்ணமும் சில செய் யுட்களே முழக்கினார்கள். அவற்றைக் கேட்டுப் பெரிதும் இறும்பூதுற்ற ஜவாதுப்புலவர் தேனினுமினிய இந்தச் செம் பாகக் கவிகளுக்கு முன்னே கரும்பாகமாகிய தம் கவிகள் விளங்குவது நன்றல்ல என்று எண்ணி தம்முடைய திருப் புகழ் ஏட்டைத் தம் தொடையின்கீழ் மறைத்துப் பாக்கு வெட்டியினால் கரகரவென்று வெட்டிவிட்டனர். அந்தக் கர கர ஒலி காசிம் புலவரின் திருப்புகழுக்கு சுர தாளம்

*ஆனல் பிற்காலத்தில் குலாம்காதிறு நாவல ரின் சமகாலத்தவரான யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த அசனலெப்பை என்பார் நபிகள் நாயகத் தின்மீது 'நவரத்தினத் திருப்புகழ் என்ற பெயரு டன் ஒரு திருப்புகழ் பாடியுள்ளார். இவர் தற் போது கொழும்பு ஸாஹிரா கல்லூரியின் அதிப ராக உள்ள செனேட்டர் A. M. A. அஸீஸ் அவர்களின் பெரிய தந்தையே யாவார்.

போன்று விளங்கியது. அஃது என்ன ஒலி என்று கூடியிருந்தோர் கவனிக்கும்பொழுதுதான் அவர்களுக்கு உண்மை புலனாகியது. அதன்பின் ஜவாதுப்புலவர் காசிம் புலவர் பெருமான்மீது பாமழை பொழிந்து பாராட்டினார். சோபனம் சொரிந்து சொன்மாரி பொழிந்தார்.

இவ்வாறு 'சரபம் கவிச் சக்கரவர்த்தி ஜவாதும்' வியந்தேற்றும் வண்ணம் தீந்தமிழ்த் திருப்புகழை முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள்மீது பாடிய காசிம் புலவர் யார் என்று நினைக்கின்றீர்கள்? அன்னாரின் வழித்தோன்றலாம் பேரரேயன்றி வேறில்லை. கெய்ரோவிலிருந்து வந்து காயல்மாநகரில் குடியேறிய சுல்தான் செய்யிது ஜலாலுத்தீனின் வழி வழிவந்த திருப்பேரராம் காலிநூருத்தீனின திருமகனார் அப்துல்காதிரின் அருமை மகவே அவர். இதனை காசிம் புலவரே தாம் பாடிய திருப்புகழின் இறுதிச் செய்யுளில் விளக்குகின்றார். அதில் அவர் தம்மை மதுரகவிராஜன் என்றும் கூறுகின்றார். ஆம், உண்மையில் அவர் மதுரகவிராஜரேயாவார். இவ்வாறு முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள்மீது திருப்புகழ் பாடி அன்னாரின் திருப்புகழை தமிழ் பேசப்படும் திருநாடெல்லாம் முழக்கம் செய்து, தமக்கும் திருப்புகழைத் தேடிக் கொள்ளும் பெரும்பேற்றை இறைவன் முகம்மதெங்கள் நபிகள்கோமான் (ஸல்)அவர்களின் திருப்பேரராம் மதுரகவி ராஜர் காசிம் புலவருக்கே நல்கியது எவ்வளவு பொருத்தத்திலும்பொருத்தம்! இறைவனின் திருவுளப் பெருமைதான் என்னே!

# ஆலிப்புலவர்

பதினாறாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் ஓரிரவு. பட்டு நிலவு இரவைப் பகலாக்கிக்கொண்டிருந்தது. அப்பொழுது படுக்கையில் படுத்திருந்த ஆலிப் புலவர் என்னும் அமுத கவிராஜருக்கு உறக்கமே வரவில்லை. காற்றில்லாப் புழுக்கமே அதற்குக் காரணம். விசிறியால் விசிறிவிசிறிப் பார்த்தார். எனினும் வியர்வை விடவில்லை. அவருடைய உடலும் உடையும் வியர்வையால் தொப்பலாடின. படுக்கை, தலையணை, விரிப்பு ஆகியவையெல்லாம் நனைந்து சில்லிட்டன. எனவே, படுக்கையை விட்டும் எழுந்திருந்து தம் இல்லத்தின் முற்றத்தில் அங்குமிங்கும் உலவினார். எனினும் வியர்வை விட்டபாடில்லை. எனவே மெதுவாகக் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்து ஊரின் நடுவே அமைந்துள்ள பாலத்தின்மீது நின்று காற்று வாங்கிக்கொண்டிருந்தார். அப்பொழுது மக்கள் கூட்டம் திரள் திரளாக வந்து கொண்டிருந்தது அவருக்குத் தென்பட்டது. அவர்களின் பேச்சின் ஒலியும், சிரிப்பின் கலகலப்பும் அவர்கள் எங்கேயோ திருவிழாவுக்குச் சென்றுவிட்டு வருவது போன்று தென்பட்டது. சரிதான், இந்துக்கள் எங்கேயோ திருவிழாவுக்குச் சென்றுவிட்டு வருகிறார்கள் போலும் என்று அவர் எண்ணினார். ஆனால் அவர்கள் அவரை நெருங்கியதும் அவர்களில் ஆண்கள் அணிந்திருந்த தொப்பியையும் பெண்கள் புனைந்திருந்த முக்காட்டையும் பார்க்கும்பொழுது அவர்கள் இந்துக்களல்ல, முஸ்லிம்கள் என்பது அவருக்கு நன்கு புலனாகியது. அப்பொழுதவர் அவர்களை நோக்கி 'எங்குச் சென்றுவிட்டு வருகின்றீர்கள்' என்று வினவினார். 'அதோ இருக்கும் மாரியம்மன் கோவிலின் முன்றிலில் இன்று கோவலன் கதைப் பொழிவு நிகழ்ந்தது, கேட்டுவருகிறோம்' என்று அவர்கள் களிபேருவகையுடன் கூறினர். அவர்களின் இக் களிமொழிகள் ஆலிப் புலவரின் உளத்தில் வேலெனப் பாய்ந்தன. சொல்லொணா வருத்தம் மீக்குற்று செந்நீர் சிந்திக் கண்ணீர் வடித்தார். 'இறைவனே ! இஃதென்ன பெரிய விபரீதமாயுள்ளது. உன்னுடைய அன்புக்கும் அருளுக்கும் பாத்திரமாகவேண்டிய முஸ்லிம்கள், உன் நல்லடி

யார்களான நபிமார்களுடையவும் வலிமார்களுடையவும் வரலாறுகள் எத்தனை யெத்தனையோ இருக்க, இவ்வாறு நடந்துகொள்கின்றனரே! ஆனால் ஒருவகையில் பார்த்தால் அவர்களைப்பற்றிக் குறை கூறுவதற்கும்தான் என்ன உள்ளது? நம் நபிமார்களுடையவும் வலிமார்களுடையவும் வரலாறுகள் தமிழில் காப்பியமாக இருந்து அவற்றை எவரும் அவர்களுக்கு எடுத்துரைக்காததால்தானே இவ்வாறு செய்கின்றார்கள்' என்றெண்ணி அவருடைய இதயம் குருதி வடித்தது. அதன்பின் இல்லம் மீண்ட அவருக்கு மீண்டும் உறக்கமே வரவில்லை. இந்தக் கவலை எண்ணமே அவருடைய மனத்தை மரத்தைக் செல்லரிப்பது போன்று அரித்துக் கொண்டிருந்தது. இவ்வாறு பல நாட்கள் உருண்டோடின.

இவ்வாறு அவர் கவலை உருவினராக இருக்கும்பொழுது ஒருநாள் அவருடைய மனத்தில் திடீரென ஓர் எண்ணம் உதித்தது. இறைவன்தான் நமக்குக் கல்வியையும் அளித்துப் புலமையையும் நல்கியுள்ளானே. அவ்விதமிருக்க நாமே ஏன் ஒரு காப்பியம் இயற்றக்கூடாது என்று அவர் எண்ணினார். 'ஆம், ஆம்' என்று அவருடைய உள் மனம் அதற்குச் 'சப்பைக் கட்டியது.' 'அப்படியானால் எதனைப் பாடுவது?' என்று அவரின் வெளிமனம் வினவியது! 'அண்ணல் நபியவர்களின் விண்ணேற்றத்தைப் பற்றிப் பாடுவது' என்று சடாரென மறுமொழி பகர்ந்தது அவருடைய உள் மனம். அவ்வளவுதான், அவருடைய கால்கள் அவரைக் கல்வியின் இருப்பிடமான காயல்மாநகரம் நோக்கி இழுத்துச் சென்றன.

காயல்மாநகரின் வீதியிலே அவர் கால் நோவ அலைந்து திரிந்தார். ஏன்? அண்ணல் நபியவர்களின் விண்ணேற்றத்தைப் பற்றிய அரபி நூல் எங்கேனும் கிடைக்குமா என்று. இறுதியாக முகம்மதப்பு மரக்காயரின் மரபில் அந்நூல் கிடைத்ததும் ஆலிப் புலவருக்கு ஏற்பட்ட அகமகிழ்வுக்கு அளவில்லை. அதனை அவர்களிடமிருந்து பெற்று, அக்காலை காயல்மாநகரில் 'காலி'யாகப் பதவி வகித்துவந்த செய்யிது முகம்மது அலாவுத்தீன் அவர்களிடம் எடுத்துக்கொண்டு ஓடினார். 'ஐயன்மீர்! இதனைத் தமிழில் உரை செய்தருள்க! நான் செந்தமிழ்ப் பாவில் பனுவல் செய்கின்றேன்' என்று இயம்பினர். அவ்விதமே 'காலி' செய்யிது முகம்மது அலாவுத்தீன் அவர்களும் அதனைத் தமிழில் உரைசெய்தருளினர்.

இது நிகழ்ந்தது ஹிஜ்ரி 998—ல். அதன்பின் என்ன? என் தாய்த்திருமொழியாம் தீந்தமிழில் என் மூதாதையராம் ஆலிப் புலவர் அமுதமழை பெய்தது போன்று 'மிஃராஜ் மாலை' என்னும் காவியம் இயற்றத் துவங்கிவிட்டார். இதனையே ஆலிப் புலவர் தாம் இயற்றிய மிஃராஜ் மாலையில்

மருவளர் காகிரி நாடுறு செய்யிது முகம்மது
[அலாவுத் தீன்நேர்
அருள்வளர் நந்நபி தம்மிகுருசை அருந்தமிழ்
[செய்திடலால்
பொருள்வளர் மங்கை நகர்ப்பதி யான புதுப்படை
[வீட்டினில் வாழ்
திருவளர் செய்கு அபூபக் கர்தன் ஆலி
[செழுங்கவி செய்தனனே

என்று கூறுகின்றார்*

இவ்வாறு தம் காவியத்தைத் துவங்கிய ஆலிப் புலவர் நாட்டுச் சிறப்பில் மக்க நாட்டை மாண்புற வர்ணிக்குங்

*இக் கவியிலிருந்து ஆலிப் புலவரின் தாயகம் மங்கை நகர் என்றும், அவரின் தந்தையின் பெயர் செய்கு அபூபக்கர் என்றும் நன்கு தெரியவருகிறது. ஆனல் 'மங்கை நகர்' என்று தற்பொழுது எவ்வூருக்கும் பெயர் வழங்கப்படவில்லை. எனினும் தற்போது திருநெல்வேலி மாவட்டத்தில் தேசமாணிக்கம், சேரமாதேவி ஆகிய இரு ஊர்களுக்கும் நடுவில் அமைந்துள்ள மேலச்செவ்வல் நகரமே ராணி மங்கம்மாளின் பெயரால் மங்கை நகர் என்று அழைக்கப்பட்டுவந்ததாகும் என்றும் பின்னர் அதுவே செவ்வல் மாநகரமாகிவிட்டதென்றும், அங்கு ஆலிப் புலவர் கட்டிய தங்களின் வீட்டிற்கு 'மிஃராஜ் வீடு' என்று இன்றும் பெயர் வழங்கப்பட்டு வருவதாகவும் ஆலிப் புலவரின் வழித்தோன்றலான செவ்வல் மாநகரம் எம். ஏ. நெய்னுன் முகம்மதுப் பாவலர் கூறுகின்றார்.

கால் அங்குள்ள காடுகளில் கேப்பை, வரகு முதலிய பயிர்கள் வளர்ந்திருக்கவில்லை. பொன் காய்க்கும் பயிர்கள்தாம் வள முற வளர்ந்து கொழுகொழுவென்று குலை தள்ளியிருக்கின் றனவென்றும், அங்குள்ள வீடுகளில் எங்குப் பார்த்தபோதி னும் ஒரே திருமணமாகவும் விருந்தாகவும்தாம் இருக்கின் றனவென்றும், அந்நாட்டில் நாம் எங்கு அடியெடுத்து வைத்து நடந்து சென்றபோதினும் நம் நன்னபிதம் இன்னி சையைத் தவிர வேறொன்றையும் நம்மால் கேட்க இயலாது என்றும் அங்குள்ள மலையுச்சிகளில் ஏறிப் பார்த்தால் அங்கு குயில் கூட்டங்கள் கூவிக்கொண்டிருப்பதைக் கேட்கலா மென்றும் ஒரு கவியில் கவினுறக் கூறிக் கற்பனு வானிலே சிறகடித்துப் பறக்கின்றார். அந்த அருமைக் கவி இதோ வருமாறு, நீங்களும் பாடிப் பரவசமடைவீர்களாக!

காடு தோறும் கனகப் பெரும்பயிர்
வீடு தோறும் விருந்தும் வதுவையும்
நாடு தோறும் நபிசல வாத்திசை
கோடு தோறும் குயிலினம் கூவுமே!

இவ்வாறு மக்க நாட்டின் சிறப்பை ஓர் அமுதத் திரள் போன்ற கவியில் வடித்தெடுத்த கவிஞர் மேலும் அதன் வளத்தை ஒருவளமான செய்யுளின்மூலம் வர்ணிக்கின்றார். அங்குள்ள மாஞ்சோலையில்பழுத்துக்குலுங்கும் தீங்கனிகளிலி லிருந்து செழுந்தேன் ஆறாக ஓடி கரும்பு வயல்களின்மீது வந்து பாய்ந்து கரும்புகளின் ஒவ் வொரு கணுவிலும் முத்துக்களாய் நின்று புளகாங்கிதம் அடைந்து பின்னர் அது தேன் கதலியுடன் வந்து சேர்கின்ற தாம். அந்தத் தேன் கதலியில் செந்நெற்பயிரானது வளைந்து தன்னுடைய முகத்தைப் புதைத்து நிற்கும் அழகைப் பார்க் கும்பொழுது ஒரு மாணவன் தன்னுடைய தோழனுடன் ஆசானின் திருவடிகளிலே தலைசாய்த்து வணக்கம் செலுத்து வது போன்று தோன்றுகின்றதாம் அவருடைய கற்பனைக் கண்களுக்கு. உடனே அவருடைய எழுத்தாணி முனையி லிருந்து ஒரு கவி கனிந்து விழுகின்றது. அதனை நாம் எடுத்து அருந்திச் சுவைப்போம். வாருங்கள், அஃது இதோ உள்ளது.

மாங்கனியின் செழுந்தேன் தன்மடைச் சாடி
வயல்கரும் பில்வந்து பாயப்
பூங்கரும்பின் கணுக்கள் தொறும் புதுத்தரளம்
தனையீன்று புளகித் தேகி
தேங்கதலி யுடன்(இ)கலிற் செல்விமுகம் புதைத்து
நிற்கும் செந்நெல் சீஷர்
பாங்கருடன்குருபாதம் பணிவதுபோல்
தலைசாய்த்துப் பணியும் தானே.

இத்தகைய அமுதூறிய அழகிய கவிகளால் தம்முடைய காப்பியத்தை இயற்றிய ஆலிப் புலவர் அதில் பன்னிரண்டு படலங்களில் 743 செய்யுட்களைப் பொதியவைத்தார். அதில் ஒவ்வொரு படலத்திற்கும் நாட்டுச் சிறப்பு, பாயிரச் சிறப்பு, ஏணிச் சிறப்பு, எழுவான் சிறப்பு என்று பெயரிட்ட அவர், நரகத்தைப் பற்றிய படலத்திற்கு 'நரகத்தியல்பு' என்று குறிப்பிட்டார்.

இவ்வாறு தம்முடைய கன்னி முயற்சியாம் கன்னித் தமிழ் காப்பியத்தைச் செய்து முடித்த புலவர்பெருமான் அதனைப் பற்பல ஊர்களிலும் விரிவுரை நிகழ்த்திவிட்டு அதனை அரங்கேற்றுவான்வேண்டி கோட்டாறு சென்றனர். அங்குச் சென்று தம் மாணவராகிய சிவலிங்கஞ் செட்டியாரின் இல்லத்தில் இறங்கி அதன்பின் முஸ்லிம்கள் வாழும் வீதி சென்று அவர்களை அண்மித் தம் உளக் கருத்தை வெளியிட்டனர். அவர்களோ அவரின் வேண்டுகோளுக்குச் சற்றேனும் செவிசாய்க்காது 'எங்களுக்கு இப்பொழுது எத்தனையோ அலுவல்கள் அல்லல்கள் உள்ளன. ஆதலின் பின்பொருநாள் வாருங்கள், பார்ப்போம்' எனக் கூறித் தட்டிக்கழித்தனர். அதைக் கண்டு ஆலிப் புலவரின் அருள்நெஞ்சம் பெரிதும் துன்புற்றது. நாம் முஸ்லிம்களின் குறை போக்க, அவர்களின் மாசைத் துடைத்து அவர்களை மாண்புறச்செய்ய, அவர்களை உண்மை முஸ்லிம்களாக வாழச்செய்ய எவ்வளவோ அரும் பாடுபட்டு இக் காவியத்தை இயற்றிக் கொண்டு வந்திருக்க, என்னவோ இவர்களிடம் இரந்துண்ண

வந்தவன் என்று நம்மை எண்ணிக்கொண்டு இகழ்ந்துரைக்கின்றனரே இவர்கள், என்று நினைந்து உளம் நைந்தார். இவர் அவர்களிடம் எவ்வளவோ வேண்டியும் அவர்களின் உள்ளம் கல்லாகியதே ஒழியக் கரையவில்லை. எனவே, பெரிதும் ஏக்கத்துடனும் ஏமாற்றத்துடனும் செட்டியாரின் இல்லம் திரும்பி அவருடைய வீட்டின் முன்றிலில் வாடிய முகத்துடன் வீற்றிருந்தார்.

வெளியே சென்று இல்லம்மீண்ட சிவலிங்கஞ்செட்டியார் தம் ஆசான் அல்லலும் தொல்லையும் ஒருங்கே உருவெடுத்தாற் போன்று உளம் கலங்கி முகம் வாடி வீட்டின்வெளியே வீற்றிருப்பதைக் கண்டதும் 'கவலை ஏனோ' என்று வினவினார். நடந்த வரலாற்றைப் புலவர்பெருமான் நவின்றதும் அவருடைய நெற்றிச் சற்றுநேரம் சுளித்தது. முகத்தில் வரைகள் கோலமிட்டன. அதன்பின் அவர்தம் ஆசானை நோக்கி 'தாங்கள் ஒன்றுக்கும் கவலைப்படவேண்டாம். முஸ்லிம்கள் அதனை அரங்கேற்ற முன் வராவிட்டால் இந்தக் கைக்களவர் தெருவிலுள்ள மூவாயிரம் கைக்களவரும் ஒருங்கு சேர்ந்து அதனை அரங்கேற்றுவோம். இங்குள்ள கைக்களவர் சமுகத்துக்கு பாவாடைச் செட்டியார் என்னும் செல்வச் சீமான் ஒருவர் தலைவராக இருக்கின்றார். அவரோ ஓர் அந்தகர். தம் கண்கள் ஒளி பெறவேண்டுமென்று அவர் செய்த அறங்கள் சிறிதல்ல. எனினும் கண்ட பலன்தான் ஒன்றுமில்லை. அவரிடம் நான் சென்று, தாங்கள் இங்கு வந்திருப்பதையும் தங்களின் உளக் கருத்தையும் எடுத்துரைத்து, தங்களின் மேலாம் காவியத்தை அரங்கேற்றுவதற்கு அவர் ஆவன செய்யின் அவரின் கண்கள் அண்ணல் நபியவர்களின் பேரருளால் வெளிச்சம் பெறும் என்றும் அவருக்கு உணர்த்தி, அவரே முன்நின்று அச்செயலை ஆற்றுமாறு செய்துவருகிறேன்' என்று கூறிக் கிளம்பினார். ஆலிப் புலவரும் அவரை நோக்கி 'சரி, முயன்றுபார்' என்று அயர்ந்தாற்போல் கூறினர்.

பாவாடைச் செட்டியாரின் இல்லம் சென்ற சிவலிங்கம் செட்டியார் புன்னகை தம் முகத்திலே தவழத் தமதில்லம் மீண்டதைக் கண்டதும் புலவர் பெருமானின் அகமும் முகமும் மலர்ந்தன. சென்ற அலுவல் 'பழம்' தான் என்பதை அவருடைய முகக் களிப்பால் விளங்கிக்கொண்ட புலவர்

பெருமான், 'பழம்' தானே என்று வினவினர். 'ஆம். பழம் தான்' என்று அவர் பகர்ந்ததும் அவரை அன்போடணைத்து நடந்த செய்தியைத் தம் உள்ளம் குளிரக் கேட்டு மகிழ்ந்தனர் அன்னார்.

இதன்பின் என்ன? அரங்கேற்றத்திற்கான அலுவல்கள் வெகு மும்முரமாக நடைபெற்றன. பாவாடைச் செட்டியாரின் வேண்டுகோளுக்கு இணங்கி அங்கு வாழ்ந்த மூவாயிரம் கைக்களவரும் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களின் 'மிஃராஜ்' என்னும் விண்ணேற்ற வரலாற்றை —ஆரணம் போற்றும் அண்ணல் நபியின் அழகிய விண் பயணத்தை அரங்கேற்றம் செய்யத் தத்தம் வீடுகளை அலங்கரித்துத் தெருக்களைத் தூய்மைப்படுத்தித் தோரணம் கட்டினார்கள். காவணம் வகுத்தார்கள்; பந்தல் போட்டார்கள்; பவனி வந்தார்கள். அதன்பின் அவர்கள் ஆலிப் புலவரை அன்புடன் அழைத்துவந்து உயரிய இடத்தில் அமர்த்தி அமைதியாக அவரின்முன் அமர்ந்து, அவர் தந்த காவியத் தேனை உண்டு மகிழ்ந்துகொண்டிருந்தனர். பாவாடைச் செட்டியாரும் புலவரின் முன் அமர்ந்து அவர் கூறுவதைச் செவி சாய்த்து வணக்க ஒழுக்கத்துடன் கேட்டுக்கொண்டிருந்தார்.

ஆலிப் புலவர் எழுவான் சிறப்பை எழிலுடன் துவங்கி விரிவுரை நிகழ்த்திவரும்பொழுது முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) 'புறுக்' என்னும் புரவி இவர்ந்து நான்காம் விண் சென்ற சீர்மையை எடுத்துரைத்து அங்குள்ள பைத்துல் மஃமூர் பள்ளியில் தம்முடைய சுட்டுவிரலால் அழகிய தூண் ஒன்றில் துளை செய்து அப் புரவியைக் கட்டிவிட்டு அதன்பின் ஐந்தாம் விண்ணுக்கு எழுந்தருளினர் என்ற கருத்தமைந்த

நாலாம்வா னம்இலங்கும் ஞானரத்ன மஃமூரில்
வாலாய மாய்வீற்ற வான்பரியை—கோலத்தூண்
தான்துளைத்துக் கட்டியரோ தாஹாசென்
[றுரைந்தாம்
வானகத்தின் உள்ளே மகிழ்ந்து.

என்ற வெண்பாவைத் தம் வாய் இனிக்கும்வண்ணமும் கேட்போர் செவி இனிக்கும்வண்ணமும் பாடும்போது 'கோலத்தூண் தான் துளைத்துக் கட்டியரோ' என்ற அடி வந்ததும் முச்சுடர்வடிவான முகம்மதெங்கள் நபிகள்கோமான் (ஸல்) அவர்கள் திருக்காட்சி நல்கி 'ஆலி, அச்செய்தி அல்லாஹ்வுக்கும் என்னுடன்வந்தஜிப்ரீலுக்கும்தாமே தெரியும்? உமக்கு எவ்வாறு தெரியும்?' என்று அமுதவாய் விண்டனர். 'அண்ணலெம்பெருமானே! அடியேனின் வாயில் அவ்வாறு வந்தது; விண்டேன். அதையன்றி வேறொன்றும் கண்டேனல்லேன்' என்று நாக்குளற விடையிறுத்துவிட்டுக் காணாத காட்சியைக் கண்ட பெரும் அதிர்ச்சியினால் கீழே சாய்ந்தனர். அவர் கீழே சாய்ந்ததை அவரருகே வீற்றிருந்த பாவாடைச் செட்டியார் உணர்ந்ததும் 'என்ன செய்தி, என்ன செய்தி' என்று ஏக்கத்துடன் வினவினார். 'ஏறிட்டு வேப்ப மரத்தைப் பாரும்' என்றனர் ஆலிப் புலவர். அவரும் அவ்வாறே செய்தார். அவ்வளவுதான். அவருடைய கண்கள் ஒளி பெற்றன. முகம்மதெங்கள் நபிகள் கோமானின் (ஸல்) திருக் காட்சியைக் காணும் பெரும்பேறு பெற்று அவை மிளிர்ந்தன. அவர் துள்ளிக் குதித்து மகிழ்ச்சிக் கூத்தாடினார். அப்பொழுது நபிநாயகப்பதி அவர்கள் 'ஆலி, நாம் உம் காவியத்தை ஏற்றோம்' என்று அமுதவாய் விண்டு மறைந்தார்கள். அப்பொழுது அங்குக் குழுமியிருந்த மக்களுக்கு ஏற்பட்ட மகிழ்விற்கு அளவில்லை.

பொழுதுபுலர்ந்தது. மிஃராஜ்மாலை அரங்கேற்றப்பட்ட விதமும் முகம்மதெங்கள் நபிகள்கோமான் (ஸல்) அவர்கள் திருக்காட்சிநல்கி மறைந்த செய்தியும், பாவாடைச்செட்டியாரின்கண் ஒளிபெற்றவரலாறும்காற்றையும்தோற்கடிக்கும் வேகத்துடன் கோட்டாறுப் பட்டினத்தின் ஒவ்வொரு மூலை முடுக்கிலும் பரவியது. அதைக் கேட்டதும் முஸ்லிம்கள் கையறு நிலையை அடைந்தார்கள். 'என்ன கைசேதம், என்ன கைசேதம், நாம் அக் காட்சியைக் காணும் பேறு பெறவில்லையே' என்று அவர்கள் கையைப் பிசைந்தார்கள். பின்னர் அவர்கள் எல்லோரும் ஒருங்கு திரண்டு வந்து புலவர் பெருமானைத் தரிசித்து தங்களின் தவற்றை மன்னித்து தங்களை வாழ்த்தியருளவேண்டுமென்று, வேண்டிக் கொண்டனர். அவரும் அவ்வாறே செய்தார். பின்னர்

அவர்கள் அவரைப் போற்றியதும், ஏத்தியதும் 'ஆலியப்பா ஆலியப்பா' என்று அன்புடன் அழைத்து, அகங்குளிர விளித்து, அவரின் அருள் வேண்டி நின்றதும் சொல்லும் தரத்தனவல்ல.

இதன்பின் ஆலிப் புலவர் நாயகத் திருமேனியைக் கண்ட கண்களால் இந்த நரர்களைப் பார்க்கமாட்டேன் என்று கூறித் தம் கண்கட்கு மறைப்பிட்டு அந்தகர் போன்று வாழ்ந்துவந்தனரென்றும் அவர் நாயகப்பதியைக் காணும்பொழுது அவருக்கு வயது எண்பது என்றும், அதன்பின் சில ஆண்டுகளே இவ்வுலகில் வாழ்ந்துவந்தனரென்றும் பின்னர் ஒருநாள் அதாவது ஹிஜ்ரி 1000-ஆம் ஆண்டு ரமலான் திங்கள் பிறை 27 வெள்ளிக்கிழமை அவர் பாளையங்கோட்டை சென்றிருந்தக்கால் அங்குள்ள தோட்டம் ஒன்றில் பிற்பகல் தொழுகை தொழுதுகொண்டிருக்கும்பொழுதே சஜ்தா (தொழுகையில் குப்புற வீழ்ந்திருக்கும் நிலை) வில் வைத்து, பல்லாண்டுகளாக அன்னாரின் உடலில் ஆட்சிசெய்த ஆன்மா விண்ணுலகம் ஏகிவிட்டதென்றும், பின்னர் அவரின் மகனும் உற்றாரும் வந்து அவரின் வெற்றுடலைச் செவ்வல்மாநகரம் கொண்டுசெல்ல விரும்பியபொழுது அத் தோட்டத்தின் உரிமையாளர் அவர்களை அணுகி, அன்னார் தம் தோட்டத்திலே வந்து உயிர் நீத்திருப்பதால் அவரை அவர் உயிர்நீத்த இடத்திலேயே அடக்கவேண்டுமென்று பெரிதும் வேண்டிக் கொண்டதன்பேரில் அவரை அங்கேயே அடக்கம் செய்தனர் என்றும் கூறுவர். அன்னாரின் அடக்க இடம் இன்றளவும் 'ஆலியப்பா பள்ளி' என்ற பெயருடன் பாளையங்கோட்டையில் இருந்துவருகிறது.

ஆலிப் புலவருக்கு ஓர் ஆண் மகனும் இரண்டு பெண் மக்களும் இருந்தனர். பெண்களில் ஒருவரை மேலப்பாளையத்திலும்மற்றொருவரைக்குலசேகரன்பட்டணத்திலும்மணமுடித்துக் கொடுக்கப்பட்டது. அந்த வழித் தோன்றல்களில் பெரும் புலவர்களும் தோன்றினர். அவர்களின் சந்ததிகள் இன்றும் வாழ்ந்துவருகின்றார்கள். அன்னாரின் மகனார் அஹ்மது ஜமாலுத்தீன் என்பார் தற்கலை நகரில் துணி வாணிபம் செய்துவந்தனர். அவரின் வழிவழி வந்தவர்தாம் தற்கலை பீர்முகம்மது அப்பா அவர்களின் ஞான நூல்களுக்கு

விளக்கவுரை எழுதியுள்ள எம். ஏ. நெய்னுன் முகம்மதுப் பாவலராவார். ஆலிப்புலவர் ஒருதடவை 'என்னுடைய சந்ததிகள், கிஞ்சுகம் ஐந்தாறில் ஒன்றுதான் குஞ்சு' ஆகப் பிறப்பர் என்று கூறியதற்கேற்ப இன்றளவும் அவருடைய குலத்தில் ஓர் ஆணும் பல பெண்களும்தாம் பிறந்துவருகின்றனர். அதன்படி அன்னாரின் வழிவழிப் பேரன் நெய்னுன்முகம்மதுப் பாவலர் ஒருவர்தாம். அவருக்கு ஐந்து பெண்களும் ஒரே ஓர் ஆணும்தாம் உள்ளனர்.

ஆலிப் புலவரின் இயற்பெயர் செய்குஅலி என்பதாகும். அதுவே 'ஆலி, ஆலி' என்று செல்லப் பெயராக மருவி நின்றது. அவருடைய தாய்தந்தையர் அவரை 'ஆலிப்பிள்ளை' என்று அன்புடன் அழைத்துவந்தனர். அவர் இளமையில் செவ்வல்மாநகரின் அருகிலுள்ள தேசமாணிக்கம் என்ற ஊரிலுள்ள மடாதிபதியின் இல்லத்தில் தங்கித் தமிழ்க் கல்வி பயின்றனர் என்றும் அவருக்கு மலையாள மொழியும் தெரியும் என்றும் அவர் செல்வச் சிறப்புடன் வாழ்ந்துவந்தார் என்றும் கன்னிவயல் என்ற பெயருடன் ஒரு பெருவயலும் இன்னும் பற்பல வயல்களும் ஓர் எலுமிச்சம் பழத் தோட்டமும் அன்னாருக்கு உரியனவாக இருந்தனவென்றும் கூறுவர்.

ஒருதடவை அன்னார் தலைமுழுக எண்ணெய் தேய்த்துக் கொண்டிருக்கும்பொழுது அவரின் மனைவியார் அவரை அணுகி, இன்று எண்ணெய் தேய்த்துத் தலைமுழுகப்போகிறீர்களே, ஏதாவது இறைச்சி வாங்கி ஆக்கினால் நன்றாக இருக்குமே. 'இன்று கடாயும் அறுக்கமாட்டார்கள், இறைச்சியும் கிடைக்காதே, என்செய்வது? என்று கூறியபொழுது ஏதாவது கோழி, வாத்து இருந்தால் அறுத்துச் சமை' என்றனராம் புலவர். 'அவையும் இல்லையே' என்று மனைவி கையை விரித்தபொழுது, ஆலிப் புலவர் சற்று எரிச்சலுடன் 'நீதான் பிரச்சினையைக் கிளப்பிவிட்டு வீண் தொல்லை தருகிறாய்' என்று வெகுண்டு ''போ, போய் விண்ணைப் பார்த்த வண்ணம் 'ஆலிப்புலவர் தலைமுழுக ஐந்தாறு கொக்குக் கீழேவிழ' என்று கூறு. விழும், எடுத்துச்சமை'' என்று இயம்பினராம். 'ஆமாம், அப்படிச் சொன்னால்போல் கொக்கு விழுந்துவிடவாபோகிறது' என்று ஏளனச் சிரிப்புச் சிரித்தனராம் அவ்வம்மையார். அவ்வளவுதான். அடுத்தகணம் தடதடவென்று ஐந்தாறு கொக்குகள் அவர்களின் வீட்டு முற்

றத்தில் வந்து வீழ்ந்தனவாம். இவ்வாறு கர்ணபரம்பரை யான கதை ஒன்றும் வழங்கிவருகிறது.

இந்துணைச் சிறப்புவாய்ந்த ஆலிப்புலவர்தாம் தமிழ் முஸ்லிம் இனத்தின் தனிப்பெரும் முழுமுதற் புலவராக விளங்குகின்றார் என்றும், அன்னாரின் அடிதழுவியே மற்ற முஸ்லிம் தமிழ்ப் புலவர்களெல்லாம் தலைதூக்கிக் காவியம் இயற்றத் தலைப்பட்டனரென்றும்தெரியவருகின்றது. ஆலிப் புலவர் துவக்கிவைத்த அம் மரபு இன்றும் அழியாது எத் தனை எத்தனையோ புலவர்மணிகளை ஈன்று வாழையடிவாழை யாக வளர்ந்தோங்கி வருகின்றது. அது என்றென்றும் வாழ்ந்து தமிழ் மொழியை அணிசெய்து, தமிழ் மொழியை வளப்படுத்தி, தமிழின் பெருமையைத் தாரணி முழுவதும் பறை முழக்கிக்கொண்டிருக்கும் என்பதில் எவ்வித ஐயமு மில்லை.

# ஞவாதுப் புலவர்

புலவர் பெருமான் ஒருவர் கீழக்கரை சென்றிருந்தக் கால் அங்குச் செல்வச் சிறப்புடன் வாழ்ந்துவந்த நூர்முகம் மது மரக்காயரின் இல்லம் நண்ணினர். அவரோ தம்முடைய செல்வச் செருக்கின் காரணமாகப் புலவரை மதித் தாருமில்லை, அவருக்குக் காணிக்கை நல்கிக் கௌரவித்தாரு மில்லை. புலவர் பெருமானும் வாய்விட்டுத் தமக்குப் பரிசில் நல்குமாறு கேட்டார். எனினும் நூர்முகம்மது மரக் காயரின் மனம் இரும்பென இருந்தது. 'ஆலத்திற் கொடும் சினமும் அமிழ்தினில் இனித்திடும் அன்பும்' பெற்றிருந்த அப் புலவர் பெருமானின் இரு கண்களும் உடனே இரு தீக் கங்குகளாயின. அவருடைய வாயிலிருந்தும் அனல் அம்பு போன்று

உண்ணுமல் பூணுமல் உடுத்தாமல் கொடுத்தொரு
[வர்க்கு உபகாரங்கள்
பண்ணுமல் வேணமுதல் பாரினிலே மிகமிகவே
[படைத்து வாழ்ந்தோன்.

என்ற செய்யுளின் முதலிரண்டு அடிகள் வெளிப்போந்தன. அவ்வளவுதான், அடுத்த அடி அவருடைய வாயிலிருந்து வெளிவருவதற்கு முன் பஞ்சணையில் சாய்ந்திருந்த நூர் முகம்மது மரக்காயர் சரேலெனப் பாய்ந்து அப் புலவர்பெரு மானின் இரு தாள்களையும் தம் இருகண்களிலும் ஒற்றி கொண்டு தம்மை மன்னித்தருளுமாறும் தம் குலத்தைக் காத்தருளுமாறும் கண்ணீர் சிந்திக் கெஞ்சினர். அவர் சிந் திய கண்ணீரானது புலவர் பெருமானின் சினத் தீயை அவித்தது. புலவர் பெருமான் மறுபடியும் வாயைத் திறந் தார். அவரைச் சபிக்கவா? இல்லை, இல்லை அவரை வாழ்த் துவதற்காக. புலவர் பெருமானின் வாயிலிருந்து அமுதத் துளி போன்று பின்வரும் அடிகள் உதிர்ந்தன.

மண்ணுள்வாய் நன்மை யும்கீர்த் தியும்மிகவே
[வளரப்பெற்ருய்
கண்ணுன மணிமார்பா நூருமுகம்மது மார்பா
[கனம்பெற் ருயே

*என்று பாடினுர் அவர்.*

*அதன்பின் என்ன? உதிர்ந்த அந்த முத்துக்களைத் தம் காதாகிய தட்டால் ஏந்தித் தம் உளத்தில் பதித்துக் கொண்டு உவகைக் கூத்தாடினுர் நூர்முகம்மது மரக்காயர். புலவர் பெருமான்மீது பொன்மழை பொழிந்து அவரைக் கௌரவித்தார். இவ்வாறு*

போற்றினும் போற்றுவர் பொருள் கொடாவிடில்
தூற்றினும் தூற்றுவர் சொன்ன சொற்களை
மாற்றினும் மாற்றுவர் வண்க ணுளர்கள்
கூற்றினும் பாவலர் கொடிய ராவரே!

*என்ற தமிழ்ப் புலவர் மரபில் தப்பாது பிறந்த தனிப் பெரும் புலவர் யார் என்று வினவுகின்றீர்களா? அவர் தாம் 'நட்டாரை வாழ்வித்து நயஞ்செய்யார் தலைக்கெடுத்து தட்டாத பெருமையுற்ற ஜவாதுப் புலவ'ராவார்.*

*ஒருதடவை ஜவாதுப் புலவர் மேலப்பாளையம் சென்றிருந்தக்கால் ஊருக்கு வெளியே தங்கிப் பின்வரும் சீட்டுக்கவி ஒன்றை அவ்வூர்வாழ் முஸ்லிம்களுக்கு அனுப்பிவைத்தார். அதைப் பார்த்ததும் அவ்வூர் முஸ்லிம்களின் உளம் பதை பதைத்தது; உடல் நடுங்கியது. அப்படியவர் அதில் என்ன எழுதினுர்?*

பாளையம் தீனேர் பவிசுகெட்டுப் போகாமல்
நாளை நூறுபொன் நல்காட்டால்—வேளையிலே
பட்டகுண்டு போலே படுமேஎன் சொல்லம்பு
பொட்டெடன வந்தாலே புகழ்

*அதைப் பார்த்ததும் அவ்வூர்வாழ் முஸ்லிம்கள் எல்லோரும் ஒருங்கு திரண்டு பள்ளிவாயிலில் குழுமி என்செய்வது, யாது செய்வது என்று சிந்தித்தார்கள். ஐந்நூறு பொன்னுக்கு நாம் இப்பொழுது எங்குச் செல்வது என்று ஏங்கினுர்கள். அதன்பின் அவர்கள் எல்லோரும் ஒருமித்து ஒரு முடிவுக்கு வந்தார்கள். ஐந்நூறு வெள்ளி நாணயங்களாவது சேர்த்துக் கொண்டுசென்று அவரின் தாளடிகளில் வைத்து தங்களின் அவல நிலேமை எடுத்துரைத்து அவரின் வேண்டுகோளேச் சரிவர நிறைவேற்ற இயலாததற்குத் தங்களே மன்னிக்கவேண்டுமென்று கெஞ்சிக் கேட்டுக்கொள்வோம் என்பதுதான் அம் முடிவு. அவ்வாறே அவர்களும் செய்தார்கள். புலவரும் மகிழ்ந்து அவர்களே வாழ்த்திவிட்டு அவ்விடத்தை விட்டும் அகன்ருர். அகன்ருர் என்ருல், கால்நடையாகவா? இல்லே, இல்லே. சேதுபதியால் அளிக்கப்பெற்ற சிங்கமுகப் பொற் சிவிகைமீது இவர்ந்து.*

*இவ்வாறு இவர்ந்துசெல்லும் வழியில் ஒரு புலவர் அவரை அணுகி*

துருவணிகர் முகம்மது மீர்ஜவாது சொற்புலமைக்
[கெதிர்சொல்ல முடியாதென்று
அருவரையன் குகன்குறிஞ்சி மலேயில் சார்ந்தான், அரு
[ணகிரி கிள்ளே வடிவானுன் கம்பன்.
கருணேயுடன் கூலிக்குச் சுவர் வைத்தான், கவிக்காள
மேகம் எமகண்டமானுன்.
பெருமழை வாகனனும், அகஸ்தியரும் பின்பிறைபோய்,
ஒளவையுமே பெண்ஏன் ருளே.

*என்று அவர்மீது புகழ்ப்பா இயம்பியதும், அதைக்கேட்டுப் பெரிதும் அகமகிழ்ந்த ஜவாதுப்புலவர், வந்த புலவரிடமே அந்த ஐந்நூறு வெள்ளி நாணயமுள்ள பையை அப்படியே எடுத்துக் கொடுத்தார். இஃதென்ன வேடிக்கை! இதில் வேடிக்கை என்ன? ஜவாதுப்புலவர் சாமான்யப்புலவரா? புலவர்களின் புரவலர் அல்லவா அவர்!*

*இதோ அவர் சந்திர சேகர மகா முனி மூப்பன் என்பாருக்கு எழுதிய சீட்டுக் கவியைத் தருகிறேன். அதில்*

அவர் தம்மை எவ்வித அடைமொழிகளால் குறிப்பிடுகின்றார் என்பதைக் கவனியுங்கள்.

விருதிலட் சணகாவி யப்பிரசங் கத்தின்மனு
வேந்தர்கள் சபா ஆஸ்தான
வித்வசே கரன்கண்ட மூதண்டம் வென்றமா
வெகு வித்தை ஆடம்பரன்
கருதி எதிரிடு புலவர் தர்க்கமிடு வாயிலே
கல்வி யாப்புக் கடாவும்
காலமா ருதமதுர கவிசொரி சவாதுகவி
ராஜ சரபத்தின் நிருபம்
தருவிதவி ரணவிருதி லட்சணசு லட்சணகை
லாசனின் வரப் பாலகா
தந்த்ரசே கரவருண சந்த்ரசே கரமதா
ஜலமகா முனிவன் அறிய
இருநிலம் புகழ்வண்ணம் என்றவொரு பிரபந்தம்
இசையி னூற்படி பாடினேம்
இருநூறு பொன்னொரு முடிப்பாக இச்சணம்
இவண்வர அனுப்பு வாயே'

இவ்வாறு அதிகாரத்துடன் மடல் எழுதி பொன்பல பரிசில் பெற்று வாழ்ந்த ஜவாதுப் புலவருக்கு அரசர் முதலாகப் புலவர்களும், பொதுமக்களும் அஞ்சி நடுங்கினார்கள். 'திணிகின்ற தோளாரும் திடுக்கமுற்றுப் பணிந்தார்கள்.' 'குஞ்சரக் கோட்டு தண்டிகை வாணன் வண்டமிழ் சவாது வாயெலாம் நஞ்சே' என்று ஒரு புலவர் பயந்து கூறினார். 'சரபம் கவிச் சக்கரவர்த்தி சவாதின்மேல் ஆணை என்றால், அரவம் கடித்திடவும் அஞ்சிடுமே' என்று மற்றொருவர் வியந்து பாடினார். 'கலைமதம் கொண்டிடு சவாதுக் கவிச்சரப காம்பீர்ய துங்கன்' என்று வேறொருவர்

புகழ்ந்து பாடினார். 'வாதுசெயும் புலவர் பலர் வாயடங்க மகிழ்ந்தானே' என்று வேறொருவர் பண்இசைத்தார். இவ்வாறு புலவர்களாலும், பெருமக்களாலும் பாராட்டப் பெற்று, பாரினிலே பவிசுடன் திக்விஜயம் செய்த ஜவாதுப் புலவர் ஒருதடவை மஞ்சூர் என்ற ஊரை அடைந்தக்கால், அங்கு வளவாழ்வு வாழ்ந்து வந்த சேஷையங்கார் என்ற செல்வரை அணுகித் தமக்குப் பரிசிலாக ஐந்நூறு பொன் தருமாறு கேட்டனர். ஆனால் சேஷையங்காரோ வீசம்பணம் கூடத் தம்மால் தரமுடியாது என்று கூறினார். அப்பொழுது ஜவாதுப்புலவர் அவருடைய பேச்சைப் பிடித்துக்கொண்டு, அவரின் உலோபத்தனத்தைச் சோதிப்பதற்காக வேண்டி 'சரி அப்பா, வீசம் பணமாவது தா' என்று கேட்டார். 'முடியாது, அரைக்காசுகூட என்னால் தரமுடியாது' என்று ஆங்காரத்துடன் கூறினார் ஐயங்கார். அவ்வளவுதான். ஜவாதுப் புலவரின் வாயிலிருந்தும்,

'வீசம்பணம் கொடுக்காத சேஷா
விரியம் பாம்பு கடித்துச் சாசா'

என்ற மொழிகள் அம்புபோல் வெளிவந்தன. அதற்குமேல் அவர் அங்கு ஒரு கணமும் நிற்கவில்லை. விறுவிறென வெளியே சென்றுவிட்டார். ஜவாதுப் புலவரின் நச்சுநாவைப்பற்றி அறியாத சேஷையங்கார் அதைக்கேட்டு ஏளனமாகச் சிரித்துவிட்டுத் தம் வேலைகளைப் பார்க்க வெளியே சென்றார். ஆனால் சென்றவர் சென்றவர்தாம். அவர் இல்லம் மீளவில்லை, அப்படி என்ன நிகழ்ந்தது? அவர் தம் தோட்டத்திற்குச் சென்றிருந்தக்கால் ஒரு மரத்திலிருந்த விரியன் பாம்பு ஒன்று திடீரென அவருடைய உச்சியில் வீழ்ந்து தீண்டிவிட்டது. சேஷையங்காரும் 'தொப்' பெனக் கீழே வீழ்ந்து சில கணங்களில் உயிர் நீத்தார்.*

---

*அவர் அரசிளங்குடிக்குச் சென்றிருந்தபொழுது அங்கு வாழ்ந்துவந்த இருளப்பன் என்ற செல்வனை அணுகிப் பரிசில் வேண்டியதாகவும், அவன் கொடுக்க மறுக்கவே

*அதன்பின் திருவாரூரை அவர் நண்ணியபொழுது அங்குத் தண்ணீர்ப்பந்தல் வைத்திருந்த கனகசபை ஆண்டி என்ற மணியக்காரன் ஒருவன் ஜவாதின் சிவிகை சுமப்பவர்களுக்கு குவளையில் நீர் கொடுக்க மறுத்து, அவர்கள் கையில் தாம் தண்ணீரை ஊற்றுவதாகவும் அதனை எவ்வளவு வேண்டுமானாலும் அவர்கள் குடித்துத் தாகம் தீர்ந்து செல்லலாமென்றும் கூறினான். ஜவாதுப் புலவரும் அவனிடம் எவ்வளவோ இதமாகப் பேசிப்பார்த்தார். அவன் அசைந்தானுமில்லை; இசைந்தானுமில்லை. அவனுடைய சடாமுடியைப் பார்த்து அவனை இகழ்ந்தார் ஜவாது. இத்துணை வேற்றுமை பாராட்டக்கூடிய நீயும் ஓர் உண்மை ஞானியா என்று வெகுண்டார். அதன்பின் என்ன? வழக்கம்போல் கவி பாணம்தான்.*

மலைக்குயர்ந்த கோபுரம்சூழ் திருவாரூர் துறைக்கு
[மணியக்காரன்
நிலைக்குயரமாய் வளர்ந்தோன் கனகசபை யாண்டி
[யுடை நெறியைக் கேண்மோ
முலைக்குயர்ந்த முலைமாது தம்முகத்தில்
[தம்முகத்தை வைத்து முயங்கவேண்டி
தலைக்குயரம் வேண்டுமென்று தலையணைக்காய்
[வளர்த்தான் சடையைத்தானே

*என்று பாடியதும் அவனுடைய சடாமுடி அறுந்து கீழே விழுந்தது. அதைக் கண்டு பெரிதும் திடுக்கிட்ட அவன் அவருடைய தாளிலே வீழ்ந்து மன்னிப்புக் கோரினான். அவரும் அவனை மன்னித்து அவருக்கு அறிவுரை பகர்ந்தார்.*

---

'அரசிளங்குடி இருளப்பா
விருசம் பாம்பு கடித்து உருளப்பா'

*என்று சாபமிட்டதாகவும், அவ்வாறே அவன் விருசமரத்துப் பாம்பு கடித்து இறந்தானென்றும் கூறுவர்.*

*பின்பு முத்தையபுரம் சென்ற ஜவாதுப் புலவர் அங்கு நிலபுலன்களுடன் வளமாய் வாழ்ந்துவந்த குறவர்குலத் தலைவனை பாலசுந்தரத்தின் மனைக்கு எழுந்தருளினார். அவனும் புலவர் பிரானைக் கண்டதும் எழுந்தோடிவந்து கைலாகு கொடுத்து வரவேற்று அவருக்கு மரியாதை செய்தான். அவரைப் பலநாட்கள் தன்னுடைய இல்லத்தில் இருக்கச் செய்து சோடச வுபசாரம் செய்து மகிழ்வித்தான். பின்னர் புலவர்பிரான் பிரியா விடைபெற்றுச் செல்லும்பொழுது அவன் வீட்டுக் கூடத்தில் விநாயகர் சிலை வைக்கப்பட்டிருந்ததைக் கண்ணுற்றார். உடனே அதன் அருகில் சென்று 'பாலசுந்தரம் என்ற இந்தப் பூபதி பனைமரம்போன்ற துதிக் கையையுடைய விநாயகரை ஏத்தித் துதிக்கக் காரணம் என்ன தெரியுமா? குறவர்குலத் தலைவனாகிய பாலசுந்தரத்தின் குலத்திலே உதித்து அவனுக்கு அக்காள் முறையிலுள்ள வள்ளியைத் தம் தம்பியாகிய சுப்பிரமணியருக்குத் திருமணம் செய்வதற்குத் தூதுசென்று வெற்றிபெற்ற பக்காக் கிழவனல்லவா இவர், அத்தானல்லவா இவர் என்று கருதுவதுதான்' என்ற கருத்துப் பொதிந்த பின்வரும் வெண்பாவை, மதிலில் பொறித்தார்.*

பாலசுந்த்ரப் பூமான் பனைமரக்கை வேழத்தைக்
காலமும் ஏற்றும் கருத்தென்னே—சாலவும்தன்
அக்காளைத் தம்பிக்(கு) அணையவைக்கத் தூது
[சென்ற
பக்காக் கிழவனென்று பார்த்து.

*இக் கவியைப் பார்த்ததும் பாலசுந்தரப் பூமான் பரவசமானான். மீண்டும் புலவர்பிரான்மீது பொன்மாரி பொழிந்து, புகழ்மாரி சொரிந்து வழியனுப்பிவைத்தான்.*

*இவ்வாறு அருங் கருத்துக்களைச் சுருக்கமான கவியில் பொதித்துக் கூறுவதில் வல்லுனரான ஜவாதுப் புலவர் அக் காலத்தில் வணங்காமுடி மன்னர் என்று புகழ்ப்பெயர் பெற்றிருந்த கிழவன் சேதுபதியின் அவையை நண்ணி அவரை, 'நீர் வணங்காமுடி மன்னரல்ல, வணங்குமுடி மன்னர்தாம்' என்று கூறிப் பரிசில் பெற்று அம் மன்னரின் அத்தாணி மன்றக் கவிஞராக ஆன வரலாறு அற்புதமானது.*

இராமநாதபுரத்தில் கிழவன் சேதுபதி பற்பல சிற்றரசர்களையும் வென்று வாகைசூடி அரசரேறுபோன்று அமர்ந்துள்ளார். அவரைச் சூழவுள்ள புலவர்களும் புரவலர்களும் அவரை வணங்காமுடி மன்னர் என்று வாழ்த்திக்கொண்டுள்ளார்கள். அவ்வாறு அவரை ஏத்திப் புலவர்கள் பாடிய பாக்களோ கொஞ்சமல்ல. அவற்றைக் கேட்டுப் புளகாங்கிதமுற்று உள்ளம் பூரித்துக்கொண்டுள்ளார் மன்னர். அப்பொழுதுஜவாதுப் புலவர் உள்ளே நுழைகின்றார். அரியணை மீது அடலேறு போன்று வீற்றிருந்த மன்னரை நோக்கி 'அரசே, வாழ்கநும்கொற்றம்' என்று வாழ்த்துகின்றார் அதன் பின் அவர் அரசரை நோக்கி 'அரசே, நும்மை எல்லோரும் வணங்காமுடி மன்னன் என்று கூறுகின்றார்கள். வரும் வழியெல்லாம் நும் பெயருடன் அந்த அடைமொழியையே மக்களும் உச்சரிப்பதைக் கேள்வியுற்றேன். ஆனால் அது மடமொழி என்பது என் கருத்து. நீர் ஒரு வணங்குமுடி மன்னர்தாம். வணங்காமுடி மன்னரல்ல' என்று கூறினார் ஜவாது. அதைக் கேட்டதும் மன்னரின் முகத்தில் தீப்பொறி பறந்தது. 'எப்படி?' என்று இடி முழக்கினாற்போல் கர்ஜித்தார் அவர். 'எப்படியா? இப்படித்தான்' என்று கூறி 'செழுங்கிளை தாங்கும் ரகுநாத சேதுபதியின் வளையாத பொன் முடியானது அவர்தம் மனைவிமாருடன் இல்லறம் நடத்தும்பொழுதும், ஈசனை வணங்கும்பொழுதும் சற்றுவளையும். மேலும் எப்பொழுது வளையும் தெரியுமா? போரிலே வெற்றி கொள்ளப்பட்டு, கையிலே பொன் விலங்குகள் மாட்டப்பட்டு அவர்முன் நிற்கும் சிற்றரசர்கள் அவர்தம் வாயிலுள்ள வெற்றிலை எச்சிலைத் துப்ப விரும்புவதைச் சாடையால் அறிந்து அதனைத் தாங்குவதற்காக படிக்கம் ஏந்தும்பொழுதும் அவரின் வளையாத பொன்முடி சற்று வளையும் ' என்ற அருமையான கருத்துப் பொதிந்த செய்யுள் ஒன்றை வெண்கலக்கோட்டையில் வேழம் நுழைந்து முழக்கியது போன்று பின்வருமாறு முழக்கினார்'

கிளையாளன் சேதுபதி ரகுநாயகன் கிஞ்சுகவாய்
இளையார் கலவி இடத்தும் தம்ஈசர் இடத்து(ம்) [என்றும்
வளையாத பொன்முடி சற்றே வளையும் மகுடமன்னர்
தளையாடிய கையில் காளாஞ்சி ஏந்தும் சமயத்துமே

இதைக் கேட்டதும் விஜயரகுநாத சேதுபதிக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை. 'சபாஷ்! புலவர் என்றால் நீர்தான்காண் புலவர்' என்று பாராட்டு மொழி பகர்ந்து பரிசில் பல நல்கி, அன்றுமுதல் அவரைத் தம்முடைய அத்தாணி மன்றத் தலைமைக் கவிஞராக ஆக்கிக்கொண்டார்.

அதன்பின் சேதுபதி தம் அத்தாணிமன்றத் தலைமைக் கவிஞரான ஜவாதுப் புலவருடன் ஒருதடவை மதுரை சென்றிருந்தக்கால் மீனாட்சியம்மன் கோவிலுக்கு ஜவாதுப் புலவரையும் அழைத்துச் சென்றார். உடனே கோயில் பட்டர் குறுக்கிட்டார். சேதுபதியைக் கோவிலுக்குள் அனுமதிப்பதாகவும் ஆனால் ஒரு முஸ்லிமாகிய ஜவாதுப் புலவரை அவர் யாராக இருந்தபோதினும்சரியே, எப்படிப்பட்டவராக இருந்தபோதினும் சரியே உள்ளே அனுமதிக்க இயலாது என்றும் கூறினார். சேதுபதி எவ்வளவோ கூறியும் பட்டரின் செவிகள் செவிடாயின. அவர் படார், படார் என்று கோயில் உட்கதவைச் சாற்றித் தாழிட்டார். அவ்வளவு தான். ஜவாதுப்புலவர் சீறிப்பாய்ந்தார். பாடினார் ஏழு செய்யுட்கள். அவர் ஏழாவது செய்யுளைப் பாடி முடித்தது தான் தாமதம். கோயில் கதவுகள் தாமாகவே படார் படார் என்று திறந்தன. ஜவாதுப்புலவரும், சேதுபதியும் உள்ளே விறுவிறுவென்று சென்றார்கள். பட்டர் வாயடைத்துப் போய் நின்றார்.

ஒருதடவை ரகுநாத சேதுபதியின் சிறு மகளுக்கு அம்மை வார்த்தது. எவ்வளவோ மருத்துவம் செய்தும் அம்மை நீங்குவதாயில்லை. அம்மை அக்குழந்தையையும் கொண்டுதான், கொன்றுதான் செல்லுமோ என்று எல்லோரும் ஐயுற்றனர். சேதுபதிக்கு ஏற்பட்ட கவலைக்கு அளவில்லை. தம் கவலையைத் தம் அத்தாணி மன்றப்புலவரான ஜவாதுக்கும் அழாத குறையாகத் தெரியப்படுத்தினார். அதைக் கேட்டதும் ஜவாதுப்புலவர் 'அரசே! கவலற்க. நாம் அம்மையை இறங்கவைக்கின்றோம்' என்று கூறிக் குழந்தையை ஒரு வாழை இலையில் வைத்துத் தம்முன் கொணருமாறு சொன்னார். அவ்விதமே சேதுபதியும் செய்தார். அப்பொழுது புலவரின் வாயிலிருந்தும் ஐந்து கவிகள் வெளிவந்தன. பலன்? அச்சணத்திலிருந்து அக்குழந்தையைப் பீடித்திருந்த அம்மைநோய் இறங்கத் துவங்கிவிட்

டது. சின்னுட்களில் அக்குழந்தை முழுநலம் பெற்று கொழு கொழுவென வளரத் துவங்கிவிட்டது. சேதுபதியும் மகிழ்ந்து அவருக்கு வண்ணூரவயல், சுவாத்தன் என்னும் இரு சிற்றூர்களையும் பரிசிலாக நல்கினுர். இன்றுகூட அவரின் சந்ததிகட்கு சுவாத்தன் கிராமத்தில் சில பங்குகள் இருக்கின்றன.

இதன்பின் சேதுபதியின் அரசவையில் ஜவாதுப்புலவருக்கு ஏற்பட்ட மதிப்பிற்கு அளவில்லை. அவர் வைத்ததே சட்டமாக அங்கு இருந்தது. ஒருதடவை அவர் தம் தாயகமான எமனேசுவரத்திற்கு வந்திருந்து கொண்டு சேதுபதிக்கு ஓர் ஓலை விடுத்தார். அதிலே தம் மகளுக்கு மணமுடித்து மகிழத் தாம் விரும்புவதாகவும், எனவே தமக்கு இன்ன இன்ன பொருள்களும், இத்தனை பணமும் தேவை என்றும் அதில் குறிப்பிட்டிருந்தார். சின்னுட்கள் சென்றன. ஜவாதுப்புலவர் வீடு எங்கே, ஜவாதுப்புலவர் வீடு எங்கே என்று விஞவிக்கொண்டு சேதுபதியிடமிருந்து வண்டி வண்டியாகப் பொருள்கள் வந்து குவியத் துவங்கின. அதன்பின் என்ன? ஒரே கோலாகலம்தான்.

திருமணநாளன்று ஜவாதுப்புலவரின் வீட்டின்முன் பல சட்டிகளில் ஆரமிர்தமனைய அறுசுவை உணவு சமைக்கப்பட்டது. அவற்றின் வாசம் எமனேசுவரத்தின் எட்டுக் கோணங்களிலும் பரவிக் கமழ்ந்துகொண்டிருந்தது. எமனேசுவர மக்கள் அனைவருக்கும் ஏற்கனவே விருந்துண்ணவும், வதுவைக்கு வருமாறும் ஆள் மூலம் அழைப்புகள் அனுப்பப்பட்டிருந்தன. அவர்களும் வருவதாக வாக்களித்திருந்தனர். நண்பகல் ஆனது. சட்டிகளும் அடுப்பிலிருந்து கீழே இறங்கின. உணவு பரிமாறப்படுவதற்குத் தயாராக இருந்தது. ஆனுல் அதனை உண்பதற்குத்தான் அங்கு ஒருவரையும் காணேம். விருந்துக்கும், வதுவைக்கும் சென்ருல் மொய்செய்ய வேண்டுமென்று எண்ணியோ, ஜவாதுப்புலவரே தங்களை நேரில் வந்து அழைக்கவில்லை என்று வெகுண்டோ அவர்கள் விடியலிலே தங்களின் வேளாண்மைகளைக் கவனிக்க வெளிப்பட்டு விட்டார்கள். இதை அறிந்ததும் ஜவாதுப்புலவருக்கு ஏற்பட்ட வெஞ்சினத்திற்கும், அவமானத்திற்கும் அளவில்லை. பற்களை நெறு நெறு வெனக் கடித்தார். உடனே ஓர் ஆளை அனுப்பி இளையாங்குடி மக்கள் அனைவரையும் விருந்துண்ண

அழைத்து வருமாறு ஏவினர். அவனும் ஓடோடி இளையாங்குடி சென்றான். புலவரின் அன்பழைப்பை எடுத்தியம்பினான். உடனே இளையாங்குடி மக்கள் அவசரம் அவசரமாக உடை உடுத்திக்கொண்டு எமனேசுவரம் நோக்கி விரைந்து வந்தார்கள். அவர்கள் வருவதைத் தம் ஊர்க் கண்மாய் மேட்டிலிருந்து பார்த்த பொழுதுதான் புலவருக்கு உயிர் வந்தது போல் இருந்தது. அவருடைய முகம் மலர்ந்தது. அவர்கள் அவரை நெருங்கியதும் 'என்றென்றும் இளையாத நன்னகர் மக்களே, வாருங்கள், வாருங்கள்' என்று அவர்களை வரவேற்றார். அதன்பின் அவர்களைத் தம் இல்லம் அழைத்துச் சென்று அறுசுவை உண்டியை அவர்களுக்கு ஊட்டினர். பின்னர் இரவானதும் அவர்களெல்லோரும் கூடிஇருந்த சபையில் வைத்துத் தம் அருமை மகளின் திருமணத்தைச் சிறப்பாக நிகழ்த்தினர். திருமணம் முடிவுற்றதும் வந்திருந்த இளையாங்குடி மக்களை வாயார வாழ்த்தினர். வாக்கு மாறி வாராதொழிந்த எமனேசுவர மக்களை மனம் நொந்து தாக்கினர். அப்பொழுது அவருடைய வாயிலிருந்து வசைக்கவி ஒன்று புறப்பட்டது.

தம்மகளுக்குத் திருமணம் முடிந்தபின் தம்மீதிருந்த பொறுப்புச்சுமை நீங்கியதும் நாடுவலம் வரத்துவங்கி விட்டார் புலவர். மலையாளம் செல்ல விரும்பிய புலவர் போகும் வழியில் முக்குளம் என்ற ஊரிலுள்ள பள்ளியில் சென்று சிறிது இளைப்பாறினர். அங்கு முற்பகல் தொழுகைக்கோ, அல்லது பிற்பகல் தொழுகைக்கோ யாரும் வராதது கண்டு புலவருக்கு ஏற்பட்ட வியப்புக்கும் வருத்தத்துக்கும் அளவில்லை. பொழுது பட்டபின் ஒரு கிழவர் தள்ளாடித் தள்ளாடி வந்து பள்ளிவாயிலில் விளக்கேற்றி வைத்ததைக் கண்டதும் அவரை அணுகி 'இஃதென்ன பெரும் புதுமையாக உள்ளது. இது முஸ்லிம்கள் வாழும் ஊராக இருந்தபோதினும், இங்கு பள்ளிவாயில் என்று பெயருக்கு இருந்தபோதினும், இங்கு பாங்கு (தொழுகை அழைப்பு) சொல்ல மோதினும் இல்லை, தொழவைக்க லெப்பையும் இல்லை, தொழுவதற்கு ஆட்களையும் காணோமே' என்று வினவினர். அதற்கு அக்கிழவர் 'இவ்வூர் மக்கள் அனைவரும் உழுதுண்டு வாழ்பவர்கள். ஆதலின் அவர்கள்

வைகறையில் எழுந்திருந்து வேளாண்மையைக் கவனிக்கச் சென்றுவிடுவர். இரவானதும்தான் இல்லம் திரும்புவர். அப்பொழுதுதான் தொழுவதற்கும் பள்ளி வருவர்' என்று கூறினர். அதைக் கேட்டதும் ஜவாதுப்புலவரின் கண்கள் இரண்டும் கொவ்வையங்கனி போன்று ஆயின. தொழுகையைவிட வேலை பெரிதாகிவிட்டதோ என்று கர்ச்சித்தார். பின்னர் பின்வரும் வெண்பாவைப் பாடினர்.

வாங்குசொல மோதினில்லை; வந்துதொழ லெப்பையில்லை
ஓங்குஜமாத் தெல்லாம் உழப்போனர்—பாங்குடனே
எக்குளத்துக் கொக்கும் இகலிவந்து முட்டையிடும்
முக்குளத்துப் பள்ளி முகப்பில்.

இந்த வெண்பாவை அவர் எக்கணத்தில் பாடினரோ, அக்கணத்திலிருந்து இக்கணம் வரை அப்பள்ளியில் புருக்கள் வந்து கூடுகட்டி முட்டையிடுவதும், பள்ளியை அசுத்தம் செய்வதும்வழக்கமாயுள்ளது. அவற்றை எவ்வளவோ விரட்டிப் பார்த்தும் அவை நிரந்தரமாக நீங்கியபாடில்லை.

அவர் ஒருதடவை நத்தகுளத்துக்குச் சென்றிருந்தக்கால் அவ்வூர்ப் பள்ளிவாயிலில் போய்த் தங்கினர். அன்று அவ்வூர்க் கண்மாய் அழிக்கப்பட்டு மீன்பிடிக்கப்பட்டது. மீன்பிடிப்பதிலேயே அவ்வூர் முஸ்லிம்கள் அனைவரும் வெகு மும்முரமாக ஈடுபட்டிருந்தார்களே ஒழிய வந்த புலவரை 'நீங்கள் யார்' என்று வினவ யாரும் முன்வரவில்லை. கண்மாயில் பெரிய பெரிய விரால்மீன்களைப் பிடித்துக் கொண்டு அவர்கள் வீடுசென்றதையும் புலவர் கண்ணுற்ருர். அவருடைய நாவில் நீர் ஊறியது. எனினும் தம் அவாவை அடக்கிக்கொண்டு தமக்கு இன்று விரால்மீன் உணவு கிடைக்கும், யாராவது வந்து தம்மை உணவருந்த அழைத்துச் செல்வார் என்று எண்ணிக்கொண்டிருந்தார். நண்பகல் ஆனதும் அவர் தொழுதுவிட்டு விரால்மீன் சாப்பிட வேண்டும் என்ற பேராவலுடன் வீற்றிருந்தார். ஒருவரும் வந்து தம்மை விருந்துண்ண அழைத்துச் செல்லாதது கண்டு அவருக்குப் பெரும் ஏமாற்றமாகவே இருந்தது. இறுதியாக

ஒரு கிழவி அவர் தனித்துப் பள்ளிவாயிலில் அமர்ந்திருப்பதைக் கண்டு அவர் பசியோடிருப்பார் என்று எண்ணி அவரைத் தன் வீட்டிற்கு உணவருந்த அழைத்துச் சென்றாள். ஜவாதும் பெரிதும் முகமலர்ச்சியுடன் அவள் பின்னே நடந்து சென்றார். ஆனால் அவள் அவரின்முன் சில பொடிமீன்களையே கறிசமைத்து வைத்திருப்பதைக் கண்டதும் ஜவாதின் முகம் சுருங்கிவிட்டது. அவர் அக்கிழவியை நோக்கி, 'பெரும் பெரும் விரால்மீன்களெல்லாம் பிடித்தார்களே. அவற்றை ஆக்கவில்லையா' என்று வினவினார். அதற்கு அக்கிழவி 'நான் பெரும் பெரும் விரால்மீன்களுக்கு எங்குப்போவேன். எனக்குப் பிள்ளையும் கிடையாது; குட்டியும் கிடையாதே. ஏதோ நான் கண்மாய்க்கரையில் போய் நின்று மீன்பிடிப்பதைப் பார்த்துக் கொண்டு நின்றேன். என்மீது இரக்கப்பட்ட ஒருமகராசன் தான் பிடித்த பொடிமீன்களில் கொஞ்சம் என்னிடம் தந்துவிட்டுச் சென்றான். அவற்றைத்தான் ஆக்கி வைத்துள்ளேன்' என்று கூறினாள். அதைக் கேட்டதும் ஜவாதுக்கு சினம் பொத்துக்கொண்டு வந்தது.

'நத்த குளத்தாரே, நாய்மூஞ்சிப் பட்டிமக்காள்
செத்தவிரால் தின்னச் செரிக்காது உங்களுக்கு'

என்று தொடங்கும் ஒரு வசைக்கவியைப் பாடிவிட்டு பெரிதும் ஏமாற்றத்துடன் தம்முன் வைக்கப்பட்டிருந்த உணவை வேண்டா வெறுப்பாக உண்டார்.

அவர் அந்த வசைக்கவியைப்பாடிய அக்கணத்திலிருந்து அவ்வூரில் யார் யார் அன்று விரால் மீன் சாப்பிட்டார்களோ அவர்களுக்கெல்லாம் அவ்வுணவு செரிக்காது வயிற்றோட்டம் ஏற்பட்டு அவர்கள் அனைவரும் கண்மாய்க் கரையில்தான் நின்றுகொண்டிருந்தார்கள். விரால் மீன் தின்றவர்களில் ஒருவர் இருவர்க்கு வயிற்றோட்டம் ஏற்பட்டால் ஏதோ செரியாத்தன்மையால் ஏற்பட்டது என்று கூறலாம். ஆனால் எல்லோருக்குமல்லவோ வயிற்றோட்டமாக உள்ளது. இஃதென்ன புதுமை என்று அவர்கள் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டிருக்கும்பொழுது அவ்

வழியே சென்ற கிழவி தம்வீட்டில் நடந்த வரலாற்றையும், விருந்துண்ண வந்தவர் பாடிய பாட்டையும் சொல்லிக்காட்டினுள். அவர்கள் அனைவரும் அவர் யார், அவர் யார்? என்று வினவிக்கொண்டு பள்ளிவாயிலுக்குச் சென்று பார்க்கும்பொழுது அங்கு ஜவாதுப்புலவர் வீற்றிருப்பதைக் கண்டதும் அவருடைய மகாத்மியத்தை ஏற்கனவே கேள்விப்பட்டிருந்த அவர்கள் தங்களை மன்னித்துக் காத்தருளுமாறு வேண்டி நின்றனர். அதற்கு அவர் 'வெளியே வந்த வாக்கை மீண்டும் தூக்கி விழுங்க இயலாது. சென்ற கணை சென்றதுதான். நீங்கள் இவ்வூரைக் காலிசெய்துவிட்டு வேற்றூர் போய்விட்டீர்களானுல் உங்களைப் பீடித்த வயிற்ருேட்டமும் ஓடிவிடும்' என்றனர். ஆனுல் அவர்கள் அதற்குப்பின் எவ்வளவோ மருந்து அருந்தியும் வயிற்ருேட்டம் நிற்காததால் அவ்வெல்லையை விட்டு விட்டு அடுத்த எல்லையில் போய்க் குடியேறினர். அது இப்பொழுது காரயேந்தல், எழுவணி என்ற பெயருடன் விளங்குகிறது. இப்பொழுது நத்தகுளத்தில் மருந்துக்குக்கூட முஸ்லிம்கள் இல்லை.

அவர் மற்ருெரு தடவை தம் ஊரின் அருகிலுள்ள கருஞ்சுற்றி என்ற ஊருக்குச் சென்றிருந்தக்கால், அவ்வூர்க் கண்மாய் அழிந்து அங்குள்ளோர் பெரிய பெரிய கெளிறு மீன்களைப் பிடித்துச் செல்வதைக் கண்ணுற்ருர். ஆனுல் தாம் ஒருவர் வீட்டுக்கு உணவருந்த அழைத்துச் செல்லப் பட்டபொழுது, அங்கு ஆசைக்கு அருமைக்குத் தம்முன் ஒரு கெளிறுமீன்கூட வைக்கப்படாததைக் கண்டதும் அவருக்கு ஏற்பட்ட வெஞ்சினத்திற்கு அளவில்லை. உடனே

கானல் பறக்கும் கருஞ்சுற்றி தீஞேர்கள்
மீனையெல்லாம் தின்றுவெறும் சோற்றைவைத்தார்—

என்று ஒரு வெண்பாவைத் துவங்கி, 'ஆதலின் இன்று முதல் அக்கண்மாயில் உள்ள கெளிறு மீன்களுக்குத் தலை பெருத்து, உடல் சிறுக்கக்கடவது' என்று அதன் ஈற்றடியில் சபித்தார். அதுபோல் அக்கண்மாயில் பிடிக்கப்படும் கெளிறு மீன்களுக்குத் தலை பெருத்தும் உடல் சிறுத்தும் உள்ளன.'

அவர் நம்புதழை சென்றிருந்தக்கால் அங்குள்ள படையாச்சிகளை அணுகித் தாம் அங்குத் தங்கியிருக்கும் காலம் வரைத் தமக்கு அவர்கள் பிடிக்கும் மீன்களில் 'ஒரு பங்கு தராவிடில் உடலும். வலையும் முறியும்' என்று ஒரு கவி பாடவே, அவர்கள் அஞ்சி அவருக்கு அவ்விதமே மீன்மகமை கொடுத்துவந்தனர்.

வசை பாடுவதில் மட்டுமல்லாது வாழ்த்துப்பா பாடுவதிலும் கண்டசுத்தி பாடுவதிலும் ஜவாதுப்புலவர் வல்லுனராக விளங்கினர். அவர் கீழக்கரைப் பள்ளிவாயிலில் அமர்ந்திருக்கும்பொழுது தம்முடைய பாயின் கீழே ஒரு பொன் நாணயம் இருப்பதைக் கண்டு யார் அதை வைத்தது என்று ஆங்கிருந்தோரை வினவினர். எல்லோரும் எங்களுக்குத் தெரியாது, எங்களுக்குத் தெரியாது என்று கூறிக் கையை விரித்தனர். அப்பொழுது புலவரே கண்டசுத்தி பாடிவிட்டார். பின்வரும் கருத்துக்கள் அடங்கிய அருட்கவியொன்று அவருடைய வாயிலிருந்தும் வெளிப்போந்தது. ''துளசிக் கன்றுனது முளைக்கையிலேயே வாசனையோடு முளைப்பது போன்று இஸ்மாயீல் லெப்பையின் சிறு மகனுகிய ஹபீபு முஹம்மதே, நீ தழைக்கும்பொழுதே உன்னைச் சீமான் என்று இறைவன் அமைத்துவிட்டான். உன்னுடைய கீர்த்திதான் என்னே'' என்று வியந்து

முளைக்கையி லேதுளசிக்கன்று வாசனை
[யாய்முயன்று
தழைக்கையி லேயுனைச் சீமானென் றேயமைத்
[தான் இறையோன்
மழைக்கர ஞனஇஸ் மாயீலப் பைமைந் தனருள்
கிளைக்கும் நல்லஹபீபு முகம்மது கீர்த்தி மன்னே

என்னும் கவியொன்றைப் பொழிந்தார். பின்பு விசாரித்துப் பார்க்கும்பொழுது இஸ்மாயீல் லெப்பையின் சிறு மகனுகிய ஹபீபு முகம்மது என்பாரே புலவருக்குத் தெரியாது அவரின் பாயின் கீழே ஒரு பொன் நாணயத்தைப் புலவர் எடுத்துக்கொள்ளட்டும் என்று வைத்ததாக அறியவந்தது.

அதைக் கண்டு அவ்வூர் மக்களுக்கு ஏற்பட்ட பெரு வியப்பிற்கு அளவில்லை.

திருக்கூருக்குப் ஜவாதுப்புலவர் ஒருதடவை வந்திருந்தக்கால் அவருடைய அருட் தன்மையைச் சோதித்துப்பார்க்க வேண்டுமென்ற எண்ணத்துடன் ஒரு தாசி தன் கையிலே முச்சந்தி மண்ணை எடுத்துவைத்து மூடிக்கொண்டு அவர்முன் வந்து நின்று 'சவாதுப் புலவீர், நீர் சரியான புலவராக இருப்பின் என் கையில் என்ன உள்ளது, கூறும் பார்ப்போம்' என்று அறைகூவல் விடுத்தாள். அந்த அறைகூவலை ஏற்றுச் சிலகணம் அமைதியாக வீற்றிருந்தார் ஜவாது. அதன்பின் ஆங்காரத்துடன்

கொங்கைக்குச் சந்தனமாம் கோதைவிழிக்
[கஞ்சனமாம்
திங்கள் முகத்தில் திலதமாம்—மங்கையே
ஆடற் பரிஏறும் ஆழ்வார் திருக்கூரின்
மாடத் தெருவீதி மண்!

என்று பாடியதும் அந்தத் தாசியின் கையிலிருந்த மண் அப்படியே அவளுடைய வாயில் விழுந்துவிட்டது.

புதுக்கோட்டை மன்னராய் இருந்த விஜயரகுநாதத் தொண்டமான் தம்மிடம் பரிசில் வேண்டிவரும் புலவர்களிடம் 'ஆறுறு நாற்பத்து ஒன்றும்' என்பதனை ஈற்றடியாக வைத்து ஒரு வெண்பா பாடுமாறு கூறும் வழக்கமுள்ளவராயிருந்தார். ஆறுறு முப்பத்தாறு அல்லவோ, இவரென்ன நாற்பத்து ஒன்று என்று கூறுகின்றாரே என வந்த புலவர்கள் விழித்துப் பா இயற்ற இயலாமலும் பரிசில் பெற முடியாமலும் வெருண்டோடினார்கள். இஃது ஜவாதுப் புலவரின் செவிப்பட்டதும் அவர் தொண்டமானின் அரசவைக்கு வந்து 'விஜயரகுநாதத் தொண்டமானே, நாம் இங்கு வரும்பொழுது தென்கோடித் தோப்பில் முப்பத்தாறு மாமரங்களைக் கண்டோம். அவற்றில் ஒன்று நாற்பத்துள்ள மாங்கனியைக் காய்க்கக்கூடியதாக இருந்தது' என்ற கருத்தை உள்ளடக்கி

விண்டேன். நுகரா விஜய ரகுநாதத்
தொண்டமான் தென்கோடித் தோப்பினில்
—கண்டேம்யாம்
மாருத செந்தேன் வடிந்தொழுகும் மாங்கனியில்
ஆருறு நார்பத்து ஒன்றும்.

என்று ஒரு வெண்பாவைப் பாடினார். அதைக் கேட்டதும் தொண்டமானுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. யாருக்கும் தெரியாது தமக்கு மட்டும் தெரிந்திருந்த இந்த இரகசியம் இவருக்கு எவ்வாறு தெரியவந்தது என்று அவர் இறும்பூதெய்தினார். ஜவாதுப் புலவர் இறைவனின் அருள் பெற்றவரேயன்றி வேறில்லை என்பதை யுணர்ந்து அவர்மீது பொன்மழை பொழிந்து அவரைக் கௌரவித்தார்.

அவர் சோலை முதலியார்மீது பாடிய செய்யுளானது அவருடைய திறமைக்கு மற்றொரு நற்சான்றாக விளங்குகின்றது. எல்லோரும் சோலை முதலியாரைப் பார்த்து 'நீவிர் சோலை என்றால் சோலைதான் ஐயா! உம்மில் மக்கள் செழு நிழலைப் பெறுவர்; பழுத்த கனியைப் பெற்றுப் பசியாறுவர். மென் காற்றை நுகர்ந்து இன்புறுவர் என்று புகழ்ந்து பாடிப் பரிசில் பெற்றுச் சென்றபொழுது, ஜவாதுப் புலவர் அவரிடம் சென்று சாலை முத்துக்கிருஷ்ணனின் அருமந்த மைந்தனாய் இந்த அவனியில் உதித்த சற்குண சிந்தாமணி யாகிய இவரை, யார் சோலை என்று சொன்னவர்? சோலை எப்பொழுதும் அசைந்துகொண்டல்லவோ இருக்கும். இவர் அசையா மனோதிடம் பெற்றவரல்லவா? சோலையில் ஒரே கொப்பும் கவட்டையுமாகவல்லவோ இருக்கும். ஆனால் இவரிடம் கவடு என்பதனைக் கடுகத்தனையும் காண இயலாதே. சோலையில் காய் காய்த்தல்லவோ குலுங்கும்; இவர் யாரிடமும் காய்ந்துவிழமாட்டாரே. சோலையில் எங்குப் பார்த்தாலும் இலை மயமாகவல்லவோ இருக்கும். ஆனால் இவரோ இல்லையென் றிரப்போர்க்கு இலையென் றுரையா இதயம் பெற்றவராயிற்றே. இலையென்ற பேச்சே இவரிடம் கிடையாதே என்று புகழ்ந்து பண்ணிசைத்தார். அத் தேன் கவியை மீண்டும் உங்களுக்காக ஒருதடவை பாடு கின்றார். கேட்டு இன்பம் நுகருங்கள்.

அலையான் கவடுபடான் ஆரிடத்தும் காயான்
இலையென் பதொருநாளும் இல்லை—கலைதேர்ந்த
சாலைமுத்துக் கிர்ஷ்ணனருள் சற்குணசிந் [தாமணியைச்
சோலைஎன்று சொன்னவரார் சொல்.

அக்காலத்தில் ஜவாதுப் புலவருக்குப் போட்டியாக இருந்துவந்தவர் சர்க்கரைப் புலவர் என்பவராவர். ஒரு தடவை ஜவாதுக்கும் சர்க்கரைக்கும் விவாதம் ஏற்பட்டபொழுது 'நான் யார் தெரியுமா? சர்க்கரைப் புலவர்' என்றுஉறுமினார்சர்க்கரைப்புலவர். 'நாம்யார்என்று உமக்குத் தெரியுமா? சவாதுப் புலவர் என்பது உமக்கு நினைவிருக்கட்டும்' என்று கர்ச்சித்தார் ஜவாதுப் புலவர். அதன் பின் சர்க்கரைப் புலவரைப் பார்த்து சர்க்கரை தொண்டை மட்டும்தான்; சவாது கண்டமட்டும் என்றார் ஜவாதுப் புலவர். அதற்குச் சர்க்கரைப் புலவர், தொண்டை என்றாலும் கண்டம் என்றாலும் ஒரே பொருள்தான் என்பதை மனத்திற் கொண்டு இரண்டும் ஒன்றுதானே என்றார். அதற்கு ஜவாதுப்புலவர் 'இல்லை, இல்லை. சர்க்கரை தொண்டைமட்டும்தான் இனிக்கும்; ஆனால் ஜவாதோ கண் கண்ட தொலைவரை மணக்கும்' என்றார். இதைக் கேட்டு சர்க்கரைப் புலவர் வாயற்று விழித்தார்,

இதன்பின் பல திங்கள் உருண்டோடின. ஜவாதுப் புலவர் நாகூருக்கு எழுந்தருளி ஷாஹுல்ஹமீது நாயகத்தின் தறுகாவிலே போய்,

கலிதீர வேண்டும் கருத்தில் இபுலீஸ்
வலிதீர வேண்டுமென வந்தால்—ஒலியான
நாகைத் துரையார்எந் நாளும் உயிர்த்துணையார்
நாகைத் துறையார் நமக்கு.

என்று ஒரு வெண்பாவைப் பாடி அமர்ந்தார், அதன்பின் அங்கு வீற்றிருந்தவண்ணமே நாகை நாதரின்மீது நாகைக்

*கலம்பகம் என்னும் நனிசிறப்பு வாய்ந்த காப்பியம் ஒன்றை இயற்றினர். அதில் ஒரு கவி வருமாறு:—*

அவனியொடு பதினலு அண்டமும் தண்டமும்
அகன்ற பூமண்டலமு மோர்
அரசுபெற்ருலும்நவகோடிநிதியம் படைத்து
அளகாபுரம் செய்யினும்
தவமகிமை யால்கடலை உண்டுமிழ்ந் தாலும்மலை
தலைகவிழ ஒருவிரலிலே
தாங்கிய பலம்பெற்று இருந்தாலும் அஷ்ட
சம்பத்துடன் சித்தாடினும்
குவலயம் தன்னில் மிக்கான நாகூரினில்
குடிகொண்ட பள்ளிவள்ளல்
கோகனக மலரிளஞ் சேவடியை அன்பினெடு
கூருதிருப் பராகில்
ககனநபி ஷரகினை இகழ்ந்தவர்கள் எனஅரைக்
காசென மதித்திடாமல்
காதைக் களைந்தவர்கள் கண்ணைப் பிடுங்கிநம்
காலால் உதைக்கலாமே.

*இவ்வாறு அருமை அருமையான கவிகளைக் கொண்ட கலம்பகம் ஒன்றை நாகூர் தர்காவில் அமர்ந்து ஜவாது இயற்றிக்கொண்டு வருங்கால் சர்க்கரையும் அங்கு எதிர் பாராது வந்து சேர்ந்தார். பின்பு என்ன? பழைய பகை, பகைதான். இருவருக்கும் இடையே ஒரே உறுமலும் கர்ச் சனையும்தாம். முன்பொருதடவை 'சர்க்கரை தொண்டை மட்டும் சவ்வாது கண்ட மட்டும்' என்று ஜவாதுப் புலவர் சாற்றியதையும் அந்தச் சிறு மொழிகள் மூலம் தம்மை இழித்துரைத்ததையும் சர்க்கரை மறந்துவிடவில்லை. அதற்*

குப் பழிக்குப்பழி வாங்க ஒற்றைக் கண்ணரான அந்தச் சர்க்கரைப் புலவர் சரியான வாய்ப்பை உற்று நோக்கிக் கொண்டிருந்தார்.

ஒருநாள் வெள்ளிக்கிழமை ஜும்ஆ தொழுவதற்காக இருவரும் பள்ளியிலுள்ள நீர்த்தேக்கத்தில் (ஹௌஸ்) வலுச் (தண்ணீரால் முகம், கை, கால் முதலியவற்றைக் கழுவித் தூய்மைப்படுத்தல்) செய்தார்கள். அதன்பின் சர்க்கரை, ஜவாதைக் கட்டித் தழுவினர். அடுத்த கணம் ஆயிரம் தேள்களால் கொட்டப்பட்டவர் போன்று தழுவிய கைகளை வெடுக்கென எடுத்து அவரைவிட்டும் அகன்று 'சவாது என்பது பூனை இடுக்கிலிருந்து எடுக்கப்படுவதல்லவோ, அதனால் அது தொழுகைக்கு தூய்மையற்ற பொருள் (நஜீஸ்) அல்லவோ, அதனை நான் தொட்டுவிட்டேனே. என் வலு முறிந்துவிட்டதே. நான் மீண்டும் வலுச் செய்ய வேண்டி ஏற்பட்டுவிட்டதே' என்று அங்கலாய்த்து மீண்டும் வலுச் செய்வதற்காக நீர்த்தேக்கத்தை நோக்கிச் சென்றார். இதைக்கண்டதும், கேட்டதும் ஜவாதின் கண்களில் தீப்பொறி பறந்தன. நாம் முன்பு கூறியதையல்லவோ இவன் மறவாதிருந்து நம்மைப் பழிக்குப்பழி வாங்கிவிட்டான். நம்முடைய பெயர் முகம்மது மீர்ஜவாது அல்லவோ? ஜவாது என்பது முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களுடையவும் முஹிய்யித்தீன் ஆண்டகை அவர்களுடையவும் திருப் பெயர்களில் ஒன்ருகிவிட்டதே. அந்த அரபி மொழிக்குத் தமிழில் பெருங் கொடைவள்ளல் என்பதல்லவோ பொருள். இஃது இவனுக்குத் தெரியாது போன்றல்லவோ இருக்கிறது. இவன் முன்பு பலகாலமாக சவாது, சவாது என்று இழித்துரைத்து வந்தது நம்முடைய பெயர் சவ்வாது என்று எண்ணிக்கொண்டுதான் போலுள்ளது. அதற்குத் தோதாக நாமும் ஒருதடவை சர்க்கரை தொண்டை மட்டும் சவ்வாது கண்டமட்டும் என்று கூறிவிட்டோம். அதைப் பிடித்துக்கொண்டல்லவோ இப்பொழுது பலர் முன்னிலையில் வைத்து இழித்துரைத்துவிட்டான். சரி, தான், சவ்வாது பூனை இடுக்கிலிருந்து எடுக்கப்படுவதால் அசுத்தப் (நஜீஸ்) பொருளாகிவிடுமா? அதைத் தொட்டால் வலு முறிந்துவிடுமா? இவனுக்கு மார்க்கம் என்றுல் என்ன, ஒழுக்கம் என்றுல் என்னவென்று விளங்குமா? இத்தகைய அகக்கண் பொட்டையனுக்கு எஞ்சியுள்ள மற்ருெரு

முகக்கண்ணும் தொலைந்தால்தான் மார்க்கம் நிலைத்து நிற்கும் என்று கொதித்தெழுந்தார். உடனே

> தாமதியா மல்எங்கள் ஷாஹுல் ஹமீதொலியை
> நாமதி யாதிருந்த நாளெல்லாம்—நேமம்
> கலைத்தவனுக் கின்னமொரு கண்போனுல் மட்டும்
> நிலைக்கும் ஷரகு நெறி

என்று பாடினர். உடனே சர்க்கரையின் மற்ருெரு கண்ணும் பொட்டையாகிவிட்டது.

இதன்பின் பல்லக்கு இவர்ந்து தம் ஊர் திரும்பிய ஜவாது இளையாங்குடி வழியாக வரும் பொழுது வீதியிலே விளையாடிக்கொண்டிருந்த சிறுவர்கள் விளையாட்டுத் தனமாக அவர் சென்ற பல்லக்கின்மீது கல்லெறிந்தார்கள். அதைக்கண்டு பெரிதும் சினமுற்ற ஜவாது அவர்களுக்கு எவ்வளவோ இதமாகக் கூறியும் கேட்கவில்லை. உடனே அவரை அறியாமல் அவருடைய வாயிலிருந்தும் 'குஞ்சுகளில் ஐந்தாறைக் கொல்' என்பதனை ஈற்றடியாகக் கொண்ட ஒரு வெண்பா வெளிவந்தது. அவ்வளவுதான். ஐந்தாறு குழந்தைகள் அங்கேயே சுருண்டு சுருண்டு விழுந்து இறந்தன. இதைக்கண்டு அவர்களின் பெற்ருேர்கள் அலறித் துடித்துக்கொண்டு ஜவாதிடம் ஓடி வந்து தங்களின் மக்களுக்கு உயிர்ப்பிச்சை அளிக்க வேண்டுமென்று அழுது கெஞ்சினர். 'நான் என செய்வது? என்னை அறியாமலல்லவோ பாணம் பாய்ந்து விட்டது. அதனை எவ்வாறு மீட்டுவது?' என்று கூறிவிட்டார் ஜவாது.

இவ்வாறு அனல் வாக்குப் பெற்றிருந்த ஜவாது தம்மினும் மிக்கார் யாராயிருந்தபோதினும் அவரிடம் வீண் பொருமையோ விரோதமோ கொள்ளாது அவருக்குப் பெருமதிப்பு அளித்துக் கௌரவித்தார். பற்பல விதமான செய்யுட்களையும் சிற்சில விஞடிகளில் பாடும் திறன் பெற்றிருந்த அவருக்குக் கொம்புகளில்லாத எழுத்துக்களாலான சொற்களை அமைத்து ஒரு வண்ணம் பாடவேண்டுமென்று

நீண்ட நாளாக எண்ணம் இருந்து வந்தது. அவரும் எவ்வளவோ முயன்றும் இயலவில்லை. எனவே அவர் ஒருதடவை ஏறுவாடிக்கு வந்து அங்கு அடங்கப்பட்டிருக்கும் ஆண்டகை சையிது இபுறாகீம் ஷஹீது அவர்களின் அருளுதவி வேண்டி இறைஞ்சி அதன்பின்பாவது பாடலாமென்ற எண்ணத்துடன் அங்கு வந்து தர்காவில் தங்கி இருந்தார். அப்பொழுது காலங்குடியிருப்பிலிருந்து சென்னை சென்று வாணிபம் செய்துவிட்டு ஊர்திரும்பும் காலங்குடியிருப்பு வாசிகளும் அங்கு வந்து தங்கி இருந்தனர். அவர்கள் ஓரிரவு உணவருந்தியபின் மகிழ்ச்சி மிகுதியால் கொம்பில்லா வண்ணம் ஒன்றைப் படித்தார்கள்.* இது ஜவாதுப் புலவரின் செவியில் வீழ்ந்ததும் துள்ளிக்குதித்தெழுந்தார் அவர். அவர்களிடம் விரைந்து சென்று இது யார் பாடியது என்று ஆவலுடன் வினவினர். இது தங்கள் ஊர், மீருன்கனிப் புலவர் பாடியது என்று அவர்கள் விடையிறுத்தனர். 'அவர் உயிரோடு உள்ளனரா' என்று அடுத்த கேள்வியைப் போட்டார். அவர்கள் 'ஆம்' என்று கூறினர். அது கேட்டு ஜவாதுப் புலவர் பெரிதும் வியப்புற்று இத்தகை புலவரைத் தாம் காணுதிருப்பது தவறு என எண்ணி உடனே- அக்கணமே தம் பல்லக்கில் புறப்பட்டு விட்டார். எங்கே? காலங்குடியிருப்பு நோக்கி. அங்குத் தங்கி இருந்த அவ்வூராரையும் தம்முடன் வருமாறு அழைத்தார். இப்பொழுது நள்ளிரவாக இருக்கிறதே. நாளை செல்வோமே என்று அவர்கள் எவ்வளவோ கூறியும் கேளாது 'அஞ்சாது வாருங்கள்' என்று அவர்களுக்குத் திடமொழி பகர்ந்து அவர்களையும் அழைத்துக்கொண்டு சில நாட்களில் காலங்குடியிருப்புச் சென்று மீருன்கனிப் புலவரைச் சந்தித்து அளவளாவி அவரின் புராண காவியங்களைப் பாடக்கேட்டு அகமகிழ்ந்தார்.

---

* அது வருமாறு:—

> அமுத குணத்தை முந்த—நிறுவதிற் பிறந்த
> அறிவின் வழிக்கடைந்த—முடிவின் முதற்றுலங்கும்
> ஐயமிலது பல—வுய்கை தழுவவிதி
> யண்ணன் மறையின்முத—றிண்ணிய நீத—என்று
> வரும் அவ் வண்ணம்.

இதன்பின் ஜவாதுப்புலவருக்கு முகம்மதெங்கள் நபிகள் கோமான்(ஸல்) அவர்கள்மீது ஒரு பிள்ளைத்தமிழ் பாட வேண்டுமென்ற பேரவா ஏற்பட்டது. இதனை அவர்தம் நண்பர்கள் பலரிடமும் தெரிவித்தார். தொண்டியில் பீர் முகம்மதுப் புலவர் என்பவர் நபிகள் பெருமான்மீது ஒரு பிள்ளைத்தமிழ் பாடியுள்ளாரே என்று ஒருவர் அவரிடம் கூறியதும் 'அப்படியா! அப்படியானால் அவரையும் அதனையும் பார்க்கவேண்டுமே' என்று சொன்னாரவர். அடுத்த கணம் தொண்டியை நோக்கிப் புறப்பட்டுவிட்டார். தொண்டிக்கு வந்த அவர், அவ்வூர்ப் பள்ளிவாயிலில் அமர்ந்துகொண்டு பீர்முகம்மதுப் புலவரை அழைத்துவருமாறு ஆளனுப்பினார். அவரோ ஜவாதின் அனல் வாக்கைப்பற்றி ஏற்கனவே கேள்விப்பட்டிருந்தாராதலின் அவரைச் சந்திக்க அஞ்சித் தம் வீட்டு மச்சில்போய் ஒளிந்துகொண்டு தாம் வீட்டில் இல்லை என்று கூறுமாறு சொல்லிவிட்டார். 'அதனால் பாதகமில்லையாம். அவர் எழுதிய பிள்ளைத் தமிழைப் பார்க்கவேண்டுமாம். அந்தச் சுவடியை வாங்கிவருமாறு கூறினார். பார்த்துவிட்டுத் தந்துவிடுவதாகவும் சொன்னார்' என்று கூறிக்கொண்டு, அவ்வாள் மீண்டும் வந்தான். அதற்கிணங்கி அவ்வேட்டுச் சுவடியை அனுப்பிவைத்தார் பீர்முகம்மதுப் புலவர். அதனை ஜவாது பிரித்துப் படித்துப்பார்த்துவிட்டு 'நிரம்ப அழகாக இருக்கின்றது. இவர் ஏற்கனவே நபி பெருமான் மீது செந்தமிழில் சீரிய பிள்ளைத்தமிழ் ஒன்றைப் பனுவல் செய்துவிட்டதால் நான் அன்னார்மீது பிறிதொன்று பாடத் தேவையில்லை.* ஆதலின் நான் முகியித்தீன் ஆண்டகையின்மீது ஒரு பிள்ளைத்தமிழ் பாடுகின்றேன்' என்று கூறி அவ்விடத்தை விட்டு அகன்றார்.

தம் காவியத்தின் கொடை நாயகமாக அக்காலத்தில் அரும்பெரும் புகழுடன் ஆட்சி செலுத்திவந்த ஆற்காட்டு நவாபு முகம்மது அலி வாலாஜாவையே வைத்துப் பாடி அவரிடம் பரிசில் பெறவேண்டுமென்று விரும்பிய ஜவாது

* இதற்குப் பின்னர் 'நபிகள்நாயகம் பிள்ளைத் தமிழ்' என்ற பெயருடன் தென்காசியைச் சேர்ந்த கரையூர் சையிது ஹனபிய்யா சாகிபு என்பவர் நபிகள் நாயகத்தின்மீது ஒரு பிள்ளைத்தமிழ் பாடியுள்ளார்.

*அவ்விதமே கொடை நாயகமாக அவரை வைத்து முகிய்யித் தீன் ஆண்டகையின்மீது அழகொழுகும்—இனிமை சிந்தும் தீந்தமிழில் ஒரு பிள்ளைத்தமிழ் பாடினார். அதனை எடுத்துக் கொண்டு நவாப் வாழ்நகரமான சென்னைமாநகரம் அடுத்து அங்குள்ள திருஅல்லிக்கேணியில் நவாப் கட்டியுள்ள பள்ளி யில் வந்து தங்கினார். அதன் அழகிய தோற்றத்தைக் கண்டு பெரிதும் பரவசமுற்ற ஜவாதுப் புலவர்*

திருவருள் மஸ்ஜிது ரமணிதம் பாருங்காண்—

[சுபுஹானல்லாஹ்

*என்று ஒரு வண்ணம் பாடினார். அதன்பின்னர் நவாபின் 'அமீர் மஹாலு'க்குச் சென்று தாம் வந்துள்ள கருத்தை அவரிடம் தெரியப்படுத்தினார். தமக்குத் தமிழ் தெரி யாத போதினும் தம்மை அவர் கொடை நாயகமாக வைத் தும் தமக்காக இறைஞ்சியும் முஹிய்யித்தீன் ஆண்டகையின் மீது ஒரு காப்பியம் எழுதிவைத்திருப்பதைக் கேட்டு அகம் மகிழ்ந்து அதனை அரங்கேற்றுவதற்கான ஒரு நாளையும் குறித்து அந் நாளில் அவர்தம் அத்தாணி மன்றம் வந்து அதனை அரங்கேற்றுமாறு பணித்தார் நவாப். அவ்விதமே குறித்தநாளில் ஜவாதும் நவாபின் அத்தாணி மன்றம் போந்து தாம் பாடிக் கொணர்ந்த பிள்ளைத் தமிழை அரங் கேற்றலானார். அவரதனைப் பாடப் பாட அப் பாடலை மொழிபெயர்ப்பாளர்கள் உர்துவில் நவாபுக்கு எடுத்தியம் பிக் கொண்டிருந்தார்கள். அதைக் கேட்டு மகிழ்ச்சியுடன் தலையை அசைத்துக்கொண்டிருந்தார் நவாப்.*

எந்நாளும் ஒருகுடையில் அவனி அரசாளும் நம்
இறசூலுல்லா பெரும் தீன்
ஈடேற வண்ண சொன்னக் கொடி வளர்ந்தேற
விலகுகூருனி மாதர்
தந்நாளர் எனச்சொர்க்கம் எட்டையும் அலங்கரித்
தவ்ரா எதிர்ந்து நிற்கச்
சறகுநெறி தழைவான் நவாபு முகமதலிகான்
தருபுத்ர சந்தானமும்

பொன்ஞல் வளர்ந்த செங்கோலும் தகுத்தும்
எப்போதும் அரசாட்சி செய்யப்
பொன்முடியில் அடிவைத்த சுல்தான் முகிய்யித்தீன்
புரவலர் செழிப்பு வேண்டில்
அந்நாள் ஒலிக்குலத்து ஆண் பெண்ணின்
[நாலுபத்து
ஐவரும் பீர்நால்வரும்
ஆறிருவர் ஈரேழு ஆலிம் உலமா மூமீன்
அனைவரும் கிருபை செய்வரே.

*என்ற காப்புப் பருவத்தின் ஈற்றுச் செய்யுளை ஜவாது பாடிப் பொருள் விரித்ததும், மொழி பெயர்ப்பாளர் அதனை நவாபுக்கு உர்துவில் எடுத்தியம்பினர். அதில் பாதிச் செய்யுளின் பொருளைக் கேட்டு வரும்வரை மகிழ்ச்சி வதனத்துடனிருந்த நவாபு திடீரென முகத்தைச் சுளித்தார். இதனை மொழிபெயர்ப்பாளர்கள் கவனித்தனர். ஆனல் ஜவாது கவனிக்கவில்லை.*

*அதன்பின் செங்கீரைப் பருவத்தைப்பாடிப் பொருள் விரித்தார் ஜவாது. அதில் இறுதிப் பாட்டில் 'பாதளவி பாடன் முகம்மதலிகானுக்கு உபய பாதமலர் தந்தருளுவீர்' என்ற அடியின் கருத்தை நவாபு விளங்கியதும் அவருடைய முகம் மீண்டும் மலர்ந்தது.*

*பின்னர் புலவர் ஜவாது முகிய்யித்தீன் ஆண்டகையின் பற்றற்ற தன்மையையும், ஊண் உறக்கம் விடுத்து பதினெட்டு ஆண்டுகள் கானகத்தில் சருகுகளைத் தின்று தவம் செய்த புதுமையையும்*

தேனும் கனியும், முப்பழமும் திரட்டுப்பாகும் சர்க்கரையும்
தெள்ளி வடித்த தெள்ளமுதும், திருவாய் கசப்ப மறுத்
தோடும்
பானும் மதியும் ஒவ்வாத பனிமாளிகை விட்டெழுந்தருளி

பசும்பாசடைத் தீங்தெரியழற்பைங் காட்டில் சருகுண்(டு)
இனித்து மனம்
தானும் தனியைத் துணையாக்கித் தனியாய்ப் பெரும்
[தாகம் படைத்து
சயனம் ஒழித்துக் கண்மூடிச் சடத்தை மறந்து வெகு
[காலம்
கானம் புகுந்து தவம் செய்த களிறேதாலோ தாலேலோ
கருணைக்கடலே செய்யிதப்துல் காதிர் தாலோ தாலேலோ

*என்று ஒரு செய்யுளில் கூறியதும், அதனை அப்படியே மெய் மறந்து கேட்டுக்கொண்டிருந்தார். அதன்பின் அடுத்த செய்யுளில் ஆலநபியின் மார்க்கத்தை விட்டொழித்தவர்களின் சந்ததிகள் அருகித்தேய்ந்து விடுவதுபோன்ற பெண்களின் குறுகிய சிற்றிடையையும், இறைவனைத் தொழுவதை மறந்தவர்களின் மனத்தில் நிறைந்து கிடக்கும் இருட்படலம் போன்ற இருண்ட கருங்கூந்தலையும் நீண்டநாள் வரை காணாதிருந்து பின்பு கானகத்திலிருந்து மீண்டபின் மணமுடித்துக் கண்ட காரணரே என்ற கருத்துப் பொதிந்த அடிகளான*

ஆலநபிதம் தீனைஇழந்தவர் ஆலவுலாதுகள் அருகும்
அதுபோல் தேய்ந்த சிற்றிடையும்
அரியோன் தொழுகை தனைமறந்தோர்
கோலமனத்தில் அடையும் இருட்குலம் போல் இருண்ட
[கருங்குழலும்
... ... ... ... ... ...
காலங்கடந்தாளழகு பெறக்கண்டீர் தாலோ தாலேலோ.

*என்பவற்றைப் பெரிதும் ரசித்தார் நவாப்.*

*பின்னர் ஜவாது தாலப்பருவத்தில் பின்வரும் இறுதிச் செய்யுளைப் பாடிப் பொருள் விரித்தார்,*

நிலமொழுகிய பிறைபூ மேலே
　　நிலவிய விரல் ஒலிமார் மேலே
நிகழ்குதி கலைஞர் தன் நாமேலே
　　நிலைநடு மலரடியார் மேலே
மலர்தலை உலகின் நவாபானோன்
　　மகன்மகன் மகனென நாடோறும்
வளர்தலை முறைமுறை வாழ்வானோன்
　　மனுமுகம்மதலிகான் மேன்மேலே
குலவிய மலரடி தாலேலோ.

அடிதொறும் அடிதொறும் பொருள்தனை உர்துவில் விளங்கிவந்த நவாப் முகம்மதலிகான் 'மனுமுகம்மதலி கான் மேன்மேலே குலவிய மலரடி தாலேலோ' என்ற அடிகளின் பொருள்தனைக் கேட்டதும், 'இத்துடன் பாட்டை நிறுத்தும்' என்று உரத்துக் கூறினர். அதைக் கேட்டதும் ஜவாது திடுக்கிட்டார். என்ன காரணம் என்று வினவினர். உடனே நவாப், 'நீர் காப்புப்பரு வத்தில் முகிய்யித்தீன் ஆண்டகை அவர்கள் உலக ஆசாபாசங்களில் உழன்றுகொண்டிருக்கும் பாவியாகிய என்னுடைய பொன்முடிமீது தங்களின் திருவடிகளைப் பதியவைத்ததாகப் பாடியுள்ளீர். பின்னர் செங்கீரைப் பருவத்தில் எனக்கு அவ்வாண்டகையின் இருபாதங்களை யும் தந்தருளுமாறு இறைஞ்சினீர். அதாவது ஒருவகை யில் ஏற்றுக்கொள்ளக்கூடியதேயாகும். பின்னர் இப் பாட்டில் என்மீது முகிய்யித்தீன் ஆண்டகையின் மலர டிகள் இருப்பதாகவல்லவோ பாடியுள்ளீர். அவ்வாண்ட கையின் பாதமலர்களைத் தம் தோளில் வைக்கப்பெற்ற வர்கள் வலிமார்களல்லவோ? என்போன்ற பாவிகளை நீர் எவ்வாறு அவ்வாறு கூறத்துணிந்தீர்? புகழ்வதற் கும் ஓர் அளவில்லையா? இஃதென்ன பெரிய அநியாய மாய் உள்ளது' என்று சினமொழி பகர்ந்து விட்டு சொல்லாமற் கொள்ளாமல் தம் அந்தப்புரத்தை அடைந் தார்.

நவாபின் இச்செயல் ஜவாதின் முகத்தில் கரியைப் பூசியதுபோன்றிருந்தது. அவ்விடத்தை விட்டும் ஜவாதும் சொல்லாமற் கொள்ளாமல் எழுந்திருந்து பள்ளிவாயிலில் தாம் தங்கியிருந்த அறைக்குச் சென்று கதவைத் தாளிட்டுக்கொண்டு அளவற்ற கவலையுடன் வெளியே வராது மூன்றுநாள் இருந்தார். அதற்குள் மாதவர் போற்றும் மணிமுத்தான முகிய்யித்தீன் ஆண்டகை நவாப் முகம்மது அலிகானின் கனவில்தோன்றி, அவருடைய முடிமீதும், தோள்மீதும் தம் திருத்தாளை வைத்து அவரை வாழ்த்தி விட்டு மறைந்தனர். உடனே திடுக்கிட்டு விழித்தெழுந்த நவாப் முகம்மதலிகான், புலவர் எங்கே, புலவர் எங்கே என்று தம் ஊழியர்களை வினவினர். அவர் பள்ளிவாயிலில் இருப்பதாகக் கூறியதும் உடனே அவரைப்போய் அழைத்துவருமாறு அவர்களை விரட்டினர். அவர்களும் பள்ளிவாயில் சென்று ஜவாது தங்கியிருந்த அறைக்கதவைத் தட்டி அவரை நவாபு அழைத்துவரச் சொன்னதாக இயம்பினர். அவர் வரமுடியாது என்று மறுத்துரைத்தார். இரண்டு, மூன்று தடவைகள் ஆள் அனுப்பியும் ஜவாது கதவைத்தாளிட்டுக்கொண்டு வர முடியாது என்று கூறவே, தாமே அவரை அழைத்து வர நேரில் வந்தார் நவாப். நவாப் வந்து கதவைத் தட்டியதும் தாள்நீக்கினர் ஜவாது. அவ்வளவுதான். நவாப் ஜவாதின் தாளைப் பற்றிப்பிடித்துத் தம்மை மன்னித்தருளுமாறு வேண்டினர், அவ்வாறே ஜவாதும் அவரை மன்னித்தார். அதன்பின் நவாப் ஜவாதைத் தம்முடைய அரண்மனைக்கு அழைத்துச்சென்று அவருடைய காவியத்தை முற்றும் படிக்கக்கேட்டு மகிழ்வுற்றார். வாரானைப் பருவத்தில்

நன்றே விளக்கும் பொருள் வருக!
  நாகரீகத் துரை வருக!
நல்லோர் பெரியோர்க் குயிர்வருக!
  நாவலவர் நாவே வருக!
அன்றே அறுஷிற்(கு) இறைவருக!
  அரிய பெரியோன் ஒலி வருக!

அபுசா லிகுபுத் திரவருக!
　　அவுலியாக்கள் சூழ்ந்த செம்பொற்
குன்றே வருக! பூமான்கள்
　　கோமான் வருக! நல் குறைஷிக்
குலத்தீர் வருக! குதுபுல் அகுத்
　　தாபே வருக! புருடர் சிங்கக்
கன்றே வருக! பகுதாதின்
　　காவே! வருக!! வருகவே!!!
கல்புப் பழமே வரிசைஅப்துல்
　　காதீர் வருக! வருகவே!!

*என்று ஜவாதுப் புலவர் பாடியதும் நவாபு முகம்மது அலி கான் தம்மையறியாமல் மெய்ம்மறந்து எழுந்து நின்றார். அதன்பின் ஜவாதுப்புலவர் மற்றப் பருவங்களைப் பாடிப் பொருள் விரித்து வரும்பொழுது அவற்றைக் கேட்டு சொக்கிநின்றார். அப்புலிப் பருவத்தின் இறுதியில்*

மதியமே நின்பிரபை போல் இந்த உலகெலாம்
　　வரிசைகள் வளர்ந்தேறவே
வருநபி முகம்மது றசூல் சறகது எந்நாளும்
　　வளர்ந்தேறவே சிறந்த
மதிமகிமையோடும் அரசாட்சி புரிகின்றமா
　　முகம்மதலி கான் அரசனின்
மாண்புறவின் முறையாரும் மக்களும் கோலுமே
　　வளர்ந்தேற அந்நவாபின்
நிதிமுடியிலே ஒளிசெய் பாதாரவிந்தமே
　　நிலவவைத்(து) அருள் செய்குவோர்

நினைத்தவர்கள் துன்பம் படீரென வெடித்தோட
நீதிபுரிகின்ற விறலார்
அதிவிதம் கண்டுனது குறையெலாம் போக்குவான்
அம்புலீ யாட வாவே!
அகிலநாயகர் குறைசி ஒலிகள் நாயகருடன்
அம்புலீ யாட வாவே!!

என்ற செய்யுளை ஜவாது பாடக் கேட்டதும் நவாபின் உடல் முழுவதும் சிலிர்த்தது. அப்படியே புலவரை ஆவிக் கட்டி கனகமாமழை பொழிந்தார் அவர்மீது. அதன் பின் பன்னாள் அவரைத் தம்முடைய அரண்மனையிலே வைத்து உபசரித்து அவர் வலுச் செய்வதற்குக்கூடத் தம் கையால் தண்ணீர் ஊற்றினார் நவாப். பின்னர் ஜவாதுப்புலவர் ஊர்செல்ல விரும்பியபொழுது அவருடைய சிவிகையை ஏழு அடிவரைச் சுமந்து சென்றார்.

ஜவாது தாம் பாடிய பிள்ளைத் தமிழில் நவாப் முகம்ம தலி கானையும் அவரின் குடும்பத்தினரையும் எவ்வளவோ வாழ்த்திய போதினும் தாலப்பருவத்தில்

மலர்தலை உலகின் நவாபானோன்
மகன் மகன் மகனென நாடோறும்

என்று மூன்று தலைமுறையினரையே அவர் தாம் அறி யாமல் வாழ்த்தியுள்ளதனால் இதில் அறன்பலிதமாகி விட் டது என்றும் நவாப் முகம்மதலிகானுக்குப் பின் மூன்று தலைமுறையினரே அரசாட்சி செய்தனர் என்றும், அதன் பின் ஆட்சி அவர்களின் கையை விட்டும் சென்றுவிட்ட தென்றும் கூறுவர்.

ஜவாதுப்புலவர் தம் அன்னையின் மணிவயிற்றில் கரு வுற்றிருக்கும்பொழுதே தந்தை இறந்துவிட்டாரென்றும், தாய்மாமனே அவரை வளர்த்துப் படிக்க வைத்தாரென் றும், அவரின் குடும்பத்தில் வாழையடி வாழையாகப் பிறக் கும் குழந்தைகளுக்கு அக்குழந்தைகள் பிறக்கும் முன் அவர்

களின் தந்தை இறந்துவிட அக்குழந்தைகள் தங்களின் மாமன்மாரால் வளர்க்கப்பட்டுவரும் நியதியைப் பெற்றிருக்கின்றனர் என்றும் தெரிய வருகிறது.

ஜவாதுப் புலவரின் மாமனார் இரகுநாத சேதுபதியின் மக்களுக்கு ஆசிரியராக இருந்தாரென்றும், அவரிடமே முதலில் ஜவாதுப்புலவர் கல்விபயின்றார் என்றும், திருவாவடுதுறை சென்று அவ்வாதீன அதிபர் சோமசுந்தரத் தம்பிரானிடம் இலக்கணம், இலக்கியம் பயின்றதாகவும் அவருக்கு வடமொழியிலும் நல்ல புலமை இருந்ததென்றும், அட்டாவதானம் செய்யும் ஆற்றலும் அவருக்கிருந்தது என்றும் கூறுவர்.

அவருக்கு ஒரு மகனும், ஒரு மகளும் உண்டு. அவரின் மகன் பெயர் பீர்முகம்மதுப்புலவர். பீர்முகம்மதுப்புலவர் மகன், நூர்முகம்மதுப் புலவர். நூர்முகம்மதுப் புலவர் மகன் தனிஜவாதுப் புலவர். தனிஜவாதுப் புலவர் மகன், சர்வஜவாதுப் புலவர். சர்வஜவாதுப் புலவர் மகன், முகம்மது மீர்ஜவாதுப்புலவர். முகம்மது மீர்ஜவாதுப் புலவர் மகன் காதர் மீராப்புலவர். அவர் இப்பொழுது திண்டுக்கல்லிலும், சென்னையிலுமாக வாழ்ந்து வருகின்றார். அவருக்கு ஆண் மக்கள் இல்லை. ஜவாதுக்குத் தொண்டையில் முடிச்சு இல்லாதது போன்று அவருடைய வழித்தோன்றல்களாம் ஆண்மக்கள் யாருக்கும் தொண்டையில் முடிச்சு இல்லை. காதிர்மீராப் புலவருக்கும் அப்படியே.

ஜவாதுப் புலவர் தொண்டியிலும், நம்புதாழையிலுமாகச் சிலகாலம் வதிந்தனர் என்றும், தாம் இறந்தபின் தம்முடைய வெற்றுடலைத் தொண்டிக்கும், நம்புதாழைக்கும் இடையிலுள்ள வெளியில் அடக்கவேண்டுமென்று அவர் முதலில் விரும்பியதாகவும், எனினும் அவரின் சிவிகைசுமப்பவர்களாம் பரமக்குடி முஸ்லிம் கொடிக்கால்காரர்கள் அவரைப் பெரிதும் வேண்டிக்கொண்டதன் பேரில் பரமக்குடி பள்ளிவாயிலில் தம்மை அடக்க அவர் இணங்கினாரென்றும் அறியவருகிறது. அவருடைய அடக்க இடம் இன்றும் பரமக்குடி பள்ளிவாயிலில் நீர்த்தேக்கம் (ஹௌஸ்) அருகில் உள்ளது.

அவர் கி. பி. 1745-ஆம் ஆண்டில் பிறந்து 1808-ஆம் ஆண்டு இவ்வுலகை நீத்தார். அறுபத்துமூன்று ஆண்டுகள் இவ்வுலகில் வாழ்ந்த அவர் தம் ஏழாவது வயதிலேயே கவி இயற்றத் துவங்கிவிட்டார். அவர் பல மாலை மாற்றுகள், சூஸ்திரக் கவிகள், சீட்டுக்கவிகள், வண்ணங்கள் ஆகியவை பாடியுள்ளார். அவர் 'மதீனத்தந்தாதி' என்று ஒரு நூலும் இயற்றியுள்ளார்.

அவர் உயிரோடிருக்கும் பொழுது அவரை முஸ்லிம்களும், இந்துக்களும் ஒருமித்து மதித்துவந்தனர். அவரைப் பற்றி முத்து வேலாயுதக் கவிராயர் பாடிய ஒரு கவியை இங்குத் தருகிறேன். அதிலே அவர் ஜவாதுப்புலவரை எவ்வாறு போற்றிப் புகழ்கின்றார் என்பதைப்பார். சரசுவதி தேவிதான் வேற்றுருக்கொண்டு ஜவாது என்ற பெயருடன் தோன்றினளோ? மகா விஷ்ணு தான் இவரோ? தமிழ்மொழியின் எண்ணும் எழுத்தும், இசையும் இவர் தாமோ? புலவர் பெருமக்களின் இருகண்களும்தாம் இவரோ' என்று அவர் வாயார்ந்து

வெண்டாமரை அனந்தன் வேற்றுருக்கொண் டுற்ற
[னளோ?
தண்டாமரை அனந்தன் தானிவனோ?—வண்ட
[மிழின்
எண்ணோ எழுத்தோ இசையோ இயற்புலவர்
கண்ணோ சவாதுக் கவி

என்று அவர் பண்இசைக்கின்றார். இது வீண் புகழ்ச்சியல்ல. உண்மையில் அவருக்கு அளவற்ற அறிவாற்றல் இருந்தது.

ஒருதடவை அவர் கீழக்கரை சென்றிருந்தக் கால், மக்கள் 'வித்ரிய்யா' என்ற அரபிக் காப்பியம் ஒன்றை ஓதினர் என்றும், அதில் ஓரடியை மக்கள் ஓதும்பொழுது 'அது சரி இல்லை' என்று அவர் கூறியதாகவும், ஏன் என்று அங்

குள்ளோர் வினவியக்கால், 'ஏனோ நான் அறியேன், எனக்கு அரபி தெரியாது. அந்த இடத்தில் சந்தம் நொடிக்கிறது, அவ்வளவுதான் எனக்குத் தெரியும்' என்று அவர் கூறியதாகவும், அதன்பின் அங்கிருந்தோர் தங்கள் தங்கள் இல்லங்களிலிருந்த 'வித்ரிய்யா' நூலை ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, அவையெல்லாம் ஒரேமாதிரியாக இருந்தன வென்றும், பின்னர் அந்நூலின் ஆசிரியரான சதக்கத் துல்லா அப்பா அவர்கள் தங்களின் கைப்பட எழுதிய 'வித்ரிய்யா'வைப் பார்க்கும்பொழுது அதில் அந்த அடி வேறுவிதமாக இருந்ததென்றும், அதனை ஓதிக்காண்பித்த பொழுது இப்பொழுது சந்தம் ஒழுங்காக உள்ளது என்று ஜவாது மொழிந்ததாகவும் கூறுவர். அவ்விதமானால் அவரின் அறிவின் ஆற்றலை நாம் எந்நாவு கொண்டு போற்றுவது? எப்பேனு முனையால் ஏத்துவது? திறமையின் மறு பெயர்தான் ஜவாதோ, அல்லது ஜவாது என்ற அரபி மொழிக்குத் திறமை என்று மறுபொருளும் இருக்குமோ என்று நமக்கே ஓர் ஐயம் ஏற்படுகின்றதல்லவா?

# செயிது முகய்யித்தீன் கவிராஜர்

அவர் முகம்மதெங்கள் நபிகள் கோமான்(ஸல்)அவர்கள் மீது வசை பாடாத நாளில்லை. 'திசையினும் சென்று சென்று செவிகொளா பழிப்புப் பேசித்' திரியாத நாளும் ஒன்றுமில்லை. அகராதியில் காணப்படும் இழி சொற்கள் அத்தனையையும் தேடித் தேடிப் பொறுக்கி அதனை முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களுக்கு அடைமொழியாக ஆக்கி அவர் வசைப் பாக்கள் தொடுத்து மகிழ்ந்தார். தாம் மட்டும் மகிழ்ந்ததுமல்லாமல் தம் கருத்தொத்தவர்களுக்கும் அவற்றைப் படித்துக்காட்டி மகிழ்வித்தார். வாயினாலும் கூற அருவருக்கத்தக்க மொழிகளை அண்ணல் நபியவர்கள்மீது வீசியெறிவதில் அவருக்கு அளவற்றமகிழ்வு இருந்தது. உலகிற்கொரு அருட்பெருங் கொடையாகவந்த பெருநபி யவர்களின் செவிகளும் அவற்றைக் கேட்டுக் கேட்டுப் புளித்துப்போய்விட்டன. உளமும் சலித்துவிட்டது. ஆனால் அவர் தம்மை இறுதியாகப் பெரிதும் இழித்துரைத்ததும் 'அல் அமீன்' என்னும் அழகிய புகழ்ப் பெயரைப் பெற்றிருந்த அண்ணலாரின கண்கள் சிவந்தன. கன்னங்களும் சிவந்தன. 'என்னை இழித்துரைக்கும் அவன் பெரும் பொய்யன். அவனைக் கண்டஇடத்தில் அவனுடலை வகிர்ந்திடுங்கள்' என்று சினமொழி பகர்ந்தனர் அண்ணலார். இச்சினமொழி காற்றிலே மிதந்துசென்று அரபுநாட்டின் அட்டதிக்கிலும் முரசறைந்துகொண்டிருந்தது.

ஒருநாள் விடியலிலே முகம்மதெங்கள் நபிகள்கோமான் (ஸல்) அவர்கள் மதினமா நகரின் திருப்பள்ளியிலேஅமர்ந்து தம் தோழர்களுக்கு அறவுரை நல்கிக்கொண்டிருந்தனர். அப்பொழுது ஒருவர் அங்கு வந்து தாம் இஸ்லாத்தைத் தழுவ வந்திருப்பதாகக் கூறினார். அவ்வளவுதான். அண்ணல் நபியவர்கள் அவரை யார் என்று வினவவுமில்லை

எதற்காக இஸ்லாத்தைத் தழுவ முன் வந்துள்ளீர் என்று கேட்கவுமில்லை. உடனே அவருக்குக் 'கலிமா' (இஸ்லாத்தின் மூலமந்திரம்) சொல்லிக்கொடுத்து அவரை இஸ்லாமாக்கினர். அப்பொழுது அவர் அண்ணலெம்பெருமானை நோக்கி

*மதிகெடும் கஃபென்பான் உம்மாட்டின் வந்(து)
[அரியபாதம்
துதிசெய்து பரவுவானேல் தொடுகடல்
[உடையாய்ச் சூழ்ந்த
பதியின்முன் செய்தகுற்றம் பழிப்புள்ள(து)
[எவையும் நீக்கிக்
கதிபெறும் தீனில் கூட்டும் கருத்(து) உமக்கு
[உளவோ என்றார்.

அதற்கு உடனே அண்ணலெம்பெருமான் 'கஃபுப் புலவர் என்னிடம் வருவாராயின் திட்டமாக அவர் எனக்கிழைத்த பொல்லாங்கு அனைத்தையும் மன்னித்து மறந்து அவருக்குக் 'கலிமா' சொல்லிக்கொடுப்பேன்' என்று அருளிச்செய்தனர். உடனே அவர் 'நாயகமே! நான்தான் அந்தக் கஃபுப் புலவன்' என்று கூறினார். இதைக் கேட்டதும் அண்ணலெம் பெருமானின் அருகில் வீற்றிருந்த அவர்களுடைய தோழர்களின் கண்களிலே தீப்பொறி பறந்தன. 'நாயகமே! வினையமுற்று இவனைக் கொல்ல எமக்கு விடையருள்க' என்று வேண்டி நின்றார்கள். அவர்களுக்கு ஆறுதல் மொழிந்து கையமர்த்தி அவரை இனிமேல் கொல்லுதல் அறமுமல்ல, ஆண்மையுமல்ல என்று அறிவுரை பகர்ந்தனர் அண்ணலார்.

அதன்பின் கஃபுப் புலவர் நாயகத் திருமேனியின் முன்னிலையில் வீற்றிருந்தபடியே விண்மாரி போன்று 'பானத்

* இஃது பனீ அஹ்மது மரக்காயர் எழுதிய சின்னச் சீறாவில் கஃபுப் புலவர் ஈமான் கொண்ட படலத்தில் ஒரு செய்யுள்.

ஸுஆத்' என்று துவங்கும் அறுபத்துமூன்று இசைப் பாக்களை எம்பெருமான் மீது சொரிந்தார். அவர் ஒவ்வொரு பாட்டையும் சொலுந்தோறும் சொலுந்தொறும் அண்ணலெம்பெருமானுக்கும் அவர்தம் தோழர்களுக்கும் உவகை பொங்கிப் புயங்கள் விம்மின. அவர்கள் தங்களையறியாமல் சிரகம்பிதம் செய்து சொக்கினார்கள். அவர் 'இன்னர் ரசூலுல்லாஹி' என்று ஒருபா பாடியதும்முகம்மதெங்கள் நபிகள் கோமான்(ஸல்) அவர்கள் மகிழ்ச்சி மீக்கூர்ந்து தங்களின் திருமேனி மீதிருந்த போர்வையை எடுத்து அவருக்குப் போர்த்தி அவருக்காக இறைவனிடம் இரு கரமேந்தி இறைஞ்சவும் செய்தார்கள். அதன்பின் அவரை நோக்கித் தம் தோழர்களின் பெயரையும் இணைத்து ஒரு பா சொல்லுமாறு பணித்தனர். அவ்விதமே கஃபுப் புலவரும் செய்தார். இவ்வாறு அண்ணல் நபியவர்களின் ஆசியையும் இறைஞ்சுதலையும் பெற்ற கஃபுப் புலவர் பின்னர் இஸ்லாத்தின் பெரும் புலவராக விளங்கினார். அவரின் வழித் தோன்றல்களும் வாழையடி வாழையாக அவ்வாறேவிளங்கினார்கள்; விளங்குகின்றார்கள். அவ்வழித்தோன்றல்களில் ஒருவரான சையிது முஹிய்யித்தீன் கவிராஜரே அண்ணலெம்பெருமானின் வழித்தோன்றல் பேரரான முஹிய்யித்தீன் ஆண்டகையின்மீது தீந்தமிழில் திருப்புகழும் பிள்ளைத் தமிழும் பாடினார். அன்று அண்ணலெம் பெருமான்மீது புகழ்மாலை தொடுத்தார் கஃபுப் புலவர். பிற்காலத்தில் அன்னாரின் பேரர் அண்ணலெம்பெருமானின் திருப் பேரர்மீது பாமாலை புனைந்தார். அவரின் மற்றொரு பேரரான ஷாகுல்ஹமீதுப் புலவர் அண்ணலெம்பெருமானின் மற்றொரு திருப் பேரரான ஷாகுல்ஹமீது நாயகத்தின்மீது 'பிள்ளைத்தமிழ் பொழிந்தார். அவரின் மகன் ஹாபிஸ் செய்குமீரான் புலவர், அண்ணலெம்பெருமானின்மீது பிள்ளைத் தமிழும் அவர்களின் அருள்சேர் திருமகள் பாத்திமா நாயகியின்மீது பிள் தமிழும் மொழிந்துள்ளார். இன்னும் அவரின் வழித்தோன்றல்கள் யாது யாது செய்வார்களோ, இறைவனே அறிவான்.

கஃபுப் புலவர் அப்பொழுது கொல்லப்பட்டிருப்பின் சையிது முகிய்யித்தீன்கவிராஜரோ அல்லது ஷாகுல்ஹமீதுப் புலவரோ அல்லது செய்குமீறுன் புலவரோ தோன்றியிருக்க மாட்டார்கள். அவர்களால் இயற்றப்பட்டு இன்று தமிழ் மொழியை அணிசெய்துகொண்டிருக்கும் இறவா வரம்

பெற்ற அவர்களின் காப்பியங்கள் தாமும் தோன்றியிருக்க மாட்டா, இறைவனின் நாட்டம் இவ்வாறெல்லாம் நடக்க வேண்டும் என்றிருக்கும் பொழுது எவ்வாறு கஸ்புப் புலவர் அப்பொழுது கொல்லப்பட்டிருப்பார்!

* * *

வாசனைப் பொருள் வாணிபம் செய்வதற்காக அரபு நாட்டிலிருந்து இந்தியாவிற்கு வந்த கஸ்புப் புலவரின் குடும்பத்தினர் ஏறக்குறைய இரண்டரை நூற்றாண்டுகளுக்குமுன் கோட்டாறு மாநகரில் குடியேறி வாழ்ந்துவந்தார்கள். அக் குடும்பத்தின் குல விளக்காகவே சையிது முகிய்யித்தீன் கவிராஜர் தோன்றினார். அவருடைய தந்தையின் பெயர் முகம்மது ஹுஸைன் புலவர் என்பதாகும். இளமையிலேயே தமிழ் மொழியின் இலக்கண இலக்கியங்களை ஐயந்திரிபறக் கற்ற சையிது முகிய்யித்தீன் கவிராஜர் அரபியும் மலையாளமும் நன்கு அறிந்தவராக விளங்கினார். இவ்வாறு சிறந்து விளங்கிய அவர், சேரநாட்டை ஆண்டுவந்த 'மெய்த்திறல் வேந்தன் தன்பால் மேவித் தம் வென்றிகாட்டி பொய்த் திறல் புலவர் அஞ்சும் புகழொடு' பொலிவுற்றார். அவரை அந்நாட்டு மன்னன் தன் கோட்டை வடக்கு வாயிலின்பால் வைத்து சேர, பாண்டிய நாடுகளிலிருந்து தம்மிடம் பரிசில் வேண்டிவரும் புலவர்களின் தன்மையையும் அவர்களின் கல்வியின் ஆழத்தையும் நன்கு உணர்ந்து தனக்கு உணர்த்த வேண்டுமென்று 'சின்னமும் குடையும் ஆதி சீர்மிக வழங்கி' வைத்திருந்தான். இவ்வாறு அம் மன்னவனின் அத்தாணி மன்றப் புலவராகவீற்றிருக்குங்கால் என்னகாரணத்தாலோ அவனுக்கும் அவருக்கும் மனத்தாங்கல் ஏற்படத் துவங்கியது. பாசியெனப் படர்ந்த அம் மனத்தாங்கல் ஆலமரம் போன்று வேரும் விழுதும் விட்டுப் படர்ந்து பெரும் பகையாக உருவெடுத்து நின்றது. பகையின் பலன் என்ன? கவிஞரைக் கழுவிலேற்றுமாறு கட்டளையிட்டான் காவலன். அவ்விதம் ஆற்றப் பணியாளர்கள் ஆயத்தம் செய்தனர்; என்ன விந்தை! 'கழுமரம் அமைப்பவெல்லாம் கனல்பிடித்து எரிந்தன.' அதைக் கண்டும் அரசன் துணுக்குறவோ அல்லது அப் புலவரின் பெருமையை உணரவோ செய்யாது அவரைத் தம்முடைய நாடுவிட்டு அகலுமாறு சொன்னான். அதைக் கேட்டுப் புலவர் நகைத்தார். 'மன்னவா, என் பெருமையை

நீ அறியவில்லை. இவ்வூர்தான் உன்னுடையது. ஆனால் பார்முழுவதும் என்னுடையது என்பதை அறிவாயாக' என்று இயம்பி அவ்விடத்தை விட்டும் அகன்றார். இதுமுதல் அவருடைய வாழ்க்கையிலே புதுத் திருப்பம் துவங்கியது.

சேரநாடு நீங்கி 'மத்தகம் பிளப்பான் செல்லும் மடங்கல்' போன்று புறப்பட்ட அன்னார் பாண்டியநாடு புக்கி திருநெல்வேலி மாநகரை வந்தடைந்தனர். அங்குச் செங்குந்தர் வாழும் தெருவிற்கு வந்த அவர், தம்மை ஒருவரும் மதியாதிருப்பதைக் கண்டு அவர்கள்மீது வெங்குஞ்சரம் போன்று சீறி வெகுண்டார். அதைக் கேட்ட ஆங்குள்ள அறிஞர் ஒருவர் அவரை நோக்கி 'ஐயா, தங்களை நாங்கள் யாரென்று அறியோம். ஆனால் தாங்களோ தங்களைக் கவிராஜர் என்றும் சேரமன்னரின் அத்தாணி மன்றக் கவிஞராகத் தாங்கள் அமர்ந்திருக்குங்கால் அப் பட்டம் தங்களுக்குச் சேர மன்னரால் வழங்கப்பட்டது என்றும் கூறுகின்றீர்கள். அவையெல்லாம் இருக்கட்டும். தாங்கள் அருட்கவிஞராக இருப்பீர்களாயின் இதோ நிற்கும் மஞ்சனத்தி மரத்தைப் பாவினால் இரண்டு பிரிவாகப் பிளக்கச்செய்ய வேண்டும். அவ்விதம் செய்வீர்களாயின் நாங்கள் தங்களைச் சீரிய புலவரென்று சென்னிமிசை வைத்துக் கொண்டாடுவோம்' என்று கூறினார். 'அப்படியா, நல்லது' என்று ஆங்காரத்துடன் கூறி படி கிடுகிடுக்கும்வண்ணம் இடி இடித்தாற்போன்று பாடினார் புலவர். அருளாளன் அன்புடையோன் அல்லாஹ்வின் பேரருளால் அம் மரம் படாரெனப் பிளந்தது. இதைக் கண்டதும் அங்குக் குழுமியிருந்த மக்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கும் அங்கு அடலேறு போன்று வீற்றிருந்த புலவருக்கு ஏற்பட்ட மதிப்பிற்கும் மட்டில்லை. 'வாளினால் செய்தலாகா வாற்றினை வாக்கால் செய்த, வாளி நேர் புலவன்தன்னை அனைவரும் உபசரித்தார்.' அவர்மீது புகழ்மாரி சொரிந்தார்; பொன்மாரி பொழிந்தார்; அவர் தம் தாளிலும் பணிந்தார்; அவர்தம் தாளைத் தம் தலைமீதும் அணிந்தார்.

இவ்வித அருமை பெருமையுடன் அவர் திருநெல்வேலியில் தங்கி இருக்குங்கால் அவர் அடிக்கடி அதற்கடுத்தாற்போலுள்ள பாளையங்கோட்டைக்குச் சென்றுவரும் வழக்கமுடையவராயிருந்தனர். ஒருநாள் அவர் அவ்வாறு சென்

*றிருக்குங்கால் அரசாங்கச் சேவகர்கள் கடனைச் செலுத்தாத தற்காக ஒருவனைக் கைது செய்து வீதி வழியே சிறைச் சாலைக்கு அழைத்துச் சென்றனர். அவனோஇவருக்குப் பழக்க மானவன். இவரைக் கண்டதும் ஒலி எழுப்பிக் கூவித் தனக்குப் பிணை ஏந்துகொள்ளுமாறும் நாளை திட்டமாக அக் கடனுக்கான தொகையை இறுத்துவிடுவதாகவும் மன் றாடினான். இவரும் மனமிரங்கி அவன் தரவேண்டிய கட னுக்குத் தாம் பிணைப்பட்டு 'மகிழ்வாய் உனது மனையினுக் கேகெனப் புகழாய் அனுப்பி' வைத்தனர். ஆனால் அவ்வண் டனோ மறுதினம் வாராதொழிந்துவிட்டான். எனவே அர சாங்கச் சேவகர் இவரைக் கைதுசெய்து அக்காலை பாளையங் கோட்டையில் அரசு செலுத்திவந்த நவாப் இஃதிபார்கான் முன் கொண்டுவந்து நிறுத்தினர். நவாப் அவரை நோக்கி 'நீர் யார், உம்மீது என்ன வழக்கு' என்று வினவியக்கால்*

ஆதிநான் முவ்வேழு தலைமுறையின் முதலாக
அதிமதுர கவிதை வண்ணம்
அழகார் உலாமடல் குறவஞ்சி அம்மானை
அவையோடு சந்த மாலை
நீதிசெறி பலபனுவல் செய்தலங்கார மொடு
நீடு பல பாவுரைப்பேன்
நேசமுடன் எக்கவிகளுக் கும்பிரசங்கமே
நிகழ்த்திடு சுயத்த புலவன்
சூதுதெரியா(து) இந்த வெள்ளோலை ஒப்பம்
துடங்கி யான்பிணை பட்டதால்
சொற்சோ பினுக்குமே பிணையதாய் வலையிலே
துயர்பட்ட பிணையா கினேன்
தாதுசெறி மாதுவளர் நீதிபெறும் யோகனே!
தயவதி கமான சீலா!

தனமங்கை நகராளுகின்ற இஃதிபாறு கான்
சாகிபே! கீர்த்தி அரசே!!

என்று ஒரு விருத்தம் பாடித் தம் வரலாற்றை விளக்கினர். அதைக் கேட்டுப் பெரிதும் மகிழ்ந்த நவாப் இஃதிபாறு கான் அந்தக் கடன் தொகையை மன்னித்து 'புலவீர்! நாம் உம் பெருமையை உணர்ந்தோம். இன்னும் உமக்கு என்ன வேண்டும் கூறுக! தருவோம்' என்றருளினர். அதற்கு சையிது முஹிய்யித்தீன் கவிராஜர் வாய் குளறி 'எனக்கு வெற்றிலைபாக்குச் செலவிற்கு ஏதாவது தந்துவந்தால் போதும்' என்று கூறினர். 'அவ்வாறே ஆகுக' என்று கூறிப் பட்டயமும் எழுதித் தந்தார் நவாப். அதன்படி நாளொன் றுக்கு அரைரூபாய் வீதம் திங்களொன்றுக்கு பதினைந்து ரூபாய் அவருக்கும் அவருடைய வழித்தோன்றல்களுக்கும் அரசாங்கத்தாரால் கொடுக்கப்பட்டுவந்து சமீபத்தில் தான் அவ்வழக்கம் நிறுத்தப்பட்டது.

இதன்பின் அவருடைய பேரும் புகழும் எட்டுத் திசையும் எதிரொலி செய்து மேலப்பாளையம் வாழ் முஸ்லிம் களின் செவியிலும் முழங்கியது. அவர்கள் திருநெல்வேலி வந்து சையிது முகிய்யித்தீன் கவிராஜரைச் சந்தித்து அவரைத் தங்கள் ஊருக்கு எழுந்தருளவேண்டுமென்றும் அங்கே அவர் நிரந்தரமாகத் தங்கியிருக்க எல்லா வசதிகளும் செய் தளிப்பதாகவும் கூறினர். அதற்கிணங்கி அவரும் பேரும் பெருந்திருவும் தம் பின்னே வர மேலப்பாளையம் சென்று அங்கேயே மணமுடித்து இல்லறத்தை நல்லறமாக நடத்தி வந்தனர். அக்காலைதான் அவர் முகிய்யித்தீன் ஆண்டகை யின்மீது பிள்ளைத் தமிழும் திருப்புகழும், முகம்மது தங்கள் நபிகள் கோமான்(ஸல்) அவர்கள்மீது முப்பத்தெட்டுப் பாக் களாலானமாணிக்கமாலைஎன்னும்ஒருசிறுநூலும்செய்தனர். அவர் திருப்புகழில் நூற்றுஐம்பது செய்யுட்கள் பாடினர் என்று கூறுவர். அவற்றில் முப்பத்துஒரு செய்யுட்கள்தான் அச்சில் வந்துள்ளன. கவிராஜர் என்றால் கவிராஜர்தாம் என்று கூறும்வண்ணம் அவர் பாடிய பாக்கள் இசையமிழ்த மாக விளங்கி இன்பம் சொட்டுகின்றன. அதிலே அவர்தம் அவல நிலைமையைக் கூறி, தாம் இனியும் செல்வந்தர் மனை சென்று பல்லை இளித்துக்கொண்டிருக்க இயலாதென்றும்

*தமக்கு நல்வாழ்வு நல்குமாறும் முகிய்யித்தீன் ஆண்டகையின் பேரருளை இறைஞ்சும் பாக்கள் நம் உள்ளத்தை உருக்குகின்றன. அதனைப் படித்துக் காவியச் சுவையை நுகர்வீர்களாக.*

அரிதான நூல்தெரிந்து தமிழ்பாடி யேஉழைந்(து) [என்
அகமே புணுகி வஞ்சர்—தலைவாயில்
அவைதோறு மேநடந்து நிர்மூடலோபர் தங்கள்
அருகே சொனுலும் இன்பம்—அறிவார்போல்
மரியாதையே புரிந்தும் இனிநாளை வாரும்என்பர்
மறுநாளும் ஏகில்வஞ்ச—நினைவாக
மறைவார நீசர்தங்கள் இடமேசுமா நடந்து
வரவோ? நல்வாழ் விரங்கி—அருள்வீரே
இறையாறு கால்உழம்பி நறவூறு வாரிசங்கள்
இடமோது வாளைமண்டி—வெடிபாய
இனியோடு சாகமுய்ந்த கனிசூழ் வலாவிமுன்றி
எனயூகமே அடர்ந்த—நெடுமாவே
விரிவாய் நரு உறைந்த கனிகீறி தேறல்தங்கு
விரைவாவி சூழ்நிறைந்த—மடையூடே
விளைசாலி வாய்நிரம்பு ஜயிலானி ஊர்பிறந்த
வெகுமான ராவெங்கள்—முகிய்யித்தீனே

*இந்த ஒரு கவியிலே கவிராஜர், புலவர்கள் படும் அவதியையும் அவர்கள் செல்வந்தர்கள் மனை செல்லுங்கால் நிகழும் நிகழ்ச்சிகளையும் ஒரு சிறந்த ஓவியன் போன்று படம் தீட்டித் தருகின்றார். இக் கவியைப் படித்ததும் அக் காட்சி நம் கண்முன் நிற்பது போல் தோற்றம் வழங்குகிறது.*

மேலும் இக் கவியில் அவர் ஜெயிலானி நகரின் இயற்கை எழிலையும் அங்குள்ள தேங்கனிச் சோலைகளையும் மாங்கனிக் காவுகளையும் அவற்றில் அஞ்சிறை வண்டு தேன் எடுக்கும் அழகையும் அங்குள்ள தேன் நிறைந்த குளங்களையும் அவர் வர்ணிக்கும் அழகு சுவைத்துச் சுவைத்து நுகரவல்லதாகும்.

அவர் பாடிய முகிய்யித்தீன் ஆண்டகையின் பிள்ளைத் தமிழ் வாரானைப் பருவத்தில் மேற்படி ஆண்டகையவர்களை அவர் இருகை கொண்டும் வருக, வருக என்று அழைக்கும் செய்யுள் அற்புதமாய் அமைந்துள்ளது. அதனைப் படிக்கும் பொழுது தேனைச் செவியில் பிழிந்து சொட்டுவதுபோல் அது சுவைக்கின்றது.

கண்ணார்மணியே வருக! எங்கள்
கருத்தின் குருத்தே வருக! வளர்
கல்விக் கடலே வருக! புவி
காக்கும் பொருளே வருக' உயர்
விண்ணோர் தவமே வருக!மனு
வேந்தர்க் கரசே வருக!மறை
வேதக் குருவே வருக!வுரை
மேலோர் முதலே வருக!வென்றும்
பண்ணா ரமுதே வருக! நன்மை
பயிர்க்கும் பயிரே வருகநல்லோர்
பாடும் பயனே வருக! வெங்கள்
பழமைக் கிழவ வருக!வியல்
நண்ணார் பரவும் ஜெயிலானி
நாத வருக, வருகவே!
நயினார் முகிய்யித் தீனா
நம்பி வருக, வருகவே!!

என்று அவர் பாடும்பொழுது நாமும் அவருடன் சேர்ந்து பாடலாமா என்று நம்மையறியாமலே நமக்கோர் உணர்ச்சி பிறக்கிறது.

அதன்பின் அம்புலிப் பருவத்திற்கு வரும் கவிராஜர் அம்புலிப் பருவம் புலவோர்க்கு ஒரு புலிப் பருவம் என்பதை நன்கு மெய்ப்பிக்கின்றார். தம் திறமை அத்தனையையும் பயன்படுத்தி அவர் கவிமழை பொழிகின்றார். சண்டமாருதமெனச் சுழன்று கவி பாடுகின்றார். அவர் அம்புலியை நோக்கி, 'அம்புலீ! உன்னுடைய கலைகள் நிறைவு பெறாதுள்ளன. ஆனால் எங்களின் முகிய்யித்தீன் ஆண்டகை அவர்களோ எல்லாக் கலைகளையும் நிறைவுறப் பெற்றவர்கள். உனக்கோ இராகு, கேது என்னும் பாம்புகளின் பகையுண்டு. ஆனால் எங்கள் முகிய்யித்தீன் ஆண்டகை அவர்களின் திருவடிகளை நினைப்போர்க்கும் பகை என்பதில்லை. நீ உன்னுடைய உடலில் களங்கத்தைப் பெற்றுள்ளாய். ஆனால் எங்கள் முகிய்யித்தீன் ஆண்டகை அவர்களின் வாழ்விலோ அணுவத்தனை களங்கமும் கிடையாது. உனக்கு விண்மீன்களின் சேகரம்தான் உண்டு. ஆனால் எங்கள் முகிய்யித்தீன் ஆண்டகை அவர்களுக்கோ நாலுவேதங்களின் சேகரமும் உண்டு. உனக்கு விண் மட்டும்தான் தெரியும். ஆனால் எங்களின் முகிய்யித்தீன் ஆண்டகை அவர்களோ விண்ணின் மூலத்தையும் முதலையும் அறிவார்கள். ஆதலின் அன்னார் உன்னிலும் மிக்கானவர்களன்றோ? எனவே அவர்களுடன் சேர்ந்து விளையாட அம்புலியே, நீ விண்ணிலிருந்து கீழிறங்கி இம்மண்ணிற்கு வருவாயாக' என்று பாடும் பாட்டு பொருள் நயமும் சொன்னயமும் நிறைந்து பொலிவுறுகின்றது. கவிராஜர் இதோ அதனை முழங்குகின்றார். நாமும் கேட்போம்.

நிறையாத கலைஉண்டு உனக்கும் எப்போதினும்
நிறைந்த கலை,உண் டிவர்க்கே

நெட்(டு) அரா வின்பகை உனக்குண்டும் இவர்பதம்
நினைப்போர்க்கும் அப்பகை இல்லையே.

குறைதான் உனக்கு (உ)டலில் உண்டுஅற்ப
[மாகிலும்

குறையென் பதிலே இவர்க்குக்
கூறுங் களங்கமே உண்டுனக்கு இவர்வாழ்வு
கொஞ்சமும் இலேக களங்கம்
முறைசேர் குழுக்கணம் உனக்குண்டு நால்வேத
மொழிக் கணம் இவர்க்கும் உண்டு.
மூதண்ட கூட நீ அறிவாய் அதற்குமேல்
முதலும் இவர் அறிவர் கண்டாய்
அறையாழி உலகரசு ஷெய்கப்துல் காதிறுடன்
அம்புலி ஆட வாவே.
அபுசாலி ஹவருதவு செல்வக் குமாரருடன்
அம்புலி ஆட வாவே.

இவ்வாறு தம் காப்பியத் தலேவரைப் பற்றிப் பெருமை பாராட்டிப் பாடிவிட்டு, சிற்றில் பருவத்திற்கு வரும் கவிராஜர் குழந்தை முகிய்யித்தீன் ஆண்டகை தாம் தெருவோரத்தில மண்ணுல் கட்டி விளேயாடும் சிறு வீடுகளேக் காலால் உதைத்து அழித்துவிட வேண்டாமென்று போற்றிப் புகழ்ந்து கெஞ்சும் பாக்கள் பாகுபோன்று இனிக்கின்றன. 'எங்களின் முகிய்யித்தீன் ஆண்டகையே! கார்மேகம் குடையிடும் மான்மதம் கமழும் நபியின் திருப்பேரரே! அன்ஞர் இறைவனேச் சந்தித்து இகபர ரகசியங்களேப் பேசுவதற்காக விண்ணுலகம் வந்தக்கால் அவர்களின் பாதங்களேத் தம் இருதோள்களிலும் தாங்கும் பேறுபெற்ருேரே! அவ்வாறு பேறுபெற்று அவுலியாக்களின் சிரமீது தம்முடைய பாதத்தைப் பதிக்கும் பெருமையுற்ருேரே! அத்தகைய சிறப்பு வாய்ந்த தாங்கள் தங்களின் சீரடியால் நான் மண்ணிலே கட்டி விளேயாடும் இந்தச் சிறுவீட்டைச் சிதைப்பின் தங்களின் பொற்பாதம் வருந்துமே. ஆதலின் அருள்கூர்ந்து அவ்விதம் செய்யாதீர்கள்' என்ற கருத்துக்களே உள்ளடக்கி,

கருமைத் திரண்மற் புயற்கவிகைக்
கருணைக் குரிசில் நிறைந்தவெறி
கமழும் திருமேனியர் சுரத்தில்
கையின் அங்குலியால் நதிஅழைத்தோர்
ஒருமைப் பொருளுக்(கு) உரித்தான
உண்மைத் தூதர் மிகுராஜுக(கு)
உயரச் செலும்போ(து) அழகுபதம்
இரண்டும் உயர்தோள் தாங்கியவர்

பெருமைப் படியே வேதநெறி
பிசகா(து) உயர்ந்த தீனோர்க்கும்
பேசும் அவுலியாக்களுக்கும்
பிரியா சிரத்தின் மேலான
அருமைத் திருத்தாள் வருந்தாமல்
அடியேன் சிற்றில் சிதையேலே
அப்துல் காதிறுெலியே எம்
அரசே சிற்றில் சிதையேலே

*என்று அழகுக்கவி பாடுகின்றார். பின்னர் அவர் தம் நிலைமையை உணர்ந்து, 'ஆண்டகையே, தங்களுக்கு அறவுரை பகர இந்தச் சிறியேனுக்குத் தகுதியாமோ? தங்களுக்குத் தெரியாததும் உண்டோ? தாங்கள் அனுவத்தனையும் தவறிழைப்பீர்களோ? தாங்கள் ஆக்கல் தொழிலே மேற்கொள்வீர்களேயன்றி, அழித்தல் தொழிலை ஒருபோதும் மேற்கொள்ள மாட்டீர்களே. ஆதலின் நாங்கள் மணலில் கட்டி விளையாடும் இந்தச் சிறு வீட்டையும் தங்களின் சீரடியால் சிதைக்க முற்பட மாட்டீர்கள்' என்று புகழ்ந்து பின்வருமாறு பண் இசைக்கின்றார்.*

நந்தா விளக்காம் நபிஇரசூல்
    நயினார் அருமைப் பெரும்தீனை
நலியா முறையாய் நாட்டினிலே
    நாட்டி அதனேர் வழிவிளக்கிச்
சொந்தா தரவாய் மேற்படுத்தும்
    துய்ய பொருளே உமக்குப்புத்தி
சொல்லும் தரங்கள் யாங்கள் அலத்
    துகளொன்(று) உமக்குப் புரளாது
ஐந்தாருவை நேர் நனிகிருபை
    அண்ணல் உமது திருக்கருத்திற்(கு)
ஆக்கத் துணியு மல்லாமல்
    அழிக்கத் துணியா(து) இவை அறிவோம்.
செந்தா மரைப்பொற் சீரடியால்
    சிறியேன் சிற்றில் சிதையேலே
செய்யிதப்துல் காதி றெங்கள்
    ஷெய்கே சிற்றில் சிதையேலே

*இவ்வாறு அருமை அருமையான கவிகளை அள்ளிச் சொரிந்த செயிது முகிய்யித்தீன் கவிராஜர் 'மந்திர வசியம் ஆரணம் முதல் யந்திர வித்தை அனேகம் தெரிந்தோர்' ஆகவும் விளங்கினர். அவருடைய அடக்க இடம் மேலப்பாளையம் பெரிய குத்பா பள்ளியில் இருக்கிறது. அவரின் திருமகன் முகிய்யித்தீன் பிள்ளைக் கவிராஜரும் தந்தைக்குத் தப்பாது பிறந்த தனயராகவே திகழ்ந்தார். அவரின் மக்கள் அறுவரும் அரும்பெரும் புலவராகவே விளங்கினர். அவர்களில் ஒருவரான ஷெய்கு முகிய்யித்தீன் புலவரின் மகன் மீரான் சாகிபு என்பவரும் ஒரு புலவரே. அவரின் மகன் ஷாகுல் ஹமீதுப்புலவர். அவரின் மகன் ஹாபிஸ் ஷெய்கு மீரான் புலவர், இப்பொழுது மேலப்பாளையத்தில்*

வாழ்ந்துவருகிறார். இவ்வாறு கஃபுப்புலவரிலிருந்து துவங்கிய அந்தப் புலவர் பரம்பரை முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களின் ஆசியையும், இறைஞ்சுதலையும் பெற்றதன் காரணமாக ஏறக்குறைய பதின்மூன்று நூற்றாண்டுகளாகப் பாரினிலே வாழையடி வாழையாக வான்புகழ் பெற்று வளர்ந்தோங்கி வருகின்றது. உலகிற்கொரு அருட்பெரும் கொடையாக வந்த நாயகத்திருமேனியின் திருமேனியிலிருந்த பரிவட்டத்தைப் பரிசிலாகப்பெற்ற கஃபுப்புலவர் பெற்ற பேறுதான் பேறு. மற்றவையெல்லாம் வேறுதான்.

# சையிது முகம்மது அண்ணாவியார்

'புலவீர்! தாங்கள் தயைகூர்ந்து எங்கள் நன்னகராம் *செல்வி நகருக்கு எழுந்தருளி எங்களை வாழ்விக்கவேண்டும். எங்கள் ஊரில் முஸ்லிம்களாகிய நாங்கள் ஏராளமாக வாழ்ந்துவந்த போதினும் முஸ்லிம்களுக்கென முஸ்லிம்களால் நடத்தப்படும் ஒரு பள்ளிக்கூடமேனும் இல்லை. எங்கள் ஊரிலிருந்து ஒன்றரைக்கல் தொலைவுக்கு அப்பால் கதிர்வேலு உபாத்தியாயர் என்பார் ஒரு பள்ளி நடத்தி வருகின்றார். அவரோ மாந்திரிகத்தில் வல்லுனர். எனவே அவர் வைத்ததுதான் சட்டமாக உள்ளது. நாங்கள் அவர் வாழும் பகுதியைக் கடந்து செல்ல நேருங்கால் காலில் செருப்பின்றியும் குடை பிடிக்காமலும் செல்லவேண்டுமென்றும் அதற்கு மீறிச் செல்லின் அவர் தம்முடைய மாந்திரீக ஆற்றலினால் எங்கட்குச் சொல்லொணா இடும்பைகள் செய்துவிடுவதாகவும் அச்சுறுத்துகின்றார். இந்நிலையில் நாங்கள் அந் நகரிலே அடிமைகள் போன்று வாழ்ந்துவருகிறோம். ஆதலின் மந்திர தந்திரங்களிலும் கல்வி \கேள்விகளிலும் பேராற்றல் மிகுந்த தாங்கள் எங்கள் ஊருக்கு எழுந்தருளி எங்கட்கு வாழ்வளிக்கவேண்டும்' என்று கண்ணீருடனும் கம்பலையுட

---

*செல்வி நகர் என்பது அதிவீரராமன் பட்டினத்தைக் குறிக்கும். அங்கு ஆட்சி செலுத்திய அதிவீரராம பாண்டியர் தம் தாயின் பெயரால் அந் நகருக்குச் 'செல்விநகர்' என்று பெயரிட்டதாகவும் அவர் இறந்ததன்பின் அப் பெயரை மாற்றி அதற்கு மக்கள் அதிவீரராமன் பட்டினம் எனப் பெயரிட்டதாகவும் அதுவே அதிராம் பட்டினம் என்று மருவிவிட்டதாகவும் கூறுவர். அங்குச் செல்வி அம்மன் கோயில் என்று ஒன்றிருப்பதால் அதன்பொருட்டு அதற்குச் 'செல்விநகர்' என்று பெயர் வந்தது என்று கூறுவாருமுளர்.

னும் கூறி நின்றனர் செல்வி நகர முஸ்லிம்கள். அதைக் கேட்டதும் புலவர் சற்றுச் சிந்தித்தார். தமக்கு இதுகாறும் ஐயம்பேட்டைமக்கள் செய்துவரும் உபசாரங்களையும் உதவிகளையும் நினைவுகூர்ந்தார். அவர்களை விட்டும் எவ்வாறு பிரிந்து செல்வது என்றும் அவருடைய மனம் சற்று வருந்தியது. அதன்பின் செல்விநகர் முஸ்லிம்களின் அவல நிலையும் அவரின் மனக் கண்முன் நிழலாடியது. அவர்களுக்கு நல்வாழ்வு நல்கவேண்டியது தம்முடைய தலையாய கடமை என்று அவர் எண்ணினார். எனவே, அவர்களை நோக்கி, 'நல்லது, நீங்கள் உங்கள் ஊரில் வாழும் செல்வச் சீமான் லெப்பைத்தம்பி மரக்காயர் அவர்களிடம் என்னை உங்கள் ஊருக்கு அழைத்துச்செல்வது பற்றி ஆலோசனை கலந்தீர்களா' என்று வினவினார். 'ஆம், கலந்தோம். அவரும் தங்களின் திருமுகத்தைக் காணப் பெரிதும் ஆவலுடனுள்ளார்' என்றனர் அவர்கள். 'அப்படியானால், அவரிடமிருந்து ஒரு திருமுகம் வாங்கிவாருங்கள்' என்றார் புலவர். அதைக் கேட்டதும் செல்விநகர மக்கள் தங்கள் ஊருக்கு ஓடோடிச் சென்றார்கள். லெப்பைத்தம்பி மரக்காயரிடம் செய்திகளைக் கூறினார்கள். உடனே லெப்பைத்தம்பி மரக்காயர் புலவருக்கு நல்வரவு கூறி ஓலைதீட்டி வந்தவர்களிடம் ஒப்படைத்தார். அத்துடன் புலவரை அழைத்துவரத் தம்முடைய பல்லக்கையும் அனுப்பிவைத்தார். இதன்பின் புலவர், தம்மை இதுகாறும் ஆதரித்துவந்த ஐயம்பேட்டை முஸ்லிம்களை அணுகி, செல்விநகர முஸ்லிம்கள் தம்மிடம் வந்து கூறிய துன்பச் செய்திகளை எடுத்துரைத்து, அவர்களின் துயர் களையத் தம்மை மனமகிழ்வுடன் செல்வி நகருக்கு அனுப்பிவைக்குமாறு வேண்டிக்கொண்டார். அதைக் கேட்டதும் ஐயம்பேட்டை முஸ்லிம்களுக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கோர் அளவில்லை. எனினும் புலவரின் மனம் கோண நடந்துகொள்ளக்கூடாதென எண்ணி அவருக்குப் பல சங்கைகள் செய்து பிரியா விடை கொடுத்துச் செல்வி நகருக்கு அனுப்பிவைத்தனர். இப்பொழுது ஐயம்பேட்டையே துயரக் கடலில் மூழ்கியது.

இப்பொழுது செல்விநகர் முஸ்லிம்களின் நிலைமை என்ன? அவர்களோ இன்ப வெள்ளத்தில் திளைத்துக்கொண்டிருந்தார்கள். இதோ வருகிறார் புலவர், அதோ வருகிறார் அண்ணாவியார், இனி நம்மைப் பிடித்த கலியெல்லாம் நீங்கிவிட்டது என்று களிப்பேருவகை கொண்டார்கள். அதைச்

சுற்றிலுமுள்ள சிற்றூர்களில் வாழ் முஸ்லிம்கள் அனைவரும் திரண்டுவந்து புலவரை வரவேற்கச் செல்லி நகரை மொய்த்துக்கொண்டிருந்தார்கள். இறுதியாகப் பல்லக்கு இவர்ந்து புலவர்பெருமானும் செல்லிநகர எல்லைக்குள் நுழைந்ததும் மக்களின் மகிழ்ச்சி கங்குகரையற்றது. அவரை ஓர் அரசருக்கு ஆற்றும் மரியாதைகள் செய்து வரவேற்றனர். அவரைத் தங்களை வாழ்விக்கவந்த வான்முதல் எனக் கொண்டாடி வேண்டிய உபசார, உதவிகள் செய்து கௌரவித்தனர்.

இதைக்கண்டு கதிர்வேலு உபாத்தியாயரின் உளத்திலே சினத் தீயும் பொறாமைத்தீயும் ஒருங்குசேரக் கொழுந்துவிட்டெரிந்து அவரின் உள்ளத்தைக் கொல்லனின் உலைக் களம் போன்றல்ல, நரகப் படுகுழி போன்று ஆக்கின. அவரும் வந்த புலவரை வீற்றிருக்கவிடாது விரட்டிவிடத் தாம் அறிந்த மந்திர தந்திரங்களையெல்லாம் பயன்படுத்தினார். எனினும் பயனில்லை. எதிர்த்துக் கெடுக்க இயலாது அவரை அடுத்துக் கெடுக்க எண்ணி அவருடன் நட்புப் பாராட்டினார். நட்புப் பாராட்டியும் தாம் நாடிய பலன் கிடைக்கவில்லை.

ஒருநாள் அவர் புலவரை அணுகி 'புலவீர்! நான் பழனிக்குக் காவடிப் பிரார்த்தனை செலுத்தவேண்டியுள்ளது. சென்றுவருகிறேன், விடை தாருங்கள்' என்று கூறினார். அதற்குப் புலவர் பெருமான் 'உபாத்தியாயரே, நீர் யாருக்காகப் பிரார்த்தனை செலுத்தச் செல்கின்றீரோ அந்தச் சுப்ரமணியரே இங்கு வரின் நும் பிரார்த்தனை முடித்துக் கோடல் எளிதன்றோ' என்று கூறினார். 'ஆம், ஆனால் அது எவ்வாறு சாலும்' என்று வியப்புடன் வினவினார் உபாத்தியாயர். 'அது என்னால் சாலும்' என்று புலவர் கூறியதும் 'அவ்விதமானால் செய்யுங்கள் பார்ப்போம்' என்று அறை கூவல் விடுத்தார் கதிர்வேலு உபாத்தியாயர். அவ்விதமே செய்வதாக உறுதி கூறி, ஒரு நாளைக் குறித்து அவ்வூர்த் தென்பாலுள்ள செழியன் குளத்தின் மருங்கு பந்தலிட்டு அதில் பலவித அலங்காரங்கள் செய்து கதிர்வேலு உபாத்தியாயர் பின்தொடர புலவர்பெருமான் அப் பந்தலில் புகுந்தனர். புலவர்பெருமானின் மந்திரத் திறமையைக் கண்டறிய வேண்டுமென்றபேரவாவுடன்மக்கள்ஏற்கனவேஅப்பந்தலில் குழுமியிருந்தார்கள். அப்பொழுது புலவர்பெருமான் தாம்

பாடிக்கையில் வைத்திருந்த பதினான்கு செய்யுட்களடங்கிய *ஏட்டைக் கதிர்வேலு உபாத்தியாயரின் கையில் கொடுத்து 'நீர் இதனைப் பாடும். நீர் தொழும் தேவதம் காட்சி நல்கும்' என்று கூறினார். அவ்வாறே கதிர்வேலு உபாத்தியாயர் அப் பதினான்கு செய்யுட்களைப் பாடி முடித்ததும் அவர் தொழும் தேவதையாம் சுப்ரமண்யர் காட்சி நல்கினார். அதனை ஆங்குக் கூடியிருந்த மக்கள் அனைவரும் கண்ணால் கண்டு களிபெருவகை கொண்டனர். 'இங்குள்ள நமதன்பர் செய்யிது முகம்மது அண்ணாவியாரது அன்புரிமையை யாவரும் காண்க' என்று கூறி சுப்ரமண்யர் மறைந்தார். இது முதல் கதிர்வேலு உபாத்தியாயர் அம் முஸ்லிம் புலவர் பெருமானின் மகாத்மியத்தை உணர்ந்து அவருடைய அடியார்க்கு அடியாராக விளங்கினார். இவ்விதப் பெருமைசால் புலவர்பெருமான் யாரென்று நினைக்கின்றீர்கள். அவர்தாம் மதுரைமாநகர் தந்த செய்யிது முகம்மது அண்ணாவியார் என்னும் அருங்கலை விநோதராவார்.

மதுரைமா நகரில் தோன்றிய சையிது முகம்மது தம் இளமையிலேயே தாய்தந்தையரை இழந்தமையால் அந்

* சையிது முகம்மது அண்ணாவியார் சுப்பிரமண்யரை வரவழைத்த செய்யுட்கள் அடங்கிய சிறு நூல் 'சுப்பிரமணியர் பிரசன்னப் பதிகம்' என்ற பெயருடன் மூன்று பதிப்புகள் வெளிவந்துள்ளன. அதற்குப் பல இந்துத் தலைவர்களே சாற்றுக்கவிகளும், சான்றுக்கவிகளும் நல்கியுள்ளார்கள். மேலும் அப்புலவர் பெருமான் பாடிய மகாபாரத அம்மானையின் பதிப்புரையில் அஷ்டாவதானம் இராமசாமிப்பிள்ளை ''அப்பதிகம் பத்தாவது செய்யுள் பாடிய தருணம் அங்ஙனம் சூழ்ந்த சர்வஜீவர்களும் மயிர்க்கூச்சலிட்டு நிர்ச்சிந்தையராயினர். அப்போது எந்தைப்பிரானாகிய கந்தக்கடவுள் மயூரவாகன சமேதராய் கோடி சூரியப்பிரகாசத்துடன்...........பந்தரிற்புக நின்ற ஜீவர்களுடைய சிற்றறிவிற்குச் சொற்பனா வஸ்தையெனப் புலப்படும்படிச் சென்ற விஞ்சையனாகிய சண்முகத்தெந்தையின் பூரண கடாக்ஷமுடைய மகாவித்வான் அண்ணாவியார் அவர்கள் என்பதை யாவர்களும் அறிவர்களே'' என்று கூறி இருப்பதையும் காண்க.

நகரை விட்டு நீங்கி மதுக்கூர் என்னும் ஊரை அடைந்து, அவ்வூராரின் பேராதரவில் திருகுர்ஆனையும், மற்றும் மார்க்கம் பற்றிய பற்பல நூல்களையும் பயின்றனர். அதன் பின் தமிழ்க் கல்வி பயில வேண்டும் என்ற ஆர்வம் மிகவே அவரை அவ்வூர் முஸ்லிம்கள் அவ்வூரை அடுத்த மூத்தாக் குறிச்சி என்னும் சிற்றூரில் திண்ணைப் பள்ளிக்கூடம் வைத் திருந்த வாணியச்செட்டியாரின் பள்ளிக்கூடத்தில் தமிழ்க் கல்வி பயிலுமாறு சேர்த்துவிட்டனர். சிறந்த புலமை பெற்றிருந்த அந்த வாணியச் செட்டியார் சையிது முகம்மதுவின் அறிவாற்றல்களைக் கண்டு வியந்து, அவருக் குத் தாம் கற்ற கல்வி அத்தனையையும் பயிற்றுவித்தனர். இதன்பின் சிலகாலம் சென்று அவ்வாணியச் செட்டியார் இறந்துவிடவே அதுகண்டு பெரிதும் மனத்துயருற்ற சையிது முகம்மது அவ்வூரில் இருக்க உளம் இல்லாதவராயும், மீண் டும் மதுரைமீள மனம் இல்லாதவராயும் மதுக்கூரைவிட்டு நீங்கி நாகூரை நோக்கி அடியெடுத்துவைத்து நடந்தார். அங்குச் சென்ற அவருக்கு ஆங்கு வந்திருந்த வழுத்தூர் ஷெய்கு வகாபுத்தீன் சாகிபுடைய நட்பும் கிடைத்தது. அன்னார் சையிது முகம்மது சடைமுடி வைத்து அலங்கோல நிலையில் இருப்பதையும், அவருடைய முகத்தில் அறிவுக் கூர்மை பிரதிபலிப்பதையும் கண்டு அவரைத் தம் அருகில் அழைத்து அவருடைய வரலாற்றை அவருடைய வாய் மொழி மூலமாக அறிந்து, கல்விகேள்விகளில் தேர்ச்சி பெற்ற நீர் இவ்விதம் சடைமுடி தரித்து துறவிக்கோலம் புனைந்து திரிவது சரியல்ல. உம்மூலம் எத்தனையோ மக்க ளின் அறிவுக் கண்களைத் திறந்துவிட ஏது இருக்கும் பொழுது, நீர் உம்முடைய ஆன்ம நலனை மட்டும் பெரி தாக எண்ணி இவ்வாறு உலகத்தைத் துறந்து அலைவது இறைவனுக்குக் கூட விருப்பத்தைத் தரக்கூடியதல்ல. ஆத லின் சடையைக் களைந்துவிடும்' என்று அறவுரை பகர்ந்த னர். அவ்விதமே சையிது முகம்மதும் செய்தார். செய்த தோடு மட்டுமல்லாது அன்னாரிடமே தீட்சையும் பெற்றார். சையிதுமுகம்மது பிற்காலத்தில் தாம் பாடிய அலிநாமா என்னும் நூலில் தம் ஆன்மீக குரு வகாபுத்தீன் சாகிபு என்றும், தம் பாட்டனாரின் பெயர் நூருத்தீன் லெப்பை என்றும், தம் தந்தையின் பெயர் செய்கு மீரான் என்றும், தம் தாயகம் மதுரை என்றும் ஒரு கவியில் கூறுகின்றார். அக்கவி வருமாறு:

உளந்தெளிந் துணர்ந்த வகாபுதீன் சாகிப்
உயர்பதம் சிரசினில் அணிந்தே
தெளிந்துமுன் விஷய கேசரி எழில்சேர்
சீயகே தனந்திரு மாது
விளங்கிய கூடல் நூறுத்தீன் லெப்பை
மெய்யனும் செய்குமீ ரான்சொல்
வளம்பெறும் செய்யித் முகம்மதிச் சரிதம்
வழுத்தினன் கவிதை யினாலே.

*சையிது முகம்மது நாகூரில் இருக்கும்பொழுதே அவ்வூர் வந்த முகம்மது மீர்ஜவாது எனும் இளவல்லவரிடம் கல்வி பயின்றதாகவும், அவரே பேரும் புகழும் ஒருங்கு சேர வாழ்ந்த சவாதுப் புலவர் என்றும் கூறுவர். இதன் பின்தான் சையிது முகம்மது ஐயம்பேட்டை வந்து அங்குப் பள்ளிக்கூடம் வைத்து மாணவர்களுக்குக் கல்வி பயிற்றி வந்தார். அங்கு அவர் சிலகாலம் தங்கி அண்ணாவியாராகப் பணியாற்றி வருங்கால்தான் நாம் துவக்கத்தில் கூறிய நிகழ்ச்சி நடந்தது.*

*செல்விநகரம் என்று வழங்கப்படா நின்ற அதிவீரராமன் பட்டினத்திற்கு வந்தபின்தான் சையிது முகம்மது அண்ணாவியாரின் புகழ் விண்மீன் உச்சநிலையை எய்தியது. அக்காலைதான் அதாவது ஹிஜ்ரி 1167-ஆம் ஆண்டில் அவர் 'அலிநாமா' என்னும் அரிய நூலை மதாறு சாகிபு என்பாரிடம் உரைவாங்கி இயற்றினார். அதற்குக்கொடை நாயகமாக விளங்கியவர் அதிவீரராமன் பட்டினம் லெப்பைத் தம்பி என்பவராவார். சையிது முகம்மது அண்ணாவியார் அக்காவியத்தை இயற்றி லெப்பைத் தம்பிமுன் சென்று அவரின்முன் சரிசமமான இடத்தில் அமர்ந்து, அதனை அரங்கேற்றினார். அரங்கேற்றி முடிந்ததும் லெப்பைத்தம்பி என்னும் அப்பூபதி அண்ணாவியார்மீது பொன்மழை பொழிந்தார்; கனகமாரி சொரிந்தார். இதனையே அண்ணாவியார் தம்முடைய அலிநாமாவில் பின்வருமாறு கூறுகிறார்.*

பெலம் வளர் அகுமத் பிள்ளையை கிலுறுப்
பிள்ளையைத் துணையென உவந்தே
நலம்வளர் லெப்பைத் தம்பிபூ பதிசீர்
நாடிய தீன்குழாம் சூழ
இலகிய மணியா சனத்தினி லிருந்தே
எனைஎதிர் ஆசனத் திருத்திப்
புலியலி நாம வரவுரை யெனவே
புயலெனச் சொரிந்தனன் கனகம்.

அலிநாமாவானது அழகுசால் திருவிருத்தங்களால் நிரம்பப்பெற்று அறிவுக்கு நல்விருந்து நல்குகின்றது. அதில் அலி (ரலி) அவர்கள் ஓர் ஏழையின் கடனைத் தீர்ப்பதற்காகத் தம்மை ஓர் அரசனிடம் அடிமையாக விற்று அவரின் கடனைத் தீர்த்ததையும் அவ்வரசனிடம் அடிமையாக இருக்கும்பொழுது அவ்வரசனின் எதிரிகளை அடக்கி ஒடுக்கி வெற்றிக்கொடி நாட்டி அவ்வரசனுடன் பொருது அவனை இஸ்லாத்தில் இணைத்ததையும் அண்ணாவியார் அழகிய செந்தமிழில் பண்ணிசைக்கின்றார். போர் நிகழ்ச்சிகளைப் பற்றிக் கூறும்பொழுது அவற்றிற்கேற்ற சந்தத்தில் அவர் பாடும் பண்பினைத்தாம் என்னென்பேம்.

எதிரெதிராகக் குதித்தோடி வருகின்ற சுறாமீன்களோடு சுறாமீன்கள் இடித்துக்கொள்வது போலவும், விரைவாகப் பின்வாங்கி முன்னேறிவரும் செம்மறியாட்டுக்கடா ஒன்றோடொன்று முட்டிப் பொருதுவது போலவும், தேர்களில் இவர்ந்து வரும் மன்னர்கள் கயிற்றுல் வரிந்து இறுகக்கட்டி இருக்கும் விற்களில் மாட்டி எய்யும் சூடுதங்கிய அம்புகளைச் சொரிவதால் அவை சென்று இரத்தினம் அழுத்திய கொடிகள், குடைகள், வண்டில்கள் முதலியவற்றையும் குதிரைகளையும் ஒரு நொடியில் பொடிசெய்தன. இவற்றை விவரிக்க என்னாலும் இயலாது, வேறு எவராலும் இயலாது என்ற கருத்துக்களைப் பின்வரும் செய்யுளில் பின்னிப் பிணைந்து கூறும் அழகினைப்பார்.

இரதம் உற்றுறு புரவலர் முனையொடும்
எதிர்கு தித்திடு கயலொடு கயலிடி, கொளல்
[போலும்
விரைவில் உற்றிடு தகரொடு தகருகள்
வினைமிகுத்துர மொடும்எதிர் பொருதிடு,
[வதுபோலும்
வரித னுக்கொடு சுடுகணை சொரிதலின்
மணிஅ ழுத்திய கொடிகுடை சகடுகள்,
[விருதோடு
புரவி மற்றவும் ஒருநொடி யளவுபல்
பொடிப டுத்தின எவர்களும் இவைசொல,
[அரிதாமே.

*அலிநாமாவுடன் சேர்த்து அண்ணவியார் பத்துப் புராணங்கள் இயற்றியுள்ளார் என்பதை அவர் தாம் இயற்றிய மகாபாரத அம்மானையில் தம்மைப் பற்றிக் கூறுங்கால் எடுத்துரைக்கின்றார். அதுவருமாறு:*

தென்மதுரை நாடனுயர் சிங்கப் பதாகையுளான்
தன்மதுரப்பாடல் தனைவிரும்பிக் கூறலுற்றும்
சமரசப் பசும்பரியான் தாங்கிய வெண்டந்தியுளான்
அமிர்த மதுரகவி அன்பாகப் பாடலுற்றேன்.
பற்சமயம் ஒன்றாய் பயில்வன் நபிமாமரபோன்
தற்சமயம் தன்னில் தசபுராணம் பகர்ந்தோன்
சந்தமிகும் செல்லி நகர்செய்து முகம்மதென்போன்
இந்தப் புராணம் இயம்பினன்காண் அம்மானை.

*இக்கவியில் அண்ணவியார் தம்மை அமிர்த மதுரகவி யென்று வர்ணிக்கின்றார். இப்பட்டம் அவருக்குயாரால் எப்பொழுது இடப்பட்டது என்பது விளங்கவில்லை.*

மேலும் அண்ணாவியார் நூறுநாமா என்று ஒரு நூலும் சாந்தாதியசுவமகம் என்று ஒரு நூலும் இயற்றியுள்ளார். பின்னையதில் இரண்டாயிரம் செய்யுட்கள் தாளிலும், இரண்டாயிரம் செய்யுட்கள் ஏட்டிலும் உள்ளன.

அண்ணாவியாருக்கு சையிது மீராலெப்பை என்று ஒரு மகனும், நூர்முகம்மது என்று மற்றோர் மைந்தனும் இருந்தனர். அவர்களில் தலைமகனாகிய சையிது மீராலெப்பை கல்வியில் கருத்தின்றி விளையாட்டிலேயே பராக்காய் இருப்பதைக் கண்டு அண்ணாவியாருக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு அளவில்லை. தலைமகன் இவ்வாறு தறுதலையாகத் திரிகிறானே என்று சொல்லொணா வருத்தமுற்ற அண்ணாவியார் அம் மைந்தருடன் சரியாக முகம்கொடுத்தும் உரையாடுவதில்லை. இந்நிலையில் அண்ணாவியாருக்கு அந்தியகாலமும் வந்தடுத்தது. அக்காலை அவர் தம் இளையமகன் நூர்முகம்மதை அழைத்தார். அவரோ தம் தந்தைக்கு மருந்துக்காக மூலிகை பறித்துக்கொணர்வதற்காக அடுத்த ஊருக்குச் சென்றிருந்தார். தம் இளையமகன், இனியமகன் ஊரிலில்லாததை உணர்ந்து பெரிதும் வருந்திய அண்ணாவியார், தம் முதல் மகன் சையிது மீராலெப்பையை அழைத்துவருமாறு கூறினார். அவர் வந்ததும் அவரைத் தம் முன்னிலையில் தனியாக வைத்து, அவரைக் கூர்ந்து கவனித்துச் சற்றுநேரம் மந்திரங்களை உச்சரித்தார். அதன்பின் அவரின் வாயில் உமிழ்நீர் சொரிந்தார். அதன்பின் தம் குடும்பத்தினர் அனைவருக்கும் அறவுரைகள் பகர்ந்துவிட்டுத் தம்முடைய 65—வது வயதில் தம் கண்களை இறுதிமுறையாக இறுக மூடிக்கொண்டார். அப்பொழுது ஆங்குக் கூடி இருந்த அனைவருடைய கண்களிலிருந்தும் கண்ணீர் ஆறு கரைபுரண்டோடியது. அவரின் பூத உடல் அவ்வூர் பள்ளிவாசலின் வடபக்கத்தில் அடக்கம் செய்யப்பட்டு இன்றளவும் அவரின் அடக்கஇடம் காட்சி வழங்கிக்கொண்டுள்ளது.

அருட்கவிஞரான அண்ணாவியாரின் திருவாய் உமிழ்நீர் சொரியப்பட்ட அக்கணத்திலிருந்து சையிது மீராலெப்பையின் வாழ்விலே ஒரு பெரும் திருப்பம் ஏற்பட்டது. தறுதலையாகத் திரிந்துகொண்டிருந்த அவர் தம் தந்தையாரை அடக்கி முடிந்ததும் அவர்மீது சரமகவி பாடியதைக்கண்டு மக்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. இதுமுதல்

அருள்நாவு பெற்ற சையிது மீராலெப்பை பற்பல இடங்களுக்கும் சென்று, பெரும் புலவர்களைச் சந்தித்து அவர்களிடம் கல்வி பயின்று கற்றோரும் மற்றோரும் ஏத்தும் கடாட்ச வித்வானாக, ஜீவரத்னகவி என்னும் சிறப்புப் பெயருடன் விளங்கினார். தம் தந்தையினும் சிறந்து விளங்கிய அவர் வாக்குப்பலித முள்ளவராகவும் மாந்திரீகத் தொழிலில் மாபெரும் நிபுணராகவும் விளங்கினார். தம்தந்தை நடத்தி வந்த பள்ளியைத் தாமும் நடத்திப் பேரும் புகழும் பெற்றார். தம் தந்தையே போன்று மனைநூலிலும் சிறந்து விளங்கினார். அதுபற்றி மனை அலங்காரம் என்று ஒருநூலும் அவர் இயற்றியுள்ளார்.

அவர் முகம்மதெங்கள் நபிகள்கோமான் (ஸல்) அவர்கள் மீது 'மதீனக் கலம்பகம்' ஒன்று பாடியுள்ளார். அது அவரின் திருப்பேரர் ஹபீபுமுகம்மது அண்ணாவியாரால் ஹிஜ்ரி 1313—ல் அச்சிடப்பட்டுள்ளது. அதற்குக் குலாம் காதிறு நாவலர் கொடுத்த சாற்றுக்கவியில் ஜீவரத்ன கவியைப் பற்றிக் குறிப்பிடுங்கால்,

> 'தேனமரும் கவிமாரி பொழியும் மேகம்
> சீவரத்னக் கவிராஜ சிங்க மன்றே'

என்று புகழ்கின்றார். அதில் ஜீவரத்னகவி பாடியுள்ள காப்புச் செய்யுள் ஒன்றைக் கீழே தருகிறேன். அது அவருடைய கல்வித் திறமையைத் தெற்றென விளக்குகின்றது.

> ஆதரவு தேடி அறுசில் துயின்றநபி
> பாதம் பெறப்பனுவல் பாடவே—கோதற்
> றவனத் தவனத் தவனத் தவனத்
> தவனத் தவனத் தவன்.

இதனைத்தவிர அண்ணல் நபி அவர்கள் நடத்திய வீரப் போர் பற்றி வாள்விருத்தம், பரிவிருத்தம், யானை விருத்தம் என்ற கவிகளையும் அவர் இயற்றியுள்ளார். அவையெல்லாம் அழிந்துபட்டன.

அண்ணாவியார் குலதிலகரான சையிது முகம்மது அண்ணாவியாரின் மகள் வயிற்றுப்பேரரான, சொர்ணகவி நயினா முகம்மது பாவாப் புலவரும் பெரும் புலவராகத் திகழ்ந்துள்ளார். அவரின் காலத்தில் அதாவது ஹிஜ்ரி 1272-ஆம் ஆண்டில் மூன்றாண்டுகள் மழை பெய்யாது நாடெங்கணும் பஞ்சம் தலைவிரித்தாடிய பொழுது தொண்டிமாநகரம் செய்கு சுலைமான் லெப்பை சாகிபு என்னும் மேதகையார் கேட்டுக்கொண்டதற்கிணங்கச் சொர்ணகவி மழைப்பாட்டு இயற்றினார். முதலில் சீறாவிலுள்ள நபி மழை அழைத்த படலம் பாடி முடித்ததும், இம்மழைப்பாட்டுப் பாடப் பட்டது. பாடிமுடிந்ததும் மழை கொட்டுகொட்டென்று கொட்டி நாடுசெழித்தது. அப்பாட்டில் ஒன்று வருமாறு:

செட்டுச் செய்பவர் துஷ்டத்தனங்களால்
சிறிதுதானியம் உள்ளதை வாங்கியே
கட்டிவைத்து விலையைக் குறைத்திட
கட்டுவோர் உளக் கட்டகன்றோடவே
மட்டுவார் புய எங்கள் முகம்மது
வள்ளற்காக இப்போதினில் மாமழை
கொட்டு கொட்டென்று கொட்ட அருள் செய்வாய்
கோதிலா வடிவே எங்கள் நாயனே.

மேலும் இப் பெரும்புலவர் முத்துப்பேட்டையில் அடங்கப்பெற்றுள்ள செய்கு தாவூது வலியுல்லா அவர்கள் மீது பிள்ளைத் தமிழ் ஒன்றும் கியாமத் மாலை, திருமண வாழ்த்து, கொம்பு-ரவ்வு இல்லாத வண்ணம், வழிநடைச் சிந்து முதலியவையும் பாடியுள்ளார். அவர் பாடிய பிள்ளைத் தமிழில் ஒரு செய்யுள் மாதிரிக்காகக் கீழே தருதும். ஒருபானை சோற்றுக்கு ஒரு சோறுதானே பதம்.

செம்பொற் கலசத் திருவருக!
தெவிட்டா அமுதத் தேன்வருக!
சித்தாந் தவர்கட் குயிர் வருக!
தீண்டா மணிச்செஞ் சுடர்வருக!

அம்பொற் கிரண மலைவருக!
அலையா தாசைக் கடல்வருக!
அறிவோர் இருகண் மணிவருக!
அவுலியாக்கள் இனம்வருக!
நம்புற் றவர்க்கன்பருள் வருக!
நாவல் லவர்கள் நாவருக!
நலம்சேர் அறிவின் நிலைவருக!
நன்றே விளைக்கும் பொருள் வருக!
உம்பர்க் கலைமா மதிவருக!
ஓங்கும் தவத்துள் ளகம்வருக!
ஒளிசேர் செய்கு தாவுதெனும்
ஒலியே வருக! வருகவே!!

*சையிதுமுகம்மது அண்ணாவியாரின் இளையமகனாகிய நூர் முகம்மது அண்ணாவியாரின் மைந்தரான காதிறு முகியித்தீன் அண்ணாவியாரும் பெரும் புகழுடன் திகழ்ந்தனர். அவருக்கு 'நவரத்னகவி' என்னும் சிறப்புப் பெயரும் நல்கப்பட்டிருந்தது. அவர் 'பிக்ஹு மாலை' என்று ஒருநூலும் இயற்றியுள்ளார். அதற்குக் குலாம்காதிறு நாவலர் அழகிய உரை எழுதியுள்ளார். அது மார்க்கச் சட்ட திட்டங்கள் அனைத்தும் அடங்கிய அறிவுக் கருவூலமாக அமைந்துள்ளது. அதில் இருபத்தைந்து நபிமார்களின் பெயர்களையும் ஒருங்குசேர அமைத்துப் பாடப்பட்டுள்ள அழகுக் கவியை இதோ தருகிறேன், படிப்பீர்களாக!*

ஆதம் இதுரீசு நூஹு மூசா
ஐயூபு ஹாறூன் அல்எஸஉ
ஹூது இபுருகீம் லூத்துஎஹு
சூபு தாவூது சுலைமான் நபி
ஓதும் இசு மாயில் துல்கிபுலி
யூநுஸ் எஹியா சுஐபு ஈசா

சாதுறும் ஸாலிஹிஸ் ஹாக் இல்யாஸ்
ஜக்கறியா யூசுப் முகம்மதாமே

இவ்வாறு அரும்பெரும் கவிகளை யாத்து அவனிக்கீந்த அண்ணாவியார் குலம் அன்றுபோல் இன்றும் செழித்தோங்கி பற்பல புலவர் மணிகளையும் மனைநூல் நிபுணர்களையும் மாந்திரீக விற்பன்னர்களையும் உண்டுபண்ணிக்கொண்டுள்ளது. அவர்தம் குலத்தோன்றல்களான சையிதுமுகம்மது அண்ணாவியார் பெரும் மனைநூல் நிபுணராகவும் அவரின் பின்னோரர் நூர்முகம்மது அண்ணாவியார் புலவர்பெருமகனாராகவும் அதிராம் பட்டினத்திலே இன்று வாழ்ந்துவருகின்றார்கள். வாழ்க அவர்கள் குலம்; வாழையடி வாழையாக வாழ்க வாழ்கவே.

# வண்ணக்களஞ்சியப் புலவர்

கண்ணின் மணியே களஞ்சியமே, கற்றோர்க்
[கெல்லாம் நாயகமே
புண்ணியரே எம் பிழை பொறுங்கள். பூமிபொறுத்த
[நிலா வொளியே!

என்று யாரோ தம் பின்னேவந்து நின்றுகொண்டு இரங்கல் தொனியில் வேண்டி நிற்பதைக் கேட்டதும் நாகூர் தர்காவில் தியானத்தில் வீற்றிருந்த வண்ணக்களஞ்சியப்புலவர் திரும்பிப் பார்த்தார். புளாயாற்றில் பெருந் திருவும் பெருந் திறலும் வாய்க்கப்பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்து வந்த பத்தானே மரக்காயர் நின்றுகொண்டிருப்பதைக் கண்டதும் புலவருக்குத் தம் கண்களையே தம்மால் நம்ப இயலவில்லை. எனினும் அதனை வெளியேகாட்டிக்கொள்ளாது 'என்ன செய்தி' என்று வினவினார் புலவர், 'புலவீர்! தயைகூர்ந்து தாங்கள் என் மனைக்கு எழுந்தருளி என் இளமகளை மணம் முடித்து எங்களின் குடும்பத்துக்கு நல்வாழ்வு நல்குங்கள்' என்று கண்ணீருடனும் கம்பலையுடனும் கூறினார் மரக்காயர். புலவர் சற்றுச் சிந்தித்தார். அதன்பின் ஷாஹுல் ஹமீது நாயகத்தின் தகுதியாம் கிருபையைக் கண்டு வியந்தார். 'நல்லது' என்று கூறி எழுந்தார். புரையாறு சென்றார். பத்தானே மரக்காயரின் இளமகளை இரண்டாம் தாரமாகக் கடிமணம் முடித்து மகிழ்ந்தார், அப்பொழுது பத்தானே மரக்காயருக்கும் அவருடைய குடும்பத்தாருக்கும் ஏற்பட்ட மகிழ்வுக்கு அளவில்லை.

இவ்வாறு ஒரு புலவரை ஒரு பெரும் செல்வர் வலியவந்தழைத்துச்சென்று தம் மகளை மணமுடித்துக் கொடுத்தார் என்று நான் கூறுவதைக் கேட்டு உங்கள்புருவங்கள் மேலேறுகின்றனவல்லவா? பத்தானே மரக்காயர் தம் பிழைதனைப்

பொறுக்குமாறு புலவரிடம் வேண்டுகின்றாரே. அப்படியவர் என்ன பிழை செய்தார் என்று உங்களுக்குப் பெரும் வியப் பேற்படுகின்றதல்லவா? கூறுகின்றேன் கேளுங்கள்.

இந் நிகழ்ச்சிக்குச் சிலதிங்கள் முன்பாகப் புலவர் பெருமான் வண்ணக்களஞ்சியம் புரையாற்றுக்குச் சென்றிருந்தக்கால் அங்கு வள வாழ்வும் வான்புகழும் பெற்று வாழ்ந்து வந்த பத்தானை மரக்காயரின் திருமனைக்கு எழுந்தருளினார். மரக்காயர் புலவரை உபசரித்து மரியாதை செய்து 'புலவீர், தாங்கள் இங்கு வந்த அலுவல் யாதோ? என்றால் தங்களுக்கு என்ன ஆகவேண்டுமோ' என்று வினவினார். பத்தானை மரக்காயரின் பால்நிற மக்களின் அழகைப்பற்றி ஏற்கனவே கேள்விப்பட்டிருந்த வண்ணக்களஞ்சியம் 'கூறின் ஆற்றுவீர்களோ' என்று வினவினார். 'அதற்கென்ன, என்றால் இயன்ற செயலாயிருப்பின் ஆற்றுவதற்கு என்ன தடை?' என்று விடை இறுத்தார் மரக்காயர். அப்பொழுது புலவர் 'அப்படியாயின் நிரம்ப நல்லது; தாங்கள் தங்களின் பெண் மக்களில் ஒருவரை எனக்கு மணமுடித்துத் தாருங்கள்' என்று கூறினார். அவ்வளவுதான். மரக்காயருக்கு ஏற்பட்ட வெஞ்சினத்திற்கு அளவில்லை. வாயில் வந்தபடியெல்லாம் புலவரை ஏசினார். 'என்ன திமிர்! இந்த வறிஞனுக்கு நான் என் செல்வ மகளை மண முடித்துக் கொடுக்கவேண்டுமாம். என்ன திமிர்!!' என்று அவரை இழித்துரைத்து அவரை அவ்வூரை விட்டே விரட்டினார். இவ்வாறு பெரிதும் அவமானப்பட்ட வண்ணக்களஞ்சியம் நாகூர் வந்து ஷாஹுல்ஹமீது நாயகத்தின் அடிநிழலில் தம் மனக்குறையை எடுத்துரைத்துக்கொண்டிருந்தார். இதற்குப்பின் பத்தானை மரக்காயரின் வாழ்விலே பெரும் திருப்பம் ஏற்பட்டது. அவருடைய வாணிபங்களெல்லாம் ஒன்றின்பின் ஒன்றாக முறிந்துவிழுந்துகொண்டிருந்தன. இந்நிலையில்தான் அவர் நாகூருக்கு ஓடோடிவந்து வண்ணக்களஞ்சியத்தை நாம் துவக்கத்தில் குறிப்பிட்டுள்ளவண்ணம் வேண்டி நின்றார்.

இதன்பின் வண்ணக்களஞ்சியத்தின் பேரும் புகழும் பெருவாரியாகப் பல்கின. ஹமீத் இபுறாகீம் என்னும் இயற்பெயர் பெற்றிருந்த அவருக்கு நாகூர்வாழ் புலவர்பெருமக்கள் அவர் பாடும் வண்ணங்களின் சிறப்பையும் அவற்றின் பொருள் ஆழத்தையும் ஓசையின் இனிமையையும் பெரிதும்

*பாராட்டி நாகூர் தர்காவில் வைத்து 'வண்ணக் களஞ்சியப் புலவர்' என்ற பட்டத்தைச் சூட்டினர். அதுமுதல் அவரின் இயற்பெயர் மறைந்து வண்ணக்களஞ்சியப் புலவர் என்ற பட்டப் பெயரே எட்டுத் திக்கும் எதிரொலிக்கத் துவங்கி விட்டது. அவர் பாடிய வண்ணத்தில் ஒன்றைக் கீழே தரு கிறேன். படித்துச் சுவைப்பீர்களாக!*

*பல்லவி*

மனமே வாழ்வைச் சதமென் றனுதினம் நபிபதம்
வாழ்த்தா திருந்தாய் மனமே.

*சரணம்*

நண்ணும் திருமதினத் தண்ணல் அப்துல்லா [பெறும்
நாத ராமகு மூதர்

வண்ணக் களஞ்சியமும்—விண்ணோ ரெவரும் [துதி
வணங்கும் கமலப் பாதர்

கண்ணீர் பெருகியழும்—அந்நாள் மகுஷரிலே
காப்போர் அவரல்லாமல் தீர்ப்போர் துயரமெவர்

கலங்கி டாதெதி ரிலையெனும் வாழ்வொடு
பெலம் பெறுசத் தாதுடனேஇனம்
இலங்கு மாநிதி பெறுகாறூனோடு
துலங்கு மெவர் வாழ்வானதும் நின்றதோ
—(மனமே)

*வண்ணக்களஞ்சியத்தின் எழுத்தாணி முனையிலிருந்து விழுந்தவை இத்தகை எத்தனையோ வண்ணங்களாகும். அவற்றில் பெரும்பாலானவை கால வெள்ளத்தாலும் கறை யான்களாலும் அழிக்கப்பட்டு இன்று எஞ்சியுள்ளவை கொஞ்சம்தாம். அவர் இயற்றிய புராணங்களில் தலை*

சிறந்து விளங்குவது சுலைமான் நபியின் காதையாகிய இராஜ நாயகம் என்பதேயாகும். அது நாற்பத்தாறு படலங்களில் 2240 திரு விருத்தங்களைக் கொண்டதாக அமைந்துள்ளது. அதனை வண்ணக் களஞ்சியம் ஹிஜ்ரி 1223-ல் யாத்தனர். அதற்கு உரை நல்கியவர் இபுருஹீம் லெப்பை ஆலிம் ஆவார். கொடை நாயகராக விளங்கியவர் வகுதைவாழ் வள்ளல் அப்துல்காதிறு என்ற வராதிபராவார். அந் நூலைத் தம் கொடைநாயகர் வாழ்ந்த நகரிலேயே அவர் அரங்கேற்றினு ரென்பது 'கதிர்விரி வளங்கொள் கீழைக் கரையினில் அரங்கமாக, மதுரைவாழ் மீசல் வண்ணக்களஞ்சிய மவுல லுற்றும்' என்று அவரே கூறியிருப்பதிலிருந்து நன்கு விளங்க வருகிறது. புலவர்பெருமான் இக் காவியம் புனையும் பொழுது மதுரையில் வாழ்ந்துவந்தார் என்பதும் 'மதுரை வாழ்' என்று குறிப்பிட்டிருப்பதிலிருந்து அறியலாகும். அவர்எங்குச் சென்றிருந்தபோதினும் எங்குப்போய் வாழ்ந்து வந்த போதினும் தம்முடைய பெயருடன் தாம் பிறந்த ஊராகிய (தற்போது இராமநாதபுரம் மாவட்டத்தில் முது குளத்தூர் தாலுகாவில் ஒரு சிற்றூராக விளங்கும்) மீசலை மறக்கவே இல்லை. தம்முடைய பட்டப்பெயருடன் மீசல் என்பதனை இணைத்தே கூறியும் வந்தார், எழுதியும் வந்தார். இஃது அவருடைய தாயகப் பற்றை நன்கு எடுத்துரைக்கின் றது.

வண்ணக்களஞ்சியம் தாம் இயற்றிய இராஜ நாயகத் தில் மற்றப் புலவர்கள் போன்று கடவுள் வாழ்த்துப் படலத் தில் இறைவனின் பேரருளையும் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களின் திருவருளையும் மற்ற நபிமார் கள் வலிமார்கள் ஆகியவர்களின் பதத் துணையையும் காப் புத் தேடும்பொழுது அவர் தம்முன்போந்த முஸ்லிம்தமிழ்ப் புலவர்களின் நற்றுள்களையும் போற்றி, இசைத்துப் பாதுகா வல் தேடுகின்றூர். அந்தப் பாதுகாவல் பாவானது பாகினும் இனிதாக அமைந்துள்ளது. அதனைக் கீழேதருகிறேன். படித் துப் பாருங்கள்.

மேவிய மிகுருஜாலிப்புலவன் மின்னு நூறுத்தீன்
நீவிய மதுர இன்ப சாகரம் நிகராம் சீறு
காவிய உமறு மாலைக் கனககவிராயன் காசீம்

நாவினுள் எட்டில்வென்ருன் சவாது நற்ருள்கள்
[போற்றி

இச் செய்யுளிலே அவர், உமறுதரும் பெரும் காப்பிய மாம் சீருவை எவ்வாறு புகழ்ந்தேற்றுகின்ருர் என்பதைப் பாருங்கள். ஆம், அவர் உமறுப் புலவரின் பேரபிமானி தாம். சீருவை முன்னூலாக வைத்தே அவர் இராஜ நாயகத்தைப் பாடியுள்ளார் என்பது இராஜ நாயகத்தையும் சீருவையும் ஒப்பிட்டுப் படித்துவரின் நன்கு புலனுகும். சீரு போன்றே இராஜநாயகமும் செம்பாகமாக அமைந்து சிந்தைக்கும் உணர்வுக்கும் நல் விருந்து நல்குகின்றது.

தாவூது நபி உபாத்துப்படலத்தில் மரணப்படுக்கையில் கிடக்கும் அந்நபியார் தம் அருமந்த மைந்தர் சுலேமானை அருகழைத்து கூறும் அறிவுரைகளை வண்ணக்களஞ்சியப் புலவர் தேனினுமினிய தீந்தமிழில் பா இசைத்து நல்குகின்ருர். அப்பாக்கள் அறிவுக்களஞ்சியமாக விளங்குகின்றன. முதலில் தாவூது நபி தம்மைந்தரை நோக்கி, என்கண்மணி மகனே, நீ யாரைப் பார்த்தும் நகையாடாதே! யார்மீதும் சினமுருதே. நகையாடுவதும் சினமுறுவதும் ஒருவனுடைய அறிவுத்தெளிவையும், ஆலோசனையையும் போக்கிவிடும்' என்று கூறுகின்ருர்கள். உடனே வண்ணக்களஞ்சியப் புலவர் அதனை,

'மைந்தன் என்றுதித்த ஒண்கண் மணியில் ஒண்
[மணியே கேண்மின்
நந்தலில் விளையாடல் சொல்நகைபரி காசம்
[செய்தல்
சிந்தைகொள் வெகுளி ஏதும் செய்திடா(து) ஒழி
[மின் செய்யில்
புந்தியில் தெளிவும் ஆலோசனை எலாம் போக்கும்
[அன்றே!

என்று பா இசைத்துப் பகர்கின்ருர்.

அதன்பின் தாவூதுநபி தம் கண்மணிமகன் சுலைமானை நோக்கி, 'மகனே! நீ எப்பொழுதும் இறைவனுக்கு அஞ்சிச் செயலாற்றுவாயாக! இறைவனின் திருப் பெயரை எப்பொழுதும் நினைவிலிறுத்தி, கனவிலும்கூடத் தியானம் செய்வாயாக! அவ்வாறு செய்து வருவாயாயின் ஈருலகிலும் நீ பெருவாழ்வு வாழ்வாய்' என்று கூறுகின்றனர். அதனை வண்ணக்களஞ்சியப் புலவர் தம் வாய்திறந்து பின்வருமாறு பா இசைக்கின்றார்.

ஒருபொருள் கடவுட்(கு) அச்சம்
உறுவதெப் பொருளும் நெஞ்சில்
கருதுதல் ஒழியா வண்ணம்
கனவினும் தியானம் செய்மின்
மருவிய உலக வாழ்க்கைப்
பேறெலாம் வயங்கத் தந்தே
இருவினை அகற்றி மேலாம்
பதவியும் ஈவ தாமே.

பின்னர் தாவூதுநபி தம் அருமைத் தோன்றல் சுலைமானை நோக்கி, 'மகனே! உலகில் யாருடைய உதவியையும் பெரிது கண்டு அவர்களின் ஆதரவில் நம்பிக்கை வைத்துவிடாதே. அவ்விதம் செய்யின் தன்னிகரிலானாகிய இறைவன் இதுகாறும் உனக்குச் செய்துள்ள நலன்களைக் குறைவுகண்டது போலாகிவிடும். அதுமட்டுமல்ல. இனிமேல் இறைவனின் பேரருளும் உனக்குக் குறைந்துவிட ஏதுவாகும்' என்று அறவுரை மொழிகின்றனர். அவ்வளவுதான். வண்ணக்களஞ்சியம் மழைபோலப் பின்வருமாறு பா பொழிகின்றார்.

மன்னவர் முதலா யுள்ள
மானிடர் எவர்தம் மாலும்
பின்னும் எப்பொருள் களாலும்
பெறுபலன் சிறிதை எண்ணி

உன்னும் ஆதரவு வைக்கும்
நம்புதல் ஒழிமின் வைக்கில்
தன்னிகர் இணையி லான்செய்
நலத்தினைத் தாழ்வு செய்யும்

*பிறகு தாவூதுநபி தம் காதற்றிருமகன் சுலைமானை ஏறிட்டுப்பார்த்து, 'என்மகனே! உன்னுடைய பொருளாதார முடைகளையோ, இரகசியங்களையோ கள்ளங்கபடற்ற வெள்ளை மனத்துடன் யாரிடமும் கழன்று விடாதே. உயிர்க்குயிரான நண்பர்களிடமும் கூறிவிடாதே. கூறுவாயாயின் அதில் அவர்கள் குறையைக் காணின், அவர்கள் உன்னைப் பெருமைக் கண்களுடனல்ல, இழிவுக் கண்களுடன் நோக்கத் துவங்கிவிடுவர்' என்று இதமொழி பகர்கின்றனர். வண்ணக்களஞ்சியம் அக்கருத்துக்களைக் கவி உருவில் கீழ்வரும் வண்ணம் வார்த்தெடுக்கிறார்.*

விதனித்த வறுமை யேனும்
வெளிப்படா மறைச் சொல்லேனும்
சதமுற்ற உயிரைப் போலும்
தகுதித் தோழமையர் பாலும்
இதயத்தில் களங்கம் நீங்கி
ஏழமை பகரல் வேண்டாம்
அதனிற்கண் குறையக் காணில்
அவமதிப் பெண் ணுவாரே.

*மேலும் தாவூதுநபி தம் குலக்கொழுந்தான சுலைமானைப்பார்த்து, 'மைந்த, நீ மேலான வாழ்வு வாழ்ந்து கொண்டிருந்த போதினும், இனிவரும் நாட்கள் இதைவிட மேலான நாட்களாக இருக்குமென்று அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருக்கவேண்டும். துன்பம் நேர்ந்த காலையும் நீ இவ்வாறே துணிவு பெற்றிருப்பாயா*

யின் இறைவனின் திருவருள் உன்மீது சார்வது உறுதி. அதில் எவ்வித ஐயமுமில்லை' என்று இயம்புகின்றனர். இந்த அருமையான அறவுரையை வண்ணக்களஞ்சியமா வெறுமனே விடுவார்? அவற்றை வைத்துக்கொண்டு பின்வருமாறு ஒரு சொல்லோவியமே தீட்டி விடுகின்றார்.

புனித வாழ்(வு) அடைகின்றாலும்
போயொழிந் தினங்கட் கெல்லாம்
இனிவரு தினமே நன்காம்
எனமனத்(து) இருத்தல் வேண்டும்.
துனி வருகினும் இவ்வாறே
துணிவுறு கருத்துத் தோன்றில்
தனியவன் கருணை மென்மேல்
சாருதற்(கு) உறுதியா மால்

இத்துடன் தாஹூநபி ஓய்ந்து விடவில்லை. தாம் இம் மண்ணுலகை நீப்பதற்குமுன் தம் மனத்திலுள்ள கருத்துக் களை எல்லாம் தம் மகனுக்கு எடுத்தியம்பிவிட விரும்புகின் றனர். தம் மகனை நல்லோர் நட்பை நாடுமாறும், தீயோர் நட்பைக் கடியுமாறும் அறிவுரை கூறி அவற்றால் விளையும் பலாபலன்களையும் விரித்துரைக்கின்றனர். மார்க்க அறிஞர் களான உலமாக்களுடன் வீணே தர்க்கமிடாது அவர்களின் ஆலோசனையின்படி செயலாற்றுமாறும், தம்மகனுக்கு அறிவுமொழி பகர்கின்றார்கள். அவற்றை வண்ணக்களஞ்சி யம் பின்வரும் செய்யுட்களில் அழகாக இயம்புகின்றார்.

அறிஞர்கள் உறவு கூடி
அனுதினம் கலந்து வாழ்கின்
மறுவறு தெளிவு தோன்றும்
மடமென மனத்தில் மேவு
செறிஇருட் பிழம்பு நீங்கும்
தீவினை எவையும் தீரும்.

சிக்கறுத்(து) இயலும் வேதம்
தெளிஉல மாக்கள் தம்மைத்
தர்க்கமிட் டகற்றிடா(து) அன்
னவருரை தழுவி வாழ்மின்
புக்குவை தனியோ னுக்கும்
மாந்தர்க்கும் பொருத்தம் மேவு
நற்குணம் மிகுந்த சாலி
காம் வகை நல்குமன்றே.

*பின்னர் தாவூதுநபி களவியலைப் பெரிதும் கடிந்து நேரிய முறையில் திருமண முடித்து இல்லறம் நடத்தும் நற்பாங்கை வியந்துரைக்கின்றார்கள். களவியலின் கொடிய தன்மையை எடுத்துரைத்து, அதனை மேற்கொள்ளும் ஒருவன் உலகத்தவராலும், இறைவனாலும் இகழப்படுவான் என்று வன்மையாக முழங்குகின்றார்கள். அந்த முழக்கத்தை வண்ணக்களஞ்சியத்தின் பின்வரும் செய்யுளிலே கேளுங்கள்.*

சத்துவத் தளவு பெண்கள்
தமை மணம் புரிந்துசேரப்
புத்திவைப் பதை யல்லாது
களவினில் புணரும் மோக
நத்துதல் ஒழிமின் இந்த
நடை நடந்திடு வதாயின்
முத்தொகை உலகும் ஆதி
முதல்வனும் இகழ்வ தாமே.

இறுதியாக தாவூதுநபி தம் குலம் தழைக்கப்போந்த தலைமகனாகிய சுலைமானை நோக்கி அரும்பெரும் அறவுரை ஒன்றைப் பகர்கின்றனர். 'மகனே, சுலைமான், நீ உன்னுடைய குடும்பத்தினர்மீது எத்துணை அன்பு செலுத்துவாயோ, அத்துணை அன்பைப் பிறரிடமும் செலுத்துவாயாக. உலகம் முழுவதும் உன்னுடைய குடும்பம்; உலகமக்கள் அனைவரும் உன் குடும்பத்தின் உறுப்பினர் என்று கருதி எல்லார்மீதும் அளவற்ற அன்பு செலுத்துவாயாக! அவ்விதம் செய்து வருவாயாயின் உலகம் முழுவதும் உன் புகழொலி முழங்கும்; இறைவனின் திருவருள் உன்மீது சொரியும். பெறுவதற்கரிய பேறுகளெல்லாம் உன்னை வந்தடையும்' என்று கூறுகின்றனர். அதனை வண்ணக் களஞ்சியம் பாடிய இன்னிசையில் கேளுங்கள். இதோ வண்ணக்களஞ்சியம் பாடுகின்றார்.

உறவுள்ள குடும்பத் தார்மீ(து)
இருத்தும் நல்லுரிமை போலும்
பிறர் தமைக் குறித்துளன்பு
பெயர்ந்திடா(து) இருத்தல் வேண்டும்.
திறனிதில் பயனே(து) என்னில்
செழும்புவி அனைத்தும் வாழ்த்தும்
இறையருள் பெருகும் செல்வம்
யாவும் வந்துதிக்கும் தானே.

இவ்வாறு நீதி உரை பகர்ந்துவிட்டு இறைவனின் திருப்பெயரை மொழிந்தவண்ணம் தம் இருகண்களையும் மூடினர் தாவூது நபியார்.

வண்ணக்களஞ்சியம் தாவூதுநபி தம் மகனுக்கு அளித்த அறவுரையின் ஆழத்தையும், பெருமையையும் நன்குணர்ந்து, தந்தை யென்றால் இப்படியல்லவோ இருக்க வேண்டும்? 'தாதையர் அழிவிலாத புதையலாய்த் தரணி

*மீது காதல் மைந்தருக்கு வைக்கும் மெய்ப்பொருள் கல்வி யன்றோ' என்றும் 'மகவினுக்கு இனியதாதை மனத்தில் அன்பிருத்தித் தேர்ந்து பகர்திரு வசனம் போலும், பலன் செய் மந்திரமும் உண்டோ' என்றும் பண் இசைத்துப் பர வசமாகிறார்.*

*அதன்பின் தருமலாபப் படலத்தில்தருமம் செய்வதனால் ஏற்படும் லாபத்தையும் அதனை விட்டொழிப்பதனால் ஏற் படும் இழப்பையும் தேன் தமிழில் திறம்பட ''ாத்துத் தரு கின்றார் புலவர். ஒருவன் எவ்வளவுதான் அதிகமாக மந்தி ரங்கள் ஜெபித்த போதினும் நித்தமும் நோன்பு நோற்ற போதினும் இன்னும் எத்தனை யெத்தனையோ நற்செயல்கள் ஆற்றியபோதினும் அற்றார் அழிபசிதீர்த்தல் போன்ற அறம் ஒன்றுண்டோ? அதைப் போன்று ஒருவனுக்கு ஆதாயமும் வேறுண்டோ? என்று இன்னிசைமுழக்கி வினாஎழுப்புகின்றார் பின் வருமாறு.*

இயற்பெரும் பலமந்திரம் எவையை ஓதிடினும்
வியத்த நோன்பு நித்தமும் உறையினும் இதன்மேல்
[எச்
செயல் பொருந்து புண்ணியங்கள் செய்யினும்
[பசிதீர
நயத்தொ(டு) ஈய்வதோர் தருமத்தைப்
[போலுண்டோ லாபம்

*அதன்பின் புலவர், அறம் செய்வதனால் பெரும் ஆதா யம் ஏற்படும் என்று நான் கூறுகின்றேனே. அப்படி என்ன ஆதாயம் ஏற்படும் என்று வினவுகின்றீர்களா? இதோ கூறு கின்றேன் என்று கூறி கவிமழை பொழிகின்றார். அதனால் ஏற்படும் நன்மைகளையெல்லாம் எடுத்துரைத்து தருமத்திற்கு நிகரான லாபம் ஏதாவது உண்டா என்று இப் பொழுது சொல்லுங்கள்' என்று நமக்குப் பின்வரும் கவியில் அறைகூறல்*

ஆனதத்துயிர் இடறையும் அகற்றி வாழ்வருளும்
வானகப் பெரும் பதவியும் தரும் எலாம் மாறித்
தானிறக்கினும் உடன்வரு சருவ சாதகமாய்
நானிலத்தினில் தருமத்தைப் போலுண்டோ லாபம்

*அதன்பின் அறம் செய்யாதொழிவதனால் ஏற்படும் இழப்பை அழகான கவிகளில் எடுத்துரைக்கின்றார் களஞ்சியப் புலவர். ஒருவன் உயிர்நீக்கும்பொழுது அவனுடன் அவன் செய்த அறத்தைத்தவிர வேறொன்றும் வாரா என்றும் ஆதலின் ஒருவன் உயிர் வாழும்பொழுதே அவன் அறம் செய்யவில்லையாயின் அவனுக்கு அதைப் போன்ற இழப்பு வேறொன்றுமில்லை என்றும் ஆணித்தரமாக அறைகின்றார் கவிஞர்.*

கூட்டு மக்களும் மனைவியும் சுற்றமும் குறித்த
தேட்டு மற்றெவைகளும் உடலமும் உடன்சேரா
தீட்டுநற்றுணை வருபொருள் எவையென எண்ணி
நாட்டும் தன்மம் செய்யாதது போலுண்டோ நட்டம்.

*இவ்வாறு கூறிய புலவர் ஒருவன் இவ்வுலகில் எவ்வளவு தான் செல்வம் பெற்றிருந்த போதினும், இவ்வுலக வாழ்வு நிலையற்றதென்றும் ஒரு நொடி நேரத்தில் அழிந்தொழிந்து விடும் என்றும் நிலைத்து நிற்கும் பெருவாழ்வு மறுமையே என்றும் உணர்ந்து அறம் செய்யவில்லையாயின் அவனுக்கு அதனால் ஏற்படும் இழப்புக்கும் அளவுண்டோ என்று மற்றொரு கவியில் முழக்குகின்றார். அது வருமாறு:*

பலம் செய் சம்பத்து எவ்விதத் திறனுறப்
[படைக்கினும் இன்
னிலம் செய் வாழ்வொரு நொடியினில் அறுமென
[நினைத்துப்

பெலம் செய் வாழ்க்கை அம்மறுமை என்(று)
[ஆய்ந்தவை பெறவே
நலம் செய் தன்மம் செய்யாதது போலுண்டோ
[நட்டம்

*ஆதலின் ஒவ்வொருவரும் தன்னாலியன்ற அளவு பொருளினாலாவது, வாக்கினாலாவது, உடலினாலாவது பிறருக்கு அறம் செய்யவேண்டும் என்றும் இவ்வாறு செய்யாது அறிவுள்ளோர் ஒருநாளைக்கூட வீணாக்கமாட்டார்கள் என்றும் பின்வரும் கவியில் இயம்புகின்றார்.*

எவளவாயினும் தங்களால் ஏன்றமட்டியா(து)
அவமதாய் ஒருநாளுமே போகொணார் ஆய்ந்தோர்
உவகையாகக் கைப்பொருளினால் வாக்கினால்
[உடம்பால்
நவிலும் தன்மம் செய்யாதது போலுண்டோ நட்டம்

*இவ்வாறு ஆரமுதனைய கவிச்செல்வத்தை நமக்கு அள்ளி வழங்கும் கவிஞர் விதிகூட்டிய படலத்தில் விதியின் வலிமை பற்றிக் கூறும் பாவானது அழகினும் அழகாய் வனப்பினும் வனப்பாய் அமைந்துள்ளது. நான் கூறுவது உண்மையா அல்லவா என்பதை நீங்களே படித்துவிட்டுக் கூறுங்கள். இதோ அதனைக் கீழே தருகிறேன்.*

மல்லிகை மலரின் மணம் எவர் கொடுத்தார்
மணமற முருக்கையார் கெடுத்தார்
கல்லெலாம் மணியாய் ஒளிர்வதார் தடுத்தார்
காக்கைக் கண்மணி ஒன்றார் எடுத்தார்
நல்லியல் பெரும் சீர் பெறவென எவரும்
நாடுவர் அவரவர் தமக்கு

வல்லவன் விதித்த விதிப்படி அலது
மதியினால் வாழ்வ தொன்றிலையே.

*இக் கவியைக் கவிஞர் பாடி அரங்கேற்றிவரும்பொழுது 'காக்கைக்குக் கண்ணிலே மணி ஒன்றுதான் என்று கூறியுள்ளீர்களே, எவ்வாறு' என்று ஒருவர் வினவியக்கால் 'நானும் அதனை நினைத்துப் போடவில்லை. என்னவோ தானாகவே வந்து அப்படி விழுந்துவிட்டது; பின்னர் பார்க்கும்பொழுது அது சரியாகவும் இருந்தது. காக்கைக்குக் கண்ணிலே ஒரு கருமணிதானே உள்ளது. காக்கை எப்பக்கம் தன் தலையைச் சாய்க்கின்றதோ அப்பக்கத்துக் கண்ணில் அந்த மணி உருண்டோடி வந்துவிடுகிறது. அதனால்தான் காக்கை தலையைச் சாய்த்துச் சாய்த்துப் பார்க்கின்றது' என்று கூறினாராம் கவிஞர்.*

*இவ்வாறு மதியைவிட விதிதான் வலியது என்று வன்மையாக முழங்கும் கவிஞர் கனவு கண்டு மணம் செய்த படலத்தில் கனவிலே தான் கண்ட கன்னிக்கினியாளை எவ்வாறு ஓர் அரசிளங்காளை அடையப் புறப்பட்டான் என்பதனைக் கூறும்பொழுது எண்ணியதை எய்தியே தீரவேண்டும் என்று உறுதி பூண்ட தரும சிந்தனையாளர்க்கு எய்தற்கரிய பொருளும் ஒன்றுண்டோ? விதியும் அவர்களுக்கு ஒத்திருக்குமன்றோ' என்று பின்வருமாறு பண்ணிசைக்கின்றார்.*

கனவினில் கண்ட பொன்னை நகைசெயக்
[கருதல் போலே
நினைவுவைத்தனம் என்றாலும் நெஞ்சினில்
[உறுதி என்னும்
சனதமே குடிகொண்டோங்கும் தருமசிந்தை
[யினாளற்கு
வினவரும் பொருள் ஒன்றுண்டோ விதியும்
[ஒத்திருக்குமன்றோ

இவ்வாறு கூறி ஒருவன் விதி விதி என்று முழங்காலைக் கட்டிக்கொண்டிராது நல்லன நினைத்து நற்செயல்களை ஆற்றும் நல்லோனாய் விளங்கி ஒரு செயலை எய்தப்பெறவேண்டுமென்று திடமான உறுதி கொள்வானாயின் அவனுக்கு இறைவனும் உதவி செய்வான்' விதியும் அவனுக்கு ஒத்திருக்குமென்று அறவுரை பகர்கின்றார்.

இவ்வாறு இடையிடையே பல அறவுரைகளைப் பெற்று சுலைமான் நபியின் வாழ்வில் நிகழ்ந்த பல்வேறு நிகழ்ச்சிகளையும் சுவை சொட்டச் சொட்ட பாடியுள்ளார் கவிஞர். அக் காப்பியத்திலே வீர ரசத்தைத் தவிர மற்ற பல்வேறு ரசங்களும் பொங்கித் துளும்புகின்றன. சிருங்கார ரசம் சிறகடித்துப் பறக்கின்றது.

பின்னர் அவர் ஹிஜ்ரி 1236-ல் சையிது இபுருகீம் லெப்பை என்பாரிடம் உரைபெற்று தம் மூதாதையரான ஏர்வாடியில் அடங்கப்பெற்றிருக்கும் சையிது இபுருகீம் ஷஹீது வலியுல்லா அவர்களைப் பற்றி 'தீன் விளக்கம்' என்று ஒரு காப்பியம் இயற்றினர் அன்னார். அதிலே 'வீர ரசம்' நாட்டியமாடுகின்றது. அவர் தாம் சையிது இபுருகீம் ஷஹீது வலியுல்லாவின் வழித்தோன்றல் என்றும் எனவே தாம் அவர்கள்மீது காப்பியம் இயற்றிக்கொண்டு வந்திருப்பதாகக் கூறியதும் ஏர்வாடி வாழ் மக்கள் அதனை உண்மையென ஏற்றுக்கொள்ள மறுத்தனர். 'சரி, ஒன்று செய்வோம். சையிது இபுருகீம் ஷஹீது வலியுல்லா அவர்கள் அடங்கப்பட்டிருக்கும் அறைக் கதவைப் பூட்டிவிடுகின்றோம், நீர் பாவிசைத்து அக் கதவைத் திறக்கச்செய்தால் நாங்கள் உம்மை அன்னாரின் வழித்தோன்றல்தாம் என்று ஏற்றுக்கொள்கின்றோம்' என்றனர். அதற்கிசைந்து வண்ணக் களஞ்சியமும் பண்ணிசைக்கவே கதவு 'படா'ரென்று திறந்ததென்றும் கூறுவர்.

இவ்வாறு அருள்நாவு பெற்று வாழ்ந்த அந்த அருட்பெருங் கவிஞர் இளமையில் மதுரையிலுள்ள ஒரு மடத்துத் தம்பிரானிடம் தமிழ், வடமொழி, மலையாளம் ஆகியவற்றைக் கற்றுத் தேர்ந்தனர். இந்த இருபெரும் காப்பியங்களைத் தவிர அவர் 'குத்பு நாயகம்' என்று ஒரு நூலும் 'அலி பாதுஷா நாடகம்' என்று ஒரு நாடகமும் இயற்றியுள்ளார்.

அவருடைய கல்விச் சிறப்பையும் கவிதா மேதையையும் கண்டு தஞ்சை அரசர் ஒருவர் அவருக்குச் சிங்கமுகப் பொற் சிவிகை ஒன்று பரிசில் நல்கினர் என்றும் அதில் இவர்ந்தே அவர் நாடு வலம் வந்தாரென்றும் சொல்லப்படுகிறது. நீண்ட நாள் நாகூரில் வாழ்ந்துவந்த அப் பெரும் புலவர் தம்முடைய எண்பத்தொன்பதாவது வயதில் இராமநாதபுர மாவட்டத்திலுள்ள இராஜசிங்கமங்களத்திற்கு அருகாமையில் உள்ள தும்படைக்காக் கோட்டை என்ற ஊரில் இறப்பெய்தி அடங்கப்பட்டுள்ளார். அன்னாரின் அடக்க இடம் இன்றும் அங்குள்ளது.

எனினும் இஸ்லாம் பெற்ற இணையற்ற பெருங் கவியை ஈன்றெடுத்துத் தந்ததனுல் இன்று மீசலின் பெயர் உயர்ந்து விட்டது. இன்று வண்ணக் களஞ்சியத்தை நினைவுகூரும் பொழுது மீசலே நம் மனக்கண் முன் ஓடிவந்து நிற்கின்றது. மீசலை எண்ணும்பொழுது வண்ணக் களஞ்சியப் புலவரே நம் மனக்கண்முன் காட்சி வழங்குகின்றுர்.

வாழிய மீசல்! வாழிய வண்ணக்களஞ்சியம்!!

# குஞ்சுமூசுப் புலவர்

அரபுநாட்டுப் பாலையிலே பாலைவனக் கப்பல்கள்மீது பொதிபொதியாகப் பொருள்கள் ஏற்றப்பட்டுச் சென்று கொண்டிருக்கின்றன. அவைமீது ஆயுதம் தரித்த வீரர்கள் வீற்றிருக்கின்றார்கள். முன்னால் செல்லும் ஒட்டகையின்மீது எமன் நாட்டு அரசனும், அவனின் அருந்தவமகனும் அமர்ந் திருக்கின்றனர். அப்பொழுது திடீரென ஒரு பெரும்படை வந்து தாக்கி அவர்களின் பொருள்களைச்சூறையாடிச் சென்ற துடன், அவனுடைய வீரர்களை வென்று கொன்று குவித்து அவ்வரசனையும், அவனுடைய அருமை மகனையும்சிறைவாரிச் செல்கின்றது. சிறைசெய்யப்பட்ட அவ்விருவரும் மலை நாட்டு அரசனின் மணிக்கொலுவின் முன் வந்து நிறுத்தப் படுகின்றார்கள். அப்பொழுது எமன்நாட்டு அரசன் தன் அருகிலிருந்த ஒருவனை நோக்கிக் கொலுவில் வீற்றிருக்கும் அவர் யார் என்று வினவுகின்றான். அதற்கு அவன்,

> பதியினில் சிறந்த மக்கமா நகரில்
> 
> பரிவுடன் இருந்தணிந் திலங்கும்
> 
> மதினமா புரத்தில் வருமகுமூது
> 
> நபிமரபி னில்அபூ பக்கர்
> 
> சுதன்இவர் தமரும்மனையும் அத்தனையும்
> 
> சுருதியின் வழிமுறை விடுத்தே

அதிகநல் வளம்சேர் இவ்வரை அடைந்தார்.
அவர்க்குறும் பெயர் அப்துற்-றகுமான்.

என்று கூறுகின்றுர். இதனைக் கேட்டதும் அந்த எமன் நாட்டு மன்னனின் வாடிய முகம் மலர்ந்தது. நாம் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் இவ்வுலகில் தோன்றியுள்ளார்கள் என்று கேள்வியுற்று அவர்களின் நெறிதழுவி அவர்களுக்குக் காணிக்கையாகத்தானே இப் பொருள்களை ஏற்றிச் செல்கின்றேம். அஃது இவருக்கு விளங்காதுதான் நம் பொருள்களைக் கொள்ளையிட உத்தர விட்டுள்ளார். முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களின் மாதுலரின் மகனல்லவோ இவர். நாம் இப் பொருள்களை யாருக்கு எதற்காகக் கொண்டு செல்கின் றேம் என்பதைக் கூறின், இவர் உடனே நம்மை விடுதலை செய்து நம்மிடமிருந்து கொள்ளையிடப்பட்ட பொருள்களை யும் திரும்பத்தந்து நன்முறையில் நம்மை மதினமாநகரம் அனுப்பிவைப்பார் என்று எண்ணி அச்செய்தியை அவரி டம் எடுத்தியம்பினுன்.

அவ்வுரை தனைக்கேட்(டு) அரசப்துற்-றகுமான்
அகுமது நபிதமக்(கு) இவைதாம்
இவ்வழி கொடுநீ போவதை அறிந்தே
இன்னணம் முடித்தனன் உனது
செவ்விய மகவை விடுவதும் இலைநீ
சிறுவனை இழந்(து) உயிருடனே
நௌவிமெய் இறசூல் மதினமா நகர்க்கே
செல்கென நவின்றனன் இரங்கான்.

இதைக்கேட்டு அவன் கண்ணீர் விட்டு அழுது தன்மீது இரங்குமாறும், தன் பொருள்களைப் பற்றித் தான் கவலை யுறவில்லை என்றும், தன் கண்மணி மகனைப்பற்றித்தான் தான் கவலையுறுவதாகவும், எனவே அவனையும் தன்னையும் விடுதலை செய்தருள வேண்டுமென்றும் வேண்டி நின்றுன்.

அப்பொழுது அப்துற்-றஹ்மான் சற்று இரங்கி, 'நல்லது, எகிப்துநாட்டுப் பட்டுத்துணிகள் ஆயிரமும், ஆயிரம் களஞ்சி பொன்னும் பத்து வாரங்களில் கொண்டு வரின் அவனை விடுதலை செய்கின்றேன். அப்பெரும் தவணை தவறில் உன் மகன்தன் ஆவியைக் களைவது திடன் என்று கூறினார்.

இதைக் கேட்டுப் பெரிதும் உளம் நொந்து மெய்யு யர்ந்த அவன் மதினமா நகரம் புக்கி

கமலத்தினின் மிசை மற்றொரு
கமலம் விழுகின்ற
சமன் ஒத்(து) இரசூல் சேவடி
தனில்வாய் முகம் வைத்தே
எமனுக் கிறையென வந்தவன்
எமனும் துதிசெய்யும்
நமர்கட்கொரு குருவாகிய
நபிமுன் புற நின்றே

தன்னுடைய அவல நிலையைக் கூறிக் கண்ணீருகுத்தான். தனக்கு ஆதரவு நல்குமாறு வேண்டினான். தன் மகனின் உயிருக்கு அபயம் அளிக்குமாறும் இறைஞ்சினான்.

எங்குலக் கொழுந்தாய் இருவிழிமணியாய்
இலங்கும் என் இருதயக் கனியாய்த்
திங்களா னனத்தின் புதல்வனுக்கு இரங்கி
செழுநிதி ஆயிரம் களஞ்சி
பொங்கிய மிசிர் ஊர்க்கலிங்கம் இவ்விலக்கம்
புகழ்பெற வயமொரு நூறும்
அங்கவன் உரைத்த அவதியில் கொடுபோய்
அளிப்பதற்(கு) அடிமையால் தகுமோ'

*என்று கூறிக் கண்ணீர் சிந்தினன், அசுமத்தென்ற அன்னன்.*

இன்னணம் அசுமத்தோத எழில்நபி இறசூலுல்லா
தன்னுளம் பெருக வாடிச் சலித்தனர் அவையிலுற்ற
மின்னென அவனிஏந்தி விறல்மனம் நிறைந்த தீனின்
மன்னவரெவரும் ஏங்கி வாய்விடுத் தழுவதானர்,

*இப்பேரொலி மதினமா நகரம் எங்கணும் கேட்டு, மனைகளில் இருந்தோர் யாது நிகழ்ந்தது, என்ன நேர்ந்தது என்று ஏங்கித்துடித்தவர்களாகப்பள்ளிவாயிலை நோக்கி ஓடோடி வந்தார்கள்.*

வந்தவர் எவரும் அன்னேன் வரவும் அவ்வரையின்
[சார்பில்
இந்தென வதனவீரர் இறந்ததும் அசுமத் ஈன்ற
சுந்தரப் புதல்வன் தாளில் தலையுறு துயரம் கேட்
[டுச்
சிந்தையுள் திகைத்து வாடித் திசைதிசை அழுது
[நின்றார்.

*அதன்பின் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் அலி(ரலி) அவர்களை அழைத்து, அசுமத்தைத் தம் மனைக்கு அழைத்துச் சென்று உணவளிக்குமாறு பணித்து விட்டு ஆயிஷா நாயகியின் திருமனைக்குச் சென்றார்கள்.*

செருக்களத்(து) உழுவை போன்ற திறல் அப்துற்-
[றஹ்மான் பேரில்
பெருக்குற வெகுளி பொங்கிப் பீடையுள் அடக்கி
[மேனி
மருக்கமழ் இறசூலுல்லா மனையகத்(து) இருக்குங்
[காலை

அருக்கனில் பொறித்த நாமத்(து) அபூபக்கர் அவ
[ணின் வந்தார்.

*அன்னாரிடம் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் அசுமதென் பானுக்கு அப்துற்—றஹ்மானால் ஏற்பட்ட அல்லல்களையும், இழப்புகளையும், இன்னல்களையும் ஒன்றுகூட விடாது 'வெவ்விய சினத்தினோடும் விழிசிவந்து உரைத்தனர்.'*

வள்ளல்நம் இரசூலுல்லா மனம்வெகுண்(டு)உரைத்த
[மாற்றம்
தெள்ளிய கருத்துள் மேவத் திறல் அபூபக்கர்
[கேட்டுக்
கள்ளவிழ் விசனக் கண்ணீர் கவின்மழை சொரித
[லாகி
விள்ளரும் துயரவாரி மீதடைந்(து) அழுவதானார்.

*பின்னர் அன்னார் அண்ணலெம் பெருமானின் திருமுகம் நோக்கி, 'நாயகமே! எனக்கு விடைதாருங்கள்' நான் போய் என்மகனை இஸ்லாத்தில் அழைத்து. அவனால் அசுமத் என்பானுக்கு ஏற்பட்ட அல்லல் துடைக்கிறேன்' என்று அழுத கண்ணும் சிந்தியமுக்குமாகக் கூறினர். அதற்கு முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்)அவர்களும் 'நல்லது' என்று மொழிந்து விடையளித்தனர்.*

*இல்லம் புக்கிய அபூபக்கர் அவர்கள் ஆயுதம் தரித்தவர்களாய் வெளிவந்து, புரவிமிசை இவர்ந்து, தம்மகன் வாழ்ந்துவந்த மலைச்சாரலை நோக்கிச் சென்றனர். அப்பொழுது அவர்கள் ஏறிச்சென்ற குதிரை எவ்வாறு நடந்து சென்றது தெரியுமா? காலிலே தன் நடையைக்காட்டி, தன் கருத்திலே திடத்தைக்காட்டி, தன் உடலில் வியர்வையைக்காட்டி, தன் கண்களில் கனலைக்காட்டி தன் நாவின் நுனியை வெளியே*

நீட்டி, அது செல்வதன் காரணமாக எழும் தூசி வானையளாவும் வண்ணம் தன் வாலினில் வேகத்தைக் காட்டி அந்தக் குதிரை சென்றதாம்.

காலில் ஐங்கதியைக் காட்டிக்
கருத்தினுள் திடத்தைக் காட்டி
மேலினில் வியர்ப்புக் காட்டி
விழியினில் எரியைக் காட்டி
தாலுவின் தலையைக் காட்டி
தரைவிடும் துகளைக் காட்டி
வாலினில் விசையைக் காட்டி
வயப்பரி நடந்த தம்மா!

இவ்வாறு அவர் புரவி இவர்ந்து செல்லுங்கால், வழியில் முர்ரத்து என்பார் எதிர்ப்பட்டு, 'என்ன, அபூ பக்கரே! நம் வழிவழிவந்த மார்க்கத்தை விட்டுவிட்டு இஸ்லாத்தைத் தழுவிக்கொண்டீரே. இஃது உமக்குத் தகுமோ' என்று வினவினர். அதற்கு அபூபக்கர் அவர்கள் தாங்கள் முன்பு கல்லையும், மரத்தையும் கடவுள் என வணங்கிவந்த கொடுமையையும் இப்பொழுது உலகை எல்லாம் படைத்து ஆளும் வல்லோன் ஒருவனை வணங்கிவரும் பெருமையையும் எடுத்துரைத்து, இஸ்லாத்தின் சிறப்பையும், முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களின் மேலாம் பண்புகளையும் எடுத்தியம்பினர். உடனே முர்ரத்து அவ்விடத்திலேயே இஸ்லாத்தைத் தழுவினர். அதைக்கண்டு பெரிதும் மகிழ்ந்த அபூபக்கர் தம் பயணத்தை நிறுத்தி முர்ரத்து என்பாரை அண்ணல்நபி அவர்களிடம் அழைத்து வந்தார். முர்ரத்து இஸ்லாத்தில் சேர்ந்தது அறிந்து எம்பெருமானும் களிகூர்ந்தனர். அதன்பின் முர்ரத்தை தம் மனைக்கு அழைத்துச் சென்ற அபூபக்கர் அவர்கள் தாம் பயணப்பட்டுச் சென்ற காரணத்தைக் கூறித் தம் மகனைப் பற்றி யாதேனும் தெரியுமா என்று வினவினர்கள். உடனே முர்ரத்துக் கூறினர்: 'தெரியும்; கூறுகின்றேன் கேளீர், வெகு தொலையில் ஒரு மலை

நாடுள்ளது. அது எப்படிப்பட்ட மலைநாடு தெரியுமா? அங்குள்ள நெளவல் மரங்களில் நெளவல்கனிகள் பழுத்துக் குலுங்கும் பான்மையைத்தான் என்னென்பேம். அந்த மரங்களில் குரங்குகள் ஏறிஏறி விளையாடி அவற்றின் கிளைகளிலும், கொப்புகளிலும் தாவித்தாவிப் பாய்ந்து பழங்களைக் கீழே உதிரச் செய்யும். யானைகளானவை தங்களின் நீண்ட துதிக்கையை மேலுயர்த்தி வெண்மையான புன்னை மலர்களைப் பறித்துக் கீழே சொரியும். நற்புடைவைகளை அணிந்துள்ள பெண்களின் ஆபரணங்களிலிருக்கும் நாகரத்தினக்கற்களிலிருந்து வெளியாகும் ஒளியானது வானளாவ எழுந்து நிற்கும். அத்தகைய சிறப்பு வாய்ந்த மலை அது.

நாகநிற நெளவல் கனி நாகமது தூவ
நாகநெடுங்கைகொடு வெண் நாக மலர்சிந்த
நாகம் அணி மாதர் இடு நாகமணி யாவும்
நாகம் எழவே யொளிரும் நாகமதின் மீதே

ஆனைபரி தேரினெடும் ஆட்கள் சதுரங்கச்
சேனைதனை ஆளும்ஒரு சிங்கமெனும் செம்மல்
ஊனமுறு புன்னெறி உளத்தினில் இருத்தும்
ஈனன் அவன் நாமமும் அபாசுபியான் அன்றே

அங்கவன் அரும்புதல்வி யானதொரு மின்னை
உங்கள் திருமைந்த(ன்) உள்ளுவந்து மணம் செய்தே
வெங்கரிய அம்படை அவ்வேலை புடைசூழச்
சிங்கமென வைகினன் செழும்தவிசின் மீதே

என்று கூறினார் முர்ரத்து. அதனைக் கேட்ட அபூபக்கர் அவர்கள் அவனை இஸ்லாத்தில் அழைத்து, எப்படியாவது இங்குக்கொணர வேண்டுமே, இதற்கு என்ன யோசனை கூறுகின்றீர் என்று

உங்கள் திருநாமமுற ஓலை தருவீரேல்
அங்கவன் இடத்தினில் அடைந்ததை அளித்தே
பொங்கமுத நன்மொழி புகன்று மறுசெய்தி
செங்கையின் முடங்கல் கொடு சேர்வன் இவண்
[என்றார்.

*அதைக் கேட்டதும் அபூபக்கர் அவர்கள் அதற்கு இணங்கி மடல் தீட்ட முனைந்தனர்.*

மாசகலும் ஆதியை மகிழ்ந்தினிது இறைஞ்சித்
தேசு மகுமூதுபதம் சிந்தையுற வைத்தே
காசில் அபூபக்கர் கடிதாசினை எடுத்தே
சூசிதனில் நீலமை துவைத் தெழுதுவாரால்

எங்கண்மணியே இருதயக் கனியு ளாய்எம்
அங்கமதில் ஆவியெனும் அப்துற் றகுமானே
வெங்கரியின் மிக்க விறல் மேவு சுதனே!நீ
சங்கை செறி மாநகர் தனைப் பிரிதலாலே.

மன்னர் மகிழ் நின்றனை வருத்தமுற ஈன்ற
அன்னையும் உடன்பிறவி யான ஆயிஷாவும்
பன்னரும் தமர்களோடு பார்த்திபனும் யானும்
உன்னை நினைவுற் றுருகி ஊண்துயிலும் அற்றோம்.

வள்ளல் மகுமூதடி வணங்க வருகின்றோர்
துள்ளுபரி நன்னிதிகள் தூசு நெடுஞ்சோகும்
கொள்ளை கொடு போய் உயிர்கள் கொண்டபடி
[யாலே
உள்ளம் எயிறண்ணமு மெலிந்து கருகிற்றே.

பாதகமுறும் குபிர் எனும் பகையகற்றி
வேதர் இறசூல் நபிதன் மெல்லடி இறைஞ்சப்
போதமுடனே வருதல் புந்தியென வெண்ணிக்
காதலொடு வம்மென வரைந்தனர் கரத்தால்.

*இவ்வாறு மடல் தீட்டிய அபூபக்கர் அவர்கள் தம் மனைவியாரை அணுகித் தாம் மைந்தனுக்கு அவர்களும் ஒரு முடங்கல் வரைந்து தருமாறும், அது நல்ல பலனளிக்கும் என்றும் கூறினர். உடனே அவ்வம்மையார் தம் மைந்தனுக்கு பின்வருமாறு மடல் தீட்டினார்கள்.*

அயிலுறுஞ் செழுங்கரத் ததிக மைந்தனே!
வயிறிடை உனைச்சுமந்து அ[illegible]து வாயினில்
செயிரற அமுதமும் சிறப்ப ஊட்டும்தாய்
பயிரென வளர்த்தவப் பலன் இங்கிதோ

உன்னுடன் பிறந்தொளி இலங்கும் ஆயிஷா
என்னும் என்புதல்வியை இறைவன் தூதுவர்
முன்னுதித்தவரருள் முருசலாகிய
மன்னர் மன்னபி திருமணம் புரிந்தனர்.

வள்ளல் என்புதல்வியை மணந்து வாழ்வதால்
தெள்ளிய பதவியும் சிறப்பும் செல்வமும்
விள்ளறும் தலைமையும் விறலும் மேன்மையாய்
உள்ளதிங்(கு) எனக்குமுன் தனக்கும் உற்றதே.

மறைநபி எமக்கொரு மருகர் ஆனதால்
இறையவன் கருணையும் இலங்கும் ஏமநா(டு)

உறைவதற் குதவியும் உயர் அறங்களும்
குறையறப் படைத்தனன் கருணைமைந்தனே

எவர்க்கு மன்னபியென இறை அனுப்பி இங்(கு)
அவர்க்கருள் மறைக் கலிமா அறைந்தவர்
பவக்கடல் கடந்(து) அரும்பசும் பொனால் அமை
சுவர்க்க நன்னகர் மனைச் சுகத்தில் எய்துவார்

ஆதியை அஹமதை அறிந்திறைஞ்சிலாப்
பாதகப்பணியினர் பணியும் தேள்களும்
ஓதரும் எரியும் ஒன்றாக வுற்றபல்
வேதனை மிகுந்த வெந்நரகில் வீழ்குவார்

ஆகையால் எனதுதன் அருமை மைந்தனே
தோகை ஆமீனத்தருள் தோன்றல் நாயகம்
மேகமார் குடைநபி வேந்தர் தீன்வழி
வாகுசேர் கருத்துடன் வருதல் வேண்டுமால்

என்று எழுதி அசுமத்தென்பவன் அண்ணலவர்களிடம் வந்து தன் அவல நிலையைக் கூறியதையும் அதைக் கேட்டு அண்ணலவர்கள் அப்துர்–ரஹ்மான்மீது வெகுண்டதையும் அவர்களின் சினத்தைத் தாம் இதமொழி கூறி ஆற்றியதையும் அம்மடலில் தீட்டினர். அவ்விரு மடல்களையும் பெற்றுக்கொண்டு முர்ரத்து அப்துர்-ரஹ்மான் ஆட்சி நிகழ்த்திய மலைச்சாரலை நோக்கி விரைந்தார். அங்குச்சென்று அப்துர்-ரஹ்மானைக்கண்டு அளவளாவினார். அப்துர்-ரஹ்மான் அவரை உபசரித்து விருந்து நல்கிக்கொண்டிருக்கும் காலை அபாசுபியான் அசுமத்தின் மகனை அவர் முன் அழைத்துவந்து, 'தவணை தவறிவிட்டதால் இவனைக் கொலை செய்திடுக' என்று கூறிச் சென்றான். உடனே அப்துர்–ரஹ்மான் அவனைப் பிணைத்திருந்த தளைகளைக் களைந்து 'அவனைக் கொலைசெய்யத் தயார்

செய்க' என்று தம் ஏவலாளரிடம் பணித்தார். அப்பொழுது முர்ரத்து அருவிபோன்று கண்ணீர் வடித்து, 'உங்களின் தந்தையின்மீது ஆணையிடுகிறேன். அச்சிறுவன்மீது இரங்கி அவனுக்கு உயிர்ப்பிச்சை நல்குங்கள்' என்று இறைஞ்சினார். தம் தந்தையின்மீது ஆணையிட்டு அவர் இறைஞ்சுவதைக் கேட்டு, 'அப்பெயருக்காக அவனை உரிமையாய் விடுவேன்' என்று கூறி அவனுடைய கை, கால்களைப் பிணைத்திருந்த தளைகளை அறுத்தெறியுமாறு ஆணையிட்டு, அவனைத் தம் அருகிருத்தி உணவருந்தச் செய்தார் அப்துர்-ரஹ்மான். அப்பொழுது தம் தாய்தந்தையரின் நினைவு மீக்கூர்ந்து, அவர்களை இனி எந்தநாள் காண்போம் என்று எண்ணி ஆகுலக்கடலில் மூழ்கி வாய்விடுத்தழுவதானார். அக்காலை அபாசுபியான் அங்குவந்து, 'செவ்விய சிறுவன் ஆவி செறுத்திடாதது ஏது' என்று வினவினான். அப்பொழுது அப்துர்-ரஹ்மான் அவனை நோக்கி, 'என்தாதையின் பெயர்கூறி அவனுக்கு உயிர்ப்பிச்சை வேண்டியபின்னர் அவனைக்கொல்வது அறமல்ல எனக் கருதி அவனுக்கு அபயம் அளித்தேன்' என்றனர். இதைக்கேட்டதும் அபாசுபியானின் இரு கண்களும் அனலைக்கக்கின. 'நயந்த உன் தாதை சென்னி புவிபடத் தறிப்பன் அன்றேன் புன்னெறி விடுநீ' என்று கடுமொழி பல கழன்றான்.

அப்பொழுது அவனைநோக்கி அடவரி கடுப்பச் [சீறி
மெய்ப்புகழ் உடையதாதை விறல்வலி பெருமை [வீரம்
செப்பியங்கவர் தேகத்தின் சிறுமுடி ஒன்று நின் [போல்
முப்பது பெயர் சென்றாலும் முறிப்பதற்கு அரிதென் [றுரால்

இதைக் கேட்டதும் அபாசுபியானின் முகம் செத்தது. எதிர்பேச வாயில்லாது அவ்விடத்தை விட்டு அகன்றான். அதன்பின் அப்துர்-ரஹ்மான் முர்ரத்தை நோக்கி 'மதி

தவழ் புரிசை சூழ்ந்த வளமுறு மதீனமென்னும் பதிதனில் நடப்பும் என்னே? பயந்தவர் இருவர் செய்கை இதுவெலாம் உணர்வதுண்டோ' என்று வினவினர். முர்ரத்து எல்லாச் செய்திகளையும் அவரிடம் விரிவாக எடுத்துரைத்தார். அவற்றைக் கேட்குந்தோறும், கேட்குந்தோறும் அப்துர் ரஹ்மான் 'செம்மைசேர் மலர்க்கண்மாரி சிதறிட அழுது சோர்ந்தே, எம்மை ஈன்றவரே என்ன எழுந்து வீழ்ந்து அலறலுற்றார்.' அவருக்கு ஆறுதல் பல கூறி அவரைத் தேற்றி, அவரின் தாய்தந்தையர் அவரிடம் சேர்ப்பிக்குமாறு தம்மிடம் தந்தனுப்பிய முடங்களை அவரிடம் கொடுத்தார் முர்ரத்து. அதைப் பெற்று, 'சுந்தர முடங்கல்மீது துலங்கு முத்திரையை நோக்கி, முந்திய அடலை தன்னில் மும்மடங்கு அழுது வீழ்ந்தார்' அவர். அதன்பின் அவர் அம்முடங்கலைப் பிரித்து வாசித்து முர்ரத்தின் மலர்க்கரம் பிடித்து, 'ஏகனே, உண்மை என்றும் எழில்நபி இறசூல் என்றும், மோகமாம் கலிமா முற்றும் மொழிந்தனர் முக்காலன்றே.' இவ்வாறு மொழிந்து அப்துர்—ரஹ்மான் இஸ்லாத்தைத் தழுவிய காலை அங்கு அபாசுபியான் மீண்டும் வந்து அசுமத்தின் இளமகனை மீண்டும் தளையிற் பூட்டுமாறு ஏவலாளரைப் பணித்தான். அவர்களும் அவ்வாறே செய்தனர். 'அங்கது தன்னை நோக்கி அரசபூபக்கர் சேயும், செங்கையின் வடிவாள் வீசிச் செவிகொளா வசைகள்பேசி, வெங்கயம் அதனின் மிக்காய் விரைந்திருவிழி சிவந்தே, பொங்கிய சினங்கள் மீறிப் புலியென வெகுண்டு சீறி' அவ்விலங்கினை முறித்து அப்பால் எறி என்று கர்ச்சித்தார். அவ்வாறே பணியாட்கள் செய்தனர். அதன்பின் அச்சிறுவனைத் தம் அருகினில் இருத்திக்கொண்டனர் அன்னார். இதைக் கண்டு 'பெலங்களும் வலியும் தேய்ந்தே பிடியென அரசன் போனன்.'

இதற்குமேல் அங்கு ஒருகணமேனும் தங்கி இருக்க விரும்பாத அப்துர்-ரஹ்மான் மதினமா நகரம் புறப்படத் தயாராயினர். தம்மனையாள் சையிதந் என்னும் மங்கையை அணுகி,

எங்கள் நன்னெயினர் முகம்மது நபியை
இருதயத்(து) இருத்தி என்தகப்பன்

தங்கிய மதினவள நகர் அதனில்
சார்வதற்கு இன்றுயான் பயணம்
உங்கள்தன் இனத்தோ(டு) உனையருள் தாதை
உறுமனே சேர்ந்திரும் எனவே
திங்கள் என்(று) இலங்கு முகமலர் தனககோர்
தீயெனச் சுடும் சொல் சொற்றனரால்.

அன்னவை உரைப்ப அரிவை செய்யிதத்தும்
ஐயனை இழந்தனன் தலைவன்
உன்னிய படி அப்பெரும் பதிபுகுத
உமக்குமுன் பயணம் என்றுரைத்தே
மின்னிய வடிவாள் வலிபெறும் கணவன்
விளங்கும்மென் கரத்தினைத் தீண்டி
நன்னயம் பொருந்து நபிதிருக் கலிமா
நாவினுல் நயம்பட நவின்முள்.

*இதன்பின் அப்துர்-ரஹ்மானும் அவர் தம் அருமை மனைவி சையிதத்தும் மூர்ரத்தும் அசுமத்தின் மைந்தனும் அபாசுபியான் எவ்வளவோ கூறியும் கேளாது மதினமா நகரம் நோக்கிப் புறப்படுகின்றனர். அபாசுபியானின் படைகளானவை அவர்களைச் சூழ்ந்துகொள்கின்றன. கடும்போர் நிகழ்கிறது. இச்செய்தி முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களுக்கு இறைவனுல் 'வஹீ' மூலம் அறிவிக்கப்பட்டு அவர்கள் அப்துர்-ரஹ்மானுக்கு உதவி நல்க உடனே படைவலுவுடன் புறப்படுகின்றனர். பெரும்போருக்குப்பின் இறுதியாக இஸ்லாம் வெற்றி பெறுகிறது.*

*இந்த அழகிய வரலாற்றை வைத்துக்கொண்டு, தேன் தமிழில் எழிலொழுகும் இன்பக் காவியம் புனைந்த இந்தச் சீரிய புலவர் யார் என்பதை அறிய நீ துடிக்கின்ருயா? அவர் தாம் குழந்தைநகர் என்று பெயர்*

பெற்ற தேங்காய்ப்பட்டினம் பெற்றெடுத்த குஞ்சுமூசுப் பிள்ளை என்னும் பெரும்புலவர். அவர் ஹிஜ்ரி 1212ல் இயற்றிய 'சையிதத்துப் படைப்போர்' என்னும் செந்தமிழ்க் காப்பியத்தின் கதைச் சுருக்கம் தான் நான் மேலே கூறியவை. அந்தக் காப்பியத் தலைவியாகிய சையிதத்து என்னும் மங்கையை அப்புலவர் பெருமான் தம் காவியத்தில் எவ்வாறு வர்ணிக்கின்றார் என்று தெரியுமா? கூறுகிறேன் கேளுங்கள்.

வானிலே முழுத்திங்கள் தன்னிகர் இல்லையெனும்படி இறுமாப்புடன் தோன்றிப் பூமியை ஏறிட்டுப் பார்த்ததாம். அப்பொழுது பூமியிலே தன்னைவிட எத்தனையோ மடங்கு அதிகமான ஒளிபடைத்த சையிதத்து எனும் மடந்தையின் திருமுகத்தைப் பார்த்ததும்' 'இஃதென்ன விபரீதமாயுள்ளது. விண்ணிலே ஒளிரும் நம்மைவிட மேலான பூரணமதியம் ஒன்றல்லவோ மண்ணிலே வீற்றிருக்கின்றது என்று நாணமுற்று அதனுடைய உடல் ஒடுங்கி அதன் காரணமாக அமுது சிந்தி கூனிக்குறுகி வளைந்து, அந்த ஏக்கத்தினாலும், கவலையினாலும் தேய்ந்து தேய்ந்து மறைந்துவிட்டதாம். இவ்விதம் திங்கள்தோறும் நடந்துவருகிறதாம். இவ்விதம் தம் கற்பனைக் கண்முன் கண்ட புலவர் தாம்கண்ட காட்சியை வண்ண ஒவியமாகப் பா வடிவில் வார்க்கின்றார். அப்பாவைத் தருகிறேன், படித்துப் பரவசமடைவீர்களாக.

செய்யிதத்து எனும் மடந்தை செய்யதுண்ட மாமதி
வையகத்(து) இருப்பு வந்து வந்து கண்டு வெட்க [லான்
மெய்யொடுங்கி அமுதுசிந்தி மிகவளைந்து நாணி [வெண்
கையிழந்து தேயும் இந்து கவலும் திங்கள் [தோறுமே.

இவ்வித அருமை அருமையான கவிகளைத் தம் காவியம் முழுவதும் அள்ளி இறைத்துப் பாடியுள்ள குஞ்சுமூசுப் புலவர் பதினெட்டு வாத்தியங்களின் பெயர்களையும் ஒருகவியில்

பிணைத்து முழங்குகின்றார். அவரின் முழக்கத்தை இதோ கேளுங்கள்.

முரசு துந்துமி திமிலை பம்பைகள் முருடு திண்டிமி
[மத்தளம்
குறைசெய் பூரிகை நவுரிகாகம் கொம்பு மோகர
[வீணைகள்
பெருவணப் பறை சின்னமுந்துடி பேரி கின்னரமும்
[தவில்
அரவம் மிஞ்சிய கடல் அமைந்திட ஆர்த்தடர்ந்தன
[சேனையே.

இவ்வாறு அருங் கவிகளை யாத்துத் தாம் எப் புலவருக்கும் குறைந்த புலவர் அல்லர் என்பதை மெய்ப்பிக்கும் குஞ்சுமூசுப் புலவர் பரம்பரைப் புலவர் அல்லர். அவருடைய தந்தையார் தேங்காய்ப் பட்டினம் கல்லறக்கல்வீட்டுசையிது முகம்மது முதலாளி என்பவராவார். குஞ்சுமூசுப் புலவரின் தாதாவின் தாதையின் பெயர் மூசா என்பதனுல் அவரின் பெயரை ஒட்டி இவருக்கு மூசாவின் மகன் அல்லது சின்ன மூஸா என்னும் பொருள்படும் குஞ்சுமூசு என்னும் பெயரிடப்பட்டது. சையிது அபூபக்கர் புலவர் பாடிய சீறு கீர்த்தனம் என்னும் நூலுக்குக் கொடைநாயகமாக விளங்கிய பூவாறுபட்டணத்துப் பெரும் வணிகர் போக்கு மூஸா மரக்காயரின் மகன் சையிது முகம்மது என்பவரின் அருமை மகளை அவர் மணம் முடித்துப் பூவாறு வந்து இல்லறத்தை நல்லறமாகச் செய்துகொண்டிருந்தார். அக்காலை திருவாங்கூர் மன்னரின் தாயாதிகளுக்குள் பட்டமேறுவது பற்றிப் பெரும் பகை ஏற்பட்டபொழுது திருவாங்கூர் மன்னருக்குத் தம் இல்லத்தில் அடைக்கலம் நல்கிக் காத்தார். அந் நன்றிக்குப் பிரதியாகத் தாம் அவருக்கு என்ன செய்யவேண்டுமென்று மன்னர் வினவியபொழுது 'எங்கள் இல்லத்தில் நிகழும் திருமணங்களுக்குத் தங்களின் அரண்மனையிலுள்ள குதிரைகளும் அலங்கார ஜோடிப்புகளும் வரவேண்டும் என்று குஞ்சுமூசுப் புலவர் கூறினார். அவர் கேட்டுக்கொண்டபடியே இதுகாறும் நடந்துவருகிறது. அவருக்கு இரு குழந்தைகள் பிறந்து இளமையிலேயே இறந்துவிட்டன. ஆதலின்

அவரின் உடன்பிறந்தாரின் வழித்தோன்றல்கள்தாம் இப்பொழுது உள்ளனர்.

அவர்தம் மனையாளுடன் இல்லறத்தை நடத்திவருங்கால் ஒருநாள் அவருடைய மனையாள் அவரை அணுகி சிறு குழந்தைகள் எருக்கம் பூவைப் பறித்து மாலை தொடுத்து அணிந்து விளையாடியதைக் கண்ட தம் தமக்கையர் இருவர் தங்கள் தங்கள் கணவரிடம் கூறி அதே போன்று பொன்னால் எருக்கம்பூ மாலை செய்து அணிந்திருப்பதாகவும் தமக்கும் அவ்வித மாலை ஒன்று செய்து தரவேண்டும் என்றும் அதனை அவர்களை போன்று அணிந்துகொள்ளத் தமக்கும் பேராவலாய் இருக்கிறது என்றும் கூறினர். அதற்குப் புலவர் 'நல்லது' என முகமலர்ச்சியுடன கூறினர். சின்னாட் கழித்து அம் மங்கையார் தம் கணவரை அணுகி 'மாலை செய்தாகி விட்டதா' என வினவினர். 'ஆம், செய்தாகிவிட்டதே' என்று கூறி உள்ளே நுழைந்து தம் பெட்டியைத் திறந்து ஒரு காகிதக் கட்டை எடுத்துவந்து அவரிடம் கொடுத்து 'இதோ இதனை வைத்துக்கொண்டு இதன்படிச்செயலாற்று. இது அழியாப் பெருமாலையாகும். விலை மதிக்கவொண்ணு நன்மாலையாகும். இதனை நீ அணிந்துகொள்ளுவாயாயின் இவ்வுலகிலும் சரி, அவ்வுலகிலும் சரி எழிலுடன் காட்சி வழங்குவாய். இதன் பெயர் 'ஸலாத்து மாலை' என்பதாகும்' என்று கூறினர். அம் மங்கைநல்லார் மறுவார்த்தை பேசவில்லை. அதனை மகிழ்வுடன் பெற்று அதில் கூறியுள்ள படி தொழுது ஒழுகிவந்தனர்.

குஞ்சுமூசுப் புலவர் சையிதத்துப் படைப்போர், ஸலாத்துமாலை ஆகிய மாலைகள் மட்டுமின்றி அஜபுமாலை, தூதுரையின்மாலை, இறவுசுல்கூல் படைப்போர், மணம்புரி மஸ்அலா என்னும் நூல்களையும் இயற்றியுள்ளனர். இதில் இறவுசுல்கூல்படைப்போர் 2481 திருவிருத்தங்களைக் கொண்ட பெருநூலாக விளங்குகிறது.

மலையாளம் வாலகவிப்புலவரின் அன்பான அழைப்பை ஏற்று காசிம்புலவரும், அவரின் மைந்தர் அப்துல்காதிர் புலவரும் ஒருதடவை பூவாறு வந்திருந்த காலை அவர்களை குஞ்சுமூசுப்பிள்ளை இளமையில் அணுகித்தமக்குத் தமிழ் இலக்கண இலக்கியங்களைப் பாடம் சொல்லித்தர வேண்டுமென்று

வேண்ட, காசிம்புலவர் அவ்விதமே அவருக்குப் பாடம் தொடங்கிக் கொடுத்து அதன் பின் அவரைத் தம்மகன் அப்துல் காதிறிடம் ஒப்படைத்து அவரை ஒரு சிறந்த புலவராக ஆக்கிவிடுமாறு கூறிவிட்டுக் காயல்பட்டினம் திரும்பினர். அவ்வாறே அப்துல்காதிறுப் புலவரும் சிலகால் பூவாற்றில் தங்கி குஞ்சுமூசுப்பிள்ளையைக் குஞ்சுமூசுப் புலவராக ஆக்கினர். இதனையே குஞ்சுமூசுப் புலவர் தாம் இயற்றிய சைபுத்தத்துப் படைப்போரில் 'துலக்கிய புலமை காசிம் சுதன் அப்துல்காதிறு என்போர்' என்றும், 'அன்னவர் அப்துல்காதிறு அருந்தமிழ்ப் புலவர் சீடன்' என்றும் குறிப்பிடுகின்றார்.

அவர் அரபிக்கல்வி பயின்றது காலி அப்துல்காதிறு ஆலிம் அவர்களிடமாகும். அன்னாரே அவருக்குப் பலநூல்களை இயற்றவும் உரைநல்கினர். இதனைக் குஞ்சுமூசுப் புலவரே தாம் பாடிய நூல்களில் குறிப்பிடுகின்றார்.

அவர்கள் இருவரும் ஹஜ்ஜுச் செய்ய வேண்டும் என்றும், புண்ணியப்பதிகளான மக்காவிலோ, மதீனாவிலோ மரணமெய்தி அடங்கப்பெற வேண்டும் என்னும் வேணவா மிகைத்தவர்களாகவும் இருந்தனர். தங்களின் இந்த இறுதி விருப்பத்தை நிறைவேற்றித் தருமாறு அவர்கள் இறைவனிடமே இறைஞ்சுபவர்களாகவும் இருந்தனர். அதன்படி அவர்கள் இருவரும் ஹஜ்ஜுச் செய்யப் பிரயாணமாயினர். பிரயாணமாவதற்குமுன் அப்துல்காதிறு ஆலிம் தம் உறவினர்களை எல்லாம் அழைத்து ஒருங்கிருத்தித் தம் நெடுநாளைய உளக்கருத்தை அவர்களிடம் எடுத்துரைத்து இனிமேல் தாம் ஊர் மீளப்போவதில்லை என்று கூறினர். இதைக் கேட்டதும் அவர்கள் எல்லோரும் 'கோ'வென்றுக் கதறி அழுதனர். அவர்களுக்கு ஆறுதல் மொழி கூறித் தம் வீட்டு முற்றத்தில் நின்றுகொண்டிருந்த முல்லைச் செடியில் ஒரு மலரைப் பறித்து, 'இதனை ஒரு சிறு பெட்டியில் வைத்துக்கொள்ளுங்கள். இது வாடாதிருக்கும் வரை நான் உயிரோடிருக்கிறேன் என்று பொருள் செய்து கொள்ளுங்கள். வாடிவிட்டதேயாயின் நான் இறந்துவிட்டதாகக் கருதிக்கொள்ளுங்கள்' என்று கூறிச் சென்றனர். இதேபோன்றே குஞ்சுமூசுப் புலவரும் தம் உறவினர்களி

டம் தம் உளக்கருத்தை எடுத்துரைத்துத் தாம் இனி மீண்டும் திரும்பி பூவாறு அடையப் போவதில்லை என்றும், தாம் புண்ணியப்பதியிலேயே இறந்துவிட இறைவனிடம் அருள்பாலிக்குமாறு இறைஞ்சிச் செல்வதாகவும், தாம் இறந்துவிடின் தம் மனைவியின் கழுத்தில் இருக்கும் கரியமணி தானுகவே அறுந்து கீழே விழ்ந்து விடும் என்றும் கூறிச்சென்றனர். அவ்வாறே அவர்கள் இருவரும் ஹஜ்ஜுச் செய்து ஹிஜாஸிலேயே இறந்தார்கள் என்றும், அவர்கள் கூறிச்சென்ற வண்ணமே அறிகுறிகள் நிகழ்வுற்றன வென்றும் கூறுவர்.

இவ்வாறு குஞ்சுமூசுப் புலவர் புலவர்கள் போற்றும் பெரும் புலவராக இருந்ததோடல்லாமல் இறைவனை நெருங்கிய அவனின் நல்லடியாராகவும் விளங்கினர். அவர் இயற்றிய நூல்கள் தமிழ் இலக்கியத்தின் மணிமுடியிலுள்ள பெருமணிகளாக விளங்கி அதனை அணிசெய்து கொண்டிருக்கின்றன. 'சையிதத்துப்படைப்போர்' என்று கூறும்பொழுது, செந்தமிழ்த் தேன்கட்டி என்று நம்செவிகளில் ஒலிசெய்வது போன்றுள்ளது! வாழ்க அவர் தம் காவியங்கள்! அக்காவியங்களின் மூலம் அவரின் பெயரும் வாழ்க!!

# ஐதுறூசு நயினார்ப் புலவர்

நவமணிமாலை—நவமணிமாலை என்றபெயருடன் முகிய்யித்தீன் ஆண்டகையின் மேதகு வரலாற்றை நவரத்ன மணிகளாலான மாலை போன்று யாத்துத் தமிழ்மொழியை வளப்படுத்தினார் காலங்குடியிருப்பு தந்த கவிக் குரிசில் ஒருவர். அவரொரு கவிஞர் மட்டுமல்ல; உலகை வெறுத்த ஞானி. அல்லாஹ்வின் பாதையில் தம்முடைய மூச்சை அல்லும் பகலும் செலவழித்த அறிஞர். புலவர் குலத் தோன்றல். அவர் யாரென வினவுகின்றீர்களா? அவர்தாம் சேராமுதலியார்ப் புலவர் மகன் சிறுஜூத்தீன் புலவர் மகன், பாபா நயினார்ப் புலவர் மகன், மீராநயினா மரக்காயர் புலவர் மகன் பாவகை வல்ல நாவல்லராம் ஐதுறூசு நயினார்ப் புலவர் ஆவார். அவர்மீது காயல்பட்டினம் இஸ்மாயீல் ஆலிம் என்பார் அரபியில் ஒரு புகழ்மாலை தொடுத்துள்ளார். அதிலே அவர் ஐதுறூசு நயினார்ப் புலவரை வசனகர்த்தாக்கள், கவிஞர்கள் ஆகியவர்களின் தலைவரென்றும் அரபு நாட்டில் பேரும் புகழும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்துவந்த கஃபுப் புலவருக்கு நிகரானவரென்றும் அவர் பாடிய பாடல்கள் மக்களால் நாடோறும்பயபக்தியுடன் ஓதப்பட்டுவருகின்றனவென்றும் அவர் கவிஞராக மட்டுமல்லாது மஷாயிகு (ஆன்மீகஞானி) ஆகவும் விளங்கினர் என்றும் அலவியா தரீக்காவின் கலீபாவாகவும் திகழ்ந்தனர் என்றும் அவர் பல விந்தைகள் செய்து மேதகையாய் விளங்கினரென்றும் பரமன் குறிச்சி என்னும் சிற்றூரில் பேதி நோய் ஏற்பட்டபொழுது அவர்தம் இருகரமேந்தி இறைவன்பால் இறைஞ்சியக்கால் அந்நோய் நீங்கி

விட்டதென்றும் அவர் சிறுவராக இருக்கும்பொழுது அவரை அடிக்க அவரின் தந்தையார் தம் வலக்கையை உயர்த்தியக் கால் அக் கை அப்படியே நின்றுவிட்டதென்றும் ஒரே நாளில் ஒரே நேரத்தில் அவர் குலசேகரன் பட்டினம், தருவை, காலங்குடியிருப்பு ஆகிய மூன்று ஊர்களிலும் ஜும்ஆ தொழுதனர் என்றும் வியந்து வியந்து பாடுகிறார். அஃது ஒரு சிறு நூலாக வெளிவந்துள்ளது.

ஆம். அவர் இறைவனின் பேரருளைப் பெற்ற நல்லடியார்தாம். ஒருதடவை காயல்பட்டினம் தைக்கா சாகிபு வலியுல்லாஹ்வின் பேரவையில் அண்ணல் நபி மீதுள்ள அழகிய புகழ்ப் பாக்களை (மௌலீது) ஓதி வரும்பொழுது ஒரு பக்கல் பாமரர்களின் கூட்டமும் மற்றொரு பக்கல் புலவர்களின் குழுவும் வேறொரு பக்கல் அருள் அடியார்களின் சேகரமும் அமர்ந்திருந்தன. அப்பொழுது புலவர் குழுவில் ஐதுறூசு நயினார்ப் புலவரைக் கண்ட தைக்கா சாகிபு வலியுல்லா அவர்கள் 'ஐதுறூசு நயினார்ப் புலவர் ஒரு புலவர் மட்டுமல்ல, அல்லாஹ்வை நெருங்கிய அடியார்க்கு நல்லாரும் (வலி) ஆவார்' என்று அவ்வவையிலேயே போற்றிப் புகழ்ந்து அவரை அருளடியார்களின் சேகரத்துடன் வந்து வீற்றிருக்குமாறு வேண்டினர். அவ்விதமே ஐதுறூசு நயினார்ப் புலவரும் செய்ததோடு புகழ்ப் பாக்கள் பாடி முடிவுற்றதும் 'பிஸ்மி' என்ற அரபி மொழியின் உட்பொருளைக் கேட்போர் வியக்கும் வண்ணம் தத்துவார்த்த விளக்கங்களுடன் பல மணி நேரம் எடுத்துரைத்தனர். அதைக்கேட்டு அங்குக்கூடியிருந்த மக்கள் அளவற்ற இறும்பூதெய்தினர்.

இவரது கவிதா மேதையையும் மகாத்மியத்தையும் உணர்ந்த மக்கள் 'புலவர் வரி' என்று ஒரு வரி ஏற்படுத்தி அவருக்கு வழங்கிவந்தனர். இதைக் கொண்டுதான் அவருடைய குடும்ப நிர்வாகம் நடந்துவந்தது. எனினும் அவருடைய வாழ்க்கை வறுமைப்பட்டதாகவே இருந்துவந்ததென்பதும் சோகை முதலிய பிணிகளால் அவர் துன்புற்றுவந்தனர் என்பதும் அவரது கையில் பணமில்லைஎன்பதும் அவர் இறைவன்பால் இறைஞ்சும் வேண்டற் பாக்களால் அறியக் கிடக்கின்றன. அதில் அவர்

என்னிடத்தின் மருந்து முதலிய கொண்டு பிணி
[தீர்க்க ஏதுவாகும்

பொன்னிதிய முதலொன்றுமிலெ எவனும் மெய்
[நிதியாய்ப் பொலிந்த கோவே
உன்னிடத்தில் அடைக்கலம் நான் என்பிழைகள்
[பொறுத்திரங்கி ஒருமையான
தன்னவனே உன்னருள் செய்தாண்டருள்வாய்
[அம்மருந்தால் தழைக்கத்தானே

என்று இறைஞ்சும் கவியானது நம் உள்ளத்தை நெகிழச் செய்கிறது.

புலவர் வரி வசூலிக்கப்படும்பொழுது ஒரு வீட்டுக்காரி வரி கொடுக்க மனமில்லாதவளாய் சிடுமூஞ்சியுடன் 'எந்தப் புழவிறகுக்கு' என்று ஏளனமாகக் கூறினாளாம். இதைக் கேட்ட புலவர் அவளிடம் வரி வசூலிக்க வேண்டாமென்று கூறித் தம் தோழர்களுடன் திரும்பிவிட்டனராம். இதன் பின் சின்னாட்கள்சென்று அப்பெண் பிணிவாய்ப்பட்டு உடல் பொத்து வடிந்து இறந்துவிட்டாளாம்.

இந்தப் புலவர் வரி இன்றும் காலங்குடியிருப்பிலும் அதன் சூழலிலும் வசூலிக்கப்பட்டு அப் புலவர்பெருமானின் பேரப்பிள்ளைக்குக் கொடுக்கப்பட்டுவருகிறது.

மக்கள் அவரின் அருட் தன்மையை உணர்ந்து அவருக்குப் பெரிதும் மதிப்பளித்துக் கௌரவித்தனர். இலங்கையிலிருந்து ஊர்திரும்பும் ஒவ்வொருவரும் இவருக்கு ஐந்து ரூபாய் காணிக்கைப் பணம் நல்கிவந்தனர். காலங்குடியிருப்பில் பிறக்கும்ஒவ்வொருகுழந்தைக்காகவும், குழந்தைபிறந்ததும் அவருக்குப் பரிசில் வழங்கப்பட்டது. காலங்குடியிருப்புக் கூளத்தெருவிலிருக்கும் கீழக்கரையார் வீட்டோடு இவருக்கு நெருங்கிய தொடர்பிருந்துவந்தது. அவ்வீட்டில் நடைபெறும் ஒவ்வொரு நிகழ்ச்சியின்போதும் அவருக்கு அன்பளிப்புகள் செய்யப்பட்டுவந்தன.

ஐதுறூசு நயினார்ப் புலவர் நகைச்சுவைமிகுந்த விகடகவியாகவும் விளங்கினார். இவருடைய புகழ்ப் பெயரைக்

கேட்டு இவரை வாதில் வெல்லவேண்டுமென்ற நோக்கத்துடன் வேற்றூர்ப் புலவர் இவரில்லம் வந்தார். அப்பொழுது புலவர் இல்லினுள் அமர்ந்து வறுக்கப்பட்ட சிறு பயறை வாயில் போட்டு அறைத்துச் சாப்பிட்டுக்கொண்டிருந்தார். வெளியில் ஒரு புலவர் வந்து தமக்காகக் காத்துக் கொண்டிருப்பதை ஐதுறூசு நயினுர்ப் புலவர் அறிந்ததும் தாம்கடுகிடு கந்தபுராணம் படித்துக் கொண்டிருப்பதாகவும் படித்து முடிக்கும்வரை சிறிது காத்திருக்குமாறும் சொல்லியனுப்பினுர். இதைக் கேட்டதும் வந்த புலவருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லே. 'இஃதென்ன பெரும் புதுமையாக உள்ளது. நாமும் எத்தனேயோ புராணங்களேப் படித்துள்ளோம். இதுவரை இம்மாதிரியான புராணத்தைப் பற்றிக் கேள்விப்படவே இல்லேயே. இவர் பெரும் புலவராயிருக்கும்போல் தோன்றுகிறதே' என மருண்டு யாரிடமும் சொல்லிக்கொள்ளாமல் வந்த வழியே திரும்பிவிட்டார்.

இளமையில் புலவர் இலங்கை சென்று மட்டக்களப்பில் ஒரு கடையில் அமர்ந்து பணியாற்றி வருங்கால், அவருக்கு மூக்குப் பொடி தேவைப்படவே, அருகிலிருந்த ஒருவரிடம் பொடி கேட்டனராம். அதற்கு அவர் இல்லே என்று கூறவே,

"மடிதனில் பொடியை வைத்துக் கேட்பவர்க்கில்லே
[என்றல்
அடி தனில் மூலம்தள்ளி அநியாயமாய்ச் சாகுவாரே"

என்று வேடிக்கையாகப் பாடினுர். இதைக்கேட்டதும் பணியாளர்கள் அனேவரும் 'கொல்'லென்று சிரித்து விட்டனர்.

ஐதுறூசு நயினுர்ப்புலவரின் ஆசிரியராக விளங்கியவர், புலவர் நாயகம் செய்கப்துல் காதிர் நெய்னுர் லெப்பை ஆலிம்புலவர் அவர்களாவர். அவரை ஐதுறூசு நயினுர்ப் புலவர் தாம்பாடிய நவமணி மாலேயில்,

உய்குநெறி அருள்சாகிப் உயர்காஜி புலவர்
[சென்னே உறைபீர் என்பீர்
செய்கு அப்துல்காதிர் நயினுர் ஆலிம் உபயபதம்
[சிந்தை வைப்பாம்

என்று அவர் பதக்காவல் தேடிப் பாடுகின்ருர். மற் ருேரிடத்தில் 'செய்கப்துல் காதிரும் என்னும் எமதையர்' என்றும் அவரைக் குறிப்பிடுகின்ருர்.

அவர் பாடிய நவமணிமாலை என்னும் பெருநூலானது 35 படலங்களும், 2335 திருவிருத்தங்களும் அடங்கியதாக உள்ளது. அது ஹிஜ்ரி 1271 ல் பாடப்பட்டது. அதற்கு உரைதந்தவர் காயல்பட்டினம் முகம்மதப்துல் காதிறு லெப்பை ஆலிம் என்பவராவார். அதற்குக் கொடை நாய கமாக விளங்கியவர் இசுலாம் புரம் ஈன்ற வள்ளல் செய்கு முகம்மது என்பவராவார். ஏட்டளவிலே இருந்த அதனை ஐதுறூசு நயினர்ப்புலவரின் இறப்பிற்குப்பின் அவருடைய ஒரே மகன் அப்துல்லா ஐதுறூசுப்புலவர் அச்சேற்றினர். அது ஹிஜ்ரி 1297 ல் வெளிவந்தது.

அதில் புலவர், முகிய்யித்தீன் ஆண்டகையின் பிறப் பைப் பற்றிக் கூறுங்கால், அவ்வாண்டகை பிறந்த அன்று ஜைலானி நகரில் பிறந்த 1100 குழந்தைகளும் ஆண் குழந்தைகளாகவே பிறந்தனரென்றும், பெண்குழந்தைக ளாக ஒருவரேனும் பிறக்கவில்லை என்றும் உள்ள உண்மை யைப் பின்வரும் அழகுக் கவியில் எழில் சொட்டச் சொட் டக் கூறுகின்ருர். படித்து ரசிப்பீர்களாக.

பெண்களெனும் பிள்ளைகளைப் பிள்ளைபெறு கின்ற
பெண்களெவ ராயினுமே பெற்றதிலை பெற்ற
பெண்களும் எலாம் அதிகப் பேறுடைய விண்
[ணூர்ப்
பெண்கள் மகிழ் நற்புருடப் பிள்ளைகளைப் பெற்ருர்.

அதன்பின் முகிய்யித்தீன் ஆண்டகையின் பிறப்பைப் பற்றிக் கூறப்புகுந்த புலவர் சீருவில் நபி அவதாரப் பட லத்தில் உமறுப்புலவர் கையாண்ட பாணியையே இவரும் பின்பற்றி,

ஆனதின் உயிரோர் எழுவகைத் தோற்றம்
அனைத்தொடும் பொருள்வதி பரந்த

தானமும் சிறப்ப இனிதொடுஞ் செழிப்பச்
சலதரம் தருபலன் சிறப்பத்
தீனெறி முறையோ துதலொடு நினைவும்
செய்கையும் பதவியும் சிறப்ப
மோனமா நிலைமா தவமொடும் சிறப்ப
முகிய்யித்தீ னுண்டவர் பிறந்தார்

என்று பண் இசைக்கின்றார். அவ்விதம் முகிய்யித்தீன் ஆண்டகை பிறந்த சிறப்பைப் பற்றி இசைபாடிய புலவர், அன்னார் பிறந்ததனால் உலகில் மறம் மடிந்து, அறம் தளிர்த்ததை மற்றொரு பாவில் பின்வருமாறு இசைக்கின்றார்.

மறத்தொடு படிறு வஞ்சகம் அகந்தை
மற்றுள பவங்களும் தொலைய
அறத்தொடு புகழும் அறிவொழுக்கமும் சீர்
அன்புமா தரவுநற் பதவி
பெறத்தகும் வணக்கம் முதல்நலன் எவையும்
பெருகுறத் தருணநல் லுதவி
திறத்தொடு நமக்கெ லாம்புரி முகிய்யித்
தீனொலி நாயகர் பிறந்தார்.

இந்நவமணி மாலையேயன்றி அவர் பற்பல மகான்கள் மீதும் பற்பல பண்கள் இசைத்துள்ளார். அவை எல்லாம் 'ஐதுறூசு நயினார்ப் புலவரவர்கள் பாடற்றிரட்டு' என்ற பெயருடன் ஒரு நூலாக வெளிவந்துள்ளது. அதில் அவர் இறைவன் பால் இறைஞ்சும் இனிமை மிகுந்த செய்யுள் ஒன்றை இவண் தருதும். படிப்பீர்களாக.

பூவா னறுசு முடையவனீ பூவாய் நிலைத்த மெய்ப்
[பொருணீ
பூவா னமைத்த நாயகனீ பூவா யமைந்த பூரணனீ

பூவா னுதியாப் புகழிறைநீ பூவாய் விளங்கும்
[பேரொளிநீ

பூவா னீயெற் குன்கிருபை புரிகண் மணியே
[றகுமானே.

இவ்வாறு அறைதற்கரிய அற்புதக் கவிகளை இயற்றிய அப்புலவர் பெருமான் ஹிஜ்ரி 1295 ரஜபுத்திங்கள் பிறை 5 சனிக்கிழமையன்று இம்மண்ணுலகை நீத்துப் பொன்னுலகை எய்தினர். அவர் தம் பூத உடல் மறையினும் அவருடைய புகழுடல் 'நவமணி' மாலை என்ற பெயருடன் உலகில் பொலிவுற்று வாழ்ந்து ஐதுறூசு நயினார்ப் புலவர் என்னும் போது நம் செவியில் அமுத ஆறு கரைபுரண்டோடுவது போன்று இனிக்கச் செய்கிறது.

# குலாம்காதிறு நாவலர்

1896-ஆம் ஆண்டில் யாழ்ப்பாணம் வண்ணைமா நகரில் ஆறுமுக நாவலர்தம் மருகர் பொன்னம் பலம் பிள்ளையின் கலைவலக் குழுவிடை ஒரு முஸ்லிம் புலவர் தாம் இயற்றிய புராணத்தை அரங்கேற்றம் நிகழ்த்திக் கொண்டுள்ளார். அவரைச்சூழ புலவர் பெரு மக்கள் வீற்றிருந்து அவருடைய புராணச் சொற்பொ ழிவைச் செவிசாய்த்துக் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். அப்பொழுது அக்குழுவின் ஒரு மூலையிலிருந்து அப்புல வரைத் தோற்கடிக்க வேண்டுமென்ற கெடுமதிகொண்ட பண்டிதக்குறும்பர் ஒருவரின் வாயிலிருந்தும் 'நிறுத்து மையா' என்ற மொழி முழங்குகிறது. அதைக்கேட்டு அப்புலவர் திடுக்குறவோ, அல்லது துணுக்குறவோ இல்லை. 'நாவல நாட்டீர்! செய்யுள் வழக்கிலே நிறுத் தப் புள்ளியும் உண்டென்பது உமது சொந்த இலக் கணமாமோ? பொத்துமையா வாயினை!' என்று வாயாப்பு அறைந்தார். அப்பண்டிதக் குறும்பரின் வாய் அத்து டன் தானாகவே இறுகப் பொத்திக்கொண்டது.

அதன்பின் தம் புராணத்தைத் தங்குதடையின்றி விரிவுரை நிகழ்த்தி வரும்பொழுது,

'மாதுவளை வனங்கள் சூழ்ந்த மதினாவின் றௌலா
[வந்தார்'

என்று புலவர் பாடியதும், ஒருவர் எழுந்திருந்து, 'நாகூர்ப் புலவரே! மன்னிக்க வேண்டும். மாதுவளை என்றால் மாதர்களின் யோனித்துளையோ' என்று கடாவினார். மாதளை என்பதனை மாதுவளை என்று தாம் பயன் படுத்தி இருப்பதை அல்லவோ அப்புலவர் இடித்து ரைக்கின்றார் என்பதை நன்கு விளங்கிக்கொண்ட புரா ணப்புலவர், அவரை நோக்கி, புன்முறுவல் பூத்தவண் ணம், 'புலவீர்! அமரும். கற்றது கைமண் அளவு, கல்லாதது உலகளவு என்ற உற்றகலை மடந்தை உரை

யினும் பெரியீரோ நீர்! உமது இலக்கணம் இதற்கு விளக்கம் சொல்லவில்லையோ. என்ன? கேளுமையா நாவலநாட்டுப் புலவீரே! மாதுளங்கம் என்ற சொல் வடமொழிச் சொல்லாகும். இது தமிழில் வரும்பொழுது திரிந்து மாதுவளை ஆயிற்று. செய்யுள் இடம் நோக்கி மாதுளங்கம், மாதுவளை, மாதளை என நிற்கும். மாதுவளை என்றால் நீர் கூறுவதுபோன்று ஆபாசப் பொருளல்ல. அவ்விதம் நான் என் வாயெடுத்தும் கூறமாட்டேன். அப்படியெனில் அதன் பொருள்தான் என்னவென்று வினவுகின்றீரா? கூறுகின்றேன், கேளும். மா—பெருமை தங்கிய; துவளும்-நாவோடு துவண்டு ரசனை தரும்; அங்கம்—உள் அமைப்பை உடையது. இது பூ, பிஞ்சு, காய், பழம், சுளை ஆகியவற்றோடு சேரும்பொழுது மா, துவள், அம், பூ என்பது மாதுவளம்பூ என்றும் மா, துவள், அம், பிஞ்சு என்பது மாதுவளம் பிஞ்சு என்றும், மா, துவள், அம், காய் என்பது மாதுவளம் காய் என்றும் மா, துவள், அம், சுளை என்பது மாதுவளஞ்சுளை என்றும் புணர்ந்து நிற்கும். இத்துணைச் சிறு புணர்தல் இலக்கணமேனும் நீர் அறியீரோ? என்று விளக்கம் பகர்ந்து இடித்துரைத்தார். வினவிய புலவர் மீண்டும் வாயைத் திறக்கவில்லை.

அதன்பின் புலவர்,

'விடிவெள்ளி மதிளுபுக்கார் வியன்குயில் கூவிற்
[றன்றே'

என்று ஈற்றடியாக உள்ள செய்யுளைப்பாடி விரிவுரை நிகழ்த்தியதும் ஒரு பெண் எழுந்திருந்து, 'நாகூர்ப் புலவீர்! சற்று நிற்க! என்றாள். 'என்னை அம்மணீ!' என்று வினவினார் புலவர். 'புலவீர்! நீர் வியன்குயில் என்று கூறி இருப்பதன் காரணம்தான் என்ன? குயில் என்பது மெல்லிய பறவை ஆயிற்றே. அதனை வீறுள்ள பறவையென்றோ, வியப்பிற்குரிய பறவையென்றோ நீர் கூறக் காரணம்தான் என்ன?' என்று அடுக்கடுக்காகப் பல கேள்விகளை விடுத்தாள். உடனே புலவர் 'அம்மணீ! சற்றுப் பொறும், கூறுகின்றேன். குயிலுக்கு முட்டையிடத் தெரியுமேயன்றி குஞ்சு பொரிக்கும் வழி தெரியாது. என

வேதான் அதனை வியப்பிற்குரிய விநோதப் பறவை என்று பொருள்படும் வியன்குயில் என்று கூறினேன். அப்படியானால் அது எவ்வாறு குஞ்சு பொரிக்கும் என்று நீர் வினவலாம். அது காக்கையின் கூட்டிற்குச் சென்று முட்டையீட்டுவிட்டுப் பறந்து விடும். காக்கை தன் குஞ்சுகளுக்குத் தீனி தீற்றும்பொழுது குயில் குஞ்சையும் தன் குஞ்செனநினைத்துக்கொண்டு தீனிதீற்றும். அப்பொழுது காக்கைக் குஞ்சுகள் கா, கா என்று கத்தும்பொழுது, குயில் குஞ்சு கீ, கீ என்று கத்துவதைக் கேட்டதும், தான் ஏமாந்துவிட்டதை உணர்ந்து, காக்கை அக்குயில் குஞ்சுகளுக்குத் தீனி தீற்றாது அதனைத் தன் சொண்டால் கொத்தும். எனினும் அக்குயில்குஞ்சு சற்றேனும் அஞ்சாது கீ, கீ என்று கத்திக்கொண்டு அக்காக்கையை வீறுடன் எதிர்த்துச் சண்டையிடும். எனவேதான் அதனை வீறுள்ள பறவை எனக் பொருள்படும் வியன்குயில் என்று அழைத்தேன்' என்றார். அவருடைய இவ்விளக்கத்தைக் கேட்டதும், அப்பெண்மணிக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. 'துலுக்கச்சி வயிற்றில் மகாவிஷ்ணுவின் அவதாரமாகப் பிறந்து யாழ்ப்பாணக்கரை வந்தீர்' என்று கூறி அவரை வாயாரப் பாராட்டினாள்.

இறுதியாக புராண அரங்கேற்றமும் முடிவுற்றது. புலவர், கேட்ட கேள்விகளுக்கெல்லாம் தகுந்த வாயாப்புக்கொடுத்துப் புராணவிரிவுரையை முடித்து வாகை சூடினார். ஆறுமுகநாவலரைத் தவிர்த்து வேறெவரையும் 'நாவலர்' என்று அழைக்க விரும்பாத யாழ்ப்பாணர்கள், அப்புலவருக்கு, 'நாவலர்' என்று சூட்டப்பெற்ற சிறப்புப்பெயரை எடுத்தெறிய வேண்டுமென்று கங்கணம் கட்டிப் பற்பல இடக்குகளும், இடையூறுகளும் விளைத்த யாழ்ப்பாணர்கள், இறுதியில் அவருடைய கல்விமேதையின் முன் தலைசாய்த்தனர். மாதுவளஞ் சுளைகளால் மாலைகோத்து அவருக்கு அணிவித்து, பரிசில்பல நல்கி இரண்டாயிரம் ரூபாயுள்ள பொன்முடிப்பும் அருளி, நாவலர் என்றால் நீர்தான்காண் நாவலர், நாவலர் என்றால் நீர்தான்காண் நாவலர், நாவலர் என்றால் நீர்தான்காண் நாவலர் என்று மும்முறைகூறி அவரின் 'நாவலர்' பட்டத்தை உறுதிப்படுத்தி, உலகிற்குப் பறை முழக்கினர்.

அவர் பாடிய ஆரிபுநாயகம் என்னும் சீரியநூலுக்கும் பின்வருமாறு பாயிரம் நல்கி, அவரைப் பொன்னம்பலம் பிள்ளை கௌரவித்தார்.

நாகூ ரென்னும் நகர வாசன்
பாகூ ருஞ்சொல் பயின்றிடு நேசன்
பற்பல விதமாப் பகர்பிர பந்தம்
பற்பல புராணம் பழுதறச் செய்தோன்
ஆசு மதுரமும் அருஞ்சித் திரமும்
மாசு மதுரமாய் அமைத்திட வல்லோன்
தொல்காப் பியமுதல் சூழிலக் கணமும்
தொல்காப் பியமும் சூழ்ந்தினி தாய்ந்தோன்
பாவலர்க் கினிய பகர்குலாம் காதிறு
நாவல னென்னு நற்பெயர் கொண்டோன்

இதைக் கண்டு பெருமிதமுற்ற யாழ்ப்பாணம் வாழ் முஸ்லிம்களும், முஸ்லிம் நேசன் ஆசிரியர் சுலைமான் லெப்பையின் தலைமையில் பாராட்டுவிழா நடத்தி அவருக்குப் பரிசில் பல நல்கி, அவரைப் பெருமைப்படுத்தினர். அவ்விதப் பெருமை வாய்ந்த பெரும் புலவர் யார்? அவர்தாம் நாகூர் தந்த மேதகு புலவர் குலாம்காதிறு நாவலராவார்.

குலாம் காதிறு நாவலர் புலவர் கோட்டை என்று புகழ்ப் பெயர் பெற்றிருந்த நாகூரில் கி. பி. 1833—ஆம் ஆண்டு பிறந்தார். அவரது தந்தையார் ஆயுர்வேத பாஸ்கர பண்டித வாப்புராவுத்தர். அவரின் குடும்ப பரம்பரை சேது மண்டலத்திலிருந்து அங்கு வந்துற்றது என்று கூறுவர். ஆனால் அம்மண்டலத்தில் எவ்வூரில் அவர்தம் மூதாதையர் வாழ்ந்து வந்தனர் என்பதற்கு எவ்வித ஆதாரமும் கிடைத்தில. ஏறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் அவரின் மூதாதையர் நாகூரில் குடியேறி இருக்கலாமென்று உய்த்துணர இடமுள்ளது.

அவரின் தந்தையார் மருத்துவத்தில் மட்டும் பாண்டித்யம் பெற்றில்லை; தமிழிலும் பெரும் பாண்டித்தியம் பெற்றே விளங்கினர். அவருக்கு நாகூரில் காசுக்கடை ஒன்றும் இருந்தது. நாவலரின் பெரிய தந்தையார் பக்கீர்தம்பி சாகிபுக்கு இரங்கூன் சோலியா தெருவில் பெரும் மளிகை வாணிபம் நடந்து வந்தது. எனவே அவரின் குடும்பம் வளவாழ்வு பெற்றே வாழ்ந்து வந்தது.

பாஸ்கர பண்டித வாப்பு ராவுத்தருக்கு இரண்டு ஆண் மக்களும், இரண்டு பெண் மக்களும் பிறந்தனர். அவர்களில் ஒருவருக்கு குலாம் காதிறு என்னும் அழகுசால் திருப்பெயரிட்டு அருமை பெருமையுடன் வளர்த்து வந்தனர் தாய்தந்தையர். அவருக்கு ஏழுவயது நிறைவுற்றதும் 'கலை பயிற்ருது காதலர்க்கு மாநிதி..................கொலை செய் வாளீவதும்....................மலையினேரத்தில் வைப்பதும் மானுமே' என்ற நெறிமுறைக் குற்றம் வராது காக்க வேண்டி அவரைப் பள்ளிக்கு அனுப்பி திருக்குர்ஆனை ஓத வைத்தனர். ஈராண்டுகளில் திருக்குர்ஆனையும் மற்றும் அரபுத் தமிழ் நூல்களையும் ஓதி முடித்ததும் 'ஆலவிருக்ஷ அடி பாரமும்' 'மனைத்திண்ணை உறைவிட'முமே கல்வி பயிற்றும் பள்ளிகளாக விளங்கிய தமிழ்ப் பள்ளிக்கூடம் ஒன்றிற்கு அனுப்பி அவருக்குத் தமிழ்க் கல்வி பயிற்றினர். அங்கேகுலாம் காதிறு எழுத்துச் சுவடி, எண் சுவடி, திவாகரம், பிங்கலம், நிகண்டு முதலான நூல்களைக் கற்றுத் தேர்ந்தார். அப்பொழுது அவருக்கு வயது பன்னிரண்டு.

அவரது தந்தையார் தம்முடைய தொண்ணூருவது வயதில் இறந்ததும் குலாம்காதிறைக் கவனிப்பார் யாருமில்லாது போய்விட்டது. கலை பயிலாது வீணே அலையலுற்ருர். காசுக்கடை நிலையும் குலையலாயிற்று. இதைக்கண்டு பெரிதும் வருந்திய அவருடைய பெரிய தந்தையார் பக்கீர் தம்பி சாகிபு 'கைம்பெண்சாதி பிள்ளை கழிசடை' என்ற பழமொழிக்கேற்ப குலாம்காதிறின் வாழ்க்கை ஆகிவிடாமல் காத்தார். அவரைத் தம் கைப்பிடியில் கொண்டு அவரை அங்கிங்கலையவிடாமல் தொழிலொன்று நியமித்திருத்தி அங்குக் காலை மாலை சென்று குலாம்காதிறுக்குக் கல்வி பயிற்றினர். நன்னூல் முதல் மற்ற இலக்கண இலக்கிய நூல்களை

யும் அவருக்குப் போதித்தார். ஆனால் விதி செய்த சதி குலாம்காதிறு இருபதாட்டைப் பருவத்தை எய்தப்பெறுவ தற்கு முன் இறைவன் பக்கீர்த்தம்பி சாகிபைத் தம்பால் அழைத்துக் கொண்டான். தம் பெரிய தந்தையார் தமக் குச் செய்த நன்றியினை குலாம் காதிறு மறக்கவே இல்லை. அவர் பிற்காலத்தில் பெரும் நாவலராகித் தம்முடைய அறுபதாவது வயதில் 'நாகூர்ப் புராணம்' என்னும் ஒரு காவியம் இயற்றி அச்சிட்டகாலை அதில் ஒரு செய்யுளில் தம் பெரிய தந்தையின் அரும் உதவியையும் நினைவுபடுத்தி அவரின் பதத்துணையையும் நினைவு கூர்கின்றார். அச்செய்யுள் வருமாறு :—

> முந்தை வழியின் முறைசேர்வழி என்னை காட்டிச்
> சிந்தை பொலிய அருந்தெண்டமிழ் தேக்கியிட்டார்
> தந்தை முன் தோன்றல் தகைசால் பக்கீர்த் தம்பி
> யென்பார்
> எந்தையவர்தம் பதமிணை யீர்ங்கழல் ஏத்துவாமால்

பின்னர் குலாம் காதிறுக்குக் கலையார்வம் அதிகரித் தது. பன்னூல்களை விலைகொடுத்து வாங்கியும் தம் தந்தை மார் இருவரும் சேமித்து வைத்தனவாய பெருநூல்கள் பலவற்றையும் முறையே கூர்ந்து கற்று வந்தார். அப்பொ ழுது நாகூரில் பெரும் புகழ்பெற்ற தமிழ்வல்ல பண்டிதரா யிருந்த ''நாராயண சுவாமி'' என்பார் ஒரு புத்தகத் தொழில் நிலையம் வைத்திருந்தார். அந்நிலையத்திற்கு குலாம் காதிறும் அடிக்கடி சென்று வருவார். குலாம் காதிறின் தந்தையாருக்கு நாராயண சுவாமி என்பார் பழந்தோழரா கையால் அவர் குலாம் காதிறைத் தம் மகனேபோற் கருதி கல்வி பயிற்றினார். அன்னாரிடம் பலர் பாடம் கேட்டு வந்தனர். எனினும் அவர்களிலெல்லாம் குலாம் காதிறே சிறந்து விளங்கினர். எனவே ''குலாம் காதிறு பிற்காலத் தில் தமிழுக்கோர் சரஸ்வதியாம்'' என்று தம் மாணவர் களிடம் அடிக்கடி வியந்து கூறுவர் நாராயண சுவாமி பண்டிதர்.

நாராயண சுவாமி பண்டிதர் இறந்தபொழுது குலாம் காதிறுக்கு வயது இருபத்தெட்டு இருக்கும். தம் ஆசானின் இறப்பு அவருக்கு அளவற்ற மனவேதனையை நல்கியது.

ஆராய்ந்த சகலகலை அகத்திருத்தி யார் மாட்டும்
போராமற் பொருள் கொடுக்கும் சிலைபோன்ற கலை நாவாய்!
நாராயணப் பெரியோய்! நற்றமிழ் வாழ் நாவுடையோய்!
ஆராயின் உன்போன்ற, அருந்தமிழோன் யாண்டுளனே.

என்பதுபோன்ற பல சரமகவிகள் பாடிப் புலம்பினர்.

அக்காலத்தில் மகாவித்வான் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளையின் பேரும் புகழும் எட்டுத்திக்கிலும் எதிரொலித்துக் கொண்டிருந்தன. அவரை அணுகி அவரிடம் சைவசித்தாந்தம், இதிகாசங்கள் இலக்கண இலக்கிய சங்கிரியைகள் ஆகியவற்றை யெல்லாம் பயின்று தேறினர். இதனையே மகாமகோபாத்யாய உ. வெ. சாமிநாதையர் தாம் எழுதிய மீனாக்ஷி சுந்தரம் பிள்ளையின் வரலாற்றில் 'நாகூரில் புகழ் பெற்று விளங்கிய குலாம் காதிறு நாவலர் என்ற முகமதியப் புலவர் ஒருவரும் நமது மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை அவர்களிடம் பாடம் கேட்ட மாணவர்களில் ஒருவரே' என்று குறிப்பிட்டுள்ளார்.

குலாம் காதிறு இவ்வாறு பற்பல பெரும் புலவர்களிடமும் சென்று கல்வி பயின்று வந்தது இலைமறை காய்போல் இருந்ததாலும் அவர்விரைவில் பெரும் புலமை பெற்றுவிட்டதாலும் அவர்மீது அழுக்காறுற்ற பலர் 'மருவில்லா மலரைப் போலும் மதியில்லான் வாழ்க்கைபோலும் திருவில்லா மனையைப் போலும் தெளிவில்லாக் கண்ணைப் போலும் தருவில்லா நிலங்கள் போலும் தனமில்லா மங்கை போலும் குருவில்லான் கற்ற கல்வி குறையன்றி நிறைபாடுண்டோ?' என்ற கருத்தை மனத்திற்கொண்டு அவரைத் தானப் புலவர் என்று எண்ணி இருந்தனர். வேற்றூர்ப் புலவர் ஒருவர் அவரைக்காண வந்தபொழுது அவரை நோக்கித் தங்களைப் பலர் தானப் புலவர் என்று அழைக்கின்றனரே. 'அதன் காரணம் என்ன' என்று வினவியக்கால் 'தமிழ் மொழியில் த என்ற எழுத்து ஆயிரம் என்று

பொருள்படும். எனவே அவர்கள் என்னை ஆயிரம் புலவர்களுக்குத் தலைமைப் புலவன்' என்று அழைக்கின்றனர் என்று பதிலிறுத்தார் குலாம்காதிறு. என்னே அவர்தம் வாக்கு சாதுரியம்!

அவர் துவக்கத்தில் சில்லறையாகப் பல தனிக்கவிதைகள், கீர்த்தனைகள் ஆகியவற்றைப் பாடிவந்தார். அதன்பின் 109 செய்யுட்களடங்கிய பிரபந்தத் திரட்டு என்னும் ஒரு நூலைப்பாடினர். அதனைப் பலர் குறை கூறினர். அவருடைய அப்பிரபந்தத்திரட்டை பிரபந்தத் திருட்டு என்றும், பிரபந்தக் குருட்டு என்றும், பிரபந்த இருட்டு என்றும், பிரபந்த மருட்டு என்றும் இழித்துரைத்தனர். எனினும் குலாம்காதிறு என்னும் அப்புலவர் பெருமான் அவற்றைச் சிறிதேனும் பொருட்படுத்தாது சமூக சேவையையே தம்முடைய தலையாய பணியாகக்கொண்டு செயலாற்றி வந்தார்.

இதன் நடுவே அவர் பினுங்கு சென்று, 'வித்தியா விசாரிணி' என்ற பெயருடன் ஒரு பத்திரிகை நடத்தி வந்தார். அது முழுவதிலும் இலக்கண இலக்கியங்களும், மார்க்க விஞவிடைகளும், உலக நிகழ்ச்சிபற்றிய விவரங்களும் அடங்கி இருந்தன. அங்கும் அவருடைய விரோதிகள் அவரை விட்டார்களில்லை. இலங்கையில் நடந்துவந்த முஸ்லிம் நேசன் என்ற பத்திரிகைக்கும், வித்தியா விசாரிணிச்கும் பலத்த வாக்குவாதங்கள் நிகழ்ந்தன. இறுதியில் குலாம்காதிறே வாகைசூடினர்.

இதன்பின்னர் குலாம்காதிறு முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள்மீது மும்மணிக் கோவையும், நாகூரில் அடங்கப்பெற்றிருக்கும் ஆண்டகையாம் ஷாகுல் ஹமீது நாயகத்தின்மீது நாகூர்க்கலம்பகமும் பாடினர்.

இக்காலை, இரங்கூனில் பெருந்திருவும், பெரும் புகழும் பெற்று வாழ்ந்துவந்த மதுரைப்பிள்ளை என்பாருக்கு அரசாங்கத்தாரால் 'ராய பஹதூர்' பட்டம் நல்கப்பெற்றதும், அவரை வாழ்த்தியும், வழுத்தியும் மதுரைக் கோவை என்ற பெயருடன் ஒரு கோவை இயற்றி

அவருக்கு அன்பளிப்புச் செய்தார். அதைப் பெற்றுப் படித்துப் பெரிதும் பரவசமுற்ற மதுரைப்பிள்ளை, குலாம்காதிறை இரங்கூனுக்கு வரவழைத்து, பெரும் சபைகூட்டி, அவர்பாடிய அக்கோவையினை அவர் வாயாலேயே அரங்கேற்றக் கேட்டுப் பெரிதும் அகமகிழ்ந்தார். அவருக்கு பொற்பதக்கமும், பொற்கடிகாரமும், ரூபாய் ஆயிரம்கொண்ட பணமுடிப்பும், உடைகளும் பரிசில் நல்கினார். அதன்பின் அவரைத் தம்தாயகமான சென்னை வேப்பேரிக்கு அழைத்துவந்து அவருக்கு நாவலர்ப்பட்டமும் பொற்றகட்டில் பொறித்து வழங்கிக் கௌரவித்தார். இதுமுதல் குலாம்காதிறு நாவலர், குலாம் காதிறு நாவலர் என்று அவரது பெயர் குவலயத்தின் எட்டுக் கோணங்களிலும் எதிரொலிக்கத் துவங்கிவிட்டது. வெறும் குலாம்காதிருய் இருந்தவர், குலாம்காதிறு நாவலராய் ஒரு நொடியில் ஆகிவிட்டதைக்கண்டு அவருடைய எதிரிகள் பெரிதும் புழுக்கமுற்றனர். முஸ்லிமாகிய அவர் முஸ்லிமல்லாத ஒருவரைப் புகழ்ந்துபாடி இருப்பது இஸ்லாத்திற்குப் பொருந்துமா என்று கூக்குரலிட்டார்கள். அவர் முன்னர் நபிகள் நாயகத்தின் பேரில் பாடிய மும்மணிக்கோவையில் நபிகள் நாயகத்தைப் பெருமான் (பெருமையிற் சிறந்தோர்) என்றும், நாகூர்க்கலம்பகத்தில் ஷாகுல் ஹமீது ஆண்டகையைப் பெருமான் என்றும், மதுரைக் கோவையில் அப்பாட்டுடைத் தலைவராம் மதுரைப்பிள்ளையைப் பெருமான் என்றும் கூறியுள்ளாரே. இம் முப்பெருமான்களுள் எப்பெருமான் சிறந்தவர் என்று எங்களுக்கு விளங்கவில்லையே என்று எகத்தாளமாய்ப் பேசினர்

நாவலர் இவற்றையெல்லாம் பொருட்படுத்தாது ஆரிபுநாயகம், நாகூர்ப்புராணம் ஆகிய பெரும் புராணங்களை இயற்றினர். ஆரிபுநாயகப் புராணத்தில் அக்காவியத்தலைவராம் சையிது அகுமதுல் கபீர் ரிபாயி ஆண்டகையின் பதத்துணை வேண்டி அவர் இறைஞ்சும் பாவானது, அவரது கவிதா மேதையை நன்கு பரிமளிக்கச் செய்கின்றது. அதனை இதோ கீழே தருகிறேன், படித்துப் பரவசமடைவீர்களாக!

கருமை பயக்கும் ஒருமேக்க்
கவிகை நிழற்கீழ் வரும்இறைவர்

பெருமை பயக்கும் பேரர்ளனப்
பிறங்கும் அவுலி யாமாருள்
அருமை பயக்கும் ஸுல்தானுல்
ஆரிபீன் எம்பெரு மானர்
இருமை பயக்கும் மலர்த்தாட்கள்
இரண்டும் இரண்டு கண்மணியே!

*இதுமட்டுமல்லாது அவ்வாண்டகையின் மீது பதாயிகுக் கலம்பகம் என்னும் ஒரு நூலும் அன்னர் இயற்றி மகிழ்ந்தனர்.*

*நாகூரில் பிரபல மிராசுதாராய் விளங்கிய சிக்கந்தர் ராவுத்தரின் வேண்டுகோளின்படி,*

மாணிக்க நகரமெனும் வடகடலி னுதித்தாங்கு
சேணிக்கை நாகூராம் தென்கடலின் மறைய
[வெழூஉப்
பாணிக்க எவர்அகனும் அற்புதமாம் கதிர்பரப்பி
யாணிக்கை பெறும் ஷாகுல்கமீதென்னும்

*அவர்களின் நிர்யாணத்திற்குப்பின் நிகழ்வுற்ற நிகழ்ச்சிகளை எல்லாம் ஒன்றுதிரட்டி நாகூர்ப்புராணம் என்னும் நூலை 1350 விருத்தப் பாக்களில் இயற்றினர். அதில் மலடுதீர்த்த படலத்தில் பற்பல சித்திரக்கவிகளையும் இயற்றித் தம்முடைய திறமையை வெளிப்படுத்தினர் அன்னர்.*

நாவலனர் செய்ததிரு நாகூர்ப் புராணத்தின்
பாவலனர் சித்திரவிப் பாக்கட்கு —மாவலனர்
பிச்சையிபு ருகீம் பெரும்புலவன் செய்திட்டான்
உச்சிமேல் வைக்கும் உரை.

*அந்நூலின் இறுதியில் அந்நூலின் கொடை நாயகராம் சிக்கந்தர் ராவுத்தர் மீது ஒரு வாழ்த்துப் பதிகமும் பாடி*

ஞர் நாவலர். அதைக்கண்டு பெரிதும் மகிழ்வுற்ற சிக்கந்தர் ராவுத்தர் நாவலருக்கு ஆயிரம் ரூபாய் பொன்முடிப்பு நல்கி அவரை மகிழ்வித்தார்,

இவற்றைத் தவிர நாவலர் நாகூர்தர்கா ஆதீனஸ்தருள் ஒருவரான காஸிம் சையிது முகம்மது பாகிறு சாகிபு அவர்களின் வேண்டுதலின் பேரில் நாகூர் ஆண்டகையின் காரணச் சரித்திரத்தை 'கன்ஜுல் கறுமாத்து' என்ற பெயருடன் செம்பாக வசன நடையில் சிறப்புடன் எழுதி முடித்தார். அவர் அதில் கையாண்டிருக்கும் வசனநடை வசன நடைகளுக்கோர் சிறந்த முன்மாதிரியாக விளங்குகிறது. அந்தச் சரித்திரக் கோவை முடிவுற்றதும் நாகூர் சாஹிபுமார்கள் அதனை 'காதர் பக்ஷ்' என்னும் தர்கா யானையின் மீது வைத்தும் நாவலரை சோடிக் குதிரைகள் பூட்டிய வண்டியில் ஏற்றியும் பவனிவந்தனர். அதுமட்டுமல்லாது அவரை நாகூர் தர்கா மகாவித்துவானாகவும் ஆக்கி 'ஷமஏஜஹான்' (உலகதீபம்) என்னும் சிறப்புப் பெயரும் சூட்டி ஆண்டுதோறும் நூற்றுப்பதினென்றே கால் ரூபாயும் ஒரு மூட்டை நெல்லும் ஆண்டவர் சமாதியின் சால்வையும் பிரார்த்தனைப் பண்டங்களும் நல்கிக் கௌரவித்தார்கள்.

இவற்றையன்றி நாவலர் திருமக்காத் திரிபந்தாதி, மதினுக்கலம்பகம், பகுதாதுக் கலம்பகம், பஹனஷா வசன காவியம், ஆரிபுநாயக வசன காவியம் ஆகியவற்றையும் செய்துள்ளார். நாகூர் முகம்மது நயினு மரக்காயர் என்னும் அன்பர் பேரில், 'சமுத்திரமாலை' என்னும் ஒரு பிரபந்தம் இயற்றியுள்ளார். அது சிலேடை மயமாகக் காட்சி வழங்குகிறது. மேலும் ஷாகுல்ஹமீது ஆண்டகையின் ஞானசிரியர் குவாலீர் முகம்மது கவுது ஒலியுல்லா பேரில் குவாலீர்க்கலம்பகம் என்னும் பிரபந்தமும் இயற்றினர். இவையன்றி தம் தந்தையாரின் நண்பரான சரவணப்பெருமாளையர் என்னும் வழக்கறிஞரிடம் ஆங்கிலத்தைச் சன்னஞ்சன்னமாய்க் கற்றுத் தேறி பிரபல ஆங்கில நாவலாசிரியர் ரைனல்ட்ஸ் என்பார் எழுதிய 'உமறு' என்னும் நாவலைத் தமிழில் மொழிபெயர்த்து 'உமறு பாஷாவின் யுத்தசரித்திரம்' என்ற பெயருடன் நான்கு பாகங்களில் செம்பாகத் தீந்தமிழில் செய்தருளினர்.

அவர் தமிழில் மட்டும் பெரும்புலவராக விளங்கவில்லை. அன்று நாகூரில் ''சூப்ரஹ்மஹுல்லா'' என்னும் சிறப்புப் பெயருடன் விளங்கிய நூருத்தீன்சாகிபு காமிலிடம் கைகொடுத்துத் தீட்சை பெற்றார். 'தரீக்குல் ஜன்னு' எழுதிய முகிய்யித்தின் பக்கீர்சாகிபு காமிலிடம் அரபு நூல்கள் பல கற்றுத் தேறினார். மேற்கண்ட ''தரீக்குல்ஜன்னு'' என்ற நூலுக்கு நாவலர் ஷரீஅத் சட்டம் விலகாமல் உரை எழுதினார். அதிவீரராமன் பட்டினம் அண்ணுவியார் குலதிலகராகிய காதிறு முகிய்யித்தீன் அண்ணுவியார் இயற்றிய 'பிக்ஹுமாலை'க்கு இஸ்லாம் மார்க்க வரம்பு கெடாமல் யாவரும் எளிதில் படித்தறியுமாறு உரைசெய்தார். அரபிதிரிச் சொற் பிரயோகங்களுக்கு எளிதில் தமிழில் பொருள் விளங்குமாறு ''அரபுத்தமிழ் அகராதி'' ஒன்றும் எழுதினார்.

இவையன்றி திருநெல்வேலிப் பேட்டை காசிம் முகிய்யித்தீன் ராவுத்தர் அவர்களின் வேண்டுதலின்பேரில் சீறாப் புராண வசன காவியமும், திட்டச்சேரி முஸ்லிம்கள் ஒருமித்து வேண்டிக்கொண்டதன்பேரில் ஆரிபு நாயக வசனமும் எழுதியுள்ளார். சீறாப் புராணம் நபி அவதாரப் படலத்திற்கு உரையும் எழுதியுள்ளார். அவர் எழுதிய உரையினைக் குறைகூறிக் கண்டித்து முகம்மது பந்தர் காதிரசனு மரக்காயர் 'நபி அவதாரப் படல உரை கடிலகம்' என்று வேறு உரை ஒன்றும் செய்து வெளியிட்டார். உடனே நாவலர் தாம் எழுதியது சரிதான் என நிலைநாட்டி 'உரைகடிலக நிராகரணம்' என்ற பெயருடன் ஒரு நூல் வெளியிட்டனர். அதைக்கண்டு காதிரசனு மரக்காயர் வெறுமனே இருக்கவில்லை. 'உரைகடில நிராகரணச் சூறாவளி' என்ற பெயருடன் மறுநூல்—மறுப்பு நூல் ஒன்றும் வெளியிட்டார். இவ்வாறு இருவருக்கும் பெரும் பகை மூண்டு கட்சி திரண்டதைக் கண்ட நாவலரின் ஞானாசிரியரும் காதிரசனு மரக்காயரின் ஞானாசிரியருமான நூருத்தீன் சாகிபு காமில் அவர்கள் காதிரசனு மரக்காயரை நாகூர் அழைத்துச்சென்று நாவலருடன் நட்புச் செய்துவைத்தனர். அந்த நட்பு பின்பு நீண்ட நாள் நீடித்திருந்தது. நாவலர் இயற்றிய ஆரிபு நாயகப் புராணத்திற்கும் நாவலரின் வேண்டுகோளின்பேரில் காதிரசனு மரக்காயர் பெருந்தன்மையுடன் சாற்றுக்கவி அருளினார்.

நாவலர் எழுதிய சீறு வசன காவியத்தில் பாத்திமா நாயகியின் திருமணப் படலத்திற்கு உரை எழுதும்பொழுது நாவலர் சிறிது தவறி 'மஹர்' என்ற அரபிச் சொல்லுக்கு 'கடிதடக் கிரயம்' என்று பொருள் எழுதிவிட்டார். உடனே அவருடைய எதிரிகள் கிளர்ந்தெழுந்தார்கள். அவர்மீது வசைமாரி பொழிந்தனர். 'இவர் தன்னை இலக்கண வித்வானென்றுஞ் சொல்லிக்கொள்கின்றனரே. இலக்கணம் கற்றிருப்பாராயின் மறைத்த சொல்லை வெளிப்படையாய்க் கூறுதல் தகுதியல்ல, வேறோர் குறிப்பால் கூறல் தகுதியென்று எண்ணிக் கூறுவது தகுதி வழக்கென்றும், நன்னூலில் இடக்கரடக்கல் என்றும், தொல்காப்பியத்தில் அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல் என்றும், இழிந்தோர் சொல்லுதல் இழிந்த சொல்லாதலால் அதனைக் குலமக்களிடத்து மறைத்துக் கூறல் வேண்டும் என்றும் இன்னும் இலக்கணங்களெல்லாம் மறைவாகிய சொல்லை மறைவாகவே கூறவேண்டும் என்று சொல்லியிருக்க தமது புல்லறிவாண்மை மடமையினாலோ கல்வியும் செல்வமும் அற்பருக் கற்பமுண்டாயின் இறுமாப்பர் என்றதற்கடையாளமாகவோ கற்பிப்பாரில்லாத மதிமயக்கத்தினாலேயோ, பெரியாரோடு சேர்மானமில்லையாலேயோ, உயர்ந்த கல்வி கேள்வி இன்மையினாலேயோ, அடங்காமையினாலேயோ, பாத்திமா றலியல்லாஹு அன்ஹா அவர்கள் விஷயத்தில் மஹர் என்பதற்குக் கடிதடக் கிரயம் என்றெழுதத் துணிந்த துணிபு. இஃதன்றி மஹரென்பது கடிதடக் கிரயத்திற்கு மாத்திரம் ஆகும் பட்சத்தில் பெண்சாதியோடு புருஷன் செய்யும் சரசம்முதலான நடக்கைகளில் மற்றஉறுப்புகளுக்குக் கிரயம்இல்லைபோலும்' என்று தாக்கி எழுதினர். மேலும் நாவலர் எழுதிய திருமணிமாலை வசனத்தில் குறைகண்டு 'திருமணிமாலை வசனம் பார்க்க விசனம்' என்று ஒரு சிறு நூலும் வெளியிட்டார் சீரியர் என்னும் செவத்த மரக்காயர். அதற்குச் சின்னவாப்பு மரக்காயர் அருளிய சாற்றுக் கவியில்

பெரியார் கருத்தறியாப் பேதை குலாம்காதிர்
தெரியா துழலும் சீர்கேட்டைத்—தரியாது
தெற்றத் தெளியத் திருத்தினன் பன்னூலும்
கற்றச் செவத்த மரைக்கான்.

என்று பாராட்டுக் கவி பகர்ந்தார். மேலும் 'சீரியசூரியன்' என்னும் ஒரு செய்தித்தாளை துவங்கி நாவலரைத் தாக்கு வதையே தம்முடைய தலையாய கடமையாகக் கொண்டார் சீரியர். இதைக் கண்டு பெரிதும் மனம் வருந்திய நாவலர் சீரியர் பாடியுள்ள மக்காக்கோவையில் 'தஞ்சவாணங் கோவை'யிலிருந்து பற்பல சொற்றொடர்களைக் களவாடிக் கையாண்டிருப்பதாகக் காரை முகம்மது ஸமதானி பத்தி ரிகையில் எழுதி ''ஓ! சீரியனே!! மக்காக் கோவையில் நீர் ஏன் கொக்குப் பிடித்தீர்'' என்று குற்றத்தைக் கிளறிக் குறையுரைத்தார்,

சீரிய அகப்பொருளின் செய்பிசகோ கைப்பிசகோ
நேரிய அச்சுப்பிசகோ நேர்ந்தனவால்—பாரில்
வளநாகை வாழும் செவத்த மரைக்காயர்
விளம்பும்மக் காக்கோவை மீது

என்றும் குறை கூறினர். உடனே சீரியரின் நண்பர்கள்

'கச்சுப்பிசகுங்குயத்தார்க்கு நாண் முதல் காண் குணங்கள்
வச்சுப் படைத்தனன் வல்லோனென் பாரவ் வழக் கிழுக்கப்
பிச்சுக் கிடக்கின்ற நாவல கோவைப் பெரும் பொருளில்
அச்சுப் பிசகன்று கைப் பிசகன்றுன் னகப் பிசகே' என்றும்
கற்றோர் பலர்மகிழ்ந்து கண்டிருக்கக் கொண் டிருக்க
மற்றோர் தலைவலிநோய் வந்துனக்கேன்—உற்றவாறு
என்னோ நபிபெருமாற்கு ஏற்கும் திருக்கோவை
தன்னோ டிகல லென்றன்.

என்றும் மறுப்பு விடுத்தார்கள். மேலும் நாவலரையும், அவரின் நண்பர்களான பக்கீர்முகிய்யித்தீன் புலவரை

யும், கூன செவத்த மரக்காயரையும், தாருக்காக்கா மீசா புலவரையும் கிண்டல் பண்ணி சீரியர் ஒரு பாட்டுப்பாடி, தெருப்பையன்களுக்குச் சொல்லிக்கொடுத்து, தெருத்தெருவாகப் பாடிக்கொண்டு திரியுமாறு செய்தார். அப்பாட்டின் ஒருசில அடிகள் பின்வருமாறு:—

பல்லவி

நாவலன தீவிலே ஓடுது கப்பல்

அனுபல்லவி

பாவிரித் தென்றுமே பக்கீரெனுங் கப்பல்
வாவிய நங்கூரக் கூனனைத் தூக்கியே
மேவிய தாருக்காப் பாய்மரம் நாட்டியே
ஆயுந் தமிழ்க் கடல் அந்தம் தெரிந்திட—ஓடுது
கப்பல்

இச்சமயத்தில் திருச்சி எஸ். பி. ஜி. கல்லூரியின் தலைமைத் தமிழ்ப்புலவராய் விளங்கிய பிச்சை இபுறுகீம் புலவர் நாகூருக்கு வந்திருந்தார். சீரியரைக் கண்டார். நாவலரின் மேதையை அவருக்கு நன்கு எடுத்துரைத்து, அவரை நாவலர்பால் அழைத்துவந்து உறவு கொள்ளச் செய்தார். அன்றுமுதல் நாகூரில் நாவலர் மாட்டுக் கிளப்பிய வசைப்புயல் ஓய்ந்தது. இதன்பின் சிலகாலம்சென்று சீரியர் காலம்சென்றதும், நாவலர் அவரின் அடக்க இடத்திற்குச் சென்று, 'அந்தோ! என்னருங்கையே! வெறுங்கையாய் எனைவிடுத்து விரைந்தாய் என்னே! சிந்தாத என்கலைக்குப் புகழ்கொடுத்த சீரியனே, போயிற்றுயோ!' என்றும், பிறவும் பிரலாபித்து அழுது துக்கித்தார்.

'இலக்கணக் கோடரி' என்னும் புகழ்ப்பெயர் பெற்றிருந்த பிச்சை இபுறுகீம் புலவருக்கும், நாவலருக்கும் முதன்முதலில் நட்பு ஏற்பட்டதோ மிகவும் விநோதமானது. நாவலரின் பேரையும், புகழையும் பற்றிப் பெருவாரியாகக் கேள்விப்பட்ட பிச்சை இபுறுகீம் புலவர், நாவலரைக்காண நாகூர் வந்தார். வந்த அவர் நாவலரின் இல்லம் சென்று நாவலரைக் கண்டார். நாவலரோ வந்த புல

வரை யாரோ எனவெண்ணித் தாம் வழக்கமாகப் பேசும் நாட்டுவழக்கத் தமிழிலேயே அவருடன் உரையாடினுர். வந்த புலவர் பிச்சை இபுறுகீம், நாவலரின் நாட்டுவழக்க மொழியைக்கண்டு சிரித்துவிட்டு, 'நாவலீர்! தங்களைத் 'தமிழ்த்தெய்வமாய குலாம்காதிறு நாவலரேறே' என்று சாற்றுக்கவிதைகள் கூறுகின்றனவே. இன்று உங்கள் மொழிச் செல்வத்தைக் கண்டால், நாவலரும் பாவலரும் அல்லாத ஒரு பாமரர் போன்றல்லவோ தோன்றுகின்றது' என்று கூறினுர். இதைக்கேட்ட நாவலர் சிரித்தவண்ணம், 'புலவீர்! உங்கள் திரிசிரபுரத்துச் சீரங்க உலக்கையல்லவே நஞ்செந்தமிழ்! நீர் என் முதுகிலே சாத்தும் வெண்டமிழ் மொழியினைக் கண்டார், எல்லேயுமோர் தண்டமிழன் என மதிக்காரோ?' என்று கூறினுர். அதன்பின் அவ் விருவரிடையே உரையாடல் நிகழ்ந்தது. நாவலரின் மேதையை அதன்பின் ஒரு நொடியில் விளங்கிக்கொண்ட பிச்சை இபுறுகீம் புலவர், நாவலரிடமே மாணவராய் அமர்ந்து, இலக்கணப் பொருளதிகார உள்ளுரைப் பொருளமைதிகளைக் கற்றுத் தேர்ந்தார். அதன்பின் தாம் எங்குச் சென்றபோதினும், நாவலரைத் தம் ஆசான் என்று பகிரங்கமாக எடுத்துரைத்து, நாவலரின் பெருமையைப் பறை முழக்கினுர். எனினும் அடக்கமே உருவாயமைந்த நாவலர், ஒருதடவையேனும் பிச்சை இபுறுகீம் புலவரைத் தம் மாணவன் என்று யாரிடமும் இயம்பவில்லை. இதனையே பிச்சை இபுறுகீம் புலவர் நாவலர்மீது பாடிய சரம கவி ஒன்றில்,

என்னுசான் இடைப் பயின்ற பயிற்சியெலாம் [அறிந்தனை
நின் இருங்கால் மாட்டு
முன்னுகி அகப்பொருளை ஆய்வுழி என் மதியளவு
மொழிந்த நின்னைப்

பன்னூலும் ஆசான் என்றுரைத்தனன் நீ உரையாய்
மன் பார்க்கில் ஆசான்
தன்னவில் கூறுது மாணவகன் மொழிவதுதான்
தகுதி யன்றோ

என்று கூறுகின்றார்.

முன்னர் 'நன்னூல் விளக்கம்' என்னும் இலக்கண நூலை இராமநாதபுரத்து ஆறுமுகத்தேவரின் வேண்டுதலின்பேரில் செய்த நாவலர் 'பொருத்த விளக்கம்' என்னும் இலக்கண நூலை, பிச்சை இபுறுகீம் புலவரின் வேண்டுதல் பேரில் செய்தார். அதுபற்றிய மதிப்புரை சுதேசமித்திரன் தினத் தாளில் வெகு சிறப்புடன் வெளிவந்தது, பாவலனத்தம் ஜமீன்தார் பாண்டித்துரைத் தேவரின் கவனத்தை ஈர்த்தது. 1901 ம் ஆண்டு அவரும், பாற்கர சேதுபதி மன்னரும் நாகூர் வரவு தந்தபொழுது. நாவலரைச் சந்தித்தனர். அப்பொழுது பாற்கர சேதுபதி நாவலரை நோக்கி, 'அருந்தமிழ்ப்புலவீர்! நுமக்கு யாது வேண்டும்? கூறுமின்' என்று வினவினர். அதற்கு நாவலர், 'நாடு செகிற்கொண்டு பீடுகெழு குடிதழீஇ, முற்றக்காக்கும் கொற்றக் குடையோய்! தமிழ்வளர்த் தருண்மின்' என்றனர். அவருடைய அவ்வேண்டுகோளை ஏற்று பாற்கர சேதுபதி மன்னரும், பாண்டித்துரைத் தேவரும் அவ்வாண்டிலேயே மதுரையில் நான்காவது தமிழ்ச்சங்கத்தை நிறுவி, நாவலரை அதன் முதற்பெரும் உறுப்பினராக ஏற்றுக்கொண்டனர். அன்னாரின் வேண்டுகோளின்மீது மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவராற்றுப்படை இயற்றி, அங்குச்சென்று அதனை அரங்கேற்றினர் நாவலர். அதில் அவர் ஒரு புலவரை நோக்கி, மதுரைக்கு நடந்து சென்றால் நாள் பல செல்லும். ஆதலின் புகைவண்டியில் செல்லின் விரைவில் செல்லலாம் என்று கூறிப் புகைவண்டியை வர்ணிக்கும் விதம் வியத்தற்குரியதாய் அமைந்துள்ளது. அதில் அவர் புகைவண்டித் தொடரை மரவட்டைக்கு நிகராக அழகாகக் கூறுகின்றார். அதனைக் கீழே தருகிறேன், படிப்பீர்களாக. படித்து அது

*புகைவண்டி ஓடும ஒலியில் அமைக்கப்பட்டிருக்கும் பாங்கினையும், புதுமையையும் கண்டு களிப்பீர்களாக.*

காலிற் செல்லி ஞளிற் செல்லு
முருமுறுமோ டுற ழொலியி
னிருபுறனு மிருப் புருளை
நான்குருளக் கான்குழுமும்
வாஅய்க்கொள்ளிப் பேஎயுயிர்ப்பி
ஞெலித்துமிழுங் கலித்தூமங்
குழல்வாயிற் சுழல் கொள்ள
மரவட்டைச் செல வொப்பச்
செல்பாண்டில் பல் கோத்த
நெடுந்தொடரி னிறை நீண்டு
கடுங்காலிற் கழி விசையின்
எந்திரவூர்தி யிவர்ந்தனிர் படர்மின்
அந்தமில் காட்சி அணிபல காண்பிர்.

*அவர் இவ்வாறு புலவராற்றுப்படை இயற்றி அரங்கேற்றி வரும்பொழுது, அதன் தனிச் சிறப்பியல்புகளையும், சொற்செறிவையும், பொருள் நிறைவையும் கண்டு பரவசமுற்ற புலவர் பெருமக்கள் திருமுருகாற்றுப் படையினைச் செய்த நக்கீரரையொப்ப இவர் ஆற்றுப்படை இயற்றி இருந்தமையின் அன்னருக்கு 'நான்காவது சங்க நக்கீரர்' என்னும் புகழ்ப்பெயரை நல்கிக்கௌரவித்தனர். மேலும் தமிழ்ச்சங்க மான்மியத்தில் மகாமகோபாத்தியாய சாமிநாதையரை தமிழரசியின் முதல்சேய் என்று குறிப்பிட்டு*

தொல்லைவளம் படைத்ததிரி சிரபுரத்துத்
தோன்று புகழ் மீனாட்சி சுந்தரப் பேர்
வல்ல பெரும் தகை மாட்டுப் பன்னூலாய்ந்து
வளர் சங்க நூல்கள் பல வனைந்தஞ் சேற்றி

எல்லவரும் கொண்டாடும் வண்ணம் மேனுட்டு
இறைவர் மகாமகோபாத்தியாயப்பட்டம்
ஒல்லேதரத் தமிழரசி முதற்சேயாகி
ஒளிர் சாமிநாதப் பேருறுமேலோனே

என்று புகழ்ந்துள்ள அக்காப்பியப் புலவர் குலாம்காதிறு நாவலரைப்பற்றிக் கூறுங்கால்,

தண்டமிழ்க்குத் தாயாகிப் பலபுராணம்
தகைய பலபிரபந்தம் வசனநூல்கள்
எண்டரவே இயற்றி உலகுவப்பத் தந்திட்(டு)
எத்திசையும் புகழ்நிறுவி ஆலவாயில்
பண்டனைய தமிழ்ச்சங்கப் புலவராற்றுப்
படையோதிப் பெரியவிறல் படைத்துநாளும்
வண்டமரும் பொழிலுடுத்த நாகூர் வாழ்க்கை
மருவுகுலாம் காதிறு நாவலன் தன்னே

என்று பண்ணிசைத்து அவரைத் தண்டமிழின் தாய் என்று போற்றினர்.

இவ்வாறு தமிழின் தாயாக விளங்கி தம் காலத்தில் தமக்கு ஒப்பாரும், மிக்காரும் இல்லையெனும்படி தமிழுலகில் தனிப்பெரும் செங்கோல் நடாத்திய நாவலர் வித்துவ ஜனசேகரராய் விளங்கி பற்பல மாணவர்களுக்கும் பாடம் சொல்லிக்கொடுத்து, அவர்களைப் பெரும் புலவர்களாக ஆக்கினர். பிற்காலத்தில் மறைமலை அடிகள் என்று பெரும் புகழுடன் விளங்கிய சுவாமி வேதாசலமும், அன்னாரிடம் பாடம் கேட்ட மாணவர்களில் ஒருவரே யாவார்.

தாம் பாடிய நூற்களுக்குச் சாற்றுக்கவி பெறவும், அவரின் வாழ்த்துதலைப் பெறவும் நாடோறும் புலவர் பெருமக்கள் அவரிடம் வந்தவண்ணமே இருப்பர். அவர்களுக்கெல்லாம் இன்முகம் காட்டி, நன்மொழிபேசி அவர்களின் பாக்களில் குற்றம் காணின் இன்பமாகக்கூறித் திருத்தம் செய்து சாற்றுக்கவி நல்கி அனுப்புவார் நாவலர்.

*செவ்வல்மா நகரம் நைனுமுகம்மதுப் பாவலர் எழுதிய குத்புநாயகத்தின் புகழாரத்திற்கு அவர் கொடுத்த சாற் றுக்கவி இதோ வருமாறு:*

தனிக்குமுயர் ஒலிபெருமான் கழற்கணியும்
பொருட்டரிய
தமிழினின்பம்
பனிக்குமென செவ்வல்நகர் நெயினுன் முகம்ம

பாவல்லான் சொற்
குனிக்கும் அணிப்பாவினத்தால் கோத்த புகழாரம்
[இது
கூறுங்காலை
இனிக்கும் அமுதெங்கோ, முக்கனி எங்கோ,
[தேனெங்கோ·
என்னென் பேனே.

*இவ்வாறு தம்மினும் சிறு புலவர்களுக்கெல்லாம் சிறப்பு மிகு சாற்றுக்கவி நல்கிக் கௌரவித்து அவர்களுக்கு ஊக்க மும் உற்சாகமும் நல்கிய நாவலர் எளிமையின் திருவுருவ மாகவே விளங்கியுள்ளார். புலவர் நாயகம் செய்கப்துல் காதிறு நெயினர் லெப்பை ஆலிம் புலவர் அவர்களைப்பற்றி ஓரிடத்தில் குறிப்பிடும்பொழுது 'இவர்க்கும் கல்விதாம் எம் மிடம் கிஞ்சமும் இலையே' என்று கூறியுள்ளார்·*

*உடையிலும் அவரப்படித்தான். போனகிரி என்னும் ஒருவகை நாட்டுக் கைலியை உடுத்தி, மூடுகழுத்துக் கோட் டும் குஞ்சமில்லாத துருக்கித் தொப்பியும் அணிவார். கோட் டுப் பையில் கடிகாரமும் பேனவும் மூக்குக்கண்ணாடியும் எப் பொழுதும் இருந்துகொண்டிருக்கும். கை விரலில் புஷ்ப ராகக் கல் பதித்த வெள்ளி மோதிரம் ஒன்று மட்டும் அணிந் நப்பார்.*

அவரருந்தும் உணவும் மிகவும்எளிமையுடையது. அவர் காலையில் அருந்துவது நீராரம். மாலையில் அருந்துவது சீரகத் தண்ணீர். காலை உணவு பசும்பாலும் மாக் கழியும் வாழைப் பழமும்தாம். இரவில் அருந்துவது பழமும் பாலும் சிற்றுண்டிப் பலகாரங்களும்தாம்.

காலையிலும் மாலையிலும் கடற்கரை சென்று உலவிவரும் நாவலர் இரவு ஏழரை மணிமுதல் ஒன்பது மணிவரை நூல்கள் படிப்பார். காலை ஆறுமணிமுதல் ஏழரை மணிவரை கவி இயற்றுவார்.

அவருடைய வாழ்க்கையை வளவாழ்வு என்று கூற இயலாத போதினும் வறுமையைவிட்டும் அப்பாற்பட்டிருந்தது என்று கூறலாம். அவர் யாருக்கும் உதவி வேண்டி சீட்டுக் கவி எழுதி அனுப்பவுமில்லை; யாரிடமும் நேரில் சென்று உதவி வேண்டியதுமில்லை.

அவருடைய முதல் மனைவியார் மகதூம்கனி அம்மாளுக்குப் பிள்ளை உண்டாகாதலின் அவரின் உத்திரவுக் கிணங்கி நாவலர் ஆமினு என்னும் மங்கையை மணம்செய்து கொண்டார். அம் மங்கையார் மூலமாகவே நாவலருக்குத் தம்முடைய 74-வது வயதில் ஆரிபு என்னும் அருமந்த மகவு ஒன்று பிறந்தது. அவரே இன்று ஆரிபு நாவலர் என்ற பெயருடன் தமிழ்ச்சங்க உறுப்பினராகவும் தறுகா வித்வானுகவும் நாகூரில் வாழ்ந்துவருகிறார். அம் மகவு பிறந்த பத்தாம்நாள் தாயார் ஆமினு விண்ணுலகம் எய்திவிட்டார். ஆமினு இறந்த ஓராண்டில் அதாவது 1908—ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் 28-ஆம் நாள் நாவலரும் இம் மண்ணுலகை எள்ளி இகழ்ந்து பொன்னுலகை அடைந்துவிட்டார். இதனையே அவருடைய அருமந்த மைந்தர் ஆரிபுநாவலர் பின்னர் தாம் பாடிய கையறு நிலையில்

முன்னுளில் உன்றன் மனையாம் எம் அன்னை
முதல்வன் கொடுத்த வரம் போல்
பன்னுள்தவத்துப் பலனுக எம்மைப்
படியார ஈன்ற பதுநாள்

தன்னுளில் ஆவி கழிகொள்ள நீயும்
தகுமோ இதென்ன தனியாய்
இன்னுளில் விட்டே ஓராண்டு போக்கி
இறந்தாயோ எந்தன் அப்பா!

*என்று அலறித் துடிக்கின்ருர். அவருடைய இறப்புச் செய்தி கேட்டுத் தமிழகமே துக்கக் கடலில் மூழ்கியது. காரை 'முகம்மது சமதானி' என்னும் பத்திரிகை*

தென்னுகை வாழ்ந்த குலாங்காதிர்
நாவல தேசிகர்மாய்
பொன்னுட்டின் வாழ்வைப் பெரிதுன்னிப்
போயினர் போயினமற்
றென்னுட்டி னும்மிவர் மெய்க்கீர்த்தி
எங்க ளிருதயத்தின்
மன்னுேகை மற்றிழிந் தந்தோ!
அவலங் குடிவந்ததே,

*என்று புலம்பிற்று.*

*'சுதேச மித்திரன்' செய்தித்தாள் ''மதுரைத் தமிழ்ச் சங்க அங்க மொன்று போயிற்று. தென்னிந்தியாவில் ஜொலித்த விண்மீன் வீழ்ந்தது. தமிழுலகின் தனம் அழிந்தது'' என்று அலறியது. அவருடைய மாணவர் பிச்சை இபுருகீம் புலவர் 'என்னுயிரே என்றுரைத்த நின்னுயிர்தான் பிரிந்த விதமென்னே அந்தோ' என்று அழுது கண்ணீர் வடித்தார்.*

*இலங்கை 'முஸ்லிம் நேசன்'*

''ஏ' மண்ணகமே!! சற்றேனும் மறைவுற்றநாவலனின்
[உடலைக் கண்டு
உண்ணுதே! அவன் நாவை உண்ணுதே!!''

*என்று அலறித் துடித்தது.*

எனினும் 'மண்ணிலிருந்தே படைக்கப்பட்டீர்கள். மண்ணுக்கே திரும்புவீர்கள்' என்ற மாமொழிக்கு நாவலரும் இலக்கானுர். அவருடைய பூதவுடல் மண்ணில் புதையுண்டபோதினும் அவருடைய புகழுடல் மண்மீது பவனி வந்துகொண்டுள்ளது. நாவலர் என்ருல் நீர்தான்காண் நாவலர், நாவலர் என்ருல் நீர்தான்காண் நாவலர், நாவலர் என்ருல் நீர்தான்காண் நாவலர் என்று அன்று மும்முறை நாவலர்கோட்டத்தில் வைத்துப் பொன்னம்பலம் பிள்ளை மொழிந்த சொற்கள் இன்றும் தமிழகத்தின் எண் கோணங்களிலும் எதிரொலி செய்து நாவலரின் இசையைப் பரப்பிக்கொண்டுள்ளன.

# பிச்சை இபுறகீம் புலவர்

ஆறடி உயரம்; கம்பீரத் தோற்றம் காட்டரபியின் சாயல்; கட்டான உடல்; மாநிறம்; அரும்பு மீசை: அழகிய தாடி; அகலக் கண்பார்வை; புன்முறுவல் தவழும் முக விலாசம்; மொட்டைத் தலை, அதை மறைக்க வெண்ணிறத் துணியில் மஞ்சள் நிறப் புள்ளிகள் பதிந்த 'நெட்டித் தலைப்பாகை' வெள்ளை முழுச் சட்டை; தூய மெல்லிய வெண்ணுடை; வெற்றிலை குதப்பும் வாய்; இலக்கண ஏடுகள் ஏந்தியிருக்கும் கைகள். இவைதாம் அறிவின் சிகரம், அடக்கத்தின் சின்னம், இலக்கணக் கோடரி பிச்சை இபுறுகீம் புலவரின் இலட்சணங்கள்.

அதோ கறுப்புநிற மேலங்கியுடன் தூய வெண்ணுடை புனைந்து 'சாக்லெட்' நிறத் துணியில் வெள்ளை நிற நீளக் கோடிட்ட தலைப்பாகையுடன் கறுப்பு நிறக் காலணி அணிந்து அலங்காரமாகத் தயார்செய்யப்பட்ட இரட்டை மாட்டுப் பொட்டுவண்டியில் சதங்கையின் ஒலி கிண் கிண்ணென ஒலிக்க சவாரி செய்துகொண்டு போகின்றாரே அவர் யார் என்று வினவுகின்றீர்களா? அவரும் அவர்தாம். எஸ். பி. ஜி. கல்லூரியில் இலக்கணப் பாடம் போதித்து வருவதற்காக அவர் செல்லும் காட்சிதான் அது. என்ன, அவர் பெரும் கருவாட்டு வணிகர் என்று கேள்விப்பட்டுள்ளேனே. அவர் ஏன் கல்லூரிக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கப் போகின்றார்? என்று நீங்கள் வியப்புறலாம். ஆனால் அதிலே தான் அவருடைய மகாத்மியம் அடங்கிக் கிடக்கிறது என்பதை அறிவீர்களாக.

'தாங்கள்தாம் பெரும் செல்வராயிற்றே. கேவலம் சம்பளத்திற்காகவேண்டி கல்லூரியில் அலுவலாற்றுவதா? ஆவியைத் தொலைப்பதா' என்று அவருடைய நண்பர்கள் அவரிடம் கூறாத நாளில்லை. எனினும் அவர் கேட்கவில்லை. அவர்களுக்கு அவர் கூறிய மறுமொழியை நானும் உங்களுக்குக்

கூறுகிறேன், கேளுங்கள். 'நான் சம்பளத்திற்காகவேண்டியா கல்லூரி சென்று பாடம் சொல்லிக்கொடுக்கிறேன் என்று எண்ணிக்கொண்டீர்கள்? நம் இளைஞர்கள் நம் தாய்மொழியாம் தமிழ் மொழியில் பெரும் புலமை பெறவேண்டும்; புலமை பெற்றுத் தமிழின் பெருமையைப் பாரெங்கும் பரிமளிக்கச் செய்யவேண்டுமென்ற வேணவாவே என்னைக் கருவாட்டுக் கடையிலிருந்து விரட்டிக் கல்லூரிக்கு இழுத்துச் செல்கின்றது' என்று மறுமொழி கூறுவாராம் அவர்.

ஆம்; அவரிடம் தமிழ் கற்று எத்தனையோபேர் பெரும் புலமை பெற்றுர்கள். சென்னை மாகாணத்திலேயே அவரின் கீழ் கல்வி பயின்ற மாணவர்களே முதற்றரமாகத் தமிழில் தேறினுர்கள். தேறி அவ்விதத் தகுதி பெறும்வண்ணம் மாணவர்களுக்குத் தமிழ்க் கல்வி பயிற்றியதற்காக அரசாங்கத்தாரால் நல்கப்படும் பொற் பதக்கத்தையும் அவருக்குப் பெற்றுத் தந்தார்கள்.

தமிழார்வம் அவருக்குப் பிறவியிலேயே அமைந்திருந்தது. கருவாட்டுக் கடையில் பற்பல கருவாட்டு ரகங்களை விற்கும்பொழுதே கவிமழை கொட்டித்தள்ளுவார். பதினுருட்டைப் பருவத்திலேயே பாவேந்தராக விளங்கினுர். தமிழ்வெறி தலைக்கேறி இலக்கண வித்தகராக விளங்கினுர். அவ்விதம் தாம்மட்டும் விளங்கியதோடல்லாது மற்றவர்களையும் அவ்விதம் ஆக்குவதற்காகத் தம்முடைய பதினெட்டாவது வயதிலேயே இலக்கணப் பள்ளி ஒன்றை ஏற்படுத்தினுர். அதில் ஏறக்குறைய நூற்று அறுபது பேர்வரை இலக்கணப் பாடம் பயின்றுவந்தனர். 'இலக்கணம் வேம்பு, வேண்டாம் அந்த வம்பு' என்று கருதப்பட்டதைக் கரும்பாக ஆக்கிக் காட்டினுர். இதன் காரணமாகப் பலர் விரைவில் பாவாணர்களாக மாறினர். நாவலர்களாக உலவினர். காவியக் கர்த்தாக்களாகக் காட்சி தந்தனர். இலக்கண நூலாசிரியராக விளங்கினர்.

கம்பம் பீர்முகம்மதுப் பாவலர், உறையூர் சித்திரக்கவி சையிதிமாம் புலவர், நாவலர் வேங்கடசாமி நாட்டார் முதலியோர் அவரிடம் பாடம் கேட்டவர்களேயாவர்.

அவர் தம் கருவாட்டுக் கடையில் வீற்றிருப்பார். கருவாட்டுத் துண்டுகள் அடுக்கடுக்காக மலைபோல் குவிந்திருக்

கும். அது கிளப்பும் வாடை மூக்கைத் துளைக்கும். எனினும் நாற்றத்தையும் பொருட்படுத்தாது பலர் அவரிடம் பாடம் கேட்கவும் தமது காவியத்தை அவரிடம் காட்டித் திருத்தம் செய்யவும், தாம் பாடிய நூலுக்கு அவரிடம் சாற்றுக்கவி பெறவும் திரண்டு வந்துகொண்டிருப்பார்கள்.

தாம் நிறுவிய இலக்கணப் பள்ளியில் அவர் பதினைந்து ஆண்டுகள் தமிழ்ப்பணி செய்தார். அவருடைய கல்வித் திறனைக் கண்டு கற்றோரும் மற்றோரும் வியந்தனர். எஸ்.பி.ஜி. கல்லூரிப் பாதிரிமார்கள் தங்களின் கல்லூரிக்கு வந்து தலைமைப் புலமை தாங்கிப் பணியாற்றவேண்டுமென்று பல்லாண்டுகளாகவே அவரை வேண்டிக்கொண்டிருந்தனர். அவ் வேண்டுகோளை ஏற்றுத்தான் அவர் அக் கல்லூரியில் தமிழ்ப் பணியாற்றினர். அப்பொழுது அவருக்கு வயது முப்பத்தெட்டு.

கல்லூரியிலே அவர் பாடம்போதிக்கும் முறையே தனித் தன்மை வாய்ந்தது. இனிய குரல்வாய்ந்த மாணவனைக் கொண்டு முதலில் பாடல்களைப் பாடச்செய்து அதன் பின்தான் அவற்றிற்கு அவர் விளக்க உரை பகர்வார். சில வேளைகளில் சனி, ஞாயிறு விடுமுறைகளில் மாணவர்களைப் பள்ளிக்கு வரச்செய்து பாடங்களை நடத்தித் தமிழறிவு வளருமாறு செய்வார்.

அவர் கம்பராமாயணப் பாடம் நடத்தத் துவங்கிவிட்டால், மாணவர்களுக்கெல்லாம் பெரும் களிப்புத்தான். செய்யுளை அழகாகப்பாடி ஒவ்வொரு செய்யுளுக்கும் பற்பல விதமான பொருள் விரிப்பார். கம்பரின் பெருமையை மாணவர்களுக்கு எடுத்துரைத்து அவரின் பாட்டுக்களில் விரவி இருக்கும் இலக்கண வழுக்களை வெகு துணிச்சலுடன் ஆதாரப்பூர்வமாக எடுத்துரைப்பார். அவற்றை மாணவர்கள் அனைவரும் மௌனமாக இருந்து கேட்டுக்கொண்டிருப்பார்கள்.

அவர் தமிழுக்குச் சூடிய நவமலர்கள் பல. நாகூர் பிள்ளைத்தமிழ், மஹ்பூப் சுப்ஹானி மாலை, நாயகத் திருப்புகழ், நத்ஹறொலி ஆண்டவர்கள் பிள்ளைத்தமிழ், சீதக்காதிப் பதிகம், முகியித்தீன் ஆண்டவர் மாலை, திருமதி

னத்து வெண்பா அந்தாதி, திருமதினத்துமாலே, திருமதினத்து யமக வந்தாதி, திருமதினத்துப் பதிற்றுப் பத்தந்தாதி, திருமதினத்துக் கலம்பகம், வெள்ளாங்குளத்தூர் அவுலியா மாலே, பகுதாது பாமாலே, ஆதமலே திருப்புகழ், தொண்டி மோனகுரு செய்குமஸ்தான் மீது நான்மணிமாலே முதலியன.

இவற்றில் ஒரு சிலமலரை எடுத்து நீங்கள் மோந்து பார்க்க விரும்புகின்றீர்களா? இதோ அவரே தாம் பாடிய நத்ஹறொலி ஆண்டவர்கள் பிள்ளைத் தமிழிலிருந்து ஒரு நறுமணமலரைப் பறித்துக் கொணர்கின்ருர். மோந்து இன்புறுவீர்களாக.

என்கண் மணியே ஒளிர்மதியே
இன்பே இன்பம் விளைநிலமே
இறைவன் கருணைப் பொக்கிசமே
இகமும் பரமும் புகழரசே
அன்புதரும் சீர் அற்புதமே
அடியோர்க் கருளும் கற்பகமே
அறிஞர் இறைஞ்சும் இருநிதியே
ஆசை இருளேக் கடிகதிரே
துன்பம் அகற்றும் தாயகமே
சுலுத்தான் மார்கள் அணிமுடிவே
தூய சுருதி ரசக்கடலே
துலங்கு நலசற் குணமலேயே
தன்பால் இரந்தோர்க் கிரங்கிடுநல்
சமய குருவே தாலேலோ
தபுரியாலம் எனும் செய்கே
தயவே தாலோ தாலேலோ.

அவர் பாடிய திருமதினக் கலம்பகத்திலிருந்து அவர் இதோ இரு நறுமண மலர்களைக் கொய்து உங்களுக்காகக் கொண்டு வருகிறார், பாருங்கள்.

அறியுமோர் அகற்றிய அறிவினுற் தவத்
தறியினிற் சிறந்துறும் தகைமைச் சிங்கநீர்
இனிமையிற் றெனப்படா தினிப்பை ஊட்டிடும்
கனிமையிற் புகழ்வர் பாற் கருப்பங் கட்டினீர்.

வீரேந்து நன்மதின வேந்தர்பெரு மானார்தம்
ஏரேந்து நெஞ்சில் இனித்திருப்பார் அம்மானை.
ஏரேந்து நெஞ்சில் இனித்திருப்பார் ஆமாயின்
ஆரேந்தவர் தாம்அக மதுவோ அம்மானை
அகமதுவும் முகம்மதுவும் ஆனவரே அம்மானை.

அவர் மோனகுரு செய்கு மஸ்தான் சாகிபு அவர்கள் மீது பாடிய நான்மணி மாலைதான் அவர் இறுதியாகப் பாடியதாகும். மோனகுரு செய்கு மஸ்தான் தாம்பாடிய திருப்பாடல்களுக்கு நான்மணிமாலை பாடித்தரவேண்டுமென்று குலாம்காதிறு நாவலருக்கு எழுதினார். நாவலர் தாம் எழுதிய பதிலில், தாம் மரணப்படுக்கையில் 'சுருண்டு கொண்டு' கிடப்பதாகவும், எனவே பிச்சை இபுறுகீம் புலவரிடம் அதனைப் பெற்றுக்கொள்ளுமாறும் குறிப்பிட்டார். இதனை மஸ்தான்சாகிபு அவர்கள் பிச்சை இபுறுகீம் புலவருக்குத் தெரியப்படுத்தியதும், அதற்கு அவர் இணங்கினார். எனவே மோனகுரு செய்குமஸ்தான் தம்பாடல்களுடன் திருச்சி சென்றனர். அவர்கள் தங்களுடன் ஓர் அகராதியையும்கொண்டு வந்திருப்பதைக்கண்டு பிச்சை இபுறுகீம் புலவர் சிரித்து, 'இஃது பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளுக்கல்லவோ வேண்டும். இதில் இன்ன இன்ன சொற்களுக்கு இன்ன இன்ன பொருள்தாமே இருக்கும். அச்சொற்களுக்கு இன்னும் இன்ன இன்ன பொருள்களெல்லாம் இருக்கின்றனவே. அவற்றையெல்லாம் குறிப்பிட்டு ஒரு புது அகராதி அல்லவோ தயார் செய்யப்பட வேண்

டும்' என்று கூறினராம். அதன்பின் மஸ்தான்சாகிபு அவர்களின் பாடல்களை ஆராயப் புகுந்த பிச்சை இபுருகீம் புலவர் அதில்வரும் ஞானக்கருத்துக்களின் ஆழத்தைக்கண்டு மஸ்தான்சாகிபுமீது பெருமதிப்புச் செலுத்தினர். அதில் அவருக்கு விளங்காத சில ஞானக்கருத்துக்களை மஸ்தான்சாகிபு தம்மிடம் தீட்சைபெருத எவருக்கும் விளக்க இயலாததால் பிச்சை இபுருகீம்புலவர் மஸ்தான்சாகிபு அவர்களிடமே தீட்சை பெற்று, அவர்களின் ஆன்மீக மாணவராகி அவற்றை விளங்கினர். அதன்பின் நான்மணிமாலை பாடத்துவங்கிய அவர் அதன் முதல்செய்யுளிலேயே

> விண்டு கடல்நீரை மேவும் உவரோடு
> மொண்டுதலைப் பெய்யும் முறைமையார்—தொண்டி
> [யினர்
> மோனகுரு செய்குமஸ்தான் முத்துமுகம் கண்டக்
> கால்
> ஞானகுரு வாவார் நரர்.

என்று புகழ்ந்தார்.

இவ்வாறு மோனகுரு செய்குமஸ்தானின் முத்து முகத்தைக்கண்டு சொக்கிப்பாடிய புலவர் அவர் தம் முத்து முகத்தைக் கண்டபின், ஒருவர் தாரணிமன்னர் அழைப்பினும் செல்வாரோ. மாட்டார் என்று அடுத்த கவியில் ஆனந்தக்களி உறுகின்ருர். அக்கவி வருமாறு:

> நரர்தம் பயனுற நற்றவம் செய்துகொண் ஞானகுரு
> பரரைப் பரவெளி மேவிய தொண்டியின் பானு
> [வைச் சுந்
> தரரைத்தரங்கொண் முகமொடு கண்டவர் தாரணி
> [மன்
> னரவர் சமுகந்தர வந்தழைப்பினு நாடலரே.

இவ்வாறு களிகூர்ந்த புலவர் பிச்சை இபுருகீம், மோன குரு செய்குமஸ்தானின் மேதக்க நிலையைக்கண்டு பெரிதும்

வியந்து, இல்லற மல்லது நல்லறமன்று என்பதனை மாற்றி, துறவறமல்லது நல்லறமன்று என்று பின்வருமாறு பண் இசைக்கின்றார்.

வதுவை யுடையார்தம் வாழ்க்கைத் திறத்தில்
அதுபுரியார் ஆட்சி யதனில்—எதுபெரிய
தென்றுற்பிற் கூறியதே ஏற்றமென்பேம் தொண்டி [யார்
நன்றும் செயல்கண்டு நாம்.

இதன்பின் மோனகுரு செய்குமஸ்தானின் தலைமுறையைக் கூறப்போந்த புலவர், அதில் தம் திறமை அத்தனையையும் பயன்படுத்தியுள்ளார். அதில் மோனகுரு செய்குமஸ்தானின் பிறப்பு, வளர்ப்பு பற்றிய சில அடிகளை ஈண்டுக் கூறுதும்; கேண்மின்.

சூழ்ச்சி யினுதிக்கு மாழ்ச்சியா மறிவென
அறிவினி லுதிக்கும் செறிதரு களியெனக்
களியினி லுதிக்கும் விளிவரு மளியென
உதித்தனர் மன்னே மதித்திறத் தெவரும்
மோனதே சிகரென ஞானமா நிதியெனச்
செயற்கையி னழைக்கும் செய்கு மஸ்தானும்
குருபரன் மன்னே குருபரன் மன்னே
கற்பதற் கியைந்து நிற்குறூஉ மிளமையின்
மார்க்கக் கலைகள் சேர்க்கத் தகுந்த
மேலைப் பயன்கலா சாலையிற் புக்குப்
பயின்றுவரு காலை இயன்ற மார்ச்சால
நியாயமென வடைந்தது தயாபர னருளே
யாரோ வியற்கை அவாவு மற்றன்றே
யாங்கது வரவே பாங்குறூஉ மோனம்

ஒன்று வந்தன்றே ஒன்று வந்தன்றே
யானென தென்னும் செருக்கும் அற்றனவே.

இவ்வாறு பாடிச் செல்கின்றார் புலவர். அவருடைய பாக்களைக் காண்பவர் இவர் ஓர் அருள் வாக்கியேயன்றி வேறில்லை என்று அஞ்சாது கூறுவர் என்பதில் ஐயமில்லை. அவரின் நா மிகவும் வன்மை வாய்ந்ததாகவும் இருந்தது. ஒருதடவை அவர் உறையூர் பங்களாத் தெருவில் இருந்த தம்முடைய முதல் மனைவியாரின் வீட்டில் இருக்கும் பொழுது, அங்குவந்து குழுமி இருந்த புலவர் பெரு மக்களிடையே அறம்பாடிய பற்பல காளமேகங்களைப் பற்றிப் பலமான வாதப் பிரதிவாதங்கள் நிகழ்ந்து கொண்டிருந்தன. அப்பொழுது அவர்கள் எல்லோரும் ஒருமித்து பிச்சை இபுறாகீம் புலவரை அறம் பாடிக் காட்டுமாறு வேண்டிக்கொண்டனர். அவரும் அதற்கு ஒருவாறு இணங்கினார். அவ்வீட்டின் அருகே தளிர்விட்டுத் தழைத்த ஒரு கொறுக்காய்ப் புளிமரம் இருந்தது. அதன்மீது அவர் அறம் பாடினார் உடனே அம்மரம் கருகி விட்டது. இதைக்கண்டு அங்கு வீற்றிருந்தோர் அனைவரும் வியப்புக்கடலில் மூழ்கினர். இச்செய்தி ஒரு நொடியில் உறையூர் முழுவதும் பரவி விடவே, உறையூரே திரண்டுவந்து கருகிப்போய் இருந்த அம்மரத்தைக் கண்டு களிப்பும், திகிலும் பெற்றுக் கல்லாச் சமைந்துவிட்டது. அவர் இறப்புப் படுக்கையில் கிடந்து பெரிதும் துன்புற்றுக் கொண்டிருக்கும் பொழுது, 'நான் திருமதீனத்தந்தாதியில் பாடிய பாடல் ஒன்றில் அறம் விழுந்ததன் பலனால்தான் இவ்வாறு துன்புறுகிறேன்' என்று கூறிப் பிரலாபித்தனராம் அவர். எனவே அவர் அறம் விழுந்துவிட ஏதுவாகுமென அஞ்சி, மனிதர்களைப் புகழ்ந்து பாடுவதே இல்லை. 'கருநாக்குப்புலவர்' என்று மக்கள் அவரைக்கண்டு அஞ்சினர்.

அவருக்கும், குலாம்காதிறு நாவலருக்கும் இடையே நிலவிய நட்போ விவரிக்க ஒண்ணாததாகும். அவர்கள் இருவரும் முஸ்லிம் இரட்டையர்களாகவே விளங்கினர். பிச்சை இபுறாகீம் புலவர் எழுதிய நூலுக்கு, நாவலர் உரை எழுதுவார். நாவலர் எழுதும் நன்னூலுக்கு

உரைதருவார் பிச்சை இபுருகீம் புலவர். அவரைப் பற்றி நாவலர் ஓரிடத்தில் கூறும்பொழுது,

> தீந்தமிழ் நெடுங்கடல் நீந்திய அறிவினும்
> ஆன்றவர் வியப்பத் தேன்றுறி பாவினம்
> பாடிய சிறந்த நீடிய அறிவினும்
> தன்னிகர் போக்கி மன்னிய புலவன்
> பிச்சை இபுருகீம்

என்று பாராட்டினர். மேலும் அவரை 'என்னுயிரே' என்றும், அவருடைய நூலுக்கு எழுதிய பாயிரம் ஒன்றில் குறிப்பிட்டார். இதனையே பிச்சை இபுருகீம் புலவர் தாம் குலாம்காதிறு நாவலர்மீது பாடிய சரமகவியில்

> கற்ருர்தம் கீழிருக்கு நானுரைத்த ஒருசிறு நூல் கண்டு நோக்கி
> மற்ருரும் இதுவும் ஒரு நூல்போலும் என உரை நீ வகுத்ததோடு
> முற்ருய பாயிரத்தில் நின்னுயிரென் றெனையுரைத்த முதுமை வாக்கே
> எற்ருயிற் றுயிரிழந்த உடலாக்கிற் ருெருநானும் இருக்கின்றேனே.

என்று கூறுகின்ருர்.

மேலும் குலாம்காதிறு நாவலர் தாம் எழுதிய பொருத்த விளக்கத்திற்கு உரை எழுதுமாறு பிச்சை இபுருகீம் புலவரைக் கேட்டுக்கொண்டதையும், அவ்வாறே அவர் உரை எழுதியதையும் அவர் மற்ருெரு கவியில் கூறுகின்ற அழகைக் கேளுங்கள்.

> சொன்னூலும் பொருள்நூலும் எனும் இவற்றுள் [பலபொருள் நூல் சொல்லிச் சொன்னூல்

இன்னூலென் றருந்தமிழோர் கொண்டாட ஒருநூலை
[இயற்றி என்பால்
முன்னூலின்படி இதற்கோர் உரை இயற்றுகென
[வுரைத்து முடிப்பித்தாய் நின்
வன்னூலுக் குரை இயற்றும் வலிஅடியேற்
[குன்னருளே வழங்கிற் றன்றே

இவ்வாறு பாடிய புலவர் தம்மை அறியாமல் உணர்ச்சி மிகுதியால் தம்மை உயிரிழந்த உடலென்று வர்ணித்ததோடு தாம் அவரின் இறப்புச் செய்தி கேட்டு உயிர் விடாதிருப்ப தாகவும் தம்மை அறியாமல் மற்றோர் கவியில்

என்னுயிரே அனையவொரு நின்னுயிர்தான் அகன்ற
[விதம் என்னே அந்தோ
நின்னுடைய நன்மரணம் யானறிந்த உடனுயிரை
[நீக்கலாது
மன்னுறவே உணவுகொளல் முதலாய தொழி
லொடுயிர் வாழ்கின்றேனே,
முன்னுறுமோர் பிசிராந்தை ஒருவனுமே நட்பாய்ந்த
[முறைமையோனே.

என்று பிரலாபிக்கின்றார். இதில் அறம் பலிதமாகியோ என்னவோ அவர்தம் ஆசான் குலாம்காதிறு நாவலர் இறந்த சில மாதங்களுக்குள்ளேயே 1908—ல் தம் நாற்பத் தைந்தாவது வயதில் உயிர் நீத்தார், அப்பொழுது அவரு டைய இல்லத்திற்கு ஒரு மடல் எஸ். பி. ஜி. கல்லூரியி லிருந்து வந்துசேர்ந்தது. அதில் என்ன எழுதப்பட்டிருந் தது தெரியுமா?' தங்களுடைய கலைத்தொண்டைப்பாராட்டு கின்றோம். தங்களின் சம்பளத்தை நூற்று ஐம்பது ரூபாயி லிருந்து இருநூற்று ஐம்பது ரூபாயாக உயர்த்தியிருக்கின் றோம்' என்று. இஃதென்ன விதியின் வேடிக்கை! இஃதென்ன வாழ்க்கைச் சுழலின் விசித்திரம்!!

அவருடைய இறப்புச் செய்தி கேட்டுக் கவிவாணர்கள் கலங்கினார்கள்; மதிவாணர்கள் மயங்கினர். இலக்கணமலை

சாய்ந்துவிட்டதே என்று ஏங்கினர். அவரின் மாணவர்களில் ஒருவரான—பிற்காலத்தில் பெரும் புலவராய் விளங்குவார் என்று அவரால் வாழ்த்துதல் பெற்ற கம்பம் பீர்முகம்மதுப் புலவர்

மேலவருந் தமருமுயர் மித்திரரும் புத்திரரும்
[விழைந்தே மக்கள்
போலவரும் தகைசான்ற மாணவரும் வழிபடுவேன்
[போல்வார் தாமும்
சாலவருந் தற்குமனம் குழைந்தழற்கும்
[இவணொருவித் தனிவாழ் வுற்ருய்
சீல! அருந் தமிழ்க்கடலே! அன்புடையோர்க் கிது
[அழகோ செப்பாய்! செப்பாய்!!

என்று அலறித் துடித்தார். தாங்களும் பெரும் கவிஞர்களாகலாம், இலக்கணப் பண்டிதர்களாகலாம் எனக் கருதியோ என்னவோ பலர் அவரின் சமாதி மண்ணை வாரி எடுத்துக் கொண்டு சென்ருர்கள்.

இவ்வாறு தமிழ்க் கடலாக விளங்கி தமிழகத்திலே அலை வீசிய அப் பெருந்தகை புலவர்மகன் புலவருமல்லர். அவருடைய தந்தையார் காதிறுசா இராவுத்தர் எத்தொழில் செய்துவந்தாரென்று நாமறியோம். அவரின் தந்தையார் அவருடைய மூன்ருவது வயதிலே இவ்வுலகை நீத்ததும் தங்களின் தாயகமான அரசங்குடியை விட்டுவிட்டு 1866—ல் தம் தாயாரோடு திருச்சி வரகனேரிக்கு வந்து சேர்ந்தார். வந்துசேர்ந்த அவ்வம்மையார் அப்பொழுது அங்குப்பிரபல கருவாட்டு மண்டிக்காரரான அதிராம் பட்டினத்தைச் சேர்ந்த ஹாஜியார் இராவுத்தர் கடிமணம் செய்துகொண்டார். அன்றுதொட்டு பிச்சை இபுருகீம் புலவருக்கு ஹாஜியார் இராவுத்தரே போஷகருமானுர். ஹாஜியார் இராவுத்தர் இறந்ததும் அவருக்கு மகப்பேறு இல்லாததால் அவருடைய சொத்து அனைத்திற்கும் பிச்சைஇபுருகீம் புலவரே உரியவருமானுர்.

பிள்ளைப் பருவத்தில் பிச்சை இபுருகீம் புலவர் பெரும் முரடராக விளங்கிஞர். சுட்டிப்பிள்ளை, பொல்லாத பயல்

என்பனவே அவரின் இளமைப் பருவத்துப் பட்டங்களாக விளங்கின. அவரின் வீட்டருகே உள்ள திண்ணைப் பள்ளியில் சேர்க்கப்பட்ட அன்னார் பள்ளிக்கு ஒழுங்காகப்போவதே இல்லை. எனவே அவருக்குப் பள்ளியில் கால் விலங்கு இடப்பட்டது. எனினும் அதனையும் அறுத்துக்கொண்டு உணவு நேரத்துக்கு ஒழுங்காக வீட்டுக்கு வந்துவிடுவார். 'வருங்காலத்தில் அவன் ஒரு பக்காத்திருடனாக விளங்குவான்' என்று மக்கள் பேசிக்கொள்வராம். தம் கையிலுள்ள தங்கக் காப்பினால் பிள்ளைகளின் மண்டையில் ஓங்கி அடித்து இரத்தம் கசியச் செய்ததோடல்லாமல், அதைக் கண்டு அஞ்சி ஓடாமல், அப்பிள்ளைகள் அழுவதைக் கண்டு அவர் கேலிசெய்து நையாண்டி பண்ணுவாராம்.

உறையூரிலே மேளக்காரத் தெருவிலே வாழ்ந்துவந்த வித்துவான் முத்துவீர ஆசாரிதான் அவரின் ஆசான். தமது ஐந்தாவது வயதிலேயே அவரிடம் தமிழ் கற்கத் துவங்கிய பிச்சை இபுறுகீம் பதினைந்தாவது வயதிலேயே யாரும் எதிர் பாராத வகையில் பெரும் புலவரானார். ஆசானுக்கு மிஞ்சிய மாணக்கரானார். தமிழ் காக்கும் மறவர்களின் மணிச் சுடரானார்; தளபதியானார். இலக்கணக் கோடரியானார்.

அவர் எஸ். பி. ஜி. கல்லூரியில் தலைமைப் புலவராக இருந்துமட்டும் தமிழ்த் தொண்டு ஆற்றவில்லை. மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் புலவர்களில் ஒருவராக இருந்து பெரும் பணியாற்றினார். தாம் மதுரைத் தமிழ்ச் சங்கம் பற்றி அவருடன் கலந்தாலோசிக்க விரும்புவதாகவும் எனவே தம்மை வந்து சந்திக்குமாறும் பாலவனத்தம் ஜமீன்தார் பாண்டித்துரைத் தேவர் அவருக்குப் பல மடல்கள் தீட்டியும் அவர் பல்வேறு அலுவல்களின் காரணமாக அவ்விதம் செய்ய இயலாது போகவே பாண்டித்துரைத் தேவரே அவரைச் சந்தித்து ஆலோசனை கலப்பதற்காக அவரின் இல்லம் வந்தார். அவருக்கு இராஜோபசாரம் நல்கி ஆலோசனை பல பகர்ந்தார் புலவர். இராமநாதபுரம், எட்டயபுர மன்னர்கள் அவருக்குப் பரிசிலும் மான்யமும் நல்கி அவரைக் கௌரவித்தனர். அவருடன் சேர்ந்திருந்து அவர் எடுத்த புகைப்படங்கள் பலவாகும்.

அவரைப் புலவர் பெருமக்கள் தேனை ஈ மொய்ப்பது போன்று எப்பொழுதும் மொய்த்துக்கொண்டிருப்பார்கள்.

அவர்களுடன் அவர் அன்புடன் உரையாடி அளவளாவுவார். அவர்களுக்கேற்படும் இலக்கணம் பற்றிய ஐயங்களை அவர் களின் மனத்தில் பதியும்வண்ணம் வெகு எளிதாக விளக்கு வார். புரிந்துகொள்ள வந்த புலவர் கூட்டம் பூரித்து வியந்து போகும், அவருக்கு நினைவாட்சி மிக அதிகம். கலைஞானம் பற்றிய வரையில் எது கேட்டாலும் கேட்டு வாய் மூடுவதற்கு முன் பளிச்சென்று பதில் கூறிவிடுவார். தொல்காப்பியம் முழுவதும் அவருக்கு மனப்பாடமாகவே இருந்தது. எனவே அவரைக் 'குட்டித் தொல்காப்பியர்' என்று பலர் போற்றிப் புகழ்ந்தனர்.

மாணவர்களும் அவருக்குப் பெரும் மதிப்பு நல்கிவந்த னர். அவர் நீரிழிவு நோயின் காரணமாக சிறிது ஓய்வுபெற்ற பொழுது எஸ். பி. ஜி. கல்லூரியில் அவருடைய இடத்தில் அவராலேயே அமர்த்தப்பட்ட அவரின் மாணவர் வேங்கட சாமி நாட்டாரை மாணவர்கள் கிண்டல்பண்ணத் துவங்கி னார்கள். இதனை நாட்டார் படுத்த படுக்கையாய்க் கிடந்த பிச்சை இபுறாகீம் புலவரிடம் கூறவே, அவர் நாட்டாரைக் கௌரவிக்குமாறு மாணவர்களுக்கு ஒரு மடல் எழுதினார். அதுமுதல் மாணவர்கள் தங்களின் குறும்புத்தனத்தை விட் டொழித்தனர்.

வீட்டிலேனும்சரி, வெளியிலேனும்சரி அவர் எப்பொழு தும் செந்தமிழில் இலக்கணத்தோடுதான் பேசுவார். கொச் சைத் தமிழில் பேசுவோரைக் கண்டு அவர் இரக்கப்படு வார். அவர்கள் பேசும் பேச்சை மிகப் பரிவோடு திருத்தம் செய்துகாட்டுவார். இதன் காரணமாக, அவரிடம் பேச வருவோர்க்கெல்லாம் சிறிது அச்சமாகவே இருக்கும்.

எப்பொழுதும் யாருடனும் இனிமையாகப் பேசும் அவ ரைத் தூங்கும்போது மட்டும் யாரும் எழுப்பிவிடின், கடும் சினத்துடன் வசைபாடும் காளமேகமாக மாறிவிடுவார்.

அவர் கவி இயற்றத் துவங்கிவிட்டால் விறுவிறுவென்று தான் எழுதிக்கொண்டு செல்வார். இடையிடையே நிறுத்தி மற்றொரு தடவை நிறைவுசெய்யும் பழக்கமோ அல்லது எழு தியதை அடித்துத் திருத்திப் புதுப்பிக்கும் பழக்கமோ அவரி

டம் கிடையாது. சிலபொழுது இரவில் வெகுநேரம்வரை வீற்றிருந்து கவி புனைவதில் களிப்புடன் காலத்தைக் கழித்துக்கொண்டிருப்பார்.

இசையில் அவருக்கு அளவற்ற அவா. இசை விழா எங்கு நிகழினும் அங்குச் சென்று இசை வெள்ளத்தில் மூழ்கி மெய்மறந்து சொக்கி மகிழ்ந்துகொண்டிருப்பார். இசைப் பாக்கள் இயற்றியபின் இசை வல்லாரைக் கொண்டு இராக அமைப்பைச் சீர்செய்து பாடக்கேட்டு மகிழ்வார்.

அவருக்கு உர்துவைப் பிறர் பேசின் விளங்கிக்கொள்ளும் ஆற்றல் மட்டும் இருந்தது. ஆங்கிலம் அவருக்கு அறவே தெரியாது.

அவருடைய குடும்பமோ பெரியது. நாளொன்றுக்கு அவர் வீட்டில் நாற்பது பேருக்குமேல் சாப்பிட்டுவந்தார்கள். உற்றார் உறவினர்கள் எல்லாம் பெரும்பாலும் ஏழைகள். எனவே அவர்களையெல்லாம் அவர்தம் வீட்டிலேயே வைத்துப் போஷித்தார். அவருக்கு மூன்று மனைவியரும் ஐந்து ஆண்மக்களும் ஏழு பெண்மக்களும் இருந்தனர். அவர்களும் அவரின் போக்குப்படி விருந்தினர்களை உபசரிப்பதில் கைதேர்ந்தவர்கள். பற்பல நற்செயல்களுக்கு அறம்பல நல்கி வாழ்ந்தது அக் குடும்பம். எனவே பழமரத்தைச் சுற்றிப் பல வௌவால்கள் அலைவது போன்று அவருடைய வள மனையைச் சுற்றிப் பலர் வட்டமிட்டுக்கொண்டிருந்தனர். எனினும் அவர் தமிழார்வமே மிகுந்து தொழிலைக் கவனிக்காது விட்டதால் தொழில் நாளாசரியில் நசித்தொழிந்தது. எனவே, இலட்ச ரூபாய் சொத்துக்களுக்கு உரியவராய் இருந்து, வந்து போகும் கவிவாணர்களுக்கு வாரி வழங்கி அவற்றையெல்லாம் தொலைத்து அவர் இறக்கும்பொழுது நாலாயிர ரூபாய்க் கடனுடன் இறந்தார்.

அப் பெரும்புலவர், ஆழம் காணமுடியாத இலக்கணக் கடல், பிறருக்குத் தமிழறிவை ஊட்டுவதிலேயே ஆர்வம் கொண்டாரே யன்றித் தம் மக்களுக்குத் தமிழறிவை ஊட்ட அணுவத்தனையும் முயற்சி செய்யவில்லை. அவர்களுக்கு ஆங்கிலக் கல்வியை ஊட்டவே அரும்பாடுபட்டார். எனவே, அவருடைய குடும்பத்தில் அவருடன் தமிழ்ப் புலமையும் செத்தொழிந்தது.

எல்லோரும் இலக்கணம் கற்று, இன்பத் தமிழின் சுவை அறிந்து போற்றிப் புவியெலாம் தமிழ் ஓசை முழங்கச் செய்யவேண்டுமென்னும் இதயத் துடிப்பால் உந்தப்பட்டு இன்பத் தமிழ் இலக்கண விளக்கம் என்றதொரு பெரும் நூலையும் தம் வரலாற்றினையும் இன்னும் பல ஆயிரம் ஆயிரம் கவிதைகளையும் அவர் எழுதிவைத்திருந்தார். எனினும் அவையெல்லாம் செல்லுக்கும் கறையானுக்கும் இரையாகி விட்டன. அவர் இறந்துபோன போதினும் அவரின் இதயத் துடிப்பு இன்று தமிழன் ஒவ்வொருவனின் இதயத்திலும் வாழ்ந்து 'உலகமெலாம் தமிழ்முழக்கம் செய்திடுவோம்' என்று இடைவிடாது செப்பிக்கொண்டுள்ளது. அவர் கண்ட கனு நனவாகும் நாள் வெகு தொலைவிலில்லை.

# சதாவதானி

# செய்குதம்பிப் பாவலர்

1907-ஆம் ஆண்டு மார்ச் திங்கள் பத்தாம் நாள் சென்னையிலுள்ள விக்டோரியா பப்ளிக்ஹால் மக்கள் வெள்ளத்தால் நிறைந்திருந்தது. எங்கு நோக்கினும் மக்களின் தலைகளே காணப்பட்டன. பண்டிதரும், பாமரரும் மல்கிய அப்பெருந்திரளில் முத்தமிழ்த்துறைபோகிய முதியோர்களும், வடமொழிப் புலவர்களும், வழக்கறிஞப் பெருமக்களும், ஆசிரியப் பெருந்தகைகளும் வீற்றிருந்தனர். காஞ்சி மகாவித்வான் இராமசாமி நாயுடு, திருவெட்டீசுவரன் பேட்டை வடிவேலு செட்டியார், அச்சமயம் சட்டக்கல்லூரி மாணுக்கராயிருந்த டி. கே. சிதம்பரநாத முதலியார், வித்வான் வசிஷ்ட பாரதி, தஞ்சை சுப்பிரமணிய ஐயர், பச்சையப்பன் கல்லூரி தமிழ்த்துறைத்தலைவர் திருவேங்கட சாமிநாயுடு, புலவர் கா. நமசிவாய முதலியார், பூவை அஷ்டாவதானம் கல்யாண சுந்தர முதலியார், ஹிந்து, சுதேசமித்திரன் ஆகிய செய்தித்தாள்களின் ஆசிரியராகப் பணியாற்றிய ஜி. சுப்ரமணிய ஐயர் ஆகிய தமிழறிஞர் பலர் அங்கிருந்த மேடையை அலங்கரித்தனர். சென்னை உயர்நீதி மன்றத்தின் தமிழறியாத வெள்ளை நீதிபதி ஒருவரும் அங்குவந்து வீற்றிருந்தார்.

அந்தத் தமிழ்ப் பேரவைக்கு வித்வான் கண்ணப்ப நாயுடு தலைமை தாங்கினர். அப்பொழுது ஒரே பொழுதில் நூறு அலுவல்களை ஆற்றிக் காண்பிக்கக்கூடிய அந்த அபூர்வ மனிதரும் மேடைமீது வந்து காட்சி வழங்கினர். அப்பொழுது மக்கள் வெள்ளம் அலைமோதியது.

அந்த அபூர்வ மனிதர் இடுப்பில் தூய வெண் துகில் அணிந்து, வெறு மேனியுடன் மேடைமீது வந்த

தும் அவருடைய நா 'மெய்ஞ்ஞான நாதா, மெய்ஞ் ஞான நாதா' என்று சிலேடைப் பொருள்கொண்ட சொற்றொடர் ஒன்றை உச்சரித்துக் கொண்டிருந்தது. அவ்வாறு உச்சரித்து 'மெய்ஞ்ஞான நாதாவாகிய இறைவனே! எனக்கு மெய்ஞ்ஞான நாவைத்தா' என்று அவர் இறைஞ்சிக்கொண்டிருந்தார். அப்பொழுது அவருடைய கைகள் லாடச்சங்கிலியைத் தவறுதபடி மாட்டுவதும், கழற்றுவதுமாக இருந்தன. இந்த இரு அவதானங்களையும் அவர் தொடர்ந்து செய்தவண்ணம் மேடைமீது உலவினர். அப்பொழுது ஜி. சுப்ரமணிய ஐயர் எழுந்து 'சிலேடையாகக் கடவுள் வணக்கச் செய்யுள் ஒன்று பாடுவீராக' என்று கூறினர். அடுத்த கணம் அந்த அபூர்வ மனிதரின் வாயிலிருந்தும்

சிரமாறுடையான் திருமாவடியைத்
திரமா நினைவார் சிரமே பணிவார்
பரமாதரவா பருகா ருருகார்
வரமாதவமே மலிவார் பொலிவார்

என்ற செய்யுள் ஒன்று வெளிப்போந்தது. இதிலே அந்த அபூர்வ மனிதர் காளமேகப் புலவர்

சங்கரர்க்கு மாறுதலை சண்முகற்கு மாறுதலை
ஐங்கரர்க்கு மாறுதலை ஆனவே—சங்கைப்
பிடித்தோற்கு மாறுதலை பித்தனுர் பாதம்
படித்தோர்க்கு மாறுதலை பார்.

என்று ஒரு வெண்பாவில் பாடிய கருத்தை மூன்று சொற்கள் அமைந்த ஒரு சொற்றொடராகிய 'சிரமாறுடையார்' என்பதில் அடக்கி, அதற்குமேலும் அச்சொற்றொடரில் பொருள் வைத்துப் பாடினர். எப்படி என்று வினவுகின்றீர்களா? கூறுகின்றேன், கேளுங்கள்.

சிரம் ஆறு உடையவன்—இது ஆறு தலைகளை யுடைய முருகனையும்,
சிரம் ஆறு உடையான்—இது ஆறு ஆகிய கங்கையைத் தலைமேல் கொண்ட சிவனையும்
சிரம் மாறுடையான்—இது மாறுன தலைகளை யுடைய விநாயகரையும்
சிரம் ஆறு உடையான்—காவிரிக்கும் கொள்ளிடத் துக்கும் நடுவிலுள்ள ஸ்ரீ ரங்கத்தில் இருக்கும் திருமாலையும்
சிரம் ஆறு உடையான்—தலையாய நல்வழியை மக்களுக்குக் காட்டுகின்ற அல்லாஹ்வையும் குறிக்கும்.

*இதன் பொருள் என்னவெனில் இறைவனின் திருவடிகளைத் திடமாக நினைந்து அவனை வணங்கிப் பிற மாதர்கள் மீது இச்சைப்பட்டு உருகாது இறைவனையே எண்ணி உருகிக் கொண்டிருப்பவர்கள் பெரும் தவத்தினராய் விளங்கிச் சிறப்புப் பெறுவர் என்பதேயாகும்.*

*இத்தகைய அருமையான செய்யுளை அவர் அம்மன்றம் எதிரொலி செய்யும் வண்ணம் முழங்கியதும், அவரை எவ்வாற்றுனும் தோற்கடிக்க வேண்டும் என்று கங்கணம் கட்டிக்கொண்டிருந்த பல புலவர்கள் கண்ட பத்திரிகை என்ற சோதனையைத் தொடங்கினர்.*

*கண்ட பத்திரிகை என்பது ஒருவர் தம் மனப் போக்கின்படி ஒரு செய்யுளை யாத்து, அதிலுள்ள ஒவ்வொரு எழுத்துக்கும் முறையே வரிசை எண் கொடுத்து தனித்தனி எழுத்துக்களாகத் துண்டுபடுத்திக் குலுக்கி வைத்துக் கொண்டு அச்செய்யுளில் உள்ள மொத்த எழுத்துக்கள் இத்தனை என்று அவதானியிடம் கூறிவிடுவார். அதன்பின் தொடர்பில்லாமல் ஒவ்வொரு எழுத்தாக அவரிடம் எடுத்துக்கொடுத்து, 'இன்ன எண்கொண்ட எழுத்து இது' என்று கூறுவார். அவற்றை அவதானி தம் மனத்திலுள்ள*

சரியான கட்டத்தில் போட்டு வைப்பார். இதே பொழுதில் அவர் தம் மனத்தில் மற்ற அவதானங்களையும் கவனித்துக்கொண்டு, வரிசையாக ஒவ்வொரு செயலிலும் சோதனை செய்வோருக்குப் பதிலளித்துக் கொண்டிருப்பார். பிறகு கண்ட பத்திரிகை கேட்டவர் பிறருக்குத் தெரியாமல் தாம் எழுதிவைத்து, மாற்றிமாற்றி எண்ணும் எழுத்துமாகக் கொடுத்த செய்யுளை அவதானி கூறிவிடுவார்.

இவ்வாறு அந்த அபூர்வ மனிதர் திறம்பட அவதானம் செய்துவரும்பொழுது, ஒருவர் எழுந்திருந்து 'விராடனையே பெண் எனலாமே' என்பதனை ஈற்றடியாக வைத்து ஒரு வெண்பாப் பாடச் சொன்னார். இதைக் கேட்டதும் அங்கு வீற்றிருந்த அனைவரும் பெரிதும் வியப்புடன் விழித்தனர். எவ்வாறு விராடன் என்ற ஆண்மகனைப் பெண் என்று கூறலாம் என்று ஏக்கமுற்றனர். ஆனால் அதைக் கேட்டு அந்த அபூர்வ மனிதரோ சற்றேனும் மயங்கவோ, தயங்கவோ இல்லை. உடனே

உண்ணும் பொழுதும் உறங்கும் பொழுதும் ஒன்றை
எண்ணும் பொழுதும் எரிமுன்னாய்—மண்ணில்
வராடவனையே தெய்வம் மன்னெனும் சொற்ற
விராடனையே பெண்என லாமே

என்று ஒரு வெண்பாவைக் கூறினார். இதன்பொருள் என்னவெனில், உண்ணும் பொழுதும், உறங்கும்பொழுதும், ஒன்றை எண்ணும் பொழுதும் அக்கினி சாட்சியாகத் தன்னைப் பிடித்த ஆடவனையே தெய்வமென்று கருதி, அவனுடைய சொற்றவிராதவள் தனையே பெண் என்று கூறலாம் என்பதேயாகும். இதில் 'விராடனையே பெண் எனலாமே என்று ஈற்றடி அமைந்திருந்தபோதினும், அதற்கு முன்னுள்ள அடியிலுள்ள ஈற்றுச் சொல்லாகிய 'சொற்ற' என்பதுடன் அது சேரும்பொழுது, 'சொற்றவிராள்தனையே பெண்ணெனலாமே' என்று பொருள்படுதல் காண்க. இவ்வாறு அவர் தம் அறிவின் திறமையால் பதில்கூறி விடவே, மற்றொரு புலவர் உடனே எழுந்திருந்து, 'மாமனுக்குக் கந்தன் மகன்'

என்ற ஈற்றடியைக் கொடுத்து, ஒரு வெண்பாப் பாடுமாறு கூறினர். இதைக்கேட்டதும் அந்த அபூர்வ மனிதர் சிறிது திணறினர். 'மாமனுக்குக் கந்தனை எவ்வாறு மகன் என்று கூறஇயலும்' என்று அவர் சற்று விழித்தார். எனினும், கேள்வி கேட்டவரைப் பார்த்து, 'சற்றுப் பொறும்' என்று கூறினர். இதுகாறும் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் மடமடவென்று மறுமொழி கூறிவந்த அவர் இப்பொழுது சிறிது திணறியதும், மன்றத்தின் வெளியே நின்றுகொண்டிருந்தவர்கள்' 'அகப்பட்டுக்கொண்டான் பாவலன்' என்று கூறியதும் அந்த அபூர்வ மனிதரின் செவியில் வீழ்ந்தது. அப்பொழுது ஆங்கு நின்றுகொண்டிருந்த ஓர் இளவல், 'உமா மனுக்குக் கந்தன் மகன்' என்று ஈற்றடியாக வைத்துக் கவி புனைந்தால் சரியாய்ப் போய்விடுமே என்று சொற்றதும் அவர் செவிப்பட்டது. எனினும் அவற்றை அவர் பொருட்படுத்தாது, 'மெய்ஞ்ஞான நாதா, மெய்ஞ்ஞான நாதா' என்று உச்சரித்த வண்ணம் அவர் மற்ற அவதானங்களைக் கவனித்து வந்தார். உடனே அவருடைய வாயிலிருந்து, 'காமனுகிய மன்மதனுடைய மாமனுகிய சிவபெருமானுக்கு கந்தனுகிய சுப்ரமண்யர் மகன்' என்று பொருள்படும்

> அண்டர் முறையால் அலைகடலில் பள்ளிகொண்ட
> கொண்டல் வண்ணமேனிக் குருசிலாம்—விண்டு
> [பெற்ற
> காமனுக்கு முற்றும் கருதும்படி அமைந்த
> மாமனுக்குக் கந்தன் மகன்.

என்று ஒரு வெண்பா புறப்பட்டது: அதைக் கேட்டதும் அங்கு வீற்றிருந்த அனைவரும் வியப்பு மிகுதியால் கல்லெனச் சமைந்தனர்.

எனினும் ஒரு புலவர் எழுந்திருந்து, 'கண்கெட்டபின் என்றும் காணுத காட்சியைக் கண்டனரே' என்பதனை ஈற்றடியாக வைத்து ஒரு கட்டளைக் கலித்துறை பாடுக என்று கூறினர். இதைக்கேட்டதும் அங்கு வீற்றிருந்தோர் அனைவரும், 'இஃதென்ன புதுமையாக உள்ளது! கண்ணுள்ள

போதுதானே எல்லாக் காட்சியையும் காண இயலும். கண் கெட்டபின் எக்காட்சியைக் காண்பது' என்று ஏங்கினர். ஆனால் அந்த அபூர்வ மனிதரின் மூளை இதைக் கேட்டதும் வெகுவேகமாக வேலை செய்தது. திருவிளையாடற் புராணத்தில் திண்ணனூர் என்ற சிவனடியாரின் வரலாறு அவருக்கு உடனே நினைவுக்கு வந்தது. ஒருநாள் திண்ணனூர் காட்டுக்குச் சென்ற பொழுது, தாம் நாள்தோறும் வழிபட்டுவரும் உருவச் சிலையின் கண்களில் யாரோ அங்கு வந்து பலி கொடுத்துச் சென்றவர்கள் அந்தப் பலிப்பொருளின் குருதியைத் தடவிவிட்டுச் சென்றிருப்பதைக் கண்டதும், 'ஐயோ! இஃதென்ன கொடுமை!! எவரோவல்லவோ நாம் வழிபடும் தெய்வத்தின் கண்களைப் புண்படுத்திச் சென்றுவிட்டனர் என்று கலங்கி, உடனே தம் கண்களிரண்டையும் பெயர்த்து அச்சிலையின் கண்களில் பொருத்தியதும் உடனே அத்தெய்வம் அவர்முன் காட்சி வழங்கி அவரின் பக்தியை மெச்சி அவரை வாழ்த்திய'தாம். அப்பொழுது அவர் கண்ணுள்ள போது காண இயலாத தெய்வ தரிசனத்தைக் கண்டு கவிபேருவகை எய்தினராம். இவ்வரலாறு அந்த அபூர்வ மனிதருக்கு நினைவு வந்ததும் உடனே அவர்

> விண்தொட்டசையும் தருமலிகானில் மிகுதிண்ண
> [னூர்
> பண்பட்ட செந்தமிழ்ப் பாவாணர் போற்றும் பரமன்
> [விழி
> புண்பட்ட தென்றுதம் கண்ணைப் பெயர்த்துப்
> [பொருத்திஇரு
> கண்கெட்ட பின்என்றும் காணாத காட்சியைக்
> [கண்டனரே

என்று பாடினார். இதைக் கேட்டதும் அம்மன்றம் முழுவதும் மகிழ்ச்சிப் பேரொலி முழங்கியது.

உடனே மற்றொரு புலவர் எழுந்திருந்து 'தாதுலராத கோதை' என்பதன் பொருள் என்னவென்று வினவினார். இதைக் கேட்டதும் அந்த அபூர்வ மனிதர் 'மகரந்தப்பொடி மாறாத கூந்தலுடையாள்' என்று கூறிவிட்டு அடுத்த அவதானத்தைக் கவனிக்கச் சென்றுவிட்டார். மீண்டும் அவர்

அவ்வழியே திரும்பும்பொழுது அப் புலவர் மீண்டும் 'தாது லராத கோதை' என்று கூறியதும் மீண்டும் 'மகரந்தப் பொடி மாருத கூந்தலுடையாள்' என்று கூறிவிட்டுச் சென் ருரவர். எனினும் அவரின் மூளை இக்காலே வெகு வேக மாக வேலை செய்தது. 'என்ன நாம் அவர் கேட்ட கேள் விக்குச் சரியான பொருள் கொடுத்திருக்க மீண்டும் அக் கேள்வியையே அவர் கேட்கக் காரணமென்ன' என்று சிந் தித்தது. உடனே அவருக்கு திருவிளையாடற் புராணத்தில் வரும் இச் சொற்ருெடர் நினைவுக்கு வந்தது. அதில் ஓர் அமங்கிலியைக் குறிப்பதற்காகவே இச் சொற்ருெடர் பயன் பட்டபொழுது தாம் ஒரு சுமங்கிலியைக் குறிக்கும்வண்ணம் பொருள்கூறியதன் தவற்றை உணர்ந்தார். மீண்டும் அவர் அவ்வழியே வரும்பொழுது அப் புலவர் மறுபடியும் 'தாது லராத கோதை' என்று கூறவே 'புழுதிபடிந்த கூந்தலுடைய அமங்கிலியாள்' என்று மறுமொழி கூறினுர். அதைக் கேட் டதும் அப் புலவர் மீண்டும் வாய் திறக்கவில்லை.

ஒருவர் அவரிடம் இலக்கண நூல் பாடம் கேட்டார். கடினமான கேள்விகளுக்குக் கணநேரத்தில் மறுமொழி பகர்ந்தார் அவர். இரண்டொருவர் இலக்கணம் பற்றிக் குதர்க்கமான கேள்விகளை விடுத்தனர். அவற்றிற்குச் சரி யான வாயாப்புக் கொடுத்தாரவர்.

இதன்பின் தாம் விரும்பிய இலக்கிய நூல் ஒன்றிலிருந்து ஒருவர் ஐயம் கேட்டார். அதனை அடுத்தகணம் தெளிவு படுத்தினுரவர். இவ்வாறு ஐவர் ஐம்பெரும்நூற்களிலிருந்து எழுப்பிய ஐயங்களுக்கும் சரியான விளக்கம் கூறினுர்.

ஆயிரம் ஆண்டுகளுக்கிடையில் மாதம், தேதி சொன் ஞல் அந்த அபூர்வ மனிதர் அன்று என்ன கிழமை என்று தெரிவித்தார். ஐவர் ஐந்து வெவ்வேறு தேதிகள் கேட்ட னர். அவர் பதிலிறுத்தார். ஆனுல் ஒருவர் மட்டும் மன நிறைவு கொள்ளவில்லை. 1905-ஆம் ஆண்டில் ஒரு தேதி கூறி அந்நபர் 'அன்று என்ன கிழமை' என்று வினவினுர். அந்த அபூர்வ மனிதர் 'சனிக்கிழமை ஐயா' என்ருர். அந் நபர் 'இல்லை' என்ருர். அவர் தம்முடைய மற்ற அவதா னங்களை ஆற்றிக்கொண்டே 'சனிக்கிழமை ஐயா' என்ருர். மீண்டும் அந்நபர் மறுத்தார். மூன்ரும்முறையும் அவர்

சனிக்கிழமை என்று கூறவும் அந்நபர் மறுக்கவும் கூட்டத்தில் சலசலப்பு ஏற்பட்டது. நல்லவேளையாக மேடைமீது வீற்றிருந்த ஒருவரிடம் 1905—ஆம்ஆண்டின் நாட்குறிப்பு இருந்தது. அதையவர் திருப்பிப் பார்க்கவே அவ்வாண்டில் குறிப்பிடப்பட்ட தேதி சனிக்கிழமையாகவே இருந்தது. இறுதியில் வினா எழுப்பிய அந்நபர் தாம் 1805-ஆம் ஆண்டில் கிழமை கேட்டதாக எண்ணிக்கொண்டதாகத் தெரிவித்துத் தம்முடைய தவற்றினுக்கு மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

ஏதாவதொரு ஆண்டில் மாதம், தேதி சொல்பவருக்கு அன்று என்ன நட்சத்திரம் என்பதை அந்த அபூர்வ மனிதர் தம் அறிவாற்றலினால் கூறினார். இவ்வாறு ஒருவருக்கு மட்டும் கூறவில்லை. இதேமாதிரி வினா விடுத்த ஐவருக்கும் சரியான விடை பகர்ந்தார்.

பல பெரும் தொகைகளைக் கூறி அவற்றின் கூட்டுத் தொகை என்ன, பெருக்குப்புள்ளி என்னவென்று வினவப்பட்டபொழுது அந்த அபூர்வ மனிதர் சற்றேனும் சளைக்கவோ மலைக்கவோ செய்யாது சரியான மறுமொழி பகர்ந்தார். இவ்விதம் ஐவர் கேட்ட கேள்விகளுக்கும் சரியான விடை அருளினார்.

புத்தம்புதிய வெண்பாவை ஒருவர் கூறின் அவர் கூறிய வாய் மூடுவதற்கு முன் அந்த அபூர்வமனிதர் அதனைத் திரும்பக் கூறினார். பத்து நபர்கள் அடுத்தடுத்து பத்து வெண்பாக்களைக் கூறினர். உடனே அந்தப் பத்து வெண்பாக்களையும் அவர் ஒப்புவித்தார். இவ்வாறு அவர் நூற்றைம்பது வெண்பாக்களைத் திரும்பக் கூறினார். இதற்குமுன் யாரும் அவதானத்தின்போது இவ்விதம் செய்ததேயில்லை.

அவருக்குப் பின்னால் ஒருவன் இருந்துகொண்டு அவருடைய முதுகிற் பொடிக் கூழாங்கற்களை எறிந்துகொண்டிருந்தான். மற்றொருவன் நெல்லை எறிந்துகொண்டிருந்தான். இவ்விதம் எறியும் இருவரும் இடையிடையில் இரண்டு அல்லது மூன்று கல்லை அல்லது நெல்லைஎறிவதுண்டு. அவர்கள் எத்தனை எறிகிறார்கள் என்பதை அவரவர்கள் எண்ணிவருவார்கள். தமது முதுகில் அவை படும் உணர்ச்சி

யால் எறியப்பட்ட கல் இத்தனை, நெல் இத்தனை என அந்த அபூர்வ மனிதர் அறிவித்தார். இவ்வாறு ஐந்து முறைகள் அவர் சோதிக்கப்பட்டும் அவர் அச் சோதனையில் வெற்றியே பெற்றார்.

மேடைக்குப் பின்னால் 'காலிங்பெல்'—அழைப்பு மணி ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அதனை ஒருவர் சிறிது நேரத்திற்கு ஒருதடவை அழுத்தி ஒலி எழுப்பிக்கொண்டே யிருந்தார். அது எத்தனை தடவை ஒலித்தது என்பதனை அந்த அபூர்வ மனிதர் தம்முடைய மற்றைய அவதானங்களுக்கிடையே தெரிவித்து வந்தார். இவ்விதம் ஐந்து முறை அவரிடம் 'இதுவரை எத்தனை தடவை மணி அடித்தது' என்று வினவப்பட்டதற்குச் சரியான பதில் கூறினார்.

சதாவதானம் துவங்குமுன் சென்னைமாநகரின் பல்வேறு கிணறுகளிலுள்ள தண்ணீர் வெவ்வேறு பாத்திரங்களில் கொண்டுவரப்பட்டது. அவை ருசி பார்க்கப்படுவதற்காக அந்த அபூர்வமனிதரிடம்கொடுக்கப்பட்டன. ஒவ்வொன்றும் எந்த யெந்தக் கிணற்றுத் தண்ணீரென்று கூறப்பட்டு அவ் விதம் பாத்திரங்களின்மீது எழுதி ஒட்டப்பட்டது. அவதானங்கள் நடைபெறும்போது இடையிடையே இத் தண்ணீர் கொடுக்கப்பட்டது. உடனுக்குடன் அத் தண்ணீரைக் குடித்து ருசி பார்த்து அது எந்தக் கிணற்று நீர் என்று அந்த அபூர்வ மனிதர் கூறினார். இவ்விதம் ஐந்து தடவைகள் சோதிக்கப்பட்டன.

வெவ்வேறு நிறையுள்ள ஏழு வகையான பாத்திரங்கள் கொணரப்பட்டு அவதானம் ஆரம்பிக்குமுன் அவற்றின் ஓசையும் நிறையும் கூறப்பட்டன. பின்னர் அவதானங்கள் நிகழ்ந்துகொண்டிருக்குங்கால் அவற்றில் ஒன்றைத் தட்டி ஓசைஉண்டாக்கப்பட்டது. உடனே அதுஎந்தப் பாத்திரம், அதன் எடை எவ்வளவு என்று அந்த அபூர்வமனிதர் அறிவித்தார். இவ்விதம் இடையிடையே ஏழு பாத்திரங்களும் தட்டிக்காட்டப்பட்டன. இச் சோதனை ஐந்து தடவை நடைபெற்றது.

பதினாறு கட்டங்கள் போட்ட ஒரு தாளை ஒருவர் வைத்துக்கொண்டு இதில் எப்பக்கமிருந்து எப்பக்கம் (வலமிருந்து

இடம் கீழிருந்து மேல் குறுக்கே எப்படி வேண்டுமாலுைம்) கூட்டினாலும் ஒரு குறிப்பிட்ட எண் வரவேண்டும் என்று கேட்டார். அவர் அக் குறிப்பிட்ட எண்ணையும் கொடுத்தார். உடனே அந்த அபூர்வ மனிதர் ஒவ்வொரு கட்டத்திலும் எந்தெந்த எண் இருந்தால் அவ்விதமான பலன் கிட்டுமென்று தெரிவித்தார். இதில் ஐந்துமுறை அவர் சோதிக்கப்பட்டார்.

ஒரு மூலையில் ஐவர் சீட்டாட அமர்ந்தனர். அவர்களுள் ஒருவருக்குச் சீட்டாட்டமே தெரியாது. எனவே தமது மற்றைய அவதானங்களுக்கிடையில் அவரருகில் சென்று அவர் விளையாடவேண்டிய முறையைக் கூறி அவர் வெற்றி அடைய உதவினார் அந்த அபூர்வ மனிதர். அந்நபர் மற்றவர்கள் இறக்கிய சீட்டுக்களைக் கூறியதும் 'நீ இந்தச் சீட்டைப் போடு' என்று அந்த அபூர்வமனிதர் ஆலோசனை கூறினார்.

வல்லின றகரத்தோடு கூடிய ஒற்றெழுத்து ஐந்து கொண்ட குறள் திருக்குறளிலே எது என்பது திரு கலியாண சுந்தர முதலியாரின் வினா. இதற்கு அந்த அபூர்வ மனிதர் குறள் வெண்பாவிலேயே பின்வருமாறு மறுமொழி பகர்ந்தார்.

அஞ்சிற்கொள் வாசகம் ஒன்றுண்டே அருமறையில்
நெஞ்சிற்கொள் வீர்அதனை அறிந்து

இதன் ஒரு பொருள் என்னவெனில்; அஞ்சிற்கொள்— ஐந்து வயதுப் பருவத்திலே கொள்ளவேண்டியது எது? கல்வி. இதன் மறு பொருள் என்னவெனில்: அஞ்சிற்கொள் —சிவாய நம என்றுஐந்தெழுத்தான பஞ்சாட்சரக் கருத்தை விட மேலாகக் கொள்ளவேண்டியது எது? கல்வி. இதன் வேறு பொருள் என்னவெனில்: வல்லின றகர ஒற்று ஐந்து கொண்டு கல்வி பற்றிய வாசகம் ஒன்றுள்ளதே திருக்குறளில். அக்குறள்தான் அது என்ற கருத்துக்களை அக் குறள் வெண்பாவில் கூறினார். திருக்குறளில் உள்ள எந்தக் குறளை அவர் இவ்வாறு கூறினார் என்று வினவுகின்றீர்களா?

கற்கக் கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக

என்ற குறளைத்தான்.

இவ்விதமாக சதாவதானம் அதாவது வகையில் இருபதும் தொகையால் நூறும் ஆன அவதானங்களை வெற்றிகரமாக முடித்து வாகை சூடியதும் அம் மன்றம் முழுவதும் களிப்புக் கடல் அகோரமாக அலைவீசி மோதியது. அவைத் தலைவர் உணர்ச்சி மீக்கூர்ந்து 'நீர் முகம்மதியர்களில் மகாமதி படைத்தவராவீர். ஆதலின் உமக்கு 'மகாமதி சதாவதானி' என்னும் பட்டம் சூட்டுகின்றேன்' என்று கூறி 'மகாமதி சதாவதானி' என்று மும்முறை அவரை அழைத்துக் கௌரவித்தனர். அப்பொழுது மகாமதி சதாவதானி என்ற பேரொலியே அம் மன்றம் முழுவதும் எதிரொலி செய்தது. இவ்வற்புத சாதனையைக் கண்டு அவரின் அச்சக முதலாளியான இட்டா—பார்த்தசாரதி நாயுடு எல்லையிலா மகிழ்வெய்தினர். ஓடோடிச் சென்று அவரை இறுகப்புல்லி அவரது இரு கைகளிலும் தங்கத் தோடாக்களை இட்டார். ஏனையோர் பட்டாடைகளையும் பொன்னாடைகளையும் போர்த்தனர். வந்திருந்த உயர் நீதிமன்ற நீதிபதியாகிய வெள்ளைத்துரை மகனார் 'இஃதென்ன விந்தை! ஓர் எண்ணத்தை நாம் புதிதாக எண்ணும்பொழுது மனத்தில் முன்பு இருந்துகொண்டிருக்கும் பழைய எண்ணம் வெளியேறிவிடுகிறது. ஒரேபொழுது இரு எண்ணங்கள் மனத்தில் தங்கா என்றல்லவோ நம்மனோர் எழுதிய உளத்தத்துவ நூல்களெல்லாம் கூறுகின்றன. இவரென்னவோ ஒரே பொழுதில் நூறு எண்ணங்களை மனத்தில் அடக்கிச் செயலாற்றிவிட்டாரே' என்று இறும்பூதெய்தினர். இவ்வாறு ஒவ்வொருவரும் மெய்ம் மறந்து நிற்கும்பொழுது, செயலாற்றும்பொழுது இதுகாறும் நூறு அவதானங்கள் செய்துவந்த அந்த அபூர்வ மனிதர் வாயால் நுரை நுரையாகக் கக்கிக்கொண்டு குப்புறக் கீழே வீழ்ந்துவிட்டார். உடனே அவரை அவருடைய நண்பர்கள் அம் மன்றத்தின் பின்பக்கமாகத் தூக்கிக்கொண்டு வெளியே சென்றனர். இதைக் கண்டு மக்களுக்கு ஏற்பட்ட ஏமாற்றத்திற்கு அளவில்லை. 'இவர் ஓர் இந்துவாக இருந்திருப்பின் நாங்கள் இவரை ஒரு பெரிய அவதாரப் புருடராக ஆக்கிவிடுவோம். முஸ்லிம்களுக்கு இவருடைய அருமை பெருமை தெரியவேண்டுமே' என்று இந்துக்கள் முஸ்லிம்

களைக் குறை கூறிக்கொண்டு சென்றனர். அன்றைய இந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் 'சதாவதானச் சிறப்பு' என்னும் சிறு நூலாக வெளிவந்தது. இவ்விதம் ஒரே பொழுதில் நூறு அவதானங்கள் செய்து உளத் தத்துவக் கொள்கையையே மாற்றியமைத்து தமிழுக்கும் தமிழனுக்கும் மங்காத பெரும் புகழை ஈட்டித்தந்த அந்த அபூர்வ மனிதர், மேதகை யார்? அவர்தாம் மகாமதி சதாவதானி செய்குதம்பிப் பாவலர் ஆவார்.

சதாவதானி செய்குதம்பிப் பாவலரைத் தரணிக்கு ஈயும் பேறு பெற்றது நாஞ்சில் நாட்டில் கோட்டாறு என்னும் ஊரை அடுத்த இலங்கடை என்னும் சிற்றூராகும். ஆங்கு,

> எக்கிரியில் எம்முறையில் என்னதவம் செய்தாஞே
> பக்கிறுமீ ருனென்னும் பண்புடையோன்—தக்கபுகழ்
> செந்தமிழ்சேர் நாவலனை செய்குதம்பிப் பாவலனை
> தந்ததந்தை ஆவதற்குத் தான்.

என்று புலவர் பெருமக்கள் போற்றிப் புகழும்வண்ணம் பக்கிறு மீருன் என்னும் பண்புமிக்கப் பெரியாரின் ஐந்தாவது மகஞக இவ்வவனியில் அவதரித்தார் அவர். ஐந்தாவது வயதில் அரபிப் பள்ளிக்கு அனுப்பப்பட்ட செய்குதம்பி திருகுர்ஆனையும் மற்றும் மார்க்க சம்பந்தமான நூல்களையும் மூன்ருண்டுக்குள் ஓதி முடித்துவிட்டார். அதன்பின் எட்டாண்டுப் பருவத்தை எட்டிப்பிடித்த செய்குதம்பியை அவரின் தாய் தந்தையர் தமிழ்ப் பள்ளிக்கூடம் ஒன்றில் சேர்த்தனர். அதில் அரை வகுப்பில் சேர்க்கப்பட்ட செய்குதம்பி இருபது நாட்களுக்குள் முதல் வகுப்பிற்கு மாற்றப்பட்டார். ஒருதிங்கள் கழித்து இரண்டாம் வகுப்பிற்கு மாற்றப்பட்டார். அவரின் அறிவுக்கூர்மையைக் கண்டு வியந்த தலைமை ஆசிரியர், பின்னர் சில திங்களில் அவரை நான்காம் வகுப்பிற்கு மாற்றிஞர். செய்குதம்பி அடுத்த ஆண்டு ஐந்தாம் வகுப்பிற் சேர்ந்து படித்துத் தேர்வில் சிறந்து விளங்கிஞர். அதற்குமேல் அவர் படிக்க விரும்பியும் அவரது தந்தையின் பணப்பை இடம் தரவில்லை. எனவே அவர் தம் தந்தையுடன்

சேர்ந்து நெசவுத் தொழிலில் ஈடுபட்டார். எனினும் அவருடைய மனம் மட்டும் கல்விகற்பதிலேயே அவாவுற்று நின்றது.

அக்காலே இலங்கடை என்னும் அவ்வூரில் சங்கர நாராயணர் என்னும் புலவர் ஒருவர் மாணவர்களுக்குத் தமிழ் இலக்கணங்களேயும், இலக்கியங்களேயும் பாடம் சொல்லிக் கொடுத்துவந்தார். செய்குதம்பியும் மற்றும் சிலரும் அவரை அணுகித் தங்களுக்குப் பாடம் சொல்லித்தருமாறு வேண்டிக்கொண்டனர். அவரும் அதற்கு இணங்கினுர். குறித்த நன்னுளில் அவர்கள் அனைவரும் ஆசிரியரை அணுகி அவர்க்குத் தரவேண்டிய காணிக்கைகளே வெற்றிலேயில் மடித்துக்கொடுத்தனர். அவர்களில் ஒவ்வொருவரும் ஏழு முதல் மூன்றுரூபாய்வரை ஆசிரியருக்குக் காணிக்கை நல்கினர். செய்குதம்பி வறுமைவாய்ப்பட்டவராதலின் எட்டணுவை வெற்றிலேயில் வைத்துக்கொடுத்தார். ஆசிரியர் அதனைமட்டும் தனியே வைத்துவிட்டுப் பாடம் துவக்கினுர். பாடம் சொல்லிக்கொடுத்து முடிந்ததும் மற்ற மாணவர்களே எல்லாம் போகச் சொல்லிவிட்டு, அவரை மட்டும் நிறுத்திக்கொண்டு, அவரிடம் அவர் தந்த வெற்றிலே மடிப்பைத் திருப்பிக்கொடுத்தார் ஆசிரியர். இதைக்கண்டதும் செய்குதம்பிக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு அளவில்லே. கண்கள் கலங்க அவர் ஆசிரியரை நோக்கி, 'ஆசிரியப் பெரும! அடியேன் ஓர் ஏழை. பலநாள் பாடுபட்டு உழைத்து இந்த எட்டணுவைச் சேகரித்துவந்து தங்களின் பாதகாணிக்கையாக வைத்தேன். 'தேவரீர், அதனை அன்புகூர்ந்து ஏற்று என்னைப் புறக்கணிக்காது எனக்குப் பாடம் சொல்லித்தர வேண்டும்' என்று கெஞ்சித் துவண்டு நின்ருர். அதைக் கேட்ட ஆசிரியர் புன்னகை பூத்து, 'தம்பி, நீ கொடுத்ததை நான் ஏற்றுக்கொண்டேன். எனினும் அதனை நான் என் அன்பளிப்பாக உனக்குத் திருப்பித்தருகிறேன். ஏற்றுக்கொள். நீ நன்ருக என்னிடம் வந்துபடி. உன் அவா அடங்கும்வரை வந்து படி. இன்று இல்லாவிடினும், எதிர்காலத்தில் உன்னிடம் நான் காணிக்கை பெறுவேன்' என்று கூறினுர். புலவர் சங்கர நாராயணர் தமக்குச் செய்த இந் நன்றியைசெய்குதம்பி பிற்காலத்தில் ஒருபோதும் மறக்கவே இல்லே. கோட்டாற்றுப் பெரும் செல்வரான பாக்கியம் பண்டாரத்துக்கு அவர் எழுதிய ஒரு மடலில் தம் ஆசா

னுக்கு உதவி செய்யுமாறு பின்வருமாறு வேண்டும் அழகைப் பாருங்கள்.

உள்ளபடிப் பல்கலையும் ஓகையுடன் என்றனக்குக்
கள்ளமற ஓதிவைத்த கண்மணியை—எள்ளளவும்
நீங்காமல் நேசம் நெகிழாமல் பக்கவிட்டு
வாங்காமல் நீஇருத்தி வை.

சங்கர நாராயணப் புலவரிடம் நன்னூல் இலக்கண விளக்கம், தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களையும் நாலடியார், திருக்குறள் போன்ற அறநூல்களையும், கம்பராமாயணம், பெரியபுராணம், பாரதம் போன்ற பெருங்காவியங்களையும் கற்றுத்தேறி பற்பல பாக்கள் புனைந்த செய்குதம்பிப் பாவலர் அவரின் தாய்வழிப் பாட்டனாராகிய ஞானியார் அப்பா அவர்கள் எழுதிய 'மெய்ஞ்ஞானப் பாடல்திரட்டு' என்னும் நூலை அச்சிடுவதற்குச் சென்னைமாநகரம் சென்றனர். அங்கு அவர் பற்பல திங்கள் தங்கி அந்நூலை வெளிக்கொணர்ந்தக்கால், 'ஸ்ரீ பத்மநாத விலாசம்' என்னும் அச்சகத்தின் உரிமையாளரான இட்டா—பார்த்தசாரதி நாயுடுவின் நட்பு அவருக்குக் கிடைத்தது. அவரின் அறிவு நுட்பத்தையும், நூல்களைப் பிழையின்றித் திருத்திப் பதிப்பிக்கும் ஆற்றலையும் கண்டு அவரைப் பாராட்டி அவரைத் தம் அச்சகத்திலே இருந்து பணியாற்றுமாறும் திங்கள் தோறும் அறுபதுரூபாய் ஊதியம் தருவதாகவும் கூறினார் அவ்வச்சக அதிபர். அதற்குச் செய்குத்தம்பிப் பாவலரும் ஒருவாறு இணங்கி சென்னையிலேயே வாழ்ந்து வந்தார். அவர் அந்த அழுத்தகத்தில் அலுவலாற்றி வரும்பொழுது. அங்கு அச்சான இலக்கண, இலக்கிய நூல்களைப் பிழையறத் திருத்தி அச்சிட்டு வந்தார். செய்யுட்களை சிறந்த முறையில் சீர்பிரித்து அச்சிட்டார். நிகண்டு முதலிய பொது நூல்களைத் தம் பெயரால் வெளிப்படுத்திய அவர் இந்து சமயச் சார்பான நூல்களில் தம்பெயரைப் பதிப்பாசிரியராக வெளிப்படுத்தாது மறைமுகமாகச் செயலாற்றி வந்தார். அவர் அங்குச் செயலாற்றி வரும்பொழுதே அவ்வழுத்தகத்தின் அதிப

ராவ இட்டா—பார்த்தசாரதி நாயுடுவின் வேண்டு கோளின்மீது சீறாப்புராணத்தைப் பிழையறப் பரிசோதித்து அதிலுள்ள ஐயாயிரத்து இருபத்து ஏழு செய்யுட்களுக்கும் அழகிய எளிய இனிய தீந்தமிழில் உரை எழுதி அச்சிட்டு வெளியிட்டார்.

இதுமுதல் அவரின் பேரும் புகழும் முஸ்லிம் வட்டாரங்களில் பெரிதும் பல்கிப்பரவின. பலர் அவருக்கு பாராட்டுமடல் வரைந்தனர். பலர் அவரை நேரில் கண்டு அளவளாவவும் செய்தனர். இக்காலைதான் அவர் சென்னையில் 'யதார்த்தவாதி' 'இஸ்லாமிய மித்திரன்' என்ற இரு செய்தித்தாள்களையும் நடத்தினர்.

இவ்வாறு அவர் தமிழ்ப் பணியாற்றி வருங்காலைதான் அருட்பா—மருட்பா பூசல் தமிழ் நாட்டிலே தலைதூக்கியது. இராமலிங்க வள்ளலாரின் அருட்பாக்கள் அருட்பாக்களே யல்ல, அவை மருட்பாக்களேயாகும். எனவே, அவற்றிற்கு மருட்பா எனப் பெயரிடுதலே ஏற்புடைத்து என்று யாழ்ப் பாணத்துக் கதிரைவேற்பிள்ளையும் அவருடைய மாணக்கர் களும் பெரும் பிரச்சாரம் செய்துவந்தார்கள். வள்ளலாரின் மாணக்கரான தொழுவூர் வேலாயுத முதலியாரும் அவரு டைய நண்பர்களும் இதைக் கேட்டுக் கொதித்தெழுந்து அந்தத் தீய பிரச்சாரத்திற்கு எதிர்ப் பிரச்சாரம் செய்துவந் தனர். பாவலர் இப் பிரச்சார வேள்வியில் குதித்து தமிழன் என்ற முறையில் சொற்போர் நிகழ்த்தினர். காஞ்சியில் மருட்பா கட்சியினர் முதல்நாள் கூட்டம் நடத்தி இராமலிங்க வள்ளலாரின் அருட்பாவைப் பெரிதும் தாக்கிப்பேசினர். 'இறந்தார் எழுவர்' என்று அவர் தம் அருட்பாவில் கூறியுள்ளனரே. இது எவ்வளவு அபத்தமானது' என்று அவர்கள் எடுத்துரைத்தனர். 'மேலும் இராமலிங்க சுவாமிகள் பாடல் ஆபாச தருப்பணம் அல்லது மருட்பா மறுப்பு' என்று ஒரு சிறு பிரசுரமும் அவர்கள் வெளியிட்டனர். அடுத்த நாள் அதே இடத்தில் பாவலரும் ஒரு கூட்டம் நடத்தினர். அருட்பாக்களை அழகுறப் பாடிக்காட்டி அதன் அருமை பெருமைகளை மக்களுக்கு உணர்த்தினர். 'இறந்தார் எழுவர்' என்று இராமலிங்க வள்ளலார் கூறியிருப் பதை அவர்கள் குறைகூறி இழித்துரைக்கின்றனர். இஃது அவர்களின் அறியாமையையே காட்டுகிறது. 'இறந்து யார்

எழுவர்' என்று இராமலிங்க வள்ளலார் கூறியிருப்பதை அவர்கள் அறியாது பிதற்றுகின்றார்கள். மேலும் இராம லிங்க வள்ளலார் அதில் மற்றொரு அருமையான கருத்தை யும் வைத்துள்ளார். மனிதன் இறந்துவிடின் அவனுடன் மனம், புத்தி, சித்தம், ஆங்காரம் ஆகிய அந்தக்கரணங் களும் ஆணவம், மாயை, காமியம் ஆகிய மும்மலங்களும் இறந்துவிடும். எனவே அவன் முக்தியடையக்கூடிய நிலைக்கு உயர்ந்துவிடுவான் என்று அவ் வள்ளலார் அழகாக அச் சிறு சொற்றொடர்களில் கூறியுள்ளார். மேலும் 'இராமலிங்க சுவாமிகள் பாடல் ஆபாச தருப்பணம் அல்லது மருட்பா மறுப்பு' என்று ஒரு சிறு பிரசுரமும் அவர்கள் வெளியிட்டுள் ளனர். அதன் தலைப்பே தவறு என்று நான் கூறுவேன். அவர்களையறியாமலே அதன் பெருமையை எடுத்துரைக்கின் றார்கள். இராமலிங்க சுவாமிகள் பாடலா; பாச தருப்பணம் என்று அதனைப் பிரித்தால் பொருள்படுவதை அவர்கள் அறியவில்லை. அதன்மூலம் இராமலிங்கசுவாமிகள் பாடலா! அது அன்புக் கண்ணாடியல்லவோ என்று அவர்கள் தங்களை அறியாமல் கூறிவிட்டார்கள். மேலும் 'மருட்பா மறுப்பு' என்னும் அப் பிரசுரத்திற்குப் பெயரிட்டுள்ளார்கள். மருட் பாவை மறுக்கும்பொழுது அது அருட்பாவாகிவிடும் என்ப தையும் அர்கள் அறியவில்லை' என்று ஆணித்தரமாகப் பல மணி நேரம் பேசினார். இதைக் கேட்டுப் பெரிதும் மனம் புழுங்கிய எதிர்க்கட்சியினர் ஒருவர், ஒருமுஸ்லிம் இதில்வந்து தலையிட்டு தங்களின் வாதங்களைச் சுக்குநூறாக்கித் துகள் செய்வதைக் கண்டு வெகுண்டு 'எப்படி இருந்தபோதினும் நீரோர் அசைவர்தாமே' என்று கூறினார். அதைக் கேட்ட தும் பாவலர் 'ஆம், யாம் அசைவம்' என்று கூறித் திடீரெ னத் தம் பேச்சை நிறுத்திக் கீழே அமர்ந்து மீண்டும் எழுந்தி ருந்து சொன்மாரி பொழிந்தார்; சொல் ஆப்பறைந்தார். அவற்றைக் கேட்டுப் பெரிதும் பரவசமுற்ற மக்கள் அவருக் குத் 'தேவாமிர்தப் பிரசங்கக் களஞ்சியம்' என்ற சிறப்புப் பட்டத்தைச் சூட்டி மகிழ்ந்தனர்.

இவ்வாறு பாவலர் சீரும் சிறப்பும் பெற்றுச் சென்னை யில் வாழ்ந்து இட்டா—பார்த்தசாரதி நாயுடுவின் அழுத்த கத்தில் அலுவலாற்றிக்கொண்டு வருங்கால் முதுகுளத்தூ ரைச் சேர்ந்த கலியாண சுந்தரம்பிள்ளை என்னும் அட்டாவ தானி ஆங்கு வந்து தாம் அட்டாவதானி என்று கூறியதும்

அவதானத்தில் நம்பிக்கையற்றிருந்த பாவலர் அவருடன் கிண்டலாகப் பேசினார். அதைக் கேட்டு வருந்திய கலியாண சுந்தரம் பிள்ளை 'நான் கூறுவது உண்மை. வேண்டுமாயின் தங்களின் முன்னிலையில் வைத்தே நிருபணம் செய்கிறேன்' என்று கூறினார். பாவலர் அவரை மறுநாள் பகல் இரண்டு மணிக்கு வருமாறு சொன்னார். அவ்விதமே அவர் மறுநாள் வந்ததும், அவரைப் பாவலர் தம் நண்பர் ஒருவருடன் அழுத் தகத்தின் மாடிக்கு அழைத்துச்சென்றனர். பாவலர் ஒரு வெண்பா எழுதி அதன் ஒரு படியைத் தம் நண்பனிடம் காட்டி மற்றொரு படியைத் தம்பால் வைத்துக் கொண்டு கண்ட பத்திரிகை கொடுக்கலானார். கலியாண சுந்தரம் பிள்ளை பாவலர் கூறிய எழுத்துக்களையெல்லாம் தம் மனத்தில் முறைப்படுத்தி வைத்துக்கொண்டு அவ் வெண்பா வைப் பிழையின்றிப் பாடினார். இதைக் கண்டு பாவலரும் அவருடைய நண்பரும் பெரு வியப்பெய்தினர். பாவலர் தாம் முன்னர் இழித்துரைத்ததை மன்னித்தருளுமாறு கலி யாண சுந்தரம் பிள்ளையை வேண்டினார்.

அப்பொழுது மாடிக் கதவில் கடகடவென்று சத்தம் முழங்கியது. கதவு திறக்கப்பட்டதும் அழுத்தக அதிபரின் மைந்தரும் இன்னும் சிலரும் உள்ளே நுழைந்தனர். தாங்க ளும் அட்டாவதானம் செய்வதைக் காணவேண்டுமென்று மட்டிலா அவாவைத் தெரிவித்தனர். பிள்ளையவர்களும் மீண்டும் அதனைச் செய்துகாட்ட ஒப்புக்கொண்டார். வந்த வர்கள் தாங்களே ஒருவெண்பாவை யாத்து அவரிடம் கண்ட பத்திரிகை கொடுத்தனர். அப்பொழுது பாவலர் பிள்ளை யவர்களைப் பார்த்து 'இதற்கு நீங்கள் விடை கூறுகிறீர்களா அல்லது நான் கூறட்டுமா' என்று வினவினார். இதைக் கேட்டதும் பிள்ளையவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அள வில்லை. 'நீங்களும் கூறுவீர்களோ' என்று அவரை வினவி னார். அவ்வளவுதான். பாவலர் 'இதோ சொல்கிறேன்' என்று கூறி அவ் வெண்பாவை மடமடவென்று ஒப்புவித் தார். இதைக் கேட்டதும் அங்கு வீற்றிருந்த அனைவரும் வியப்புக் கடலில் மூழ்கினர். இதன்பின் பாவலர் நாடோ றும் தம் அலுவலகத்தில் அவதானம் செய்துவந்தார். அதன் காரணமாக அதில் அவருக்குப் பெரிதும் தேர்ச்சிஏற்பட்டது. 1906-ஆம் ஆண்டில் அவர் தம் ஊருக்குச் சென்றிருந்தக்கால்

பாவலருக்கு அவதானம் செய்யத் தெரியும் என்பதைஅறிந்த அவருடைய ஆசிரியர் சங்கரநாராயணர் அதனைத் தாம் பார்க்கவேண்டுமென்று தம்முடைய விருப்பத்தைத் தெரிவித்தார். கோட்டாற்றிலும் அதன் சூழலிலுமுள்ள முஸ்லிம் பெருமக்களும் பாவலர் அவதானம் செய்வதைப் பார்க்கப் பேரவாக் கொண்டனர். எனவே பாவலரும் ஒருநாளைக் குறிப்பிட்டு அந்நாளில் கோட்டாற்றுப் பள்ளிவாயில் முன்னிலையில் ஆற்றங்கோயா தங்களின் தலைமையின்கீழ் பதினாறு அவதானங்களை நிகழ்த்தினார். அதைக் கண்டு அங்குக் கூடியிருந்த மக்கள் மகிழ்ச்சி மீக்கூர்ந்து அவருக்குப் பரிசில் பல நல்கினர். அவற்றை ஒரு கையால் வாங்கி மறு கையால் ஆசிரியரின் திருவடிகளிற் படைத்துத் தம் குரு பக்தியை வெளிப்படுத்தினார் பாவலர். அவைத்தலைவர் ஆற்றங்கோயா தங்கள் அவர்களால் பாவலருக்கு சோட சாவதானி என்ற பட்டமும் பொன்னாடை ஒன்றும் வழங்கப்பட்டன.

பாவலர் சென்னை திரும்பியதும்இட்டா—பார்த்தசாரதி நாயுடு முதலியோர் அவரைச் சென்னையில் சோட சாவதானம் செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். அதற்குப் பாவலரும் இணங்கினார். அதற்கான அறிக்கைத்தாள் அச்சாயிற்று. அந்த அறிக்கைத்தாளை அச்சுக் கோக்கும் பொழுது அச்சுக் கோப்பவரான இராமசாமி நாயுடு பாவலரிடம் மீண்டும் மீண்டும் வந்து 'ஐயா! நான் பச்சையப்பன் கல்லூரியில் ஒருவர் சோட சாவதானம் செய்வதைப் பார்த்திருக்கிறேன். நான் சதாவதானம்தான் பார்க்கவில்லை. அதை நீங்கள் செய்தாலென்ன?" என்று கூறி வற்புறுத்தினார். அவரின் வற்புறுத்தலுக்குப் பாவலரும் இணங்கி சதாவதானம் நடைபெறும் என்று அச்சிட அனுமதித்தார்.

ஆனால் பின்பு அவர் சிந்தித்துப் பார்த்தபொழுது அவருக்கே பெரும் திடுக்கமாக இருந்தது. என்ன இவ்வாறு கூறிவிட்டோம். இப்பொழுது நாம் என்செய்வது என்று அவர் தம்மையே தாம் நொந்துகொண்டார். அவருடைய உறவினர்கள்வேறுவந்து அவரைக் கடிந்தார்கள். இந்நிலையில் அவருக்கு என்செய்வதென்றே விளங்கவில்லை. சதாவதான

நாளும் புலர்ந்தது. அன்று முழுவதும் பாவலர் உக்கிப்போய் உட்கார்ந்துகொண்டிருந்தார். மேடையில் திரைக்குப்பின் அமர்ந்திருக்கும்பொழுதும் அவருடைய மனம் எண்ணுததை யெல்லாம் எண்ணியது. முதல் மணி அடிக்கப்பட்டதும் பாவலரின் அடிவயிற்றில் 'பகீர்' என்றது. இரண்டாவது மணி அடிக்கப்பட்டதும் அவருடைய இதயம் வெடித்துவிடுவது போல் 'படக், படக்'கென்று அடித்தது. மூன்ருவது மணி அடிக்கப்பட்டபொழுது பாவலர் தம்மை இறைவனை விலே முற்றிலும் ஒப்படைத்துவிட்டு 'மெய்ஞ்ஞான நாதா, மெய்ஞ்ஞான நாதா' என்று இறைஞ்சியவண்ணம் திரையை வேகமாக விலக்கிக்கொண்டு லாடச் சங்கிலியுடன் மேடைமீது காட்சி வழங்கினர். அதன்பின்தான் நாம் துவக்கத்தில் கூறியவண்ணம் சதாவதானம் நிகழ்ந்தது.

1907-ஆம் ஆண்டின் இறுதியில் தம் தாயகம் திரும்பிய பாவலர் திருமண வாழ்க்கையில் புகுந்தார். அதன்பின் சென்னைமீண்டஅவர் இரண்டாண்டுகள் தங்கிஅங்குத்தமிழ்ப் பணி செய்தபின் இலங்கை திரும்பி அங்கு ஒரு நூல்கடை வைத்து வாணிபம் செய்தும் ஓய்ந்த நேரங்களில் மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக்கொடுத்தும் பல காவியங்கள் இயற்றியும் சொன்மாரி பொழிந்தும் தம் வாழ்நாளைக்கழித்து வரலானர். இக்காலை மேலப்பாளையத்தில் வள்ளலெனவான்புகழ் பெற்று வாழ்ந்துவந்த ஷம்சுத்தாசீம் என்னும் வணிகர்மீது 'ஷம்சுத்தாசீம் கோவை' என்னும் ஒருநூல் இயற்றிப் பரிசிலும் பெற்ருர். அதில் அவர் ஷம்சுத்தாசீம் மனைவியைப்பற்றிக் கூறுங்கால் மா பழுத்துக் குலுங்கி வனசமும் கோங்கும் நிறைந்து பூக்களைப்பூத்துத் தேன்சிந்தும் ஷம்சுத்தாசீம் என்னும் அரசனுடைய மலையில் அம் மலையிலுள்ள பூங்காவானது சிறக்கும்வண்ணம் அதன் நடுவே ஒரு பூங்கொடி காணப்படுகிறது. அது யாரெனப் பார்க்கும்பொழுது அதுவே அவருடைய மாட்சிமிகு மனையாளாகும் என்ற கருத்தைத் தேனொழுகக் கூறும் திருவழகை இதோ கீழ்வரும் நால்வரிக் கவியில் கண்டு ரசிப்பீர்களாக.

மாவே பழுத்து வனசமும் கோங்கும் மருவி அல்லிப்
பூவே பொலிந்து புதுநறவேற் றளிபூண்டு புகழ்

கோவே எனவருவோன் ஷம்சுத் தாசீம் குளிர்
[சிலம்பின்
காவே சிறப்ப நடுவிலோர் பூங்கொடி காண்கின்
[றதே.

*அவர் பாடிய திருநாகூர்த் திரிபந்தாதியில் இறைவன் அருள்வேண்டி இறைஞ்சும் பா அவரது கவிதா மேதையை நன்கு வெளிப்படுத்துகின்றது. அக்கவி வருமாறு:*

வித்தகா சிற்பரா மேதகா யாவும்செய்
வித்தகா சிற்பரா மேதகா—சித்துறத்
தாதிக் கருமஞ்சி தம்புரிநா கைத்திரிபந்
தாதிக் கருமஞ்சி தம்.

*அவர் தம் பாட்டனாராம் ஞானியார் அப்பா அவர்கள்மீது பாடிய திருக்கோட்டாற்றுப் பதிற்றுப் பத்தந்தாதியில் தம் வறிய நிலையையும், தம் உடல்நோயையும் எடுத்துரைத்து, அவற்றை நீக்கியருளுமாறு இறைஞ்சும் பாவானது அற்புதமாய் அமைந்துள்ளது. அதனைக் கீழே தருகிறேன். படித்து ரசிப்பீர்களாக!*

வடிகொண்ட மூன்று தமிழால் அலங்கல்
வகைகோடி பாடி அனல்வாய்
அடிகொண்ட செம்பின் ஒருகாசுமின்றி
அறலோபர் வாயில் அலைந்து
மிடிகொண்ட என்றன் இழிநோய் அகற்றி
மிகவாழ்வு தந்தருளுவீர்.
வெடிகொண்ட சோலை புடையோங்கு கோடை
விதிராஜ போஜ பரமே.

*பாவலர் இவற்றைத் தவிர கீழக்கரையில் தோன்றி மறைந்த கல்வத்து நாயகம் என்னும் மேதகையின் மீது கல்வத்துநாயகம் இன்னிசை மாலை ஒன்றையும் இயற்றியுள்ளார். அதிலே அவர் கல்வத்து நாயகத்தின் அருள் வேண்டி இறைஞ்சும் பொழுது அவரின் நல்லடியார்கள் எல்லாம் சங்கிலித் தொடர்போன்று அமைந்து அன்னாரின் அருள்வேண்டி நிற்கும்பொழுது, தாம் மட்டும் சுவைத்துக் கக்கிவிட்ட வெற்றிலைபோன்று யாதொரு பயனுமற்ற பொருளாகத் தேடுவாரற்றுத் தெருவிலே கிடப்பதாகவும், எனவே தம்மை ஆண்டருளவேண்டும் என்றும் பின்வரும் பாவில் அழகாக இறைஞ்சுகின்றார். தம்மை அவர் கக்கிவிட்ட வெற்றிலைக்கு நிகராகக் கூறும் உவமை முன்னர் எவராலும் சொல்லப்படாத தனிச் சிறப்பு வாய்ந்ததாகும். அவ்வுவமை அமைந்த கவி வருமாறு:*

கொக்கிவிட்ட சங்கிலிபோல் கூண்டெழுந்து நும்
[மடியார்
சொக்கிவிட்ட நல்லருட்கே தோய்ந்து நின்றார்.
[அந்தோ நான்
உக்கிவிட்ட நெஞ்சினனாய் உள்ளுடைந்து மெய்ம்
[மயங்கி
கக்கிவிட்ட தம்பலொத்தேன் கல்வத்து நாயகமே!

*அவர் நாயகத் திருமேனி அவர்கள்மீது தாம் இயற்றிய நாயக மான்மிய மஞ்சரியில் அமுதனைய கவிகள் புனைந்து அடுக்கியுள்ளார். அவர் இஸ்லாத்தின் ஐம்பெருங்கடமைகளையும் அருமையுடன் எடுத்தோதி அவற்றை நாயகத் திருமேனி அவர்கள் நிறைவுறப் பின்பற்றிய பாங்கை வர்ணிக்கும் அழகுக் கவியை இதோ தருகிறேன், படிப்பீர்களாக!*

ஆதிஒருவன் தொழுகை ஐவேளை நோன்புடைமை
போதியநல் ஏழைவரி புக்கமக்க ஹஜ்ஜைந்தும்

நீதிதரு சன்மார்க்க நேர்மையவென் றேதிமுதன்
மாதிரியாய் முன்னின்ற வள்ளன்மை உள்ளேமோ
மன்னர்நபி நாயகமே வள்ளன்மை உள்ளேமோ.

*அவர் இஸ்லாத்தின் இணையற்ற கொள்கையாம் ஒரே தெய்வ வழிபாட்டையும், இஸ்லாத்தில் காணப்படும் ஈடற்ற பண்பாம் சகோதரத்துவத்தையும் அடுத்து ஒரு கவியில் அழகுற வர்ணிக்கும் பாங்கைப் பாருங்கள்.*

ஒன்றுதெய்வம் ஒன்றுமதம் ஒன்று மக்கள் சாதி
[யென
நன்றுபெற ஓதியவை நாட்டிநவில் நான்மறையும்
குன்றுபெறு தீபமெனக் கோத்தருளிக் காத்த
[உங்கள்
துன்றும் உயர் மாபெருமை சொல்லற் கெளிதேயோ
சோதிநபி நாயகமே சொல்லற் கெளிதேயோ.

*அவர் மற்றொரு கவியில் அண்ணல் நபி அவர்களின் அழகுசால் சிறப்பியல்புகளை தேனினுமினிய தீந்தமிழில் வர்ணிக்கின்றார். அது வருமாறு:*

கல்லால் எறிந்திருகால் காயமுறக் கண்டகொடும்
பொல்லாப் புலையருக்கும் புத்திவரக் கையேந்தி
அல்லாதிருச் சமுகத் தானதுஆ கேட்டுவந்த
நல்லார் உமைப்போலும் நானிலத்தில் உண்டேயோ
நாதநபி நாயகமே நானிலத்தில் உண்டேயோ

மேலும் பாவலர் நீதிவெண்பா என்னும் ஒரு ல்
புனைந்துள்ளார். அதிலே அவர் ஒரு வெண்பாவில், ம
லைப்பூவின் மணத்தை ஒருவர் புகழ்ந்துரைத்த போதினும
வேறொருவர் இகழ்ந்துரைத்த போதினும் அது அவ்விருவ
[illegible]

ருக்கும் ஒரே மணத்தை நல்குவது போன்று சான்ஞேர் ஒருவரை மக்கள் நிந்தனை செய்த போதினும், அல்லது வந்தனை செய்த போதினும் அவற்றை அவர்கள் ஒன்றேபோற் கருதுவரேயன்றி அவை கண்டு வெகுளவோ, மகிழவோ செய்யமாட்டார்கள் என்ற கருத்தை

> நிந்தனையும் வந்தனையும் நேர்ந்தொன்ருய்க் காண்ப
> தல்லால்
> சிந்தை திரிவாரோ சீரியோர்—அந்திமுல்லை
> தன்மணத்தை என்சொலினும் தந்தருள்வ தன்றி
> [மற்ருேர்
> புன்மணத்தை நல்கிடுமோ பூத்து. என்று பாடுகிருர்.

இவைதவிர, அவர் கோட்டாற்றுப் பிள்ளைத்தமிழ், நாகைக் கோவை, வேதாந்த வியவகாரக் கிரிமினல் கேஸ், தேவலோகக் கிரிமினல் கேஸ் முதலிய நூல்களும் இயற்றியுள்ளார். வள்ளல் அழகப்பாமீது 'அழகப்பக்கோவை' என்னும் ஒரு நூலும் இயற்றிப் பரிசிலும் பெற்ருர்.

அவரிடம் அளவற்ற பேச்சுத் திறமையும் அமைந்திருந்தது. சொன்மாரி பொழியத் துவங்கி விட்டால் நான்குமணி நேரத்துக்குக் குறையாமல் சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தது போன்று சொற்பொழிவு ஆற்றுவார். சீருவுக்கு விரிவுரைநிகழ்த்த ஒருருக்கவர் அழைக்கப்பட்டபோது அங்குச் சென்றஅவர், சீருவுக்கு விரிவுரை நிகழ்த்தத்தானே என்னை அழைத்தீர்கள்' என்று பேச்சைத்துவங்கி சீரு என்ற மொழியிலுள்ள 'சீ' என்ற எழுத்துக்கு மட்டும் ஒன்பது நாள் பொருள் விரித்தார். இராமாயணத்தை பழைய முறைப்படி விரிவுரை நிகழ்த்த அவர்காலத்தில் அவர் போன்று வேறு யாரும் இல்லை என்று சொல்லும்படி அவர் விரிவுரை நிகழ்த்துவார். எனவே திரு. வி. கல்யாண சுந்தர முதலியாரும், 'இற்றைக்கு இராமாயணத்தைப் பழைய முறைப்படி விரிவுரை நிகழ்த்தக் கூடியவர் பாவலர் ஒருவர் தாம்' என்று வியந்துரைத்தார். மேலும் அவரைப் பற்றிக் கூறுங்கால், 'பாவலர் என் குருஸ்தானத்தில் இருக்கின்ருர்' என்றும் கூறினுர் திரு. வி. கல்யாண சுந்தரனுர். 'எப்படி'

என்று வினவியக்கால், 'என் குரு கதிரைவேற்பிள்ளை இராம லிங்க சுவாமிகளின் பாடல்களை மருட்பா என்றபொழுது அவருக்கு எதிராகப் பாவலர் அவை அருட்பாதாம் என்று வலியுறுத்திச் சொற்பெருக்காற்றினார். அவருடைய சொற் பெருக்கை நான் குறிப்பெழுதிக் கொண்டுபோய் என் குருவி டம் காட்டுவேன். இப்பொழுது என் குரு இறந்துவிட்ட தால் தமிழ் மரபுப்படி அவருடைய எதிரியாகிய பாவலர் தாம் என் குருவாகின்றார்' என்றார் திரு. வி. க.

பாவலர் அண்ணல்நபியவர்களின் பிறந்தநாள் சொற் பெருக்காற்றுவதற்காகத் தொண்டி வந்திருந்தக்கால், அவ ருடைய சொற்பெருக்கைக் கண்டு பெரிதும் வியந்த தொண்டிவாழ் மக்கள் அவருக்குக் 'கலைக்கடல்' என்னும் பட்டத்தை நல்கிக் கௌரவித்தனர். இச்சிறப்புப்பட் டம் அவ்விழாவிற்குத் தலைமை தாங்கிய என் தந்தையாரால் தொண்டி மக்கள் சார்பாக அன்னாருக்குச் சூட்டப்பட்டது.

பழஞ் செய்யுட்களை ஒவ்வொருவரும் தம் மனம் போன போக்கின்படி விரிவுரை நிகழ்த்துவதை பாவலர் வெறுத் தார். அவர் தலைமை தாங்கிய ஒரு கூட்டத்தில் வைத்து பெரும் தமிழ்ப்புலவர் ஒருவர் ஒரு குறளுக்குத் தாம் விரும் பிய வண்ணம் தவறாகப் பொருள் விரித்த பொழுது உடனே எழுந்திருந்த பாவலர் அவ்விதம் பொருள் விரிப்பதைக் கண் டித்ததோடு

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்

என்ற திருக்குறளை எடுத்துரைத்து, 'இக்குறளானது எம் மதத்திற்குச் சம்மதமில்லாதது. எனினும், எம்மதத்திற்கும் இணக்கமுடையதாக இதனைச் செய்துவிடலாம். எவ்வா றெனில் கொல்—ஆன்—பசுவைக் கொன்று மல்—துத்தான் —அதிகமாகச் சாப்பிட்டவனை எல்லா வுயிரும் தொழும் என்று பொருள் விரித்து விடலாம். ஆனால் அவ்விதம் கூறு வது தவறு' என்று சொன்னார். இதைக் கேட்டதும் கூட்டத் திலிருந்து ஒருவர் மல்—துத்தான் என்பது மற்றுத்தான் என் றல்லவோ வரவேண்டும், தாங்கள் குறிப்பிடும் குறளில் மறுத்தான் என்றல்லவோ இருக்கிறது' என்று வினவினர்.

உடனே பாவலர் இராமாயணத்தில் இராமன் இலக்குவனை அழைத்து ஓரிடத்திற்கு 'செல்தம்பி' என்று ஏவியதை எவ்வாறு கம்பர் செற்றம்பி என்று கூருது செறம்பி என்று கூறினரோ அந்த இலக்கணமே இதற்கும் பொருந்தும். அவ்விலக்கணப்படி கால்—தலை என்பதனை காற்றலை என்று கூறவேண்டியதில்லை. காறலை என்று கூறினல் போதும். அதே போன்று மல்—துத்தான் என்பதனை மற்றுத்தான் என்று கூறவேண்டியதில்லை, மறுத்தான் என்று கூறினலே போதும்' என்று மறுமொழி பகர்ந்தார், பாவலர்.

மற்ருெரு தடவை அவர் பாளையங்கோட்டையில் பேசும் பொழுது இராமாயணத்தில், 'கல்லாமதியே, கதிர்வாளிலவே' என்று துவங்கும் செய்யுளை எவ்வாறு பலர் பல் வேறுவிதமாகப் பொருள் விரித்துச் சொற்கொலை, பொருட்கொலை செய்கின்றனர் என்பதனைக் கூறிவருங்கால், அக்கூட்டத்தில் வீற்றிருந்த ஒருவர் குறுக்கிட்டு எதிர்த்துப் பேசினர். உடனே பாவலர் அவரை நோக்கி, 'கல்லாமதியே கேள்' என்று உரத்துக்கூறவும், கூட்டம் முழுவதும் 'கொல்' என்ற நகைப்பொலி எதிரொலித்தது. எதிர்த்துரைக்க எழுந்திருந்தவரும் அதைக்கண்டு பெட்டிப்பாம்பென அடங்கி விட்டார்.

பாவலர் சிலேடையாகப் பேசுவதிலும் சமர்த்தர். ஒரு தடவை அவர் நீதிமன்றத்தில் விசாரிக்கப்படும்பொழுது, 'தங்கள் பெயர் என்ன' என்று எதிர்தரப்பு வழக்கறிஞர் வினவியக்கால், 'தந்தையார் சைகு என்றும், தாயார் தம்பி என்றும், பாரிலுள்ளோர் பாவலர் என்றும் பகர்வர்' என்று பதிலுரைத்தார். இதைக் கேட்டுப் பெரிதும் வியப்படைந்த நீதிபதி அவருக்கு மரியாதை செய்து அவரை மீண்டும் கேள்வி கேட்க வேண்டாமென்று கூறி அவரை அமர்ந்திருக்குமாறு கூறினர்.

பாவலர் சுருட்டுப்பிடிக்கும் வழக்கமுடையவராயிருந்தார். ஒரு தடவை அவர் பெருமை நாயகம் புகையிலைச் சுருட்டைப் பிடித்துக் கொண்டிருக்கும் பொழுது அது அடிக்கடி அணைந்து கொண்டிருந்தது. அதைக்கண்ட பாவலர், 'பெருமை நாயகம் புகையிலை பெரும் தீ வைத்து ஊதியும் புகையிலை' என்று சிலேடைப்பொருள் தொனிக்கக் கூறினர்.

திருவிதாங்கோட்டில் வைத்து அவர் சீருவுக்குப் பொருள் விரித்து வருங்கால், விதவையை மணந்து கொள்ளலாமென்று அறநெறி காட்டிய அண்ணல் நபி அவர்கள் அவ்விதமே ஒழுகியும் காட்டினர் என்பதைக் கூறும்பொழுது 'இந்து மதத்தில் சிலர் 'விதவா விவாகம் செய்துகொள்வதில்லை. அவ்விதம் செய்வது நல்லதல்ல என்பது என் கருத்து. 'அறுத்தால் கட்டு. அல்லது அழியும்' என்பது விவசாயப் பழமொழி. நெற்கதிர்களை அறுப்பின் உடனே அவற்றைக் கட்டிவை. இல்லையேல் அவை அழிந்துபோகும், என்பது அதன் பொருள். அது வாழ்க்கைக்கும் பொருந்தும். ஒரு பெண் தாலி அறுந்து விதவையாகிவிட்டால் உடனே அவளை வேறொரு ஆடவனுக்குத் தாலிகட்டிவிடு; இல்லையேல் அவள் கெட்டுவிடுவாள்'' என்றுகூறினர் பாவலர்.

அவர் ஒரூருக்குச் சென்றிருந்தக்கால், அங்கு வாழ்ந்த புலவர் ஒருவர் அவரை நோக்கி, 'வித்தகத்துக்கு எத்தனை கால்' என்று வினவினர். உடனே பாவலர், 'வித்தையானது ஆசு, மதுரம், சித்ரம், வித்தாரம் என்னும் நான்கு வகையாக இருப்பதை மனத்திற்கொண்டு 'நான்கு கால்கள்' என்றார். அதன்பின் கேள்வி கேட்டவரை நோக்கி, 'மத்தகத்துக்கு எத்தனை கால், நீர்கூறும்' என்று மடக்கினர் பாவலர். அவர் விழித்தார், திணறினர். பாவலரிடம் மன்னிப்புக்கோரி அதற்கான விடையை அவரையே கூறுமாறு வேண்டிக்கொண்டார். அதற்குப் பாவலர் மத்தகம் என்றால் யானை என்று பொருள். அதற்கு நான்கு கால்கள் உள்ளன. நாம் உம்மிடம் வினவியபொழுது, அதனை மனத்திற் கொள்ளவில்லை. மத்தின் அகத்தை மனத்திற்கொண்டே வினவினேன். அதற்கு ஆறிலிருந்து பதினான்கு வரை கால்கள் உள்ளன' என்று கூறினர்.

ஒருதடவை பாவலரின் நண்பரான ஓர் அட்டாவதானியின் மகன் அவரின் பெரும் புகழைப்பற்றிக் கேள்விப்பட்டு அவரின் அறிவாற்றலைச் சோதித்துப்பார்க்கவேண்டுமென்ற எண்ணத்துடன் அவரை அணுகி தம் தந்தை அவரிடம் நூறு ரூபாய் வாங்கிக்கொள்ளுமாறு சொல்லியனுப்பியதாகவும்

எனவே ஒரு நூறு ரூபாய் தந்தால் தனக்குப் பெரும் உதவியாயிருக்குமென்றும் கூறினன். அதற்கென்ன ஒருநூறுரூபாய் தருகிறேன்' என்று எளிதாகக் கூறினர் பாவலர். அதைக் கண்ட அவன் பாவலரைச் சோதிக்க எண்ணி 'அதிகமான செலவாக உள்ளது. ஆதலின் இருநூறு ரூபாய் தந்தால் நல்லது' என்று கூறினன் அதற்குப் பாவலர் 'இரு; நூறு ரூபாய் தருகிறேன்' என்று கூறினர். அவர் கூறிய சிலேடைப் பொருளை அவன் விளங்கிக்கொண்டு மேலும் அவரைச் சோதிக்க எண்ணி 'முந்நூறு ரூபாய் தந்தால் பெரிதும் உபகாரமாய் இருக்கும்' என்ருன். அதற்குப் பாவலர் முன் நான் கூறியபடி நூறு ரூபாயையே தருவேன் என்று பொருள்பட 'முன்னூறு ரூபாய் தருகிறேன்' என்று கூறினர். அதன் இரு பொருளை அவன் விளங்கிக்கொண்டு 'நானூறு ரூபாய் தாருங்களேன்' என்ருன். 'நல்லது, நான் நூறு ரூபாய் தருகிறேன்' என்ருர் பாவலர். அவன் அதற்கு மேலும் சென்று'ஐந்நூறுரூபாய் தாருங்கள்' என்ருன். அதற்குப் பாவலர் வியப்புக்குறி முகத்திலே தோன்ற 'ஐ! நூறு ரூபாய் தருகிறேன்' என்ருர். அதற்குமேலும் அவன் அறுநூறு ரூபாய் வேண்டுமென்று கேட்கவே, பாவலர் பேச்சை 'வழவழா என்று பேசாமல் அறுத்துப் பேசு என்ற பொருளை உள்ளடக்கி 'அறு, நூறு ரூபாய் தருகிறேன்' என்ருர். அவன் அதன்பின் எழுநூறு ரூபாய் கேட்கவே 'எழு; நூறு ரூபாய் தருகிறேன்' என்ருர் பாவலர். மேலும் அவன் அவரைச் சோதிக்க எண்ணி எண்ணூறு ரூபாய் கேட்கவே உள்ளே விறுவிறுவெனச் சென்ற பாவலர் ஒரு பணமுடிப்பை எடுத்து வந்து 'எண்; நூறுரூபாய் இதோ இருக்கிறது' என்று கூறி நூறு ரூபாயைக் கொடுத்தார். அவரின் அறிவாற்றலைக் கண்டு அவனுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை,

ஒரு செல்வருக்குப் பிள்ளை இல்லாததனுல் அவர் ஜாதகம் பார்த்தார். ஜாதக நூலில் 'மேற்படி ஆலயத்தில்தீபம் வையே' என்று மட்டும் குறிப்பிடப்பட்டு அவ்விதம் செய்தால் பிள்ளை பிறக்கும் என்றும் எழுதப்பட்டிருந்தது. இதன் விளக்கத்தை அவர் பல புலவர்களிடம் வினவியும் அவர்கள் சரியான பொருள் தரவில்லை. அக் கவியின் முன்கவிகளிலும் அதைப்பற்றி யாதொரு விளக்கமும் இல்லாததால் யாது பொருளென அறியாது அச் செல்வர் மயங்கினர். உடனே அவருக்குப் பாவலரின் நினைவு வந்தது. அவர் பாவலரை

அணுகி அதற்கு விளக்கம் பகர்ந்தருளுமாறு வேண்டவே, மேற்படி ஆலயம் என்றால் ஏறுபடியிலுள்ள இபுறாகீம் ஷஹீது வலியுல்லா அவர்களின் தறுகாவாகும் எனப் பொருள் விரித்து அங்குச் சென்று தீபம் ஏற்றி வந்தால் பிள்ளை பிறக்கும் எனக்கூறினார். அவ்விதமே அச்செல்வரும் செய்து மகப்பேற்றினைப் பெற்றார்.

பாவலரின் நாவுக்கு மக்கள் பெரிதும் அஞ்சினர். அவரின் நல்லாசி வேண்டி மக்கள் அவரின் தாளடியில் பொன் பொன்னாகத்தான் கொட்டினார்கள். எனினும் அவரைப் பீடித்த வறுமைதான் அவரை விட்டபாடில்லை. அவர் தேர்தலில் ஒருவருக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்து வருங்கால், 'மஞ்சள் பெட்டி மங்களப்பெட்டி; வெள்ளைப்பெட்டி வெறும்பெட்டி' என்று கூறினார். பின்னர் தேர்தல் முடிந்த பொழுது பெட்டிகளைத் திறந்து பார்க்குங்கால், பல இடங்களில் வைக்கப்பட்ட வெள்ளைப் பெட்டிகளில் ஒருவாக்கேனும் போடப்படாது அவை வெறும் பெட்டிகளாகத்தாம் இருந்தன.

ஒரு வீட்டிலுள்ளோர்மீது யாரோ வஞ்சனை செய்ததன் காரணமாக அவ்வீட்டில் சமைக்கப்படும் உணவுகள் அனைத்தும் மலநாற்றம் உடையனவாக இருந்தன. அந்த வஞ்சனையை மாற்றுவதற்கு அவ்வீட்டிலுள்ளோர் எவ்வளவோ முயன்றும் பயனில்லை. இறுதியாக அவர்கள் பாவலரை அணுகி அவர் தங்கள்மீது அருட்கவி பாடித் தங்களின் தொல்லை தீர்த்தருள வேண்டுமென்று வேண்டி நின்றனர். உடனே பாவலர் அங்குச் சென்று புதுச்சட்டி, புதுப்பானை, புதுஅரிசி முதலியவைகளைக் கொணரச் செய்து மூட்டு அடுப்பை, வைஉலையை, ஆக்கு சோற்றை என்று கவியால் சொல்லிக்கொண்டே வந்தார். அவர்களும் அவ்விதமே செய்துவந்தார்கள். அதன்பின் அறுசுவை யுண்டியை நறுமணத்துடன் ஆக்கி உண்டார்கள். அதுமுதல் அவர்கள் மீது வைக்கப்பட்ட வஞ்சனையும் நீங்கியது. அவர்களைப் பிடித்த தொல்லையும் தொலைந்தது.

அவர் தம் பெயருக்கேற்ப சதா (எப்பொழுதும்) அவதானம் செய்யக்கூடியவராகவே இருந்தார். ஒரு

தடவை ஒருவர் தாம்பாடிய நூலுக்குச் சாற்றுக்கவி வாங்க அவரின் இல்லம் தேடி வந்தக்கால், பாவலர் தம் மனைவியுடன் ஆங்காரமாகச் சண்டையிட்டுக்கொண்டிருந்தார். அப்பொழுது பாவலரின் இல்லத்தின் வெளித் திண்ணையில் வீற்றிருந்த சரவண ஆசாரி என்னும் பாவலரின் மாணவர் வந்தவரை அமரச் செய்து வந்த காரணத்தை வினவி, அதன்பின் அவர் கொணர்ந்துள்ள நூலிலிருந்து சில செய்யுட்களைப் பாடுமாறு சொன்னார். அவரும் அவ்விதமே செய்தார். அதன்பின் அவரை நோக்கி, நாளைக்கு வருமாறும், பாவலர் அமைதியாக இருந்து கேட்டுச்சாற்றுக்கவி தருவாரென்றும் கூறினார். அவ்விதமே அவரும் அடுத்தநாள் வந்தார். பாவலரும் அமைதியாகத் தம் வீட்டு முகப்புத் திண்ணையில் வீற்றிருந்தார். வந்தவர், தாம் வந்த காரணத்தைக் கூறித் தாம் பாடிய செய்யுட்களைப் பாடத்துவங்கி முதலடியை எடுத்ததும் மற்ற அடிகளைப் பாவலர் படபடவென்று பாடியதோடு அவர் நேற்றையத்தினம் சரவண ஆசாரியிடம் பாடிக்காட்டிய மற்ற செய்யுட்களையும் பாடி முடித்துவிட்டார். இதைக்கண்டு வந்தவருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

செய்யுட்களை ஒரு நொடியில் மனத்தில் பதியவைக்கும் திறன்மட்டுமல்லாது ஒரு நொடியில் பாடும் திறனும் அவருக்கு இறுதிவரை அமைந்திருந்தது. பிற்காலத்தில் அவரை நோக்கி, 'தாங்கள் இப்பொழுதும் சதாவதானம் செய்வீர்களோ' என்று வினவப்பட்டகாலை, 'இறைவன் அருளால் நான் இப்பொழுதும் செய்யவல்லேன்' என்று கூறினார். மேலும் அவர் 'முன் நிகழ்ந்த சதாவதானத்தில் அவர்கள் ஒரு வகைச் சோதனையைச் செய்யத் தவறிவிட்டார்கள். பலவித நறுமணங்களையும் காட்டி அவற்றைப் பகுத்தறியும் வேலையை மூக்குக்கு அவர்கள் தரவில்லை. தந்திருப்பின் அதிலும் வெற்றி கண்டிருப்பேன்' என்று அவர் கூறினார்.

அவரிடம் சாற்றுக்கவி வேண்டி, வாழ்த்துக்கவி வேண்டி நாடோறும் மனிதர்களும், மடல்களும் வந்துகொண்டிருந்தன. 'நண்பன்' என்ற செய்தித்தாளின் ஆசிரியர் ஆசி வேண்டி அவருக்கு மடல் எழுதியக்கால், அதனைப் பிரித்துப்பார்த்த பாவலர் உடனே

நண்பா வருக! நனிவருக நானிலத்தின்
பண்பாய் ஒளிர்க! படர்ந்தெழுகக்—கண்பாய
எவ்வகையும் மேற்கொள்க! இன்பசுகிர் தந்தருக
செவ்வகையில் வாழ்க செழித்து!

என்று கூறினார். அதனை அவருடைய மகன் உடனே எழுதி நண்பனின் ஆசிரியருக்கு அனுப்பிவைத்தார்.

பெருமாள் என்பவர், 'சொன்மாலை' எனும் ஒருநூல் இயற்றி சாற்றுக்கவிக்காக அவரை அணுகியக்கால்

பொன்மாலை தேயும்;மலர்ப் பூமாலை வாடும்; மணிக்
கன்மாலை துண்டுபடும் காரணத்தால்—சொன்மாலை
எனமாலை என்றொருநூல் ஈந்துதவினான் பெருமாள்
வன்மாலை நீத்து மகிழ்ந்து

என்று அழகுக் கருத்தமைந்த எழில் ஓவியம் ஒன்றை அவருக்குத் தீட்டியுதவினார். இவ்வாறு அவர் பலருக்கும் அருளிய சாற்றுக்கவிகளும், வாழ்த்துக்கவிகளும் அனந்தம்.

தமிழ்ப் பெருந்தகையாக விளங்கிய அவர் பலரைத் தமிழிலே பாண்டித்தியம் பெற்றவர்களாகவும், அவதானம் செய்யும் திறன் வாய்ந்தவர்களாகவும் ஆக்கியுள்ளார். அவரின் நூற்கடையில் கணக்காளர் வேலைபார்த்து வந்த ஒருவர் தசாவதானியாகவும் விளங்குகின்றார்.

பற்பல ஊர்களுக்குச் சென்று பாமாரி பொழிந்து, சொன்மாரி சொரிந்துவந்த பாவலர் இறுதியாக சொன்மாரி பொழிந்த ஊர் தஞ்சாவூரேயாகும். அங்கு அவர் சொற்பெருக் காற்றுங்கால்' தம் சாவு ஊருக்குத் தாம் வந்திருப்பதாகவும், எனவே இது வே தம்முடைய இறுதிச் சொற்பொழிவு என்றும் கூறினார். இவ்வாறு கூறி இரண்டு வாரங்களில் அதாவது 1950—ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 13ஆம் நாள் திங்கட்கிழமை தம்முடைய 74வது வயதில்

அவர் இம்மண்ணுலகை நீத்துப் பொன்னுலகை எய்தி விட்டார். அதைக்கண்டு புலவர் பெருமக்கள் கண்ணீர் வடித்தனர். கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை உளம்வருந் திக் கண்கலங்கி

'ஓரவ தானம் ஒருநூறு செய்திந்தப்
பாரில் புகழ்படைத்த பண்டிதனைச்—சீரிய
செந்தமிழ்ச் செல்வனைச் செய்குதம்பிப் பாவலனை
எந்நாள் காண்போம் இனி'

என்று பிரலாபித்தார். ஆம், அவர் கூறியது முற்றிலும் உண்மை. மனிதன் இவ்வுலகில் தோன்றியது முதல் இது வரை ஒருநூறு அவதானங்கள் ஒருங்கே பலர் முன்னிலையில் வைத்து, இவரைத்தவிர வேறு யார்தாம் செய்தார்கள்? இனிமேல் யார் நாம் செய்யப்போகிறார்கள்? இனிமேல் அந்த செய்குதம்பிப் பாவலர்தாம் திரும்பி வரப் போகிறாரா? அல்லது அவரைப்போன்ற மற்றொரு செய்கு தம்பிதாம் தோன்றப் போகிறாரா, என்ன? சதாவதானி செய்குதம்பிப் பாவலரே! உமக்கு நிகர் நீர்தாம். உமக்கு நிகர் சதாவதானி செய்கு தம்பிப் பாவலர்தாம்.

# முகம்மது இப்றாகீம் சாகிபு புலவர்

'புலவீர்! நாங்கள் நுமக்குத் தந்துவரும் தரகை நிறுத்திவிட்டால் நீர் என் செய்வீர்' என வினவினார், தன வணிகர் ஒருவர் அவரை நோக்கிக் கடுகடுப்போடு.

'உம்முடைய செல்வம் உம்மை விட்டுப் போய்விட்டால் நீர் என் செய்வீர்' என்று அடுத்தகணம் அந்தத் தன வணிகரைச் சடாரென மடக்கினார் அவர்.

இது நிகழ்ந்து சில நாட்களுக்குள் அந்தத் தனவணிகரின் தொழில்களெல்லாம் முறிந்து வீழ்ந்தன. அவருடைய செல்வம் அவருடைய கையை விட்டும் பறிபோய்விட்டது!

'தானியங்களைப் பதுக்கிவைத்து இப்பஞ்ச காலத்தில் இவர்கள் இப்படி அநியாய விலைக்கு விற்கின்றார்களே. இவ்விதம் விற்றால் நெருப்புத்தானே பிடிக்கும்' என்றார் அவர். இவ்வாறு அவர் கூறியது ஒருநாள் சாயுங்காலம். அன்றிரவு, அவ்விதம் விற்ற தானிய வணிகர்களின் பத்துப்பதினைந்து வீடுகளும், நெற்களஞ்சியங்களும் நெருப்புக்கு இரையாயின!

ஒருநாள் அவர் தம்முடைய செயலருடன் அவருடைய சின்னஞ்சிறு மகள் வீற்றிருப்பதைக் கண்டதும், 'இஃது உமது கடைசிக் குழந்தையா' என்று வினவினார். செயலரும் ஆம் என்று மறுமொழி பகர்ந்தார். இது செயலரின் மனைவியின் செவிப்பட்டதும், அவள் துடித்து விழுந்துவிட்டாள். புலவர் பெருமான் அவ்விதம் கேட்டுவிட்டாரே;

இனிமேல் நமக்குப் பிள்ளை பிறப்பது ஏது' என்று அலறினாள் அவள். ஆம் அவள் அஞ்சியது உண்மையாகவே போய்விட்டது. அதற்குப்பின் அவர்களுக்குப் பிள்ளையே பிறக்கவில்லை!

ஒருதடவை அவருடைய மைத்துனர் ஒருவர் அவருடன் மணிக்கணக்காக மளமளவென்று உரையாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது அவரைப்பார்த்து, 'நீ பேச்சிலே சீமானப்பா' என்று கூறினார் புலவர் பெருமான். இதைக் கேட்டதும் அவர் அலறித் துடித்து, 'மச்சான், உங்களின் காலைப் பிடிக்கிறேன். அவ்விதம மறுபடியும் கூறிவிடாதீர்கள். பணத்திலே சீமான் என்று கூறுங்கள்' என்று வேண்டி நின்றார். அதைக்கேட்டதும் புலவர் பெருமான் புன்முறுவல் பூத்தார். புலவர் பெருமான் கூறியவண்ணம் அவர் இறுதிவரை பேச்சிலேதான் சீமானாக இருந்தார். பணத்திலே சீமானாகவில்லை!

ஒருதடவை தம் முன்வந்த வழக்கொன்றில் உபய கட்சியினரில் ஒருவன் தாம் கூறிய முடிவை ஏற்றுக்கொள்ள முன்வராதபொழுது, 'நான் என் செய்வது? நான் எவ்வளவோ இதமாக எடுத்துரைத்தும் அவன் இணங்குகின்றானில்லை. இதைப்பற்றி அவனிடம் ஏதாவது கூறின் உடனே படபடப்புடன் மனமுரணாகப் பேசுகின்றான். அமரர்களே வந்தபோதினும் கூட அவனைத் திருத்த இயலாது போல் இருக்கின்றது' என்ற கருத்தை உள்ளடக்கி

எத்தனையோ முத்தையனுக்(கு) ஏதுவுடன் சொன் [னதிலும்
இணங்கா வாய்மை
நித்தியமும் பேதலிப்பாய் மனமுரணும் அதிற் [கலந்து
நெறிகள் மாறி
சித்தமுடன் கண்காது வாய்மெய் எ(ல்)லாம் பட [படத்துத்
தியக்க(ம்) ஆவோன்

புத்திதனைத் திருத்த எம்மோர் மகத்துவுடன் தேவர்
[கட்கும்
புனிதந் தானே.

என்று மற்றவருக்கு எழுதி அனுப்பினார். அவர் இவ்வாறு உள்ளதை உள்ளவாறே இக்கவியில் எழுதிய போதினும் அதன்பலனாகிய அறனென்பது அம்முத்தையனுக்குப் பலிதமாகி அவனுக்கு அதன்பின் நிரந்தரமாக மனப்பேதகமும், படபடப்பும் ஏற்பட்டுவிட்டன!

தமது அன்பிற்குரிய நண்பரும் அருமையான பண்புகள் அமையப் பெற்றவரும், தமக்கு ஏற்றுமதி இறக்குமதி அலுவல்களில் பெரிதும் உதவிவந்தவரும், இராமநாத புரத்தைச் சேர்ந்தவரும், தொண்டியில் சீகஸ்டம்ஸ் கலக்டராகப் பணியாற்றியவருமான வெங்கிடசாமி நாயக்கருக்கு அவர் பின்வருமாறு ஓர் அருமையான பாமாலை புனைந்து சூட்டித் தம்முடைய நன்றியைத் தெரிவித்துக் கொண்டார்.

சொல்லரிச் சந்திரன் படிப்புக்ககத்தியன்
சுகமதுக்கோ மன்மதன்
துணிவுக் கருச்சுனன் மனநட்பிற் றருமன்
சுலோகங்களுக் கோதிலோ
வெல்லரிய வால்மீகன் ஈகையிற் கர்ணன்
விளங்கும் கணக்கில் நிபுணன்
வெற்றிக்கு வேலனும் புத்திக்கு விபீஷணன்
விவேகம்தனில் வசிஷ்டன்
வல்லரில் கிருஷ்ணன் வசிக்கும்நக ரோசெல்வம்
மல்கும்மேற் படியார்புரம்

வதியும் சௌபாக்கிய சம்பன்ன யோகாதிபன்
வருணே குலத்துங்கனும்

நல்லறிவு தங்கும்நம் தொண்டியூர்சீ கஸ்டம்ஸின்
நலமான கலக்டர்துரை

நம்புவெங் கிடசாமி நாயக்கர் எமர்கட்கு
நன்றியுறு விசுவாசனே.

இதைப் பார்த்ததும் கலக்டர்துரை பெரிதும் மகிழ்ந்தார். ஆனால் என்னவியப்பு! இரண்டொரு நாட்களில் அவர் மாரடைப்பால் திடீரென இறந்துவிட்டார்! அதன்பின்தான் அக்கவியிலுள்ள 'மேற்படியார்புரம்' என்பது தம்மையறியாமல் நச்சுச்சொல்லாக மாறி அறுகப் பலித்துவிட்டது புலவர்பெருமானுக்குத் தெரியவந்தது. அதிலிருந்து அவர் இனிமேல் எக்காரணத்தை முன்னிட்டும் மனிதர்களைப் புகழ்வதில்லை என்று முடிவுக்கு வந்தார்.

இவ்வாறு பலிதநாவு பெற்றுப் பாரினிலே உலவி வந்த இப்பெரும் புலவர் யார்? அவர்தாம்

நற்றவம்சேர் தொண்டிதனில் ராவுத்தக் கன்னி
[யருள்
பெற்ற சுதனும் பிரபலவான்--

'அப்படியா! அவர்பெயர் என்ன' என்று வினவுகிறீர்களா? நீங்கள் முன்பு படித்தது அவருக்குவந்த ஒரு மடலின் முகவரி வெண்பாவின் முதல் இரண்டடிகளாகும். இனிமேல் அவருடைய பெயர் என்னவென்பதை அறிய அதிலுள்ள தனிச் சொல்லையும், ஈற்றடிகளையும் படிப்பீர்களாக! பெயர் தானாகவே விளங்கிவிடும். எங்கே, படியுங்கள்.

வெற்றி

முகம்ம திபுராகீம் மோகனகன் இல்லில்
திகழுசமு கத்திலிதைச் சேர்.

இவ்வாறு முடங்கல்மீது முகவரி வரையப்பட்டு அவருக்கு நாட்டின் நாலா பக்கங்களிலிருந்தும், புலவர் பெருமக்களிடமிருந்து மடல்கள் வந்த வண்ணமாகவே இருக்கும். பரிசில் வேண்டி புலவர் பெருமக்களும் அவரிடம் வந்தவண்ணமாகவே இருப்பர். ஒருபுலவர் அவரில்லம் வந்தமர்ந்து, 'அகமதிலே அரசாளும் முகம்மதிபுருகீம்' என்று தம் கவியைத் துவங்கினுர். அவ்வளவுதான். உடனே புலவர்பெருமான், 'புலவீர்! போதும், நிறுத்தும். இதோ பரிசில் பெற்று ஊர்சென்று வருவீர்' என்று கூறி அவருக்குப் பரிசில் நல்கி மரியாதையுடன் அனுப்பிவைத்தார். இவ்வாறு அவர் அப்புலவரை அத்துடன் நிறுத்துமாறு கூறியது அடுத்து வரும் மொழிகள் எவ்வாறிருக்குமோ என்ற ஐயத்தாலும், அச்சத்தாலுமேயன்றி வேறில்லை.

மற்ருெரு புலவர் அவர் முன்வந்து அவரை,

சாஸ்திர விலட்சண சுலோச்சனு முத்தமிழ்
கடலனேத்தும் உணர்ந்த சுகுணு
தாமரையின் மாதுதினம் மேவும்வதனு சகல
சம்பத்தி லுற்ற குமனு
தாரணியிலே முஸல்மான் குலதிலகா
சகாயா எவர்க்கும் நேயா
கொண்டல் நிகராகச் சொர்ணம்வாரி வாணர்க்குக்
கொடுக்கும் கொடைத் தியாகா

என்று புகழ்ந்துரைத்து

கொம்பு கவடுள்ள மிருகம் இணையதனில்
குளத்திலில் லாத மச்சம்
கோதிலா நக்ஷத்திரத்தில் ஒருநூறு நற்
குணமாய் எனக் கருள்வையே

என்று வேண்டி நின்றபொழுது புலவர்பெருமான் அவருக்கு அவர் வேண்டிய வண்ணம் ஒரு சோடி மாடுகளும், நூறு வெள்ளி ரூபாய்களும் வழங்கி மரியாதை செய்தார்.

மற்றொரு புலவர் அவரை அணுகி, அவர்மீது ஒரு புகழ்ப்பா இயற்றி அதன் ஈற்றடிகளாக

தருதீனர் புகழ் முகம்மதிபுராகீம் சாகிபுசுக
சம்பன்ன யோக துங்கா
தமிழறிந் திப்போது கனகநிதி வரிசையும்
சாலுவையும் அருள் புரிவையே

என்று வருமாறு பாடி வேண்டி நின்ற பொழுது, அவருக்குப் புலவர் பெருமான் அவ்விதமே அன்பளிப்புச் செய்து கௌரவித்தார்.

அவருக்கும், தஞ்சை அட்டாவதானி இராமசாமிக் கவிஞருக்கும் இருந்த நட்போ அளவிடற் பாலதாகும். இராமசாமிக் கவிஞர் புலவர் பெருமான்மீது ஓர் அழகிய நடுவெழுத்தலங்காரம் ஒன்றைச் சூட்டியபொழுது, அதைக்கண்டு பெரிதும் மகிழ்வுற்ற புலவர் பெருமான் நாலடியார் என்னும் நூலோ பல கருத்துக்களைக்கொண்டு நவமணிபோன்றுள்ளது. ஔவையாருடைய பாடல்களோ பெரிய வெண்முத்துக்கள் போன்றவையாகும். ஈரடியால் வரும் குறள் வெண்பாக்களாலான திருக்குறளோ எம்மதத்தினருக்கும் சம்மதமான கருத்துக்களைப் பெற்று, எப்பக்கம் திருப்பினும் அப்பக்கம் நீரோட்டம் ஓடக்கூடிய வைடூரியம் போன்று அமைந்துள்ளது. நாலடியார் எனும் நவமணிகளையும், ஔவையாரின் பாடல்களாகிய பெரும் வெண்முத்துக்களை

யும், திருக்குறளாகிய வைடூரியத்தையும் மாலை பிணைத்து இராமசாமிக் கவிஞர் ஈன்றெடுத்த மகளாகிய அவரின் கவிக்கு அணிந்து நான் மகிழ்கின்றேன்' என்ற கருத்தை உள்ளடக்கி

நாலடியார் சொல்லோ நவமணியாம் அம்மணிப்
[பெண்
பாலடியார் சொல்லோ பசுந்தரளம்—நூலடியீர்
கோதில்வை டூரியமாம் கோராம சாமிதஞ்சை
மாதுகவிக் கேஅம் மணி

என்று பாடினார்.

மேலும் இராமசாமிக் கவிஞரின் கவிதா மேதையை வியந்து

விஞ்சைக்கோ வந்த வினைக்கோ கவிக்கோமான்
தஞ்சைக்கோ மிஞ்சும் தவக்கோவாம்—அஞ்
[சுக்கோ
விற்சரணம் பூண்டான் வியன்ராம சாமிமனு
விற்செனனம் பூண்டான் வியந்து

என்று பாடினார். மேலும் வீராதி வீரன் ஸ்ரீ. இராமனின் பெயரைச் சூடியுள்ள இராமசாமிக் கவிஞரும் ஒரு வீராதி வீரர்தாம்; கவிஞர்களின் தலைவர்தாம்; கவிச் சிம்மம்தாம் என்ற கருத்தை உள்ளடக்கி

கோசிகன் வேள்வியை முடித்து வானரர்க்கோன்
[பகைநீக்கி
கொடுங்கோ லங்கை
நேசிகளத்தால் தொலைத்து காறனையன் விபீஷ
[ணர்க்கு
நிலைமைஈந்து

மூசிதொழும் தாய்வசனம் நிலைநிறுத்தும் அருள்
[நாமம்
புரந்து சூடி
காசினியிற் புலவர்களின் தலைவர்களைக் கடந்தேறும்
கவிச்சிம் மேறே

*என்றும் அவரை வாயார வாழ்த்தி அவருக்குப் பரிசில் பல நல்கினார்.*

*பரிசிலும் புகழ்ப்பாக்களும் பெற்றுப் பெரிதும் மகிழ்ந்த இராசாமிக்கவிஞர் புலவர் பெருமானின் பெரு வாழ்வையும், பெருங்கொடையையும் ஒருகவியில் போற்றிப் புகழ்ந்து வாழ்த்தினார்.*

*அதன்பின் முகம்மதிபுராகீம் சாகிபாகிய தங்களின் கைதான் உவந்தகை, மற்றையோரின் கைகளெல்லாம் பொக்கை, கரிக்கை, பொந்துவிழுந்த மரச்சக்கை. உலக்கைதான் என்ற கருத்துப்பட*

சுற்றன் முகம்மதிபு ராகீம் சுகநளினம்
உற்றதடங் கையே உவந்தகை—மற்றையர்கை
பொக்கை கரிக்கை பழுது விழுந்தமரச்
சக்கை உலக்கையது தான்.

*என்றும் வாயார்ந்து பண்ணிசைத்தார்.*

*இவ்வாறு புலவர் பெருமக்கள் அவரில்லம் வந்து அவர்மீது பாமாலை தொடுத்து பரிசில் பெற்றுச் செல்வதுமட்டும் நிகழ்வதில்லை. சிலபுலவர்கள் தாங்கள் இயற்றிய கவிகளை அவரிடம் அனுப்பி அவற்றைத் திருத்தித் தருமாறும் வேண்டிக்கொள்வர். அவ்விதம் ஒருவர் அவரிடம் அனுப்பியபொழுது அவருக்குப் புலவர்பெருமான் மறுமொழியாகப் பின்வரும் செய்யுளை எழுதி அனுப்பினார்.*

சீர்சிறந்த தினையத்தூர் ஆறுமுகம் சேர்வையே
[செப்பக்கேளுன்
கார் நிகர்த்த கரதலத்தால் எழுதிவிடும் கவிஏழின்
[கருத்தைப் பார்த்தேம்
நேர்கவியின் தொடை எதுகை சரியிலதாம் சரியாய்
[உன் நினைவில்கூட
பார்புகழும் பெரியோனைத் துதிமுகம்மதிபுருகீம்
[பகர்ந்திட்டேமால்

*பல புலவர்கள் தாங்கள் இயற்றிய காவியங்களை அவரிடம் கொணர்ந்து அரங்கேற்றி சாற்றுக்கவி பெற்றுச்செல்வர். புலமைபெற்ற நாட்டுக்கோட்டைச் செட்டியார் ஒருவர் புலவர் பெருமானை அணுகித் தாம் இயற்றிய பரப்பிரும்மப் பிரபந்தத்தைப் பல நாட்கள் அவரிடம் பாடிக்காட்டி அதில் திருத்தம் பெற்றுச் சாற்றுக்கவி பெற்றுச் சென்றார். தொண்டி மோனகுரு செய்குமஸ்தான் அவர்களியற்றிய திருப்பாடற்றிரட்டும் அவரால் தாம் முதலில் திருத்திச் செப்பனிடப்பட்டது. அதற்கும் மஸ்தான் அவர்களின் வேண்டுகோளின் பேரில் சாற்றுக்கவி நல்கினார் அவர். அதில் ஒன்று வருமாறு.*

ஆரணத்தார் நம்மகுழு தாண்டகையைப் பின்
[றொடர்ந்த
காரணத்தார் காதிரியைக் கைப்பிடித்த—பூரணத்
[தார்
மோனகுரு செய்குமஸ்தான் மூதறிவால் விண்டவழி
ஞானமுறை யோடுரைப்பர் யார்?

*புலவர்கள் மட்டுமல்லாது செல்வச் சீமான்களும், ஏழை எளியவர்களும் அவருடைய தரிசனத்தையும், வாழ்த்துதலையும் பெறுவதற்காக அவரில்லம் வந்தவண்ணம்*

இருந்தனர். ஒருதடவை புலவர் பெருமான் கடுமையான நோய் வாய்ப்பட்டுப் பின்பு சிறிது உடல் நலன்தேறி இருந்த பொழுது அவரைக் கண்டுகொள்ள வந்த அதங்குடி வாழ் பெரும் செல்வரும், நிலக்கிழாருமான முத்துவேலு உடையார் தம்முடைய ஊருக்கும் அவர் ஒரு தடவை வந்து தம்மையும், தம்முடைய குடும்பத்தினரையும் வாழ்த்திவர வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். அவ்விதமே அவர் சில திங்கள் கழிந்தபின் அதங்குடி சென்றார். அப்பொழுது அவருக்கு அளவற்ற மரியாதைகள் செய்யப்பட்டன. முத்துவேலு உடையார் முன்பு தம்மை வேண்டிக்கொண்டபடி புலவர்பெருமான் பின்வரும் செய்யுட்களைப்பாடி அவரை வாழ்த்தி மகிழ்வித்தார்.

நோக்கில் கலியகலும் நூலா ரணம்பரவும்
வாக்கில் திருஉவந்து வைகுமே—காக்கில்
கரமசைக்கில் அன்னதுவாம் காண்டரள வேலன்
சிரமசைக்கில் ஆகும் சிறப்பு.

பந்தாவி னம்சூழப் பாக்கியமும் யோக்கிதையும்
வந்தே அடைந்திருக்கும் வண்மையான்—கந்தார்
மலர்ப்புயமும் நற்குணமும் மாவார வேலன்
சொலற்கரிய தாகும் சுகம்.

ஒருதடவை அவருடைய தம்பிக்கும், நாட்டுக்கோட்டைச் செட்டியார் ஒருவருக்கும் தரகுபற்றி ஒரு சிறு சச்சரவு ஏற்பட்டதன் காரணமாக நாட்டுக்கோட்டை நகரத்தார்களெல்லாம் புலவர் பெருமானுக்கு அளித்துவந்த தரகை நிறுத்திவிட முனைந்தபொழுது உடனே தேவகோட்டைக்கு விரைந்து சென்றார் அவர். அப்பொழுது செட்டிமார்களின் பொதுமன்றத்தில் அவர் பின்வரும் செய்யுளைப் பாடினார். அவற்றிலே அவருடைய கவிதா மேதையும், பெருந்தன்மையும் நன்கு பரிணமிக்கின்றன. இதோ அதைக் கீழே தருகிறேன். படித்து ரசிப்பீர்களாக!

பூககனம் எங்கும் சிறந்த பொருளாய் நின்ற
பூரணக் கடவுளினது
பொருத்தங்களாய் உலக சக்கரவர்த்திகள் அதில்
புகழ் கொண்ட விக்டோரியா
புனிதமுடன் ஆள்கின்ற ராஜதானிகளில் ஒன்ருன
புற மதுராசு சேர்
புதுமையுறு மதுரைஜில்லாவுக்கு மேன்மையாம்
புரிசைசேர் நாட்டுக் கோட்டை

ஏகமன முறுசாவு காரபிரபுக் கள்கூட்டம்
இங்கிலண்ட் பார்லி மெண்டுக்கு
இன்ப மதிகச் சாரமுள்ள நகரத்தார்
இலங்குசபை என்றும்வாழ்க!
எனதுநகருக் கணித்தாயிருக்கும் தேவகோட்டை
நகர்சிரேஷ்ட நகரத்து
எல்லவர்களும் செல்வமுள்ளவர் களாகவே
எந்நாளும் இனிது வாழ்க!

மேக வண்ணன் சந்திரரூபவண் ணனடிகள்
மேன்மையுடன் இருதயத்தில்
மெய்ஞ்ஞான மானவொளி எஞ்ஞான்றும் போற்று [சபை
மேன்மை யோர்இரு செவிக்கு
வெப்பம்நீக்கி இன்பம்தரக் கனிவுடன் சொல்லும்
விண்ணப்ப வண் கவிதையை
வெகுமனப் பிரியமுடன் நகுமனத் தில்லாது
விருப்பமுடன் இனிது கேட்க

ஆகஎன் பந்தாக் களின்முன் னோர் பின்னோர்
அடங்கலும் உங்கள் வேலேக்கு
ஆனவர்களாகவே *சீகஸ்டம்ஸ் மிஸ்டேக்
அனேகங்கள் வந்த தெவையும்
ஆகவொட் டாமலே செய்துங்கள் னன்றியை
அபேட்சை வைத் தென்னுளுமே
அருமையுடன் நிறைசெலுத்தி எங்கள்குறை நீக்கி [மன
அன்புடன் பொறுத் தருள்கவே.

*சொன்னயமும், பொருணயமும் மலிந்த இக்கவியைச் செவியுற்றதும் நகரத்தார்கள் அனைவரும் பெருமகிழ் வெய்தி அவர் மூலமாகவே முன்புபோல் மனமுவந்து பொருள்களை இறக்குமதி செய்வதாகவும், அவருக்கு வழக்கம்போல் தரகு தந்து வருவதாகவும் கூறினர்.*

*அவருடைய கவிகள் ஆழ்ந்த கருத்துக்களுடன் கூடியவையாகவும், உயிரோட்டம் உள்ளனவாகவும் விளங்கின. அவர் நபிகள் நாயகத்தின் வரலாற்றை வினு விடைகளால் எழுதிய புராணத்தின் காப்புச் செய்யுட்களைக் கீழே தருகிறேன், படிப்பீர்களாக.*

பூமருவு கந்த புகழான் புகழ்க்குரிய
நாமருவு செங்கோல் நவநீதன்—மாமருவு
ஆரணத்தின் சூட்சன் அன்புடையோர்க் கின்ப முறும்
காரணத்தின் பூரணனே காப்பு.

ஆதியாய் எவைக்கும் உள்ளுறைப் பொருளாய்
அணுவினும் அணுவிலா தகன்ற
அருளுறு வெளியாய் ஆனந்த மயமாய்
அறிவினுள் அறிவதாய் அமர்ந்த

* Sea–Customs Mistake

சோதியாய்ப் பிறப்பும் இறப்பும் ஒன்றிலதாய்த்
தூயதாய்த் துலங்கும் ஆரணத்தின்
தோற்றிய கருவாய் நயனமினடுவில்
இலங்கிய சுடரொளி வடிவாய்
பேதியா தனைத்தும் பணிபுரி அரசாய்ப்
பெண்ணுடன் ஆணுமிலாதாய்ப்
பேணிய தவத்தின் முதியவர் இதயா
சனத்துறைந்திடும் பெரியோனே
நீதியாய் உனது ஒளியினிற் பிறந்த
நெறிமு கம்மதுநபி சரிதை
நிகழ்த்தும் பேர்விஞவும் விடையதை உரைக்க
நிதம்நிதம் கிருபை செய்தருள்வாய்.

*மற்றப் புலவர்களெல்லாம் இறைவனை. 'அணுவினுக் கணுவாய்' என்றே வர்ணித்திருக்கும் பொழுது இவர் இக் கவியில் அவனை 'அணுவினும் அணுவிலாதகன்ற' என்று வர்ணித்திருப்பது ஈண்டு கவனித்தற்குரியது.*

*இப்புலவர் பெருமான் காவியம் இயற்ற வல்ல பெரும் புலவராய் இருந்ததோடமையாது புராணப் பிரசங்கம் செய்யும் மதுரப் பிரசங்கியாகவும் விளங்கினர். அவருடைய புராணப் பிரசங்கத்தைக் கேட்பதற்கு மக்கள் திரள் திரளாகக் கூடுவார்கள்.*

*அவர் புலவராக மட்டும் விளங்கவில்லை, பெரும் வணிக மன்னராகவும் நிலக்கிழாராகவும் உலகிற் பெரிய கப்பல் தொழில் நிலையமான பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனியுடையவும், ஸிலோன் ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனியுடையவும், தொண்டித் துறைமுக ஏஜண்டாகவும் விளங்கினர். அவருடைய தகுதியின் காரணமாகவே இப்பதவிகள் அவருக்கு அளிக்கப்பட்டன. அக்காலத்தில் இராமநாதபுரம், மதுரை மாவட்டங்களிலுள்ள ஊர்க*

ளுக்கு பர்மா, மலேயே, இலங்கை ஆகிய வெளிநாடுகளி லிருந்து வரும் பொருள்களெல்லாம் தொண்டித் துறைமுகத் தில்தான் வந்திறங்கின. அவற்றைக் கரையில் இறக்கும் பொறுப்பும், பின்பு அவற்றை அவ்வவ்வூர்களுக்கு வண்டி களில் ஏற்றி அனுப்பிவைக்கும் அலுவலும், அவற்றை விற் பனை செய்வதும் புலவர் பெருமானைச் சார்ந்ததாகவே இருந் தன. கப்பலிலிருந்து பொருள்களைக் கரையில் இறக்குவதற்கு ஏஜண்ட் என்ற முறையில வருவாயும், வண்டிகளில் ஏற்றி அனுப்புவதற்குத் தரகும், விற்பனையில் கமிஷனும் அவருக் குக் கிடைத்து வந்தன. இவையன்றி அக்காலத்தில் கொழும்புவுக்கும் தொண்டிக்கும் இடையே மக்களை ஏற்றிச் செல்லும் கப்பல் போக்குவரத்தும் இருந்து வந்ததனுல் அப் பொறுப்பையும், ஸிலோன் ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனி யின் ஏஜண்ட் என்ற முறையில் புலவர் பெருமான் வகித்து வந்தனர். எனவே அவருடைய செல்வாக்கு அபாரமாக

அவருடைய பெருங்கல்வியையும், பெருந் திருவையும் நோக்கித் திருடர்கள்கூட அவருக்கு மரியாதை செய்தனர். ஒருதடவை அவர் வண்டியில் நள்ளிரவில் சென்றுகொண்டி ருக்கும் பொழுது அவர் சென்ற வண்டியைத் திருடர் கூட் டம் ஒன்று வழிமறித்து, 'எந்த ஊர் வண்டி' என்று கேட் டது. புலவர் பெருமான் வண்டியில் தூங்கிக்கொண்டிருந்த மையால் வண்டிக்காரனே 'தொண்டி வண்டி' என்று கூறி ஞன். அப்பொழுது அவரும் விழித்தெழுந்து விட்டார். வண்டியினுள்ளே அவர் வீற்றிருப்பதைக் கண்டதும் ஈட்டி, வேல்களுடன் வரிசையாய் நின்று வழிமறித்த திருடர் கூட் டம் வேறு யாதொரு மொழியும் கூருது அவ்விடத்தை விட் டும் அகன்று விட்டது.

அவர் கல்வியும், செல்வமும் ஒருங்கே அமையப் பெற்றி ருந்தவராதலின், அவரிடமே அப்பகுதி மக்கள் தங்களின் தக ராறுகளைத் தீர்த்து வைக்குமாறு வேண்டிக் கொள்வார்கள். இதைப்பற்றி ஒரு புலவர் அவரை 'தீனர்குல நீதிபதி தொண்டிமா நகரமதில் சிறந்த கன முதலாளியாம்' என்று புகழ்ந்து ஒரு செய்யுள் பாடியுள்ளார். அவர் நடுவு நிலை தவ ருது பஞ்சாயத்துச் செய்தமையின், தீராத தகராறுகள் எல் லாம் அவரிடமே வந்து தீர்ந்தன. அப்பொழுது அவர்

எழுந்து போய் ஒவ்வொரு கட்சியினரையும் தனியாக வேறொரு இடத்திற்கு அழைத்துச் சென்று ஆலோசனை கலப்பதில்லை. அவர் தாம் அமர்ந்திருந்த இடத்தில்தான் அமர்ந்திருப்பார். வாதியுடன் அவர் ஆலோசனை கலக்க விரும்பும் பொழுது, பிரதிவாதி வெளியே சென்று விடுவார். பிரதிவாதியுடன் ஆலோசனை கலக்க விரும்பும்பொழுது வாதி வெளியே சென்றுவிடுவார். இதிலிருந்து மக்கள் அவரை எவ்வளவு மதித்து வந்தனர் என்பது நன்கு தெரியவரும்.

அவருடைய தம்பிமார்கள் அவர்மீது கொண்டிருந்த அன்பும், பக்தியும் அளவிடற்பாலன. அவர்கள் அவரிட்ட அலுவல்களைத் தாசானு தாசர்கள் போன்றுதான் செய்து வந்தனர். அவரும் தம் தம்பிமார்கள்மீது அளவற்ற அன்பு செலுத்தி வந்தார். மரியாதை கொடுத்து மரியாதை பெற்றார். இதன்காரணமாக அவருடைய குடும்பம் மிகவும் ஒற்றுமையுடன் இருந்து சீரும் செல்வமும் பெற்றுச் சிறப்புடன் வாழ்ந்து வந்தது. அதைக் கண்டு நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் எல்லாம், 'பிள்ளைகளைப் பெற்றால் தரகனார் ராவுத்தர்கனி பெற்றது போலல்லவோ இருக்க வேண்டும்' என்று வியந்து கூறுவார்களாம்.

அவர் ஓர் ஆஜானுபாகு. ஏறக்குறைய ஆறேகால் அடி உயரம் இருப்பார். விரிந்த உடல், பரந்த முகம், விசாலமான தாடி ஆகியவை அவருக்குக் கம்பீரமான தோற்றத்தை நல்கின. அவர் ஓரிடத்திற்குச் செல்லின் அவரை அங்குள்ளோர் எழுந்து நின்றே வரவேற்பர். பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நேவிகேஷன் கம்பெனியின் வெள்ளைக்காரத் துரைமகனார் அவரை முதல் தடவையாகச் சந்தித்தபொழுது 'தங்களைப் பார்க்கும் பொழுது ஏசுநாதரைப் பார்ப்பது போல் இருக்கிறது' என்று கூறி இறும்பூதெய்தினராம்.

இவ்விதப் பெருமைசால் புலவர் பெருமான் 1914-ஆம் ஆண்டு மேமாதம் 11-ஆம்நாள் தம்முடைய 75வது வயதில் இம்மண்ணுலகை நீத்துப் பொன்னுலகை அடைந்தனர்.

ஆலிப்புலவரிடமிருந்து துவங்கிய அப்புலவர் பரம்பரை முகம்மது இபுறாஹீம் சாகிபு புலவருடன் நின்றுவிடவில்லை. அன்னாரின் மக்களும் கல்வி, கேள்விகளில் சிறந்து பெரும்

புலமை பெற்று விளங்குகின்றனர். அன்னாரின் முதன் மைந்தரான முகம்மது காசிம் சாகிபு இளமையில் பள்ளிசென்று பயின்றது ஆறே ஆறு நாட்கள்தாம். அவ்வூரிலுள்ள சிவன் கோயில் அருகே அப்பள்ளி இருந்ததனால் அக்கோயிலிலுள்ள உருவச் சிலைகளைக் கண்டு அஞ்சி அவர் அத்துடன் பள்ளி செல்வதையே விட்டொழித்து விட்டார். எனினும் குல வித்தை கல்லாமல் பாகம்படும் என்னும் முதுமொழிக் கிணங்க வயதேறப் பெற்றதும் தாமாகவே படித்துத்தேறிப் பெரும் புலமை பெற்றார்; புராணப் பிரசங்கியுமானார். பலித நாவும் பெற்று விளங்கினார். பதினொரு குடும்பங்களின் தலைவராக இருந்து திறம்படச் செயலாற்றியதோடல்லாது பெரும் வாணிபம் செய்து பெரும் பொருளும் ஈட்டினார். தீராத வழக்குகளை யெல்லாம் தீர்த்துவைக்கும் நீதிபதியாகவும் விளங்கினார். ஒரு குடும்பத்தில் பிறந்தோர் தங்களுக்குள் பிணக்குற்று நீதிமன்றங்களில் எல்லாம் வழக்கு நடத்தியபின், இறுதியாக அன்னாரின் முன் தம் வழக்கைக் கொணர்ந்து பஞ்சாயத்துச் செய்யுமாறு வேண்டிக் கொண்ட பொழுது, அவர் அவர்கள் அனைவரையும் ஒரு திங்கள்வரை அணுவணுவாக விசாரித்து நேர்மையான முறையில் தீர்ப்பு நல்கினார். அத்தீர்ப்பு மட்டும் கையெழுத்தில் கொண்ணூறு பக்கங்கள் வந்தன.

அன்னார் அவ்வூரில் ஒளிவிட்டு மிளிர்ந்த ஞானவிளக்காம் மோனகுரு செய்கு மஸ்தான் சாஹிபு அவர்களின் முழு முதல் நண்பராகவும் விளங்கினார். கற்றோரைக்கற்றோரே காமுறுவர் என்னும் இலக்கணத்திற்கொப்ப நடந்த அவர் அம் மேதகையாம் மஸ்தான் சாஹிபு அவர்களின் திருப்பாடற்றிரட்டில் சில புகழ்ப்பாக்களைச் சொரிந்துள்ளார். அதில் இரண்டு பின்வருமாறு:

இல்லறம் நீத்துத் துறவரம் ஏற்றே
இகலிய ஐம்புலன் அடக்கி
அல்லலுக் குரித்தென் றுக்கையை வெறுத்தே
ஆய்வொடு வாய்விடா தொழுகி
சொல்லரும் இறையைத் துதிப்பதே யன்றித்
தூக்கமோ டேக்கமும் நீக்கி

வல்லநற் கிருபை வழிபெறும் தொண்டி
வாழு மஸ்தான் சாகிபரசே.

தடமுடி மகுடர் தாடுணை வருடத்
தகையுடைச் சர்ஜன குழாங்கத்
திடமுட ேைடி விடமராப் புடவி
சிரம்புனைத் தொண்டியை நாடி
கடனிக ரெனச்சால் கவிமதஞ் சிதறி
கடற்றிரை அடுத்தநன் மடத்தில்
சடைமுடி யுடைய சைகு மஸ்தானைச்
சரண்செய்த லெம்மனோர்க் கெளிதோ

மேலும் அன்னார் சித்திரக் கவிகள் இயற்றும் சீரிய திறமையும் பெற்று விளங்குகின்றனர். அவர் சைகு மஸ்தான் சாகிபு அவர்கள்மீது பாடிய நடுவெழுத்து அலங்காரத்தைக் கீழே தருகின்றேன். அதிலே அவர் கரி, சுசி, குணம், திரு, பொருள், காலாள், காரிகை ஆகிய ஏழு சொற்களை வைத்துக்கொண்டு விளையாடும் விளையாட்டைக் கவனிப்பீர்களாக! அந்த ஏழு சொற்களும் ஒவ்வொன்றும் மூன்று எழுத்துக்களுடையதாய் நற்பொருளுடன் விரிகின்றது. அந்த மூன்று எழுத்துக்களில் நடுவிலுள்ள எழுத்துக்களையெல்லாம் வரிசைக் கிரமமாகப் படிப்போமாயின் சய்கு மஸ்தான் எனும் பெயர் பளிச்சிடுகின்றது. அதன் இரு பக்கங்களிலுமுள்ள இரண்டிரண்டு எழுத்துக்களை ஒன்றுசேர்த்துப் படிப்போமாயின் அம் மேதகையின் பண்பாடுகள் தெற்றெனப் புலப்படுகின்றன. அப் பண்பாடுகளை அன்னார் எவ்வெவ்விதம் பெற்றுள்ளார் என்பதை அக் கவியிலே அவர் குறிப்பிட்டுள்ளார். அந்த அழகைப் பார்த்துத்தான் ரசிக்க வேண்டும். இதோ அக் கவி வருமாறு:

கரிசுசி குணமே திருப்பொருட் காலாள்
காரிகை யிவ்வுரை யேழில்
வரிநடு வுடையான் மறுவரை யெல்லாம்
வடுவற வுற்றினி தேற்ருன்

திரிவினை யணுகா தேகிட நின்றான்
செயமுற மனத்திடந் தேர்ந்தான்
எரியறப் படைத்தா றெழுதிருந் துண்டா
னென்குரு மௌனதே சிகனே.

| சொல் | பொருள் | | | சொல் | பொருள் |
|---|---|---|---|---|---|
| கரி | க | ச | ம் | கம் | அறிவு |
| சுசி | தூ | ய் | மை | தூமை | தூய்மை |
| குணம் | த | கு | தி | ததி | நிறை |
| திரு | க | ம | லை | கலை | நூல் |
| பொருள் | ஆ | ஸ் | தி | ஆதி | பிரதானம் |
| காலாள் | ப | தா | தி | பதி | கடவுள் |
| காரிகை | க | ன் | னி | கனி | பழம் |

*இதில் அம் மேதகையாம் சைகு மஸ்தான் அவர்கள் அறிவைப் பெற்று, தூய்மையும் நிறையும் பெற்று அவற்றின் காரணமாகத் திரிவினை அணுகாது வாழ்ந்து நூல்களை மனத்திலே தேர்ந்து, பிரதானமாகிய குரு ஸ்தானம் வகித்து கடவுளைத் தொழுது சமைக்கப்படாத உணவாகிய பழத்தை உண்டு உயிர் வாழ்ந்தனர் என்ற கருத்துக்கள் பொதிந்து கிடப்பதையும் பாருங்கள்.*

*இவ்வாறு வியந்து பண்ணிசைக்கும் அன்னார் தொண்டியில் அடங்கப்பெற்றுள்ள குத்புஸ்ஸமான் சைகு அபூபக்கர் ஒலியுல்லா அவர்கள்மீது சில பாமாலைகளைத் தொடுத்துச் சூட்டியுள்ளனர். அதிலே வரிகள்தோறும் இனிமையும் சொற்கள்தோறும் செழுமையும் பரிணமிக்கின்றன. அவற்றில் ஒன்று வருமாறு:*

துங்கமலர் திருநோக்கம் எதிர்நோக்கி ரண்டுஜின்
சேவித்து நிற்க முறையே
துரை ராஜர் வந்தனுதினம் பணிந் தேற்றிநற்
சுவடுமுடி தாங்கி நிற்க
பொங்குகட லுண்டெழு புயலன்ன பாக்களைப்
பொழிவாண ரோதி வரவும்
போதமறு வேதவர்கள் பேதமறு சதுநாடி
போற்றி நல்லவை இருக்கக்
கங்குல்பக லற்றபெருங் காட்சியது மாட்சியாய்க்
கத்தனருள் பெற்ற சுகமே!
கற்றறி யாதவென் சொற்பிழை பொறுத்துநனி
கருணைதந் தாள்க நாதா!!
செங்கோல் நடாத்துமா சமுகதயை நாடினேன்
சென்மவினை யகல வருள்வீர்.
செப்பரிய ஜோதிபர சுகுணமறை யுறைதொண்டி
சைகுஅபூ பக்க ரொலியே!

*அன்னார் தம் தந்தையார் போன்று புலவராக விளங்குவதோடல்லாது புலவர்களை ஆதரிக்கும் பண்பாடும் பெற்று விளங்குகின்றனர். புலவர்கள் அவருக்குக் கவி மூல மாகவே மடல் தீட்டும் வழக்கத்தைப் பெற்றிருக்கின்றனர். அவ்விதம் அன்னாருக்கு வந்த மடல்களில் ஒன்று வருமாறு:*

அத்துவித மானமய ஜோதி ரகுமானருள்
அந்தமிகு சுந்த்ர பதிவாழ்
ஆரணத் தேர்ச்சியுயர் வாலைஅல் லாபிச்சை
அரியதவப் புத்ர யோகன்
அஷ்டாவ தானமுதல் ஆசுமதுரம் சித்திர
அற்புதக் கீர்த்த னைகளும்

அருள்வாக்கு நாதப் பிரசங்கத் தொனிக்கவி
அமுதகலை சிந்து மேகம்
எத்திசைக் கும்புகழ் வித்துவ கடாக்ஷம்
இயற்றெரு டைக்கவி நாவலன்
எக்கவி களுக்குரிய இலக்கணம் இலக்கியம்
ஏர்கடல் திறந்த வெள்ளம்
இயற்கைமிகு கனவான்கள் கூடல் சம்பாஷணை
யாவர்க்கும் இனிய கவிஞன்
இயற்றமிழ் கலைமணி சிந்து ரத்னக்கவி
இதுசமயம் எழுது நிருபம்
வெற்றிகா ருண்யமிகு தொண்டிமா நகரமதில்
மேன்மை அதிகார யோகா
விவேகக் கடற்கல்வி முகம்மதிபுரு கிம்சாஹிப்
வேண்டும் தவப்பிர பாலா
வியாபார சம்பன்ன கோவைக் கலம்பகம்
வினவிடை யுணர்ந்த சீலா
விவேகசா கரமுற்ற மனமங்கள அதிபனென
வேந்தர்புகழ் சார்ந்த குணவா
உத்தம நற்குண போத தனவந்த
உல்லாச இனிய பூபா
உலகத் தயாளகா உனதமிகும் முஸ்லிம்
குலத்தோர்க் கொருதி லோதகா
உபகாரா கன்ன வதாரா சிங்காரா
உறுதி தவருத நீதா
உரிமைச் சகோதரா முகம்மது காசீம்
உவப்பு வைத்தினிது காண்க.

சித்திக்க இதுகாறும் இந்நகர மீதில்
சிறப்புற் றிருக்கு நாளில்
தெய்வசெய லாலெனது வீட்டில்அக் கினிபுக்கிச்
சேதாரம் அதிக மாகி
சேகரம் ஒருநூற்றுப் பதினைந்து மனைமட்டும்
செங்காளை உண்ட விஷயம்
செய்கையைக் கண்ணுற்ற காதுற்ற மக்களின்
சிந்தையை உருக்கும் ஐயா
அத்திமுதுகைப் போலச் சுவர்மட்டு மல்லாது
ஆதாரம் ஒன்று மில்லை
ஆனதால் மறுபடி கட்டட வேலைகள்
அவசரம் நடப்ப தாலே
அன்பான உமதுதிரு முன்பாக வந்தெனது
அவல மதுசொல நாணியே
அதிசீக்கிர மாய்இந்த விஞ்ஞா பனம்தனை
அனுப்பினேன் சமுகம் வரவே
தித்திக்கும் அமுதவாக் குத்தரவு வரும்வரை
திசைநோக் கிஎதிர் பார்ப்பதால்
தேவைக்கு வேண்டுவது கடனுக ஈந்துதவின்
திரிமாத மான பிறகு
திடனுக வரவுக்கு இருசால் அனுப்புவேன்
தீர்க்கமிது சொன்ன வாக்யம்
திதிகளது தவருது ஊக்கமொடு நோக்கமாய்
திருமுகம் ஒன்று செய்து
பத்திமிகும் இக்கவிஞன் ஒப்பமொடு சமுகத்தின்
பார்வைக்கு வருவ தாலே

பகரும்ஓர் ஆயிரம் ஓடுமுந்நூ றுமுழப்
பட்டி யலும்இது தருணமே
பல்லாயிரம் பேர்க்கு மெம்பரா யுள்ளவர்
பவிச ளித்தெனை மதிக்கப்
பாரோர் புகழ்ந்திட என்ஊரோர் மகிழ்ந்திடப்
பதிவர விடல் வேண்டுமே.

இம் மடலைப் படித்ததும் அன்னார் உடனே அக் கவிரா யருக்கு ஆயிரம் ஓடும் முந்நூறு முழப் பட்டியலும் அனுப்பி வைத்தனர்.

புலவர் முகம்மது இபுறுஹீம் சாகிபு அவர்களின் இரண் டாவது மகனான முகம்மது இஸ்மாயீல் சாஹிபு அவர்களும் ஒரு புலவரே. பற்பல பாக்களை இயற்றியுள்ளார்.

முகம்மது இபுறுஹீம் சாகிபு அவர்களின் மூன்றாவது மைந்தரான முகம்மது இஸ்ஹாக்கு சாகிபு அவர்கள் தம் குடும்பத்தொழிலில் செவ்வனே சிந்தைசெலுத்திச்செயலாற் றிய போதினும் இடையிடையே தம் உளக் குறைகளை இறைவனிடம் கூறி மன்றாடிப் பல முனாஜாத்துக்களைப் பாடி யுள்ளார்.

வெண்பாவா லுன்னை விருப்பமுடன் வேண்டு
[மெனைக்
கண்பார்ப்பாய் காருண்ய கர்த்தனே—பண்பாக
எக்காலும் நல்லறங்கள் எல்லாம் புரிந்துவர
மிக்கான வாழ்வதனை நல்கு

என்று வெண்பாவில் பண்ணிசைக்கும் அன்னார் இதயம் நெகிழ்ந்து நெக்குருகிப் பாடுகின்ற அப் பாக்களில் இனிமை யும் எழிலும் கைகோத்துக் களிநடனம் ஆடுகின்றன. அவற் றின் ஓட்டம் அவை கொட்டப்பட்ட பாக்களேயன்றி கட் டப்பட்ட பாக்கள் அல்லவென்பதை நன்கு நிரூபிக்கின்றன.

*மறைகாட்டும் அறநெறிப்படி நடக்கத் தமக்கு நல்ல றிவை விரும்பிய அவர் இறைவனிடம் இரு கரமேந்தி*

வேதத்திற் சொன்ன விதிப்படியே யானடக்க
போதத்தைத் தந்தருள்வாய் பூரணனே—வாதிக்கும்
பொல்லாத துற்குணத்தைப் போக்கிவைத்
[தென்றனுக்கு
நல்லவித நற்குணத்தை நல்கு,

*என்று இறைஞ்சுவது அழகாக அமைந்துள்ளது. அதன் பின் தம் செயல்களையெல்லாம் நல்லமுறையில் நடந்தேற வேண்டுமென்று இறைவனிடம் திருக்காவல் தேடும் அன்னார்*

எல்லா வகையாலும் என்காரி யம்முழுதும்
நல்லவித மாக்கிவைப்பாய் நாயனே—
[தொல்லுலகில்
உன்னேயே நம்பி ஒழுங்காய் நடந்துவரும்
தன்மையும் நாளுமே தா

*என்று பண்ணிசைக்கின்றார். 'அருளாளனே என்று அலறுந் தொனியுன் கிருபை யுளசெவியிற் கேட்கும்' என்று கல்லும் கரைந்துருகும்வண்ணம் ஒரு வெண்பா இசைத்தபின்*

உபகார மேநினேந் துபகார மேபுரிந்
துபகாரி யாயிருந் துதவிசெய—உபயோக
மாகும் பெருநிதியை ஆண்டவா என்றனுக்குச்
சாகுந் தனேயுந்தாள் *என்று பாடுகிறார்.*

*இவ்வாறு பாடிய அவர், இறைவன் தமக்குப் பெருந் திருவைத் தந்தபின் தம்மனம் இறுகிவிடக்கூடாதே என்று எண்ணியோ என்னவோ தமக்குத் தாராளத் தன்மையை யும் தந்தருளுமாறு பின்வரும்வண்ணம் இறைஞ்சுகின்றார்.*

வற்ருப் பெருஞ்செல்வம் வாகையாய்க் தந்தெற்குச்
சற்றேனும் என்னுள் சடையாது—பெற்றியாய்

ஏராம் தருமங்கள் ஏகனே! செய்துவரும்
தாராளத் தன்மையுமே தா.

அதன்பின் அவர் இறைவனை நோக்கி, 'இறைவனே! நீ எனக்கருளியது ஒரே ஒரு வாழ்க்கைதான். அது வீணாகப் போகாமல் காப்பாற்ற வேண்டியது உன்னுடைய கடமை என்று பின்வரும் வெண்பாவில் கூறுகின்றார்.

வாணாளோ யானறியேன் வல்லவா! என்காலம்
வீணாகப் போகாமல் மேலாக்கிப்—பேணுதலாய்ப்
பாவங் களைவிட்டும் பக்தி செலுத்திவரக்
காவந்து செய்துமே கார்

இவ்வாறு பற்பல வெண்பாக்களால் தம் குறையிரந்து இறைஞ்சிய அவர் இறைவனை நோக்கி, 'இறைவனே! நான் உன்னிடம் என்ன சொல்வதற்கு உள்ளது. எல்லாம் நீ அறிவாய். நான் சொல்லித்தானா நீ விளங்கவேண்டும்? என் உளத்தில் இன்னும் என்ன என்னவோ நல்லெண்ணங்கள் எல்லாம் உள்ளன. அவற்றை நீ நன்கு அறிவாய். அவற்றை நிறைவேற்றி என் வாழ்வை ஏற்று' என்ற கருத்தினை உள்ளடக்கி

என்னேக்க மெல்லாம் இறைவனே நீயறிவாய்
அன்னேக்கம் நன்னேக்கம் ஆவதற்கு—உன்னேக்க
ஆதரவைத் தந்து அடியேமைக் காத்தருளி
ஏதமற என்வாழ்வை ஏற்று

என்று வேண்டுகின்றார். பின்னர் அன்னாரின் உளத்தில் மற்றோர் எண்ணம் உதிக்கின்றது. இறைவனே! நான் இவ்வாறெல்லாம் என் உளக்கருத்துக்களை எடுத்துரைத்துவிட்டதைக் கண்டு 'நீ சொல்லித்தானா நான் செய்ய வேண்டும்? என்று நீ சினமுறாதே. நீ பேரருளும் பேரன்பும் மிக்க நாயன் என்பதை நானறிவேன். நீ திருமறையில் என்னிடமே எல்லாவற்றையும் கேள்' என்று கூறினாயல்லவா? அந்த உரிமையைப் பாராட்டித்தான் நான் ஏதோ

*உளத்திலுள்ளதைக் கேட்டேனே யன்றி வேறில்லை என்று பின்வருமாறு பாடுகின்றார்.*

எல்லா வுதவிகளும் என்னிடமே கேளென்று
வல்லோனே வேதத்தில் வாக்களித்தாய்—அல்
[லாவே!
அந்த வுரிமையுடன் அடியேனுன் கேட்பதையும்
சொந்தமாய் நீநிறையத் தா

*இவ்வாறு பாடிய அன்னார் 'சரி, இறைவனே, நான் இனிமேல் உன்னிடம் ஒன்றும் கேட்கவில்லை. நீ விதித்தபடி எல்லாம் நடக்கும் என்ற மன உறுதியையும், விதிப்பயனை திருப்தியுடன் ஏற்றுக்கொள்ளும் மனப் பண்பையும், என்ன தான் ஏற்படினும் உன்மீது அசையா நன்னம்பிக்கை கொள்ளும் நன்மனத்தையுமாவது தா' என்று இறைஞ்சும்பொழுது நம் மயிர்கள் சிலிர்க்கின்றன. அவ்விறைஞ்சற் பாக்கள் வருமாறு:*

வாழ்வதூஉந் தாழ்வதூஉம் வன்மை மிகவுளவுன்
ஊழின் பயனென் றுறுதிபெற்று—நாளும்யான்
நல்ல திருப்தியுடன் நானிலத்தில் வாழ்ந்திருக்க
வல்லவா! மெய்யறிவைத் தா.

என்னதான் ஏற்படினும் எக்காலும் உன்மீது
நன்னம்பிக் கைகொண்ட நன்மனத்தை —மன்னவா
திண்மையாய்த் தந்தெற்குத் தீர்க்கா யுளும்நல்கி
வன்மையாய் வாழ்ந்திருக்கச் செய்.

*இவ்வாறு பாடி இறைஞ்சிய அவர் தம் உள்ளத்தை நோக்கி 'அல்லாஹ் நமக்குப் போதுமானவன்' என்று ஆறுதல் கூறிவிட்டு 'இறைவனே நான் உன்னிடமே அடைக்கலம புகுந்துவிட்டேன். எனக்கு அபயம் தந்தாள்' என்று இறுதியாக இறைஞ்சுகின்றார். அது வருமாறு.*

அல்லாவே பேதுமென அமைதியாய் வாழ்பவர்க்கு
எல்லா வினையும் இலாதகலும்—அல்லாகு
உன்னிடமே காவல் உவப்புடனே தேடுகின்றேன்
அன்புடனே ஆதரிப்பாய் ஆமீன்.

*இவ்வாறு இறைவனையே நம்பி, இறைவனையே இறைஞ்சித் தொழில் செய்து வருங்கால் நிலுவைச் சேதாரங்கள் ஏற்பட்டதன் காரணமாக, சரக்குகளைத் தரகுக்கு விற்பனை செய்து தருமாறு அனுப்பிய வணிக நிலையம் ஒன்றிற்குப் பெரும் பாக்கி கொடுபடவேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது. அப்பொழுது அவர் சென்னை நகர் வந்து அவ் வணிகநிலையத் தலைவரையும் அவர்தம் உடன்பிறந்தார்களையும் சந்தித்து ஒரு மாத காலமாக உரையாடியும் ஒன்றும் ஒழுங்காகாமற் போகவே பின்வரும் பன்னிரண்டு வெண்பாக்களை இயற்றி அவர்களின் முன்னிலையில் பாடினார்.*

சீருயர்ந்த நும்சொல் சிரமேற்றுங் கித்தொழிலில்
பேரிரவ லாகப் பிணைநின்றேன்—ஊரறிய
என்குலத் தாரெல்லாம் எள்ளிநகை யாடுவதால்
உன்னிடமே வந்தேன் உவந்து

ஆறேழு ஆண்டுகளாய் ஆக்கை யெலாம்குலையப்
பாரெலாம் சுற்றிப் பறந்தலைந்து—சீரடைவோம்
என்றெண்ணிச் செய்ததொழில் ஏமாற்ற மானதன்றி
கண்டபலன் ஒன்றுமில்லை காண்.

எல்லாம் அறிந்தும் அறியாதார் போலிருந்தால்
வல்லார்யார் இஃதை வகைபண்ண—நல்ல
மனம்நொந்து வாடா மகிழ்வாயான் செல்ல
தனவந்தா நீயுதவி செய்.

செய்யா திருப்பையேல் தெய்வப் பழிசேரும்
அய்யாவே நன்றாய் அறிவாயால்—மெய்யாக
உற்றது சொன்னேன் உரிமையுள நீஎமக்கு
சொற்றதுசொன் னாலே சுகம்.

புன்முறுவல் பூக்கும் புனிதமுள நின்முகத்தை
சென்னைநகர் வந்து தரிசித்தேன்—அன்புளாய்
என்கவலை எல்லாமும் இன்றே அகன்றதென
நன்குள்ள நல்வாக்கு நல்கு

நல்கி அதற்கான நற்காரியம் செய்தக்கால்
பல்கிச் சுதர்களுடன் பல்லாண்டு—தொல்லுலகில்
இன்புற்று வாழ்வதுடன் இன்னும் பலகோடி
பொன்பெற்றுப் பேரடைவாய் நீ.

எம்கே பிரதர்ஸு என்றுநடை பெற்றாலும்
உம்முடைய சொல்லை ஒழுகிநின்றோம்—எம்மு
[டைய
நீங்காத அன்பை நினைவுவைத்து இக்கணக்கை
பாங்காக நீக்குதலே பண்பு.

அல்லும் பகலும் அரும்பாடு பட்டுனது
சொல்லையே நம்பித் தொழில் செய்தோம்—நல்ம
[னத்தாய்
திண்டாடி இன்னுமனம் தேங்கி மயங்காதி
ரண்டாம்நம் பர்கணக்கை நீக்கு.

அல்லற்பட் டாற்ரு தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படையென்று—
[சொல்லுகிருர்
பொய்யா மொழிப்புலவர் புத்தியுட னேஅதனை
மெய்யாகக் கொள்வதே மேல்

வில்லம்பு சொல்லம்பு மேதினியில்(இ)ரண்டென்றும்
வில்லம்பிற் சொல்லம்பே மேலென்றும்—
[கல்விநிறை
கம்பனுரை செய்தான் கட்டாய மாய்எவரும்
நம்பி நடப்பதுவே நன்று.

ஆனமுதல் அத்தனையும் அன்றன் றனுப்பிவந்தும்
போனமுதற் கும்யான் பொறுப்பென்ருல்—
[ஊனமிலா
சித்தம் சிறிதிரங்கித் தெய்வத்தைச் சாட்டுவனேல்
சத்தியமாய்ச் சாபம் விடாது.

என்குறைகள் எல்லாம் இனிதாய் உணர்த்திவிட்
[டேன்
புன்முறுவல் பூக்கும் புனிதனிடம்—மன்பதையைக்
காத்துரட் சிக்கும் கடவுளே என்றுமெனை
காத்துரட்சித் தல்கடனே யாம்.

*வெண்கலக் கோட்டையில் வேழம் நுழைந்தது போன்று அவர் இவற்றை முழக்கவே, இவற்றைக் கேட்டுப் பெரிதும் அதிர்ந்துபோன அவ் வணிகர்கள் பாவொன்றிற்கு ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் வீதம் பன்னிரண்டு பாக்களுக்கும் பதினெண்ணுயிரம் ரூபாய் தள்ளுபடி செய்து அன்னுரை நல்ல திருப்தி செய்து ஊருக்கு அனுப்பிவைத்தனர்.*

*இவ்வாறு புலவர்களுக்குப் புலி போன்றுள்ள வெண்பா விலே புலி போன்று விளங்கி புலமையும் திருவும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற இவரும் இவர்தம் உடன்பிறந்தாரும் நாகூர் ஆண்டகையின்மீது ஒரு பிள்ளைத்தமிழ் பாடுமாறு குலாம்காதிறு நாவலரின் மகனார் ஆரிபு நாவலரைக் கேட்டுக்கொண்டதோடல்லாது அந் நூலுக்குக் கொடைநாயக ராகவும் விளங்கினர். அவர்கள் தமக்குச் செய்த உதவியை அந் நாவலர் அப் பிள்ளைத் தமிழில் ஒவ்வொரு பருவத்தின் இறுதியிலும் தமிழ் மரபுப்படி நன்றியுடன் நினைவு கூர்ந்து அவ்விருவருக்கும் நாகூர் நாயகரின் பதக்காவலை நாடிப் பண்ணிசைக்கின்றார். அதிலே பிள்ளைத் தமிழுக்குப் புலிபோன்றுள்ள அம்புலிப் பருவத்திலே அவர்களைப் போற்றிப் பண்ணிசைக்கும் நாவலர், அவர்களைத் தொண்டி என்னும் நீர்த் தேக்கத்திலே ஆம்பல்மலர்களிடையே மலர்ந்துள்ள இரண்டு தாமரை மலர்களென்றும் அவர்கள் நாகூர் ஆண்டகையின் திருவடிக் கமலங்களைச் சிந்தையில் கொண்டவர்களென்றும் எனவே, அவர்கள் கவலை, நோய் முதலியவை அற்று வாழ்ந் திருக்க நீ விளையாட வருவாயாக என்றும்அம்புலியை அழைப்பது போன்ற கருத்தை அடக்கி*

மனைஅ றம்பலன் அமைய தொண்டி
மணக்க வந்தவோர் பொய்கையில்
வதியும் ஆம்பலின் இடையிரண்டணி
மரைக ளுண்டுகொண் மதியமே!
தினமும் நாயகர் அப்துல் காதிறு
திருவடிக் கமலத் தையே
சிந்தை மேவி மலர்ந்தகன்று
சிறந்து வாழ்வது கண்டுநீ
கனமு கம்மது காசிமா ரிசு
ஹாக்கு வள்ளலும் ஆயமும்
கவலை நோய்பிணி அகல வாழ்ந்திட
கருத்தி லுன்னிவர் வேண்டுபு

மணமு கம்விளை யாட்டணிந்தருள்
வாய்க்க வருகவே அம்புலீ!
வளரும் நாகூரின் இளவ லாடிட
வருக அம்புலி வருகவே!

*என்று பாடிப் பரவசமுறுகின்ருர்.*

*இவ்வாறு புலவர்களாகவும், புலவர் பாடும் பெருமை மிக்கோராகவும் வாழும் இவர்கள் புலவர்கள் என்ருல், பிறர் உதவி நாடி நிற்பவர்கள் என்று சாமான்யர் கூறும் இழிச்சொல்லுக்கு இலக்காகாது புலவர்களும் பெருந்திருவும் பெறலாம், பெருவாழ்வும் வாழலாம் என்பதற்கு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கி வருகின்றனர்.*

*வாழ்க அவர்தம் திருப்பெயர்! வாழ்க அவர்தம் தமிழ்ப் [பணி*

# செய்யிது முகம்மது ஆலிம் புலவர்

சேது நாட்டின் கீழ்க்கரையிலே இஸ்லாத்தின்கலங்கரை விளக்கம் போன்று காட்சி வழங்கி, தெள்ளியோரையும், வள்ளியோரையும், வலிமார்களையும், பெருமான்களையும் உற்பவித்த நற்பதியாய் விளங்கும் கீழக்கரையின் கண் ஒரு புலவர் 'காலரா' நோய்கண்டு படுத்த படுக்கையாய்க் கிடக்கின்றார். அப்பொழுது அவருடைய உள்ளத்திலே என்னவோ ஊசலாடுகிறது. படுத்திருந்த அவர் 'விருட்' டென்று எழுந்து அமர்கின்றார். பக்கத்தில் இருந்த ஏடும் எழுத்தாணியும் அவருடைய கைகளில் ஏறுகின்றன. அதன் பின் 'கிரிச், கிரிச்' என்ற ஒலி கேட்கிறது. சில நிமிடங்கள் ஏதோ எழுதிவிட்டு ஏட்டையும் எழுத்தாணியையும் பக்கத்தில் போட்டு விட்டு மீண்டும் படுக்கையில் சாய்ந்து விடுகின்றார். அப்படி அவர் அதில் என்ன எழுதினார்? பின்வரும் கீர்த்தனை.

பல்லவி

தருணத்தில் என்முன்வந்து காப்பேன் எனும்வலக்கை

தருவது கடனுமே—எனும் வலக்கை

தருவது திடனுமே

அனுபல்லவி

ஒருமுத்தில் உதித்திந்த உலகம் மற்றும் எவையும்

ஒக்க ஒளிவாய் நின்ற மக்க மகுமூதரே!

*சரணம்*

வாயும் நாவும் வரண்டு மனமெல்லாம் மெலிந்திட
மனுமுறையுள்ளோர் கண்ணீர் மழையெனச்
[சொரிந்திட
சேயும் துணைவர்களும் செல்வமும் பிரிந்திட
செய்தபழி பாதகச் செயல்பல தெரிந்திட
சிலிர்க்க உடல்நரம்பு வலிக்க மனதுவெகு, கலக்க
[முற இறைவன்
மலக்கல் மௌத்துவரும்— (தருணத்)

விழி இரண்டும் சிவந்து வெகுகோபமாய் அடுத்து
மேனுள் அகன்றஉயிர் மறுத்துடலில் விடுத்து
மொழியும் மொழிக்குமறு மொழிகொடென்றே
[தடுத்து
முனிந்து சுகுமாறென்னும் மூரித்தண்டம் எடுத்து
முப்புவியும்குலுங்க செப்பியமுன்கர் நக்கீர் வெப்ப
[முடன் வெகுண்
டடிக்க அடர்ந்துவரும் (தருணத்)

மிகுதிநாளில் மகுஷர் வெளியில் பொழுது தாக்கி
வேகாமல் முன்செய் பாவ வினைத்தொடர் எல்
[லாம் நீக்கி
நியதித்தராசில் நன்மை தட்டில் நிரம்பத் தூக்கி
ரட்சித் தல்ஹம்துக்கொடி நீழல் தனிலுமாக்கி
நீலக்கரிய ரோமக்காலுக்கு நேர்மையான வேலில்
[கூர்மை
முஸ்தகீம் பாலத்திடை நடக்கும் (தருணத்)

மருமலர்ச்சோலைசூழும் மதிஞநகரின் வாழ்வே
மாதவர் அப்துல்லா கண் மகவென்றுதித்த
[கோவே
தருமசர்க்குண மேரே சகலோர்க்கும் கற்பகாவே
சதுமறையோர் புகழும் சையிது அஹ்மதுவே
தன்னந்தனியே நின்று அன்னம் பாறுதல் கொண்ட
சின்னஞ்சிறியேன் சதக்கெனும் பயலுக்கிந்த
(தருணத்)

*ஆஹா! என்ன அருமையான கீர்த்தனை. மனிதனுக்கு ஏற்படும் துன்ப நிலைகளான மரணநிலை, சமாதி அறை, உயிர்த்தெழும்பல், பாலம்கடத்தல் ஆகியவற்றை எவ்வளவு அழகாகவும், உருக்கமாகவும் எடுத்தியம்பி உதவி தேடுகின்றார். உதவி கிடைக்கும் என்று எவ்வளவு நம்பிக்கையுடன் அவர் 'திடமுமே என்றும் பாடுகின்றார். முத்திரை அடியில் அவர் தம்மை சதக்கு என்று மொழிந்திருப்பதிலிருந்து 'யூசுபுநபி காவியம்' எழுதிய பெரும் புலவர் கறுத்த சதக்குத்தம்பிப்புலவர் போன்றல்லவோ அவர் தெரிகின்றது. இந்தக் கீர்த்தனையின் மிடுக்கும், நடையும், பொருளும் அதனை உறுதிப்படுத்துகின்றனவே. ஆம், அந்தக் கறுத்த சதக்குத்தம்பிப் புலவர்தாம் அவர். அவர் இறப்புப் படுக்கையில் வைத்துத்தான் இவ்வாறு எழுதினார்; இறைஞ்சினார். இதன் பின் படுக்கையில் படுத்த அவர், 'அல்லாஹ்' என்ற முழக்கத்துடன் கண்களை இறுக மூடிக்கொண்டார். அத்தகைய பெருந்தகையின் பெண்வழிப் பேரர்தாம் நம் கட்டுரைத் தலைவராம் சையிது முகம்மது ஆலிம்புலவர் அவர்களாவர்.*

*விசு ஆண்டு சித்திரைத் திங்கள் 27—ஆம் நாள் செவ்வாய்க் கிழமையன்று கீழக்கரை பெரிய அம்பலகாரர் வீதியிலே உள்ள ஹாபிலு முகம்மது சதக்குத்தம்பி மரக்காயரின் இல்லத்திலே அன்னாரின் அருந்தவ மகனாய், முழுமுதல் மைந்தனாய்த் தோன்றிய சையிது முகம்மது சின்னஞ்சிறு வயதிலேயே குர்ஆன் ஓத குத்புத்தீன் லெப்பை நடத்திவந்த பள்*

ளிக்கு அனுப்பிவைக்கப்பட்டனர். பள்ளி சென்ற அவர் பாடம் பலகையில் எழுதிய அன்றைய தினமேயோ அடுத்த நாளிலேயோ பாடம் கொடுத்து தம்முடைய பதின்மூன்று வயதிற்குள் திரு குர்ஆன் முழுவதையும் மன னம் செய்தும் முடித்துவிட்டனர். பிறகு அங்கேயே அரபி நூல்களையும் பயின்றுவந்தனர். தமிழ்க் கல்வி பயில்வதற் காக அவரை அவருடைய தந்தை பள்ளிக்கூடத்திற்கு அனுப் பவுமில்லை. அவரும் பள்ளிக்கூடம் செல்லவுமில்லை. எனி னும் தம் வயதொத்த சிறுவர்களுக்குத் தெரிந்த கல்வியோ, விளையாட்டோ தமக்குந்தெரியாதிருக்கக்கூடாதென்ற ஆசை யும்உரோஷமும் வெகுவாகவாய்க்கப்பெற்றிருந்த அவர் தம் வயதொத்த சிறுவர்களிடம் தாமே சென்று தமிழ்நெடுங் கணக்கைத் தெரிந்துகொண்டார்.

கோலி விளையாடுவதிலும் புறு வளர்ப்பதிலும் பெரிதும் இன்பம் கொண்டிருந்த அந்நேர் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் ஓதித் கொடுத்துக்கொண்டிருந்த தைக்காவிலும் புறுக்கள் அதிகமாக இருக்கின்றன எனக் கேள்வியுற்று அவற்றைப் பார்க்க ஒருநாள் சென்றனர். அப்பொழுது அங்கு வீற்றி ருந்த மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்கள் இவர் திருக் குர்ஆனை மனனம் செய்துள்ளார் என்பதனை ஏற்கனவே கேள்வியுற்றிருந்தார்களாதலின் இவரைச் சோதித்துப் பார்க்க எண்ணி 'யுமத்திஃகும்' என்று திருகுர்ஆனில் வரும் அரபி மொழியிலுள்ள ஐன் என்ற எழுத்துக்கு மேல் என்ன இடுகுறி வைக்கப்பட்டுள்ளது என்று வினவினர். 'ஸுகுன்' என்ற இடுகுறி என்று இவர் கூறியதும் மாப் பிள்ளை லெப்பை ஆலிமுக்கு ஏற்பட்ட மகிழ்வுக்கு அள வில்லை. அருகே நின்றுகொண்டிருந்த தம் பள்ளிப் பிள்ளை களை நோக்கி 'பார்த்தீர்களா? பிள்ளைகளென்றால் இப்படி யல்லவோ இருக்கவேண்டும். கேட்டு வாய் மூடுவதற்குமுன் இவர் சரியான மறுமொழி கொடுத்துவிட்டாரே. நீங்க ளும் பிள்ளைகள் என்றிருக்கின்றீர்களே! உங்களுக்கு வெட்க மில்லையா" என்று கூறினார். அதன்பின் இவர்பக்கல் திரும்பி 'நான் சிறுவனாய் இருக்கும்பொழுது நம் ஊருக்கு வந்தி ருந்த அரபி ஒருவர் என்னிடம் இதே கேள்வியைக் கேட் டார். நான் நீ கூறியபடியே சரியான விடை பகர்ந் தேன். அதைக் கண்டு அவர் என்னை வியந்து பாராட்டினார். என்று கூறினார். மேலும் 'இனிமேல் நீ நம் தைக்காவுக்கு

வந்து ஓது. நான் பாடம் சொல்லித் தருகின்றேன்' என்றும் எடுத்துரைத்தனர். அவ்விதமே இவரும் குத்புத்தீன் லெப்பை நடத்திவந்த பள்ளியை விட்டுவிட்டு மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்கள் நடத்திவந்த தைக்காவிற்கு வந்து அரபிக் கல்வி பயின்றுவந்தார்.

மாப்பிள்ளை லெப்பை ஆலிம் தைக்காவில் சையிது முகம்மதுதான் முதல் மாணவராக விளங்கினார். அவருடன் சேர்த்து மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்கள் தம்பேரன் மார்களுக்கும் ஓதிக்கொடுத்துவந்தனர். அவரை நம் சீத் (சிங்கம்) எங்கே என்றுதான் அவர்கள் வினவுவார்கள். விரைவில் அவர்மீது அவர்களுக்கு அவ்வளவு அன்பு ஏற்பட்டுவிட்டது.

இக்காலை சையிதுமுகம்மதுக்குப் பேதி கண்டது. தாம் இனிமேல் பிழைப்பது அரிது என்று எண்ணினார் அவர். அப்பொழுது அவர் தாம் குத்புத்தீன் லெப்பையின் பள்ளியில் 'இர்ஸாதுல் இபாத்' என்னும் நூலை ஓதிவருங்கால் அதில் ஒருவனைப் புதைகுழியில் முன்கர் நக்கீர் என்னும் வானவர் வந்து அவனுடைய ஒரே இறை நம்பிக்கையைப் பல வழிகளிலும் சோதித்துப் பார்த்துவிட்டு அதன்பின் அவனுடைய வாயைத்திறக்கச்சொல்லி அதனைச் சோதித்துப்பார்ப்பர் என்றும், அவன் 'அல்லாஹ். அல்லாஹ்' என்று அடிக்கடி மொழிந்ததின் அடையாளம் அவனுடைய மேல்முரசில் காணப்படின் அவனை ஒரு முஸ்லிம் என உறுதிசெய்து சுவனத்திற்கு அழைத்துச் செல்வார்களென்றும் ஓதியது அவருக்கு நினைவு வந்தது. எனவே, தாம் இனிமேல் இறக்கப் போவதேயொழிய பிழைக்கப்போவதில்லை என்று முடிவுக்கு வந்த அவர் வேறு எந்த நினைவுமின்றி அல்லாஹ்வையே நினைந்து, 'அல்லாஹ், அல்லாஹ்' என்று அல்லும் பகலும் மொழிந்துகொண்டிருந்தார். இச் சமயத்தில் அவருடைய பெரிய அன்னையின் மகன் சுல்தான் அஹ்மது காசீம் என்பவர் திருகுர்ஆனின் இருபத்தொன்றுவது ஜுஸ்உ (அத்தியாயம்) மனப்பாடம் செய்யப் பலகையில் எழுதியிருக்கும்பொழுது பேதிப் பெருநோய்க்கு இரையாயினர். அவர் இறந்து சில நாட்களில் அவரைக் கனவில் கண்ட சையிது முகம்மது அவரை நோக்கி 'முன்கர் நக்கீர் உன்னை என்ன

கேட்டார்' என்று வினவினர். அதற்கவர் 'முன்கர் நக்கீர் என்னிடம் வந்தார். அவர் என்மீது பெரிதும் மகிழ்வுற்று என்னைச் சுவன லோகம் அழைத்துச் சென்றார். அங்கு நான் என் வயதொத்த சிறுவர்களுடன் விளையாடிக்கொண்டுள்ளேன்' என்று கூறினர். இதுமுதல் சையிது முகம்மதுக்கு அடிக்கடி இத்தகைய கனவுகள் தோன்றுவதும் அவைமூலம் அவருக்கு வழி காட்டப்படுவதும் நிகழ்ந்துவந்தன. அக்காலைதான் அவர் அப் பேதியில் இறந்த தம் உறவினர் பலரையும் கனவில் கண்டு அவரவர்களின் நிலையை விசாரித்தார். அவர்களிற் சிலர் தாங்கள் நரகத்தில் கிடந்து துன்புறுவதாகவும் எனவே தங்களுக்கு ஹத்தம் (பிரார்த்தனை) ஓதுமாறு தம் மனைவி, மக்களிடம் கூறுமாறும் மற்றும் சிலர் தாங்கள் சுவனத்தில் சுகமாக வாழ்ந்துவருவதாகவும் எடுத்துரைத்தனர்.

மாப்பிள்ளை லெப்பை ஆலிம் அவர்கள் இறந்ததும் அவர்கள் நடத்திவந்த தைக்காவை ஒழுங்காகக் கவனிக்க ஆள் இல்லாததனால் சையிது முகம்மது அந்தத் தைக்காவை விட்டு நீங்கி குத்புத்தீன் லெப்பை பள்ளிக்கே மீண்டும்வந்து பிக்ஹு (மார்க்கச் சட்டம்) ஓதினர். குத்புத்தீன் லெப்பை பள்ளியில் தமிழ்ப் பாடமும் சொல்லிக்கொடுக்கப்பட்டதால் அங்கு மூன்றாவது வகுப்பில் தமிழ்ப் பாடம் துவங்கி நான்காவது வகுப்புவரையில் படித்தனர். பின்னர் தம் பெரிய அன்னையின் மகன் மௌலா முகியித்தீன் ஆலிம் சாகிபு அவர்கள் வேலூரில் பயின்று பட்டம் பெற்று ஊர் திரும்பியதும் அவர்களிடம் 'பத்ஹுல் முஈன்' என்னும் நூலையும் தப்ஸீர் ஐந்தாவது ஜுஸ்உ (அத்தியாயம்) வரையும் ஓதினர். இதன் நடுவே அனந்தரப்பிரிவு பற்றிக் கூறப்பட்டுள்ள 'ஷரீபிய்யா' என்னும் நூலையும் ஓதி அதில் ஐயந்திரிபறக் கற்றுத் தேர்ச்சியாகிப் பலதலைமுறைகளுக்குப் பாகப் பிரிவினை செய்யப்படாத சொத்துக்களைப் பாகப் பிரிவினை செய்துகொடுக்கும் ஆற்றலும் பெற்றனர். அப்பொழுது அவருக்கு வயது ஏறக்குறைய இருபதுதான் இருக்கும். எனினும் அப்பொழுதே அவர் எழுதிக்கொடுக்கும் மார்க்கத் தீர்ப்பு (பத்வா)க்கள் நீதிமன்றங்களிலும் தாக்கல் செய்யப்பட்டன.

இதன்பின் தம் தந்தையே போன்று தாமும் தொழிலில் ஈடுபடவேண்டுமென்று விரும்பிய சையிது முகம்மது

தம் ஊரிலேயே சுர்சுக்கடை ஒன்றை ஏற்படுத்தி நடத்தி வந்தார். அதிலுள்ள நேர்மையற்ற பித்தலாட்டங்களில் அவர் ஈடுபடாததால் அக் காசுக்கடை நாளுக்குநாள் தேய்ந்துகொண்டு வந்ததேயொழிய வளர்ச்சி பெறவில்லை. எனவே பலர் அவரைப் பிழைக்கத்தெரியாதவர் என்றும் ஏமாளி என்றும் கருதினர்.

இத் தொழில் தமக்கு ஒத்துவராதென்பதை நன்கு உணர்ந்த சையிது முகம்மது அத்துடனே தம் முன்னோர்கள் போன்று முத்துத் தொழிலை மேற்கொள்ள விரும்பி முத்துத் தொழில் பற்றிய விவரங்களையும் கணக்குகளையும் அனுபவமுள்ளவர்களிடம் கேட்டுத் தெரிந்துவந்தார். இக்காலைதான் —அதாவது 1902—ஆம் ஆண்டில் இலங்கையிலுள்ள மருச்சுக்கட்டி என்னும் ஊரில் சிலாபம் நிகழ்ந்தது. அங்குச் சென்றுவது தம் அதிர்ஷ்டத்தைச் சோதித்துப்பார்க்க எண்ணிய சையிது முகம்மதுவை அங்கு அதிர்ஷ்டம் கைலாகு கொடுத்து வரவேற்றது. அங்குச் சென்ற ஒரு வாரத்திற்குள் தனிப் பட்டறை வைத்து தம் வயதொத்த இளைஞர்களை விடத் திறமையாக முத்துக்களை நிதானித்து வாங்கவோ விற்கவோ செய்தனர். எனவே இவருடைய இத்தகைய திறமையைக் கண்டு வியந்து அத்தொழிலில் பல்லாண்டுகள் ஈடுபட்டுள்ள அனுபவஸ்தர்கள்கூட முத்துக்கள்பற்றி இவரிடம் ஆலோசனை கலக்க வந்துசென்றார்கள். மருச்சிக்கட்டியில் நான்கைந்து ஆண்டுகள் சிலாபம் நிகழவே ஒவ்வொரு ஆண்டும் சையிது முகம்மது அங்குச் சென்று பொருளீட்டிவந்தார்.

இதற்கு மத்தியில் தொழில் செய்யும் நேரம் போக மற்றைய நேரம் வீண் விரயமாகிறதென்று எண்ணி அதனை நன்முறையில் பயன்படுத்த எண்ணினார் அன்னார். அக்காலை தம் ஊரிலுள்ள ரோமன் கத்தோலிக்கப் பள்ளியின் தலைமை ஆசிரியர் பதவி ஏற்றுப் பணியாற்றிவந்த ஜோஸப் டயாஸ் என்னும் பண்டிதரை நண்ணி நன்னூல் துவங்கினர். மடமடவென்று படித்துத் தேறி தமக்கு முன் அவரிடம் நன்னூல் துவங்கிப் படித்துவந்த சுல்தான் அப்துல்காதிர் என்பவர் படித்துவந்த பாடத்தையும் விரைவில் அடைந்துவிட்டனர். இதைக் கண்டு பெரிதும் வியப்புற்ற ஆசிரியர் எவ்வாறு தங்களால் இவ்வளவு விரைவில் படித்துத் தேற

இயன்றது என்று வினவியக்கால் 'நான் அரபி ஓதியுள்ளே னல்லவா? அரபி இலக்கணமும் பெரும்பாலும் இதற்கு ஒப் பாகவே உள்ளது' என்று மறுமொழி பகர்ந்தனர் சையிது முகம்மது. அவ்வாசிரியரிடம் சையிது முகம்மதுவும் சுல்த் தான் அப்துல்காதிறும் யாப்பருங்கலக்காரிகை, நேமிநாதம் தொல்காப்பியம், சொல்லதிகாரம், பொருளதிகாரம், ஆகி யவற்றை ஒருங்குசேர்த்துப் படித்துத் தேர்ந்தனர். இக் காலை சையிது முகம்மதுவின் சட்டையின் ஒருபக்கத்துப் பையில் நன்னூலும் மற்றொரு பக்கத்துப் பையில் ஐந்திலக் கத் தொன்னூலும் எப்பொழுதும் இருந்துகொண்டிருக்கும். வீட்டிற்கு உணவருந்தச் செல்லுங்கால் உணவு வரச் சிறிது தாமதிப்பினும் அவருடைய கை பக்கத்தில் பெட்டகத்தின் மீது வைக்கப்பட்டிருக்கும் திருக்குறளின் மீதோ திருச்சிற்றம்பலக் கோவை மீதோ தான் தாவும். இவ்வாறு அவர் தமிழ்க் கல்வியிலேயே ஏழு அல்லது எட்டு ஆண்டுகள் ஈடுபட்டிருந்ததன் காரணமாகத் திருகுர்ஆன் முழுவதும் அவ ருக்கு மறந்துவிட்டது. திருகுர்ஆனின் முப்பது அத்தியா யங்களையும் அவர் முன்பு மனப்பாடம் கொடுத்தது போக இப்பொழுது அவரால் அதில் ஒரு 'தும்மன்' (1/240 பாகம்) கூட மனப்பாடம் கொடுக்க இயலவில்லை. அரபி இலக்க ணம் எல்லாம் மறந்து தமிழ்இலக்கணமே அவருடைய மனத் தில் நினைவிருந்தது.

இச் சமயத்தில்தான், சீறாப் புராணம் பாடிய உமறுப் புலவரின் மரபில் தோன்றிய பனைக்குளம் அபூபக்கர் நெய் ஞார்ப் புலவர் கீழக்கரை வந்து அட்டாவதானம் செய்தார். அப்பொழுது அதைக் கண்டு பெரிதும் வியந்து அவ்விடத்தி லேயே ஜோஸப் டயாஸ் ஒரு சாற்றுக்கவி அருளினார். அவர் மாணவர் சுல்தான் அப்துல்காதிறுப் புலவரும் ஒரு சாற்றுக் கவி நல்கினார். சையிது முகம்மது ஆலிம் புலவரும் பின் வரும் சாற்றுக்கவியை வழங்கினார்.

கங்கைசூழ் கீழக் கரையினரெல் லாம்புகழ்
துங்கனபூ பக்கர்நெய் ஞார்தோன்றல்—இங்கிதமாய்
அட்டாவ தானம் அறைந்தார் அறிஞருக்கும்
எட்டா இறையருளை ஏற்று.

இதனைக் கேட்டு அங்கு வீற்றிருந்த சடையனேரி ஞானி யார் என்னும் இந்துத் துறவி ஒருவர் பெரிதும் வியந்து, இவ்வி ளமையில் இவர் இவ்வளவு ஆழமாகப் பாடியுள்ளாரே. 'அறிஞருக்கும் எட்டா இறை அருள்' என்று இவர் அழகா கக் கூறி இறைவனைத் துதிக்கின்றாரே. இச்சிறு கவியில் அமைந்திருக்கும் பொருள் ஆழம்தான் என்னே, என்னே' என்று கூறி அவர் ஆலிம் புலவரை பெரிதும் பாராட்டினார்.

இதன்பின் ஆலிம் புலவர் அபூபக்கர் நெய்னார்ப் புலவரி டம் பொருத்த விளக்கம் படித்தார். அபூபக்கர் நெய்னார்ப் புலவர் சேதுசமஸ்தான வித்வான் ரா. இராகவையங்கா ரைப் பெரிதும் புகழ்ந்து புலவர் ஆலிமிடம் கூறவே அவரைச் சந்தித்து அளவளாவ எண்ணினர் அன்னார். அவ்வாறே இரா மநாதபுரம் சென்று அவரைச் சந்திக்கவும் செய்தனர். ராக வையங்கார் ஒரு நொடியில் ஆலிம் புலவரின் மதிநுட்பத்தை யும், அறிவின் ஆழத்தையும் கண்டு தமிழ்ச்சங்க ஆண்டுவிழா விரைவில் மதுரையில் நிகழ இருக்கின்றதென்றும் அதற்கு அவசியம் வருமாறும் கூறினார். அதற்கிணங்கி மதுரை சென்ற ஆலிம் புலவரை ராகவையங்கார் பாண்டித்துரைத் தேவரி டம் பெரிதும் புகழ்ந்துரைத்தார். பலன்? அடுத்த ஆண்டு ஆலிம் புலவர் மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் உறுப்பினர் ஆனார். அன்று அதன் இளம் உறுப்பினராக ஆன அவர் இன்று அதன் நிர்வாகசபையின் முதுபெரும் உறுப்பினராக விளங்குகின்றார். அப்பொழுது இராகவையங்காருடன் ஏற் பட்ட நட்பு இராகவையங்காரின் இறுதிநாள் வரை நீடித் திருந்தது. 'தாங்கள் சென்றதும் என்வாய் செத்து விடுகின் றதே. ஆதலின் அடிக்கடி வரக்கூடாதா? என்னை என் அறி வுக்காக மதித்து நட்புப்பாராட்டுபவர்களில் தாங்கள் தாம் முதல்வர் என்று நான் கருதுகிறேன். அவ்விதமே நானும் தங்கள்மீது நட்புப் பாராட்டுகிறேன்' என்று இராகவையங் கார் ஆலிம் புலவரைப் பார்த்துக் கூறுவாராம்.

இச்சமயத்தில் காயல்பட்டினம் ஜைனுத்தீன் புலவர் பொன்னுலகம் அடையவே, அவர்மீது அவ்வூர் ஹாஜி முகம் மது முகிய்யித்தீன் புலவர் ஒரு சரமகவி இயற்றினார். அது இலக்கணப் பிழையுடன் அமைந்திருப்பதாக ஜைனுத்தீன் புலவரின் மகன் சையிது முஸ்தபா குறை கூறினார். இவ்வி வாதம் ஆலிம் புலவரிடம் தீர்ப்புக்கு வந்தது. இவரைப்

பெரு வயதினர் என்று கருதிக்கொண்டு இவருடை நிப்பை இருவரும் ஏற்றுக்கொள்வதாகக் கூறினர். ஆலிம் புலவர், அவர்களின் விவாதங்களை நன்கு அலசி ஆராய்ந்து ஹாஜி முகம்மது முகிய்யித்தீன் புலவர் தம் கவி சரி என்று நிரூபிப்ப தற்காகக் கூறும் சூத்திரம் அக்கவிக்குப் பொருந்தாதென்றும், அவர் ஜைனுத்தீன் புலவர் மீது கொண்டுள்ள பக்தி மேலீட்டால் அக்கவி புனைந்திருப்பதால் அதில் காணப்படும் குறைகளைப் பொருட்படுத்தக் கூடாதென்றும் எடுத்துரைத்து இராமாயணத்தில் கம்பன்,

> "முத்தமிழ்த்துறையின் முறை போகிய
> உத்தமக் கவிகட்(கு) ஒன்றுணர்த்துவன்
> பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
> பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ"

என்று கூறியுள்ளதையும் எடுத்துக்காட்டி ஹாஜி முகம்மது முகிய்யித்தீன் புலவர் தங்கள் தந்தையார் மீது பக்தி மேலீட்டால் சரமகவி பாடி இருக்க அதில் தாங்கள் இலக்கணக் குறை காணுவதென்பது எண்ணிப்பார்க்கக்கூட இயலாதது என்று இடித்துரைத்துத் தாங்கள் நினைக்கின்றபடி தாம் அவ்வளவு பெரும் வயதினனல்ல என்றும், ஓர் இளைஞன் என்றும் சையிது முஸ்தபாவுக்கு மடல் தீட்டினர். அதனைப் பெற்ற சையிது முஸ்தபா, ஆலிம் புலவருக்கு எழுதிய மறு மடலில் தம் தந்தையார் மீது ஒரு சரமகவி பாடியருளுமாறு வேண்டிக்கொண்டார். அதற்கிணங்கி ஆலிம் புலவர் பாடிய பத்துச் சரமகவிகளில் இரண்டினைக் கீழே குறிப்பிடுகின்றேன். அதிலே ஜைனுத்தீன் புலவரின் முன் யாரும் சென்று முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களின் திருப்பெயரைக் கூறியதும் அப்புலவர் பெருமானின் உடல் முழுவதும் சிலிர்த்து நடுங்கும் பண்பை அழகாக ஆலிம் புலவர் எடுத்தியம்புகின்றார். மற்றொரு கவியில் அவர்களின் மற்றையப் பண்புகளை எழிலொழுக இசைக்கின்றார்.

அன்பதனை அடைகருவி அகிலமிசை கிடையா
[தென்றும் அன்புகூர்ந்த

என்பதனை உருக்கிடவே இறைநாமம் குனிக்கு
[மென்றும் எழிலோர் கூற்றுன்
முன்பதியின் திருநாமம் மொழிந்திடவே சிலிர்த்துட
[லம் முதிரும் சோதி
மன்பதைகள் அறியவரும் ஜெய்னுத்தீன் பாவல
[ராம் மகிமை ஈதே.

பொறிவாயில் ஐந்தவித்தீர் புகழ்தருமத் தொரு
[வாயில் புகுந்து மேலாம்
நெறிமாது தனைமணந்தீர் நிறைமாலை தனைப்புனைந்
[தீர் நேர்மைமிக்க
அறிவாரும் அருந்தவத்தீர் அகலாத பெருமிதத்தீர்
[அணிகொள்வாளைப்
பறிபீலி பாய்பழனத் தடவகுதை ஜெய்னுத்தீன்
பாவல்லீரே

இக்காலைதான் ஆலிம்புலவர் பற்பல பதங்களையும், கீர்த்தனைகளையும் பாடி கீர்த்தனை மாலிகை என்றும், பதானந்தமாலை என்றும் இரு சிறு நூல்களை வெளியிட்டனர். தம் ஆசான் குத்புத்தீன் லெப்பை இக்காலை மண்ணுலகை நீத்தது ஆலிம் புலவருக்கு அளவொணு வருத்தத்தை நல்கியது: 'குத்புத்தீன் ஆலிம் அவர்களே! ஒரு தந்தை தம் மகனுக்கு ஆற்றும் உதவி போன்று எல்லார் மக்களையும் தம் மக்களெனக் கருதி, அரபிக் கல்வியும், தமிழ்க்கல்வியும் எம்போன்ற பல்லோர்க்கும் பற்றுவித்தீர். இப்பொழுதோ நீவிர் வானவர்களுக்குக் கல்வி பயிற்றுவதற்காக வானுலகம் சென்று விட்டீர். அங்கும் பாடம் சொல்லிக்கொடுத்து முடித்து விட்டீரானல் பின்பு யாருக்குக் கல்வி பயிற்றுவதற்காக எவ்விடத்திற்குச் செல்வீர். கூறுவீராக!' என்று ஒரு கவியில் பாடிக் கண்ணீர் உகுக்கின்றார் ஆலிம் புலவர். அக்கவி இதோ வருமாறு:

தந்தை மகற்காற்றும் முறை தமதெனவே தனி
[உலகின் தனயர் யார்க்கும்
விந்தைதரும் அரபியலும் தமிழ்ப்பிறவும் விளக்கி
[வைத்தீர் மேறுடெய்தி
அந்தமிகும் அவர்தொகுதி பயிற்றிடுமா(று) அவண்
[அமைந்தீர் அஃதும் முற்றால்
எந்தஇடம் இனிஉறைவீர் குத்புத்தீன் ஆலிம் எதிர்
[இயம்புவீரே.

இவ்வாறு தமிழ்க்கல்வி பயிலுவதிலும், தமிழில்கவிஇயற்றுவதிலுமே தம் வாணுளைப் போக்கிவந்த ஆலிம் புலவர் தம்முடன் சேர்ந்து அரபிக்கல்வி பயின்றவர்களெல்லாம் இப்பொழுது மேலான பாடம் ஓதுவதைக்கண்டு மனம் பெரிதும் வருந்தினர். இச்சமயத்தில் குடும்பத்தொல்லைகள் வேறு அவரை நச்சரித்து வந்தன. திருகுர்ஆனைத் திரும்பவும் மனப்பாடம் செய்ய இயலுமா, இயலாதா என்ற ஐயச்சகதியில் அகப்பட்டு அவர் சில காலம் துன்புற்றுக் கொண்டிருந்தார். இறுதியாக, யாவற்றையும் ஒதுக்கித் தள்ளிவிட்டு திருகுர்ஆனை மீண்டும் மனப்பாடம் செய்வோம் என்னும் முடிவுக்கு வந்தார் அவர். முதலில் திருகுர்ஆனைத் திரும்பவும் மனனம் பண்ணித் தம்முடைய நினைவு ஆற்றலைச் சோதித்துப் பார்த்தறிந்தபின் அரபி இலக்கியங்களை மீண்டும் பயில்வோம் என்ற முடிவுடன் மீண்டும் திருகுர்ஆனை மனனம் செய்யத் துவங்கினர். என்ன வியப்பு! மூன்று திங்களில் திருகுர்ஆன் முழுவதும் அவருக்குத் திரும்பவும் மனனமாகி விட்டது. சரி, திருகுர்ஆன் தாம் திரும்பவும் மனனம் ஆகிவிட்டது. அரபி இலக்கியங்களை மீண்டும் நாம் துவங்க இயலுமா என்ற ஐயம் அவரின் உள்ளின் உள்ளே இன்னும் அரித்துக்கொண்டிருந்தது. இக்காலைதான் அவ்வூர் காலி முகம்மது என்பவர் ஆலிம்புலவரிடம் வந்து தமக்கு அனந்தரப் பிரிவுச் சட்டம் சொல்லித்தருமாறு அவரை வேண்டிக்கொண்டார். 'எனக்கு அது நினைவே இல்லையே. அதுபற்றிய எத்தகைய விவரமும் எனக்கு இப்பொழுது

சொல்லத்தெரியவும் இல்லையே. உம்மிடத்தில் அதுபற்றிய நூல் இருந்தால் கொண்டுவந்து தாரும். பார்த்து, என்னால் இயன்றால் கூறுகின்றேன்' என்று சொற்றனர் ஆலிம் புலவர். அவரும் அவ்வாறே தம்மிடமிருந்த அந்நூலைக் கொண்டுவந்து அன்னாரிடம் கொடுத்தார். மூன்று நாட்கள் அதில் அவர்கவனத்தைச் செலுத்தவே அது முற்றிலும் நன்கு நினைவுக்கு வந்து விளங்கிவிட்டது. எனவே அவருக்கு அனந்தரப் பிரிவுபற்றிய சட்டங்கள் அத்தனையையும் மூன்றே மூன்று திங்களில் சொல்லிக்கொடுத்து விட்டனர். அதன் காரணமாக இவருக்கும் அது நன்கு பாடமாகி விட்டது. இதுமுதல் ஆலிம்புலவருக்கு ஒரு விதத் தன்னம்பிக்கையும், துணிவும் பிறந்தன. தாம் ஓதி மறந்த அரபிநூல்களை மட்டுமல்லாது மற்றும் உயரிய அரபி இலக்கியங்களையும் கற்றுத் தேறவேண்டுமென்ற அவாவும், ஊக்கமும் அவருக்கு ஒருங்கே ஏற்பட்டன. இக்காலை தான் மண்டபத்தில் வைத்து கொழும்பு சையிது முகம்மது ஆலிம் சாகிபு அவர்களைச் சந்தித்துத் தம் எண்ணத்தை வெளியிட்டனர். அதற்கு அவர்கள் 'இவ்வெண்ணத்தை விட்டுவிடாதே. உடனே சென்னை சென்று ஜமாலியா அரபிக்கல்லூரியில் சேர்' என்று அறிவுரை பகர்ந்தார்கள்.

இச்சமயத்தில்தான் ஆலிம் புலவரின் வாழ்க்கையிலேயே மாபெரும் திருப்பத்தை நல்கவல்ல ஒருகனவு அவருக்குத் தோற்றம் வழங்கியது. வானிலிருந்து ஒரு வயோதிகர் வெண்துகிலுடன் கீழே இறங்கி ஆலிம்புலவரை அணுகி அவர் அணிந்திருந்த பலநிறக் கைலியொன்றை ஒரே இழுப்பில் உரிந்து எடுத்துக்கொண்டு, 'லியாஸுத்தக்வா தாலிக ஹைர்' (பக்தி என்னும் ஆடையானது மேலானது; அதுவே மிகவும் மேலானது) என்று கூறித் தம் கையிலிருந்த வெண்துகிலை அவருக்கு உடுத்திவிட்டு மறைந்து விட்டனர். திடுக்கிட்டு எழுந்த ஆலிம் புலவருக்கு இது முதல் வெண்ணுடை புனைய வேண்டுமென்ற எண்ணமும், மார்க்கக் கல்வியை மீண்டும் பயிலவேண்டுமென்ற அவாவும் மிகைக்கலாயின.

எனவே ஜமாலியா அரபிக்கல்லூரியில் மார்க்கக் கல்வி பயில்வதற்காகச் சென்னை புறப்பட்ட ஆலிம் புலவர் நாகை நாயகரின் அடக்க இடத்தைத் தரிசித்து அவர்களின் பொருட்டால் தமக்கு நலன் நல்குமாறு இறைவனிடம் இறைஞ்சுவதற்காக நாகூர் சென்றக்கால், அங்குப் புலவரேறாக வீற்றிருந்த குலாம்காதிறு நாவலரைச் சந்திக்க அன்னாரின் இல்லமும் சென்றனர். அன்னாருக்கும், இவருக்கும் ஏற்கனவே கடிதத் தொடர்பு இருந்துவந்தது. அன்னார் இயற்றிய ஆரிபுநாயக வசன நூலுக்கு அன்னாரின் வேண்டுகோளின் மீது

வான்பாயும் வானேமுகில் வரக்கிழித்துத் தண் [புனலும்
தான்பாயும் தண்பதுமத் தடநாகை வடபதியான்
தேன்பாயும் செந்தமிழால் செய்பனுவல் எண்ணி [றந்த
கான்பாயும் திண்யகுலாம் காதிறுநா வலரேறே

என்பதுபோன்ற சில சாற்றுக் கவிகளும் நல்கியிருந்தனர்.

எனினும் இருவரும் ஒருவரை யொருவர் பார்த்தறிந்திருக்கவில்லை. நாவலரின் இல்லம் சென்ற ஆலிம் புலவர் தம்மை அன்னாரிடம் அறிமுகம் செய்துகொண்டபொழுது நாவலருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. ''தம்பி, நான் உங்களைப் பெரிய வயதுடையவரென்றல்லவோ நினைத்திருந்தேன். இப்போது பார்த்தால், தாடி இல்லாத 'பசங்'களைப் போல் இருக்கிறீரே'' என்று கூறி இறும்பூதெய்தினர். அதன்பின் ஆலிம் புலவர் நாகூரில் தங்கி இருந்த நாளெல்லாம் நாவலரின் இல்லம் சென்று அவருடன் அளவளாவி மகிழ்ந்துவந்தனர்.

1909–ஆம் ஆண்டின் மத்தியில் ஆலிம்புலவர் ஜமாலியா வந்து சேர்ந்தபொழுது அக்கல்லூரியில் தப்ஸீர் ஏழாவது ஜுஸ்உ (அத்தியாயம்) ஓதிக்கொடுக்கப்பட்டு வந்தது. அவர் முன்பு ஐந்தாவது அத்தியாயம் வரை ஓதி மறந்திருந்த போதினும், தம்முடைய நிலையை ஆசிரியர்களிடம் எடுத்தியம்பித் தம்மை ஏழாவது ஜுஸ்வில் சேர்த்துக்

கொள்ளுமாறும், விரைவில் தாம் பழைய பாடத்தை ஓதிக் கொள்வதாகவும் கூறினர். அதற்கு ஆசிரியர்களும் ஒருவாறு இணங்கி அவருக்கும் மற்ற மாணவர்களுடன் சேர்த்துப் பாடம் போதித்து வந்தனர். இச்சமயத்தில் ரமலானும் (நோன்பு மாதமும்) வந்தது. முத்துப்பேட்டை சேகனு வும் ஜமாலியா வந்து சேர்ந்தார்கள்; அவர்களின் வேண்டு கோளின் பேரில் ஆலிம்புலவர் திருகுர்ஆன் முழுவதை யும் மனனமாக ஓதி 'வித்ரு' என்னும் தொழுகையை சேகனு அவர்கள் நடத்திவந்த வழக்கப்படி நள்ளிரவில் துயிலெழுந்து தொழவைத்தனர். அதைக்கண்டு அக்கல் லூரியின் அதிபர் ஜமால் முகிய்யித்தீனுக்கு ஆலிம் புல வர் மீது அளவற்ற அன்பு ஏற்பட்டது. அன்னார் தமக்கு ஓய்வு கிடைக்கும் தோறெல்லாம் அவரிடம் வந்து அள வளாவுவதும், மார்க்க ஐயங்கள் பற்றி அவரின் கருத்துக்க ளைக் கேட்டுத் தெளிவதும், பள்ளிப்பிள்ளைகளில் ஒருவராக அவரைக் கருதாது தம் சொந்தப் பிள்ளைகளில் ஒருவர் போன்று அவரைக் கருதி அவர்மீது தனி அன்பும், கவனமும்செலுத்திவருவதுமாயிருந்தனர். ஜமால்முகிய்யித்தீ னின் மைந்தர் ஜமால் முகம்மது ஹஜ்ஜுச் செய்துவிட்டு இக் காலை திரும்பியதும் ஆலிம்புலவர் அமர்ந்திருந்த சோபா வில் அவரையும் போய் அமரச் செய்து, 'நீங்கள் இருவரும் ஒரே குணம் வாய்க்கப் பெற்றவர்கள். இன்றுமுதல் நீங் கள் இருவரும் நட்பாக இருந்து வாருங்கள்' என்று அறி வுரையும் பகர்ந்தனர். இப்பொழுது துவங்கிய ஆலிம் புலவர்—ஜமால்முகம்மது நட்பானது ஜமால்முகம்மதுவின் இறுதி நாள் வரை நீடித்திருந்தது. சென்னை வந்து ஜமால்முகம்மதுவையும், அன்னாரின் குடும்பத்தினரையும் பார்த்துவிட்டு ஊர்திரும்பியதும் ஆலிம் புலவருக்கு ஜமால்முகம்மதுவிடமிருந்து வந்த முதல் மடல் நீங்கள் சென்னைக்கு மீண்டும் எப்பொழுது வருவீர்கள் என்ப தாகவே இருந்தது.

ஜமாலியாவில் மாணவராக் இருக்கும்பொழுதே ஆலிம் புலவர் அங்குள்ள ஆசிரியர் ஒருவருக்கு நன்னூல் காண்டிகை யுரையை முற்றும் கற்றுக்கொடுத்ததோடு மாணவர் சில ருக்குத்திருக்குறள், நீதி வெண்பா முதலியனவும் போதித்து வந்தார். கீழ்ப்பாடப் பிள்ளைகளுக்குப் பாடமும் ஓதிக் கொடுத்துவந்தார்.

இச்சமயத்தில் அன்னார் இமாமுல் அஃலம் அபூஹனிபா (ரஹ்) அவர்களைக் கனவில் கண்டு குர்ஆன் முழுவதையும் மனனமாக அன்னாரிடம் ஓதிக்காண்பித்தனர். அதைக் கேட்டுப் பெரிதும் மகிழ்ந்த இமாம் அவர்கள் ஆலிம் புலவரின் பிடரியிலிருந்து முதுகுவரை 'ரஹ்மத்துல்லா' என்று கூறி மூன்று தடவைகள் தடவினர். இதிலிருந்து ஆலிம் புலவர் இமாம் அவர்களின் வழியையே பின்பற்றிவரத் தொடங்கிவிட்டார்.

ஜமாலியாவில் ஒருநாள் கஸ்ஸாலி இமாம் அவர்கள் எழுதிய 'பிதாயத்துல் ஹிதாயா' (நேர் வழியின் ஆரம்பம்) என்னும் நூலை ஆசிரியர் மாணவர்களுக்கு ஓதிக்கொடுத்துக் கொண்டு வருங்கால் 'ஒரு மனிதனுடைய வயது குறையக் குறைய பணம் அதிகமாகிக்கொண்டிருப்பதில் என்னபயன்' என்று அதில் எழுதப்பட்டிருப்பதை ஆசிரியர் ஓதிக்கொடுப்பது ஆலிம் புலவரின் செவிப்பட்டதும் அந் நூலைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடின் மக்களுக்கு நற்பலன் விளையுமே என்று எண்ணினார். தம்முடைய இந்த உளக்கருத்தை அவர் கொழும்பு சையிது முகம்மது ஆலிம்சாகிபு அவர்களிடம் கூறவே அவர்கள் அவருக்கு அதுபற்றி ஊக்கமும் உற்சாகமும் நல்கினர். அவ்விதமே அவரும் அந் நூலை எளிய இனிய தீந்தமிழில் மொழிபெயர்த்து வெளியிடவும் செய்தனர். இதுதவிர அரபுத் தமிழிலும் அதனை எழுதி வெளியிட்டனர்.

இதுமுதல் கஸ்ஸாலி இமாம்மீதும் அவர்களின் நூல்களின்மீதும் ஆலிம் புலவருக்கு அளவற்ற விருப்பமேற்பட்டது. கஸ்ஸாலி அவர்களின் 'இஹ்யா உலூமுத்தீனை' ஒவ்வொருநாள் காலையிலும் மாணவர்கள் ஓதியபின்தான் மற்றையப் பாடங்களைக் கல்லூரியில் துவங்கவேண்டும் என்றும் ஆலிம்புலவர் ஏற்பாடு செய்தார்.

கொழும்பு சையிது முகம்மது ஆலிம்சாகிபு அவர்களின் ஏற்பாட்டின்படி அங்கப்பநாய்க்கன் தெருவில் வாழ்ந்து வந்த அக்காலெப்பை சையிதுமுகம்மது ஹாஜியாரிடம் 'மஹல்லி' என்ற நூலையும் ஓதத் துவங்கினர். சையிது முகம்மது ஹாஜியார் பாடம் சொல்லிக்கொடுக்கும் முறையையும் ஆலிம் புலவர் பாடம் ஓதும் முறையையும் நேரில்

பார்த்தறிய விரும்பிய ஜமால் முகிய்யித்தீன் ஒருநாள் திடு திப்பென சையிது முகம்மது ஹாஜியாரின் இல்லம் வந்து புலவர் ஆலிமுக்கு 'மஹல்லி' ஓதிக்கொடுக்குமாறும் தாம் அதனைக் கேட்டுக்கொண்டிருப்பதாகவும் கூறினர். அதற் கிணங்கி சையிது முகம்மது ஹாஜியார் ஒரு பக்கல் காதுப் பிடியும் மற்றொரு பக்கல் நூலும் கட்டப்பட்டிருந்த தம்மு டைய ஓட்டைக் கண்ணாடியை எடுத்து ஒரு பக்கத்தில் காது மீது வைத்து மற்றொரு பக்கத்திலிருந்த நூலை எடுத்துக் காதில் சுற்றியதைக் கண்ட அந்தக் கொடைவள்ளல் உடனே தம்முடைய சட்டைப் பையிலிருந்த விலையுயர்ந்த கண்ணாடியை எடுத்து அவரிடம் கொடுத்து 'இதை அணிந்து கொண்டு பாடம் சொல்லிக்கொடுங்கள்' என்று கூறினர். அவ்வாறே அவரும் செய்தனர். சற்றுநேரம் இருந்து அதனை கேட்டபின் அவரிடம் பிரியாவிடை பெறும்பொழுது ஹாஜி யார் கண்ணாடியைக் கழற்றி ஜமால் முகிய்யித்தீன் அவர்க ளிடம் கொடுத்ததும் 'வேண்டாம். அதனைத் தாங்களே வைத்துக்கொள்ளுங்கள்; நான் வேறுவாங்கிக்கொள்கிறேன்' என்றனர் அப் பெருந்தகையார்.

ஆலிம்புலவர் ஜமாலியாவில் ஓதிக்கொண்டிருக்கும் பொழுது அவரின் மதி நுட்பத்தையும் ஆழ்ந்த அறிவையும் கண்ட பலர் தம்முடன் பங்காளியாகச் சேர்ந்து தொழிற் செய்ய வருமாறு அவரை அழைத்தனர். எனினும் 'பிதா யத்துல் ஹிதாயா'வில் பொறிக்கப்பட்டிருந்த அந்தப் பொன்மொழிகள் அவருடைய மனத்தில் தன்னுடைய அழி யாத முத்திரையைப் பதிப்பித்திருந்தது. எனவே தாம் இத் தொழிலில் ஈடுபட விரும்பவில்லை என்றும் ஜமாலியாவில் இருந்தே மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக்கொடுத்துக் கொண்டு தம்முடைய வாழ்வைக் கழித்துவிட விரும்புவதா கவும் அவர்களுக்கெல்லாம் அன்னார் மறுமொழி பகர்ந்த னர். ஒருநாள் இஹ்யா உலூமுத்தீனை ஓதிவரும்பொழுது ஒருவன் தன் உலக வியவகாரங்கள் அனைத்தையும் மறுமைக் கான செயல்களாக மாற்றிக்கொள்ளலாமென்று பொறிக் கப்பட்டுள்ள பேருரையானது அவரின் கண்களில் தென்பட் டதும் அதனைத் திரும்பத் திரும்பப் படித்தார் ஆலிம்புலவர். அவருடைய அறிவிலே இப்பொழுது ஒரு புது விளக்கம் ஏற் பட்டது. அப்படியானுல் தாம் ஏன் வாணிபம் துவங்கக் கூடாது? அவ் வாணிபத்திலிருந்து கிடைக்கும் ஊதியத்தை

ஏன் மறுமைக்கான வழிகளிற் செலவிடக்கூடாது? அப்பிதம் செய்தால் துன்யாவை (உலக வியவகாரம்) தீனுக (மார்க்க மாக) மாற்றிக்கொண்டதாக ஆகுமே என்று எண்ணினர்.

இதன்பின் ஒருநாள் அவர் ஜமால்முஹிய்யித்தீன் அவர் களை அணுகித் தாம் வாணிபம் செய்ய விரும்புவதாகவும் எனவே தமக்கு ஆயிரம் ரூபாய் கைமாற்றுகத் தந்து உதவ வேண்டுமென்றும் கூறினர். அதற்கு அப்பெருந்தகையார் 'என்ன வாணியம் செய்யப்போகிறீர்கள்' என்று விஞவி ஞர். அதற்கு ஆலிம்புலவர் 'நான் எங்கள் ஊர் சென்று மண்ணெண்ணெய் வாணிபம் செய்யலாமென்று எண்ணுகிறேன்' என்று கூறினர். உடனே ஜமால் முகிய்யித் தின் 'அதில் மாதம் என்ன ஆதாயம் கிடைக்கும்என்று எதிர் பார்க்கிறீர்கள்' எறு மறுகேள்வி விடுத்தனர். 'சுமார் ஐம் பது ரூபாய் கிடைக்குமென்று எதிர்பார்க்கிறேன்' என்ருர் ஆலிம் புலவர். அதைக் கேட்ட ஜமால்முகிய்யித்தின் மாதம் ஐம்பது ரூபாயை வைத்துக்கொண்டு என்ன செய்வது? நான் ஒரு யோசனை சொல்கிறேன். அதன்படி செய்யுங்கள். நான் ஐம்பது ரூபாய் தருகிறேன். நீங்களும் நம் ஜமால்முகம்மது வும் ஒன்றுசேர்ந்து வைர வாணிபம் செய்யுங்கள்' என்று பெருமனத்துடன் கூறினர். அதற்குப் புலவர்ஆலிம் 'எனக்கு வைர வாணிபத்தைப் பற்றி அனுவத்தையும் தெரியாது. இந்நிலையில் பெருந் தொகையை மூலதனமாகக் கொண்டு அவ் வாணிபத்தைத் துவங்குவது அறிவுடைமையாகாது. தான் அறியா வாணிபம் நஞ்சோடொக்குமல்லவா? ஆத லின் எனக்கு நான் கேட்பது போன்று ஆயிரம்ரூபாய் தாருங் கள். அதைக்கொண்டு முதலில் மண்ணெண்ணெய் வாணி பத்தைத் துவங்கி அதை நடத்திவரும்பொழுதே வைர வாணிபத்தின் நுணுக்கங்களையும் படித்துக்கொள்கிறேன். அதன்பின் வேண்டுமானுல் தங்களின் யோசனையின்படி செய் யலாம்' என்று கூறினர். ஆனுல் ஜமால்முகிய்யித் தீன் அவருக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்துச் சென்னையிலே இரத்தினத் தொழில் செய்யுமாறு கூறினர்.

அவ்வாறே இரத்தினத் தொழிலைச் சென்னையில் துவங்கி னர் அன்னர். அதைக் கண்டு ஜமால்முகிய்யித்தீனும் மகிழ் வுற்ருர். ஒவ்வொரு நாளும் பகல் பத்துமணி அளவில் அங் கப்பநாயக்கன் தெருவுக்கு வருவதும் இரத்தின வாணிபம்

செய்வதும் இரவில் ஜமாலியாவுக்குச் சென்று அங்குள்ள மாணவர் சிலருக்குப் பாடம் ஓதிக்கொடுப்பதும் மீண்டும் காலை ஒன்பது மணிவரையிலும் மற்றும் சில மாணவர்களுக்குப் பாடம் ஓதிக்கொடுத்துவிட்டு வாணிபத்தின் பொருட்டு அங்கப்பநாய்க்கன் தெருவுக்கு மீண்டும் வருவதும் சிலகாலம் அவருடைய நீங்காத வழக்கமாக இருந்துவந்தது.

இச்சமயத்தில் கொழும்பு சையிது முகம்மது ஆலிம் சாகிபு அவர்கள் தாங்கள் நிறுவிய 'தர்பியத்துல் அத்பால்' என்னும் அறநிலையத்திற்குச் சென்னை மலையப்பெருமாள் தெருவில் சொத்து வாங்கினர். அதற்குப் பத்திரம் எழுதுமாறு வக்கீல் ஒருவரிடம் கேட்டுக் கொண்டுவிட்டு ஆலிம்புலவரிடம் அச் செய்தியை வந்து கூறவே, 'நான் எழுதித் தருவேனே' என்று ஆலிம் புலவர் கூறினர். அதைக் கேட்டதும் கொழும்பு ஆலிம்சாகிபு அவர்கள் 'அப்படியானால் தாங்களும் ஒன்று எழுதுங்களேன். வக்கீலிடம் காட்டித் திருத்திக் கொள்வோம்' என்று கூறினார். அவ்வாறே ஆலிம் புலவரும் ஒரு பத்திரம் எழுதி கொழும்பு ஆலிம்சாகிபு அவர்களிடம் கொடுத்தனர். அதைக்கண்டு கொழும்பு ஆலிம்சாகிபு அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. அதனை ஜமால் முகிய்யித்தீன் அவர்களிடம் காட்டியபொழுது 'இந்த வக்கீல் நம்மிடம் இருக்கும்பொழுது வேறு வக்கீலிடம் ஏன் கொடுக்கவேண்டும்' என்று பாராட்டுமொழி பகர்ந்தனர் அன்னார். அதன்பின் வக்கீலிடம் அதனைக் காட்டவே இஃதே மிகவும் மேலாக உள்ளதே. நான்வேறு எதற்காக எழுத வேண்டும். இதில் அணுவத்தனையும் திருத்தவேண்டியதில்லை. இதன்படியே பத்திரம் எழுதிப் பதிவுசெய்யுங்கள்' என்றார். அவ்வாறே செய்யப்பட்டது. அவ்வாறு செய்யும் பொழுது ஆலிம் புலவரும் தம் அறநிலையத்தில் பங்குபெற்றால் அதற்கு அவரோர் ஆஸ்திபோன்று விளங்குவார் என்று கருதிய கொழும்பு ஆலிம்சாகிபுஅவர்கள் அவரையும் ஜமால் முகிய்யித்தீன் சாகிபு, சி. எச். ஹுசைன்சாகிபு முதலியோருடன் ஒரு 'ட்ரஸ்டி'யாக நியமித்துப் பத்திரம் முடித்தார்கள்.

இதன்பின் வாணிபத்தில் மிகவும் மும்முரமாக ஈடுபட்ட ஆலிம்புலவர் ஒருநாள் இரவில் வெகுநேரம் கழித்து அன்றைய வாணிபத்தை முடித்துவிட்டு அங்கப்பநாய்க்கன்தெரு

விலிருந்து ஜமாலியாவுக்குத் திரும்பிக்கொண்டிருக்குங்கால் ஒரு துறவி அவரை நோக்கி எதிரில் விறுவிறுவென வந்து 'ஹுதா தும்கூ புஹுத் நபர் தேயகா' (இறைவன் உமக்கு அதிகமான நற்பலனைத் தருவான்) என்று கூறிச்சென்றனர். இதன்பின் ஆலிம் புலவரின் கையில் மளமளவென்று பணம் ஏறியது. எனவே ஒருநாள் அவர் ஜமால்முகியித்தீன் சாகிபை அணுகித் தாம்முன்பு அவரிடம் கைமாற்றாகவாங்கியிருந்த ஆயிரம் ரூபாயையும் அவரிடம் திரும்பக் கொடுத்தனர். அதனை ஏற்றுக்கொள்ள அப் பெருந்தகை வெகுநேரம் வரை முன்வரவில்லை. அதன்பின் ஆலிம்புலவர் எவ்வளவோ இதமாக எடுத்துரைத்து அதனை அவர் பெற்றுத்தான் தீர வேண்டுமென்று வற்புறுத்தவே, அவர் ஆலிம் புலவரை நோக்கி 'நான் தந்த பணத்தை மீண்டும் என்னிடம் தாங்கள் திரும்பத் தந்துவிடுகிறீர்களே. அப்படியானால் தங்களிடம் தொழிலுக்குப் போதுமான பணமிருக்கிறதா?' என்று வினவினர். ஆலிம்புலவர் 'ஆம்' என்று மறுமொழி பகர்ந்ததும் 'எவ்வளவு' என்று கேட்டனர் அவ்வணிகமன்னர். 'இதைப்போல் பத்து மடங்கு உள்ளது' என்று அன்னார் பதிலிறுத்ததும் 'திங்கள் ஒன்றுக்குத் தங்களுக்கு எவ்வளவு வருமானம் வருகிறது' என்று அடுத்த கேள்வியைப் போட்டனர் அந்த வணிகப் பெருந்தலைவர். ஐந்நூறு ரூபாய்வரை வருமானம் வருகிறது என்று ஆலிம்புலவர் கூறியதும், 'நிரம்ப மகிழ்ச்சி, இதைக்கொண்டு உள நிறைவுபெற்று தீனுடைய (மார்க்க) விஷயங்களில் அதிகக் கவனம் செலுத்துங்கள்' என்று அறிவுரை பகர்ந்தனர். அப்பொழுது ஆலிம்புலவர் அவரை நோக்கி, 'நீங்கள் மட்டும் கோடிகோடியாய்ப் பொருளீட்டலாம். நாங்கள் லட்சக்கணக்காகவாவது பொருள் ஈட்டக்கூடாதா' என்று கூறியதும் ஜமால் முகியித்தீன் சாகிபு அவரை நோக்கி, 'தம்பி, நீங்கள் எல்லாம் மார்க்கம் அறிந்த மேதைகள். தீனுக்காகப் பாடுபட வேண்டியவர்கள். அப்படி இருக்க நீங்கள் துன்யாவில் மூழ்கி இருப்பது நல்லதல்ல. ஆனால் என்னுடைய நிலையோ அப்படியன்று. நான் வாணிபத்தில் ஈடுபட்டிருக்கிறேன்தான். ஆனால் அதில் வரும் வருவாய்களைக் குவித்துக் குவித்து மகிழாது அறவழிகளில், தீனுடைய வழிகளில் செலவழித்து என்னுடைய துன்யாவை தீனாக மாற்றிக்கொண்டுள்ளேன். இதுதான் நான் நடத்தும் தீன்' என்று கூறினர்.

அப்படியானால் என் உலகவாழ்வு வறுமையால் நலிந்த தென்றால் என்செய்வது' என்று புலவர் ஆலிம் வினவ 'நீங்கள் உயிரோடு உள்ளவரை வறுமையின் கொடும் பிடியில் அகப்படாது வளமாய் வாழ்வதற்கு எவ்வளவு பணம் வேண்டுமோ அதனை இக்கணமே தருகிறேன்' என்று கூறினர் அவ்வள்ளலார்.

'வேண்டாம், வேண்டாம்' என்று அவரைப் புலவர் ஆலிம் கையமர்த்திவிட்டு ஜமால்முகிய்யித்தீனின் 'துஆ' (பிரார்த்தனை) இருப்பின் சையிது முகம்மதுவும் தீனுக்கு விரைவில் வந்துவிடுவான்' என்று கூறி எழுந்தார்.

'பிதாயத்துல் ஹிதாயா' என்னும் அரபி நூலின் தமிழ் மொழிபெயர்ப்பு வெளிவந்த காலை வேலூர் பாக்கியாத்துஸ் ஸாலிஹாத்தின் அதிபர் மௌலவி அப்துல் வஹ்ஹாப் ஹஸரத் அவர்கள் சென்னை வந்திருந்தக்கால் ஆலிம்புலவர், அவர்களைச் சந்தித்து 'பிதாயத்துல் ஹிதாயா' தமிழ் மொழி பெயர்ப்பின் இரண்டு பிரதிகளை அவர்களிடம் காணிக்கையாக நல்கித் தம்முடைய வரலாற்றையும் அவர்களிடம் எடுத்துரைத்துத் தம்மை வாழ்த்தியருளுமாறு வேண்டினர். அதைக் கேட்டுப் பெரிதும் மகிழ்ந்த அப்துல் வஹ்ஹாப் ஹஸரத் அவர்கள் அதில் அறிவு பற்றி வரும் அத்தியாயத்தை வாசிக்குமாறு கூறி 'கல்வி கற்பதன் மூலமாக நீ கொண்ட நோக்கமானது உனக்கும் பிறருக்கும் நேர்வழி காட்டுவதாக இருந்தால் அப்போதே உனக்குச் சோபனம் உண்டாகக்கடவது' என்ற வாக்கியம் வந்ததும் அவர் படிப்பதை நிறுத்துமாறு கூறி 'நீங்கள் இதனை மொழிபெயர்த்துள்ளீர்களே! நீங்கள் இதன்படி செயலாற்றுகின்றீர்களா? நீங்கள் பிறருக்கு நேர்வழி காட்டுகின்றீர்களா? இத்தன்மை உங்களிடம் இருக்கின்றதா?' என்று அடுக்கடுக்காகக் கேள்விகளை விடுத்தனர், 'ஆம், என்னால் இயன்றவரை அவ்வாறு செய்துதான் வருகின்றேன். வாணிபம் முடிந்த மற்ற நேரங்களிலெல்லாம் ஜமாலியா சென்று மாணவர்களுக்கு ஓதிக்கொடுத்துக்கொண்டுதான் வருகிறேன்' என்று ஆலிம் புலவர் கூறியதும் 'உங்கள் வரலாற்றைக் கேட்டு நான் பெரிதும் மகிழ்வடைந்தேன். ஆனால் நீங்கள் தீன் விஷயத்தில்

முற்றிலும் ஈடுபடாது துன்யா விஷயத்திலும் பொருளீட்டு வதிலும் முற்றிலும் ஈடுபட்டிருப்பதைத் தங்களின் வாய் மொழி மூலமாக அறிந்ததும் அந்த மகிழ்வே என்னைவிட்டும் அகன்றுவிட்டது. உங்களைப் போன்றவர்கள் அல்லாஹ்வு டைய பாதையில் மக்களுக்கு நேர்வழி காட்டும் பணியில் உடல், பொருள், ஆவி அத்தனையையும் செலவிட வேண்டும். வாணிபம் செய்வதற்கு அல்லாஹ் மற்றவர் களைப் படைத்துள்ளான். ஆனால் தங்களை அல்லாஹ் அதற் காகப் படைக்கவில்லை' என்று கூறினர்.

இதன்பின்னர் அடுத்த மாதம் மௌலவி அப்துல் வஹ்ஹாப் ஹஸரத் அவர்கள் சென்னை வந்திருந்தக் கால், ஜமாலியா அரபிக் கல்லூரியின் தலைமை ஆசி ரியரும், தம்முடைய மாணவருமான மௌலவி முகம் மது மதார் ஹஸரத் அவர்களை நோக்கி, 'இஹ்யாஉலூ முத்தீனிலுள்ள இன்ன பாடத்தை சையிதுமுகம்மதுவுக்கு ஓதிக்கொடுங்கள்' என்று கூறினார். அவர் ஏற்கனவேயே அதனை ஓதி முடித்துவிட்டார் என்றதும், 'இவற்றை எல்லாம் ஓதியவர்தாமா அல்லாஹ்வுடைய பாதையில் முற்றிலும் ஈடுபடாது வாணிபத்துறையில் ஈடுபட்டுள் ளார். விரைவில் வாணிபத்தை நிறுத்திவிட்டு மக்களுக்கு நேர்வழிகாட்டும் துறையில் முனைந்து நிற்குமாறு கூறுங் கள். இத்தகையோர் எல்லாம் இவ்வாறு இருந்தால் நம் தீனுடைய விஷயம் சிதைவுண்டு போய்விடுமல் லவா' என்று அழுத்தமாகக் கூறினர்.

துன்யாவை விட்டுவிட்டு தீனுக்குவா, துன்யாவை விட்டுவிட்டு தீனுக்குவா, என்றவாறு ஜமால் முகிய் யித்தீன் சாகிபும், அப்துல் வஹ்ஹாப் ஹஸரத் அவர்களும் ஏனையோரும் ஆலிம் புலவருக்கு அறவுரை பகர்ந்த போதி னும் அவருடைய வாணிபம் மேலும்மேலும் வளர்ந் தோங்கி வந்தது. விரைவில் வாணிபத்தை நிறுத்த இயலா வண்ணம் இக்காலை அவருடைய கையில் அதிகமான சரக் குகள் தேங்கிக் கிடந்தன. எனவே அவற்றை விற்பனை செய்து பணமாக்க வேண்டிய நிலையும் அவருக்கு ஏற்பட் டது. எனவே அவற்றை எடுத்துக்கொண்டு இலங்கை சென்ற ஆலிம் புலவருக்கு இறைவன் செய்த பேரருளைப் பாருங்கள். கப்பலிலே வைத்து எண்ணூறு ரூபாய்க்கு

வாணிபம் நடந்தது. மற்றவர்களெல்லாம் பதுக்கல்களிலும், கள்ளக் கடத்தல்களிலும் ஈடுபட்டிருக்கும் பொழுது ஆலிம் புலவர் தம் சரக்குகளை எடுத்துக்கொண்டு தலைமைச் சுங்க அதிகாரியாக இருந்த சுந்தரம்பிள்ளை என்பாரிடம் சென்று அவற்றை அவர் முன் வைத்துத் தாம் இலங்கை கொண்டு செல்லும் பொருள்கள் இவ்வளவுதாம் என்றும், இவற்றிற்குத் தாங்கள் விரும்பிய வண்ணம் எவ்வளவு தீர்வை வேண்டுமென்றாலும் போடுங்கள் என்று கூறியதும் அவர் இவருடைய நேர்மையைக் கண்டு வியந்து, 'நானும் எத்தனையோ ஆண்டுகளாக இங்கு அலுவலாற்றி வருகிறேன்; இதுவரை ஒருவராவது என்னிடம் வந்து இவ்வாறு கூறியதில்லை. இப்படியெல்லாம் நீங்கள் இலங்கை சென்று நடந்து கொண்டீர்களானால் உங்களால் அங்கு ஆதாயத்துடன் வாணிபம் செய்ய இயலாதே' என்று கூறினார். அதன்பின் அவர் எண்ணூறு ரூபாய்க்கு ஆலிம் புலவரிடம் கற்கள் வாங்கினார். அதுமட்டுமல்லாது யாழ்ப்பாணத்திலிருந்த தம்முடைய அண்ணனுக்கு 'இவர் எவ்விதத்திலும் உண்மைக்கு மாறாக உரைக்கமாட்டார். ஆதலின் இவருக்கு வேண்டிய உதவி அத்தனையும் செய்யுங்கள்' என்று அறிமுக மடலும் எழுதிக்கொடுத்தார். அதன்காரணமாக ஆலிம் புலவர் யாழ்ப்பாணத்திற்குச் சென்றபொழுது அவருக்குப் பல பெருமக்களின் நட்பும் ஆதரவும் ஏற்பட்டு அவருடைய வாணிபம் பன்மடங்கு செழித்து வளர்ந்தது. இக்காலேதாம் அவருக்கு யாழ்ப்பாணத்தில் முஸ்லிம் தமிழ்ப் புலவர்களாக இருந்த அசனலெப்பை, சுலைமான்லெப்பை ஆகியோரின் நட்பும் கிடைத்தது.

யாழ்ப்பாணத்திலிருந்து ஐந்து கல்தொலைவிலுள்ள கொக்குவில்லுக்கு அன்னார் வண்டியில் தனியாக வாணிபத்தின் பொருட்டு சென்று வரும் வழக்கமுடையவராயிருந்து வந்தனர். அப்பொழுது அவருடைய நண்பர் ஒருவர் அவரிடம் 'நீங்கள் இவ்வாறு பெருமதிப்புள்ள பொருள்களைக் கொண்டு செல்வது சரியல்ல. நான் உங்களுக்கு ஒரு கைத்துப்பாக்கி வைத்துக்கொள்ள அனுமதி வாங்கித் தருகிறேன். பாதுகாவலுக்காக ஒரு கைத்துப்பாக்கி வைத்துக் கொள்ளுங்கள்' என்று கூறினார். அதற்கு ஆலிம் புலவர் தமக்கு ஆண்டவனுடைய பாதுகாவலே போதுமென்றார். 'கள்ளன் வந்தால் என் பொருள்களைத்தாமே கொள்ளையிட்

டுச் செல்வான். நன்றாகக் கொள்ளையிட்டுச் செல்லட்டும். அதற்காக அவனுடைய உயிரைக் கொல்ல நான் விரும்பேன்' என்று கூறி அந்த யோசனையை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டனர். ஆனால் ஒருதடவை இவ்வாறு அவர் வண்டியில் தனியாகக் கொச்சுவில்லுக்குச் சென்றுகொண்டிருக்கும்பொழுது, ஒருவர் 'யார் வண்டியில் செல்வது? நிறுத்து வண்டியை' என்று அதட்டி வண்டியை நோக்கி விறுவிறுவென வந்தார். எப்பொழுதும் வெறுமனே இருக்கும்பொழுது திருக்குர்ஆனை ஓதிக்கொண்டிருக்கும் அன்னார் 'நிறுத்து வண்டியை' என்ற குரல் கேட்கும் பொழுது மூஸா (அலைஹி) அவர்களுக்கு இறைவன் 'எவ்வித அச்சமுமின்றி முன்னேறி வருவாயாக' என்று கூறும் வாக்கியத்தைத் தங்களை அறியாமல் ஓதும் கட்டத்தில் இருந்தனர். வந்த அவர் ஆலிம் புலவரைப் பார்த்துவிட்டு, 'ஆனந்தம், ஆனந்தம், ஆனந்தம். சந்தோஷமாகப் போய் வாருங்கள்' என்று கூறி மூன்று முறை அந்த வண்டியை வலம் வந்துவிட்டுச் சென்றுவிட்டார்.

இக்காலை ஜமால் முகிய்யித்தீன் வானுலகடைந்த செய்தி அவருக்குத் தெரியவந்ததும், ஆலிம் புலவரின் மனம் அனலிடைப்பட்ட மெழுகு போன்று கரைந்துருகியது. அன்னாருக்காக இறைவனிடம் பின்வருமாறு இறைஞ்சி அழுதார்.

'தனக்குவமை இல்லாத தனிமுதலே தற்பரனே
[தகைமைபூண்ட
மனக்கொலுவில் நீ அமர மருவிய பேரின்பமதில்
[மாய்ந்து மாய்ந்து
தனக்குவியல் பலபெறினும் தமதெனவே மருளா
[துன் தனதென்றீந்து
மனக்கமல மகிழும் ஜமால் முகிய்யித்தீன் சாகிபை
[நீமகிழ்விப்பாயே'.

மேலும் அன்னாரின் பிறந்த நாளையும், இறந்த நாளையும் எளிதில் நினைவு கொள்ளும வண்ணம் பின்வரும் ஒரே வெண்பாவில் பாடி முடித்தார்.

"ஆண்டுநள ரத்தாட்சி ஆடி இருபானேழு
மீண்டுமதன் ஈரேழும் வெள்ளிபுதன்—பூண்டஇரா
மூதறிஞர் ஏற்றுஜமால் முகிய்யித்தீன் சாகிபெனும்
நாதரிவண் வந்தகன்ற நாள்"

ஆலிம்புலவர் யாழ்ப்பாணத்தில் இருக்கும்பொழுது ஒரு நாள் புகையிலைச் சிப்பம் கட்டுகின்ற ஒருவன் அருணகிரி நாதர் பாடிய திருப்புகழைப் பாடும்பொழுது அதில் ஒரு செய்யுளில் வரும் 'நான் நினைத்தபடி நீ எனக்கருள்க நாத சுப்ரமண்யப் புண்யனே' என்ற ஈற்றடியைப் பாடியது பக்கத்துக் கிட்டங்கியில் படுத்திருந்த ஆலிம் புலவரின் காதில் விழுந்ததும் அவனை அழைத்து 'அப் பாட்டின் ஈற்றடி சரியாக இல்லையே. இறைவனின் முன்னிலையில் அவனின் அடியார்கள் இறைஞ்சும் விதம் இதுவல்லவே' என்று கூறினர். இதைக் கேட்டு அவன் ஆலிம் புலவர்மீது வெகுண்டு அங்கு வாழ்ந்துவந்த வயோதிகப் பண்டிதரான வைத்தியலிங்க உபாத்தியாயரிடம் சென்று 'ஒரு சோனகஇளைஞர் நம் அருணகிரி நாதர் பாடிய இச் செய்யுளைச் சரியில்லை என்று கூறுகின்ருர்' என்று சொன்ஞன். சின்ஞட் கழித்து அந்த வைத்தியலிங்க உபாத்தியாயர் ஆலிம் புலவரைச் சந்தித்தபொழுது இதுபற்றி அவரிடம் விஞவிஞர். 'ஆம்' நான் அது சரியில்லை என்று கூறியது உண்மைதான்' என்றனர் ஆலிம் புலவர். 'அவ்விதமாஞல் அதனை எவ்விதம் கூறவேண்டும்' என்று வைத்தியலிங்க உபாத்தியாயர் மறு கேள்வியை விடுத்தார். உடனே ஆலிம் புலவர் 'நீ நினைந்தபடி நான் நடக்கவருள் நீத சுப்ரமண்யபுண்யனே' என்றிருந்தால் சந்தமும் எதுகை மோனையும் குன்ருமல் பொருளும் மிகைப்பாக இருக்கும்' என்று கூறியதும் வைத்தியலிங்க உபாத்தியாயருக்கு ஏற்பட்ட வியப்பிற்கும் மகிழ்விற்கும் அளவில்லை.

யாழ்ப்பாணத்தில் பிரபலமாய் வாழ்ந்த கனகசபை என்னும் கனவானிடம் கறுத்த மரக்காயருக்கும் சாமிநாதஞ் செட்டியாருக்குமிடையே ஏற்பட்ட சச்சரவு ஒன்று பஞ்சாயத்துக்குச் சென்றது. அப்பொழுது கறுத்த மரக்காயர் பக்கலுள்ள உண்மையை எடுத்துரைப்பதற்காக ஆலிம் புலவர் சென்றக்கால் அங்கு வீற்றிருந்த சாமிநாதன் செட்டியார்

ஆலிம் புலவரைச் சுட்டிக்காட்டி 'இவரிடம் இருமுறை ஒரு வெண்பாவைக் கூறின் இவர் அதனை மனனம் செய்துவிடுவார்' என்று கனகசபையிடம் கூறியதும் கனகசபை ஒன்றன் பின் பின் ஒன்றாய் ஆறு வெண்பாக்களைக் கூறினார். அந்த ஆறு வெண்பாக்களையும் ஆலிம் புலவர் திரும்பக் கூறினார். அதைக்கண்டு பெரிதும் வியந்த கனகசபை தாம் பாடிய சில செய்யுட்களை அவரிடம் பாடிக்காட்டி அவைபற்றி அவரின் சாற்றுக் கவியை வேண்டினார். ஆலிம் புலவர் அக்கணமே

> படிக்கப் படிக்கப் பலகாலும் இன்பம்
> வடித்த தமிழால் வழங்கும்—நடிக்கும்
> கனகசபையார் கருதும் அருள்சேர்
> கனப சபையார் கவி.

என்னும் ஒரு வெண்பாவைப் பாடினர். அதனை மீண்டும் கேட்டுத் தாளில் எழுதிக்கொண்ட கனகசபை அதனை மடக்கி மடக்கிப் படித்து மகிழ்ந்தார். அதன்பின் அதனை வழக்கறிஞர் மன்றத்திற்கு எடுத்துச்சென்று அங்குள்ள மற்றவர்களிடமும் அதனைப் படித்துக்காட்டி, 'இந்தியச் சோனகர் ஒருவர் இவ்வாறு பாடியுள்ளார். இதைப்போன்று சொன்னயமும், பொருணயமும் உள்ள பாவொன்றை யாழ்ப்பாணத்திலுள்ள தமிழர் யாரேனும் கூறுங்கள், பார்ப்போம்' என்று கூறி வியந்தார்.

இவ்வாறு சாற்றுக்கவிகளும், இறந்தவர்களின் பொருட்டு இறைவன்பால் இறைஞ்சும்சரமகவிகளும், இறைவனைப் போற்றித் துதிக்கும் இன்னிசைப் பாக்களுமே அன்னார் பாடி வந்தனரேயன்றி யார்மீதும் வசைக்கவியும் பாடவில்லை; சிற்றின்பப் பாடல்களும் பாடவில்லை. வேடிக்கைப் பாடல்களும் பாடவில்லை. புத்தளத்தில் வைத்து அங்கு வாழ்ந்து வந்த பெரும் வணிகர் முகம்மது காசிம் மரக்காயர் என்பார் இராஜநாயகத்திலுள்ள ஆணை இருஞ்சிப் பட்சிக்கும், சுலைமான் நபிக்கும் விதிவலிதா மதிவலிதா என்பது பற்றி நடந்த வரலாறுகள் அடங்கிய படலங்களை விரிவுரை நிகழ்த்துமாறு பலர் மூலமாக ஆலிம் புலவரிடம் சொல்லி அனுப்பியபொழுது அதில் வரும் சிற்றின்பச்

செய்திகளையெல்லாம் கண்ட ஆலிம் புலவர் 'முடியாது' என்று மறுத்துவிட்டார்.

வாணிபத்தை ஒடுக்கிவிட்டு அல்லாஹ்வுடைய பாதையில் தம்முடைய எஞ்சிய வாழ்நாளைச் செலவிடவேண்டுமென்று விரும்பிய ஆலிம்புலவரை அவ்விதம் செய்யவிடாவண்ணம் எத்தனையோ இடையூறுகள் குறுக்கிட்டன. இச்சமயத்தில்தான் அவர் தமக்குக் கிடைக்கும் ஆதாயத்தில் ஒரு ரூபாய்க்குக் கால்ரூபாய் வீதம் மிச்சம்பிடித்து மூவாயிரம் ரூபாய் சேர்த்து பெண்கள் தொழுவதற்கான ஒரு தைக்கா கட்டிக்கொடுத்தனர். இவ்வித அறங்களெல்லாம் வாணிபத்தை ஒடுக்கிவிடின் செய்ய இயலாதே என்று அவரின் உள்மனம் கூறியது. எனவே என்செய்வதென அறியாது அவர் சிலகாலம் தடுமாறினார்.

இக்காலை அவர் கொழும்பில் இருக்கும்பொழுது தாவூது நபியைக் கனவில் கண்டு 'கஸ்ஸாலி இமாம் எழுதிய இஹ்யா உலூமுத்தீனில் ஒருவன் தன்னுடைய உலக வியவகாரங்கள் அனைத்தையும் மறுமைக்கான செயல்களாக மாற்றிக்கொள்ளலாமென்று கூறப்பட்டுள்ளதே. அது இயன்ற செயல் தானா' என்று வினவியபொழுது 'அது உங்கள் போன்றவர்களுக்கு இயலாத செயல்' என்று கூறினர் தாவூத் நபி. 'ஏன்' என்று ஆலிம் புலவர் வினவியக்கால் 'நீங்களெல்லாம் ஞஈபாக்கள் (பலஹீனர்கள்) என்றனர் அந் நன்னபி. அப்படியானல் கஸ்ஸாலி இமாம் 'அது இயன்றசெயல் தான்' என்று இஹ்யாவில் எழுதியுள்ளனரே என்றதற்குப் பக்கத்திலிருந்தவரைச் சுட்டிக்காட்டி 'இதோ கஸ்ஸாலி இருக்கிறார், கேளும்' என்றனர் நபியார். உடனே ஆலிம் புலவர் அருகிலிருந்த கஸ்ஸாலி இமாமவர்களுக்குச் சலாம் சொல்லி அவர்களை இதுபற்றி வினவியக்கால் அவர்களும் தாவூது நபியார் பகர்ந்த பதிலையே பகர்ந்தனர். அப்படியானல் நீங்கள் 'அது இயன்ற செயல்தான்' என்று இஹ்யாவில் எழுதியுள்ளீர்களே' என்று ஆலிம் புலவர் வினவினர். அதற்குக் கஸ்ஸாலி இமாமவர்கள் 'நான் அவ்வாறு எழுதியது மெய்தான். அது அல்லாஹ்வை முழு மனத்தோடு பற்றிப் பிடித்து மற்றென்றிலும் பற்றுதலில்லாத மாபெரும் வைராக்கிய வீரவான்களுக்கே உரியது. அது உங்களுக்கு இணக்கப்படாதது. நீங்கள் உலக விவகாரங்களில் சொக்கி மூழ்

கியிருப்பவர்கள்' என்று முடிவாகக் கூறினர். இத்துடன் கனவும் முடிந்தது.

இதன்பின் இனிமேல் தொழிலைத் தலையில் கட்டிக் கொண்டு திரியக்கூடாது. இதனை ஒடுக்கித்தீரவேண்டும் என்ற உறுதியுடன் ஆலிம்புலவர் ஒருநாள் ஜும்ஆத் தொழுகைக்கு விரைந்து செல்லும்பொழுது முன்பின் தெரியாத ஒருவர் அவரின் முன் எதிர்ப்பட்டு 'ஆண்டவன் விஷயத்தில் முற்றி முனைந்து திரிகிறீர். விரைவில் சந்தோஷம் கிடைக்கும்' என்று கூறிச் சென்றனர். தொழுதுவிட்டு அவர் யார் என்று வந்து பார்க்கும்பொழுது அந்த ஆள் அங்குக் காணப்படவில்லை. பின்பு பலமுறை அவரை அங்கு வந்து பார்த்தும் அவர் தென்படவே இல்லை.

பின்னர் வாணிபத்தை ஒருவாறு ஒடுக்கித் தம் ஊரில் ஓய்வு கொண்டனர் ஆலிம் புலவர். வாணிபத்தின்மூலம் ஓரிலட்சம் ரூபாய்வரை பொருளீட்டிய ஆலிம்புலவர் மத்ரஸா சதக்கத்துல் ஜாரியா என்னும் கல்வி நிலையம் நிறுவப் பதினாயிரம் ரூபாயும் மதரஸதுல் நிஜாமிய்யாவுக்குப் பதினாயிரம் ரூபாயும் நன்கொடை அளித்தனர். இன்னும் அவர் செய்த, செய்துவரும் அறங்கள் பல பல.

இவ்வாறு அவர் பெருஞ் செல்வராக இருக்குங்கால் செய்துவந்த போதினும் இளமையில் சாதாரண நிலைமையில் இருக்கும்பொழுதும் தம்மால் இயன்ற அளவு பிறருக்கு உதவி செய்து வந்தாரேயன்றிப் பிறரிடமிருந்து ஒரு காசேனும் அன்பளிப்புப் பெறவில்லை. முத்துராமலிங்க சேதுபதியின் திருமணத்தின்போது மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவர்களுக்கெல்லாம் பொன்னும் ஆடையும் பரிசு நல்கப்பட்டபொழுது, சமஸ்தான வித்துவான் இரா. இராகவைய்யங்கார் பெரிதும் விரும்பிப் பன்முறை வற்புறுத்தியும் ஆலிம் புலவர், 'இறைவன் தந்தது எனக்குப் போதும். அவ்வெகுமதி வேண்டாம்' என்று மரியாதையுடன் கண்டிப்பாக மறுத்து விட்டார்.

தர்பியதுல்—அத்பால் என்னும் அற நிலையத்தைத் திறம்பட நிர்வகித்து மார்க்க சம்பந்தமான பற்பல இலவச வெளியீடுகள் எழுதி வெளியிட்டும் மக்களுக்கு மார்க்கம் பற்றிய அறவுரைகள் பகர்ந்தும் தம் எஞ்சிய காலத்தைக்

கழிக்கத் துவங்கிய ஆலிம் புலவர் அவ்வாறு செய்வதிலும் சலிப்புற்று, தம்மை அல்லாஹ்வுடைய நினைவிலேயே முற்றிலும் ஈடுபடுத்த எண்ணினார். ஒருதடவை வண்டியில் செல்லும்பொழுது வண்டி குடம்புரண்டதன் காரணமாகக் கை பிசகி மருந்து கட்டிக்கொண்டு வெளியே வராமல் வீட்டிலேயே இருந்த ஆலிம் புலவர் கை நலம்பெற்ற பின்பும் வெளியே வராது வீட்டிலேயே தங்கித் தனித்து இறைவனைத் தியானித்தவண்ணம இருக்கத் துவங்கினர். அவருடைய நண்பர்கள் அவரை வெளியே வருமாறு எவ்வளவோ கூறியும் அவர் அதற்கு இசையவில்லை. இதற்கு மத்தியில் அவருக்கு வெளியே வருமாறு பற்பல கனவுகள் மூலமாய் எச்சரிக்கை வந்தும் அவர் வெளியே வரவில்லை. இவ்வாறு நடந்துகொண்டிருக்குங்காலை ஓரிரவு அவரொரு கனவு கண்டார். அதிலே ஆலிம்புலவர் ஒரு பெரும் கூட்டத்தின் நடுவே நிற்பது போலவும் ஒருவர் அரபியில் எழுதப்பட்ட தாள் ஒன்றை அவரிடம் கொண்டுவந்து நீட்டுவது போலவும் அதனை அவரையே படிக்குமாறு ஆலிம்புலவர் கூறுவது போலவும் அதிலே 'நாம் ஒருவனை இவ்வுலகில் படைத்து, ஓதவைத்து, ஆலிம் (மார்க்க விற்பன்னர்) ஆகவும் ஹாபிஸ் (குர்ஆனை மனனம் செய்தவனாகவும்) ஆக்கினேம். மேலும் அவனுக்குத் தமிழ்க் கல்வியைப் போதித்து அவனைத் தமிழ்ச்சங்க வித்துவானாகவும் ஆக்கி வணிகனாகவும் ஆக்கி வள வாழ்வையும் நல்கினேம். பின்னர் அவனை ஒருமுறை ஹஜ்ஜுச் செய்யும் பேறுபெற்ற ஹாஜியாகவும் ஆக்கினேம். அவ்வாறு ஹஜ்ஜுக்குச் சென்றகாலை அவன் சென்ற பஸ் குடம்புரண்டபொழுது மற்றவர்களுக்கெல்லாம் பெரும் காயம் ஏற்பட்டகாலை நாம் அவனைக் காத்து சிறு காயத்துடன் தப்புவித்தோம். இவ்வாறு நாம் அவன்மீது நம்முடைய அருட்கொடைகளைச் சொரிந்தும் அவன் நம் பேச்சை ஏற்றுக்கொள்கின்ருனில்லை' என்று அரபியில் குறிக்கப்பட்டிருந்ததை அவர் படித்தார். அதன் இறுதியில் 'குல்லஹூ அன்பிகு குர்ஆனு' (அவனுக்குச் சொல்லப்படுகிறதைப் பிறருக்குச் சொல்லுமாறு சொல்) என்று குறிக்கப்பட்டிருந்ததையும் அந்த மனிதர் படித்தார். அத்துடன் ஆலிம் புலவர் திடுக்கிட்டு விழித்தெழுந்துவிட்டனர். இவ்விதம் இறைவனிடமிருந்து எச்ச

ரிக்கை வந்தபின்பும் வீட்டில் ஒதுங்கியிருப்பது நல்லதல்ல வெனக் கருதி அன்னார் வெளியே வந்து அல்லாஹ்வின் திருப் பணியில் தம்மை முற்றிலும் அர்ப்பணித்துக்கொண்டனர். இதன்பின் 'ஏகதெய்வ ஸ்தோத்திர மாலை' என்னும் பெயரு டன் இறைவனிடம் இறைஞ்சி அரபியிலும் தமிழிலும் 87 பாக்களை இயற்றி அதற்கான விளக்கமும் அவற்றின் கீழே உரைநடையில் நல்கினர்.

''இறைவனே, அடங்காத காமவாய்ப்பட்டு அறிவிழந்து அடாத செயல் புரிவதையே ஆனந்தமாகக் கண்ட எனது மூக்கணாங் கயிற்றைப் பிடித்து எனது போக்கின்படி செல்ல விடாமல் தடுத்து உனது திருவுளச் செயலில் திருப்தியுண் டாக்கி வைத்தருள்வாயாக. பொய்த் தோற்றமான போக பர்க்கியங்களை இச்சையுற்று நான் புரிந்துகொண்டிருக்கிற புன் செயல்களை அதிகப்படுத்தினாலும் உன்னைச் சரண்புகுந்து உனது திரு முன்பு திகழ்ந்திருப்பதைக் குறைப்பதினாலும் உனது வெறுப்புக்கு ஆளாகும்படி என்னை விட்டுவிடாதிருப் பாயாக. எனது தன்மையை நினைத்து நினைத்து என் மன மானது உண்மையை உணரமுடியாமல் தட்டழிந்திருக்கின் றது. உனதடிமையாகிய நான் எண்ணிறந்த பொய் நினைவு களைப்பூண்டு காமக்குரோதங்களினால் கட்டுப்பட்டு உழன்ற போதினும் என்னைக் கரை சேர்ப்பதற்கு நீ போதுமானவ னில்லையா? எனது தாவந்தம் முற்றிலும் தவிர்த்து உன்னில் தரிபடுத்தி வைத்திட எனது ஜன்மமானது சாபல்யமாகி விடுமே' என்று பின்வரும் கவியில் கரைந்துருகும்வண்ணம் அழுது கெஞ்சி அவர் இறைவனிடம் இறைஞ்சுவதைக் கேளுங்கள்.

எனதுமூக்கின்க யிற்றைப் பிடித்தருள்
இகத்தின் சேவைமி கைப்பதி னாலுமுன்
தனது சந்நிதி சார்வது குன்றியும்
தவறிப் போகவி டாதெனைக் காத்தருள்
மனது தட்டழி வானதென் னீர்மையை
மதித்து நீபோது மானவ னல்லையா?

உனத டிமைக்கு முற்றிலு மென்னைநீ
உன்னில் வைத்திட வுய்குவ னேகனே!

இவ்வாறு கெஞ்சி இறைஞ்சும் ஆலிம் புலவர் மற்றொரு கவியில் இறைவனின் திரு முன்னில் வீழ்ந்து தமக்கு அவன் செய்த பேரருளுக்கு நன்றிமொழி கூறித் தம்மைக் காத்து ஆண்டருள் புரியுமாறு அழுது கெஞ்சுகின்றார்.

அன்ன துக்கந்த னையெனை விட்டுநீ
அகற்றி வைத்தனை ஆணவத் தாசையும்
தின்னுந் தீயபொ ருமையு நீக்கிவை
தெய்வ மேயுன தர்ப்பண மென்றுனில்
மன்னும் ஆவியு டல்பொருள் வைத்தென்றன்
மனதின் வன்மையை மென்மைய தாகச்செய்
முன்னி ருந்தது போலுன்ச மீபமாய்
முடுகச் செய்தரு ளென்னகத் தேகனே.

வரிசை யாலும ருட்பொலி வாலுநேர்
வழியைக் காட்டினை மங்கும நாதையாய்
இருந்த போதுமி ரக்கத்தி னுலெனை
யேந்து கொண்டனை நன்மையுந் தீமையும்
பெருகு துன்பத்தை யுந்தெரி வித்தனை
பேய்கள் சூழ்ந்துபி தற்றலும் தீர்த்தருள்
உரிய நீயன்றி மற்றவர் யாரெனக்
குணர்ச்சி யுண்டுப டுத்துவா ரேகனே.

இவ்விதம் இறைவனிடம் கெஞ்சி அழும் ஆலிம் புலவர், இறைவனின் 99 திருப்பெயர்களையும் 21 பாக்களில் அமைத்துப் பாடிப்பரவசமடைகின்றார். அதில் முதற்கவி வருமாறு:

வணங்குதற் குரியோன் அல்லாஹ்; மலர்தலை உலக
[மீதில்
இணங்கிடும் நல்லார் பொல்லார்க் கிரங்கிடும் றஹ்
[மான்; பன்னுள்
பிணக்கறும் அடியார் கட்கே பேரருள் புரியும் ஆதி;
அணங்கிலா ரஹீம்என் றோதும் அர்ஹமுர் ருஹி
[மீனே!

இவ்விதம் பக்தி சிந்தும் பேரின்பப் பாடல்களைப் பாடியுள்ள ஆலிம் புலவர் தமிழிலும், அரபியிலும் கவிபுனையும் கவிஞர் திலகமாகத் திகழ்கின்றனர்.

பல்லாக்குத் தம்பி வலியுல்லா பேரில் அரபியில் முனாஜாத்தும், தமிழில் விரிவுரையும் எழுதியுள்ளனர். முஹியித்தீன் ஆண்டவர்கள் பேரில் அவர்களின் 91 வயதுக்குச் சரியாக 91 பைத் (செய்யுள்)களால் பூஸரி இமாம் கோவை செய்த புர்தாவுடைய இராகத்தில் அதே வாய்பாட்டில் 'பர்தா' என்ற பெயருடன் எழுதியுள்ளனர். அது குத்பு நாயக மான்மியம் என்ற பெயருடன் 'நூறுல் ஹக்' திங்கள் வெளியீட்டில் வெளியான போது அதன் முகவுரையில் அரபியைத்துக்கும், தமிழ்ச் செய்யுள்களுக்கும் உள்ள ஒற்றுமைகளையும் எடுத்துக் காட்டி இருந்தனர். அம்முகவுரையைப் படித்துப் பரவசமடைந்த பலர் புர்தா, பர்தா என்ற இரு மொழிகளும் சொல்லின் பெரும்பாலும் ஒத்திருப்பது போன்று அவ்விரு நூல்களிலும் காணப்படும் சொல்லழகையும், பொருள் அழகையும் கவனிக்குங்கால், அவை இரண்டும் ஒரே தாய் தந்தையருக்குப் பிறந்த இரட்டைக் குழந்தைகள் போல் தோற்றுகின்றன என்று வியந்து மடல் தீட்டினர். மேலும் ஷாபி இமாம் அவர்களின் வரலாற்றை 'மனாகிபுல் இமாமி ஷாபி' என்னும் நூலாகவும், ஹனபி இமாம் அவர்களின் வரலாற்றை மனாகிபுல் இமாமுல் அஃலம் என்னும் நூலாகவும், அன்னார் இயற்றியுள்ளனர். அவை இரண்டும் அரபிச் செய்யுட்களால் நிரம்பப்பெற்று அவை ஒவ்வொன்றின் கீழேயும் அரபுத்தமிழில் விளக்கவுரை கூறப்பட்டுள்ளது. பத்ரு, உஹத் சண்டையில் வீரசுவர்க்கம் எய்தியவர்கள்மீது புகழ்ப்பாக்கள் இயற்றப்பட்டிருக்கும் பாணியில்

ஏறுவாடியில் அடங்கப் பட்டிருக்கும் செய்யிது இபுருகீம் ஷஹீத் அவர்கள்மீது ஒரு கஸீதா (செய்யுள் தொகுதி) எழுதியுள்ளனர்.

இவர் சமீபத்தில் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்)அவர்கள் மீதும் அவர்கள் தம் அருமை மகளார் பாத்திமா நாயகி மீதும், மருகர் அலி (ரலி) அவர்கள் மீதும், கண்மணிப் பேரர்களான ஹஸன், ஹுஸைன் ஆகியோர் மீதும் அரபியில் புகழ்ப்பாக்கள் பாடி அச்சடிக்கச் சென்னை வந்திருக்குங்கால், அச்சடிக்க வேண்டிய 'இறுதி புரூப்' அவரின் பார்வைக்கும், அனுமதிக்கும் வந்திருக்கும் பொழுது அன்றிரவு ஒரு கனவு கண்டனர். ஹுஸைன் (ரலி) அவர்கள் ஆலிம் புலவரின் கனவில் தோன்றி, 'எல்லாம் சரிதான்; ஆனல் வயது விஷயம் தவறிவிட்டது. அந்தத் தாரீகை (தேதி)த் திருத்திக்கொள். தாரீகைத் திருத்திக்கொள்' என்று மடக்கி மடக்கி திருவாய் மலர்ந்துவிட்டு மறைந்தனர். விடிந்தெழுந்ததும் ஆலிம் புலவர் ஹுஸைன் (ரலி) அவர்களின் பிறந்த தேதியையும், இறந்த தேதியையும் அவர்கள் இவ்வுலகில் வாழ்ந்த ஆண்டுக்கணக்கையும் பார்க்கும் பொழுது அவர் கணக்கிட்டது தவருக இருந்தது. ஹுசைன் (ரலி) அவர்கள் இவ்வுலகில் 56 ஆண்டுகளும், சில திங்களும் உயிர் வாழ்ந்துள்ளனர். ஆனல் ஆலிம் புலவர் 'நூருல் அப்ஸார்' என்னும் நூலை ஆதாரமாக வைத்துக்கொண்டு அதில் குறிப்பிட்டுள்ள வண்ணம் ஹுசைன் (ரலி) அவர்கள் 55 வது வயதில் இவ்வுலகை நீத்தனர் என்று தாம்பாடிய கவியில் பாடி இருந்தனர். அதன் பின் ஆலிம் புலவர் அத்தவற்றை உடனே திருத்தி அச்சடித்து அந்நூலை வெளியிட்டனர்.

ஆலிம் புலவர் இவ்வாறு பலபல மகான்களையும் கனவில் காணும் பெறுதற்கரிய பேறு பெற்றுள்ளனர். முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களையும், முகிய்யித்தீன் ஆண்டகை அவர்களையும், ஷாஹுல் ஹமீது ஆண்டகை அவர்களையும், இப்னு ஹஜர் இமாம் அவர்களையும், அவ்ன் எஸ்தி, சதக்கத்துல்லா அப்பா ஆகியோரையும், இன்னும் பல மகான்களையும் கனவில் கண்டுள்ளனர்.

ஓரிரவு அவர் அயர்ந்து உறங்கும் பொழுது ஓர் அற்புதக் கனவு கண்டனர். வானிலிருந்து மேகம் ஒன்று இறங்கி

அவர்முன் வந்து நிற்கின்றது. அப்பொழுது அவர், 'அல்லாஹ்வே! நீ எனக்கு எல்லாவிதமான பேறுகளையும் நல்கினுய். என் வயதொத்தவர்களான எண்ணற்ருேருக்குக் கிடைக்காத பெரும் பேறுகளை எல்லாம் எனக்கு நல்கி உள்ளாய். இன்னும் நீ என்னவென்ன பேறுகளை இனிமேல் என் மீது பொழிந்த போதினும், என் ஜென்மம் சாபல்யமடைவதே யாவற்றிலும் சிறந்தது. நான் உனது சமூகத்தைவிட்டும் அப்பாற்பட்டு நாசப்படுகுழியில் வீழாதிருக்க நீ எனக்கு நல்லருள் பாலிக்க வேண்டும். நான் உன்னிடம் வேண்டுவதெல்லாம் இதுதான். என் ஜென்மத்தை சாபல்யமடையச் செய்வாயாக! என்று அழுது பிரலாபித்தார். அப்பொழுது மேகத்தின் பின்னிருந்தும் அசரீரியாக 'உத்ருக் நப்ஸக வத ஆல்' (உன் தன்னை விட்டு விட்டு என்தன்னில் வா) என்ற ஒலி வந்தது. அதற்கு ஆலிம் புலவர் 'இலாஹி உஜ்திப்னி பிமின்னதிக்க' (ஆண்டவனே, உனது உபகாரத்திஞல் என்னை உன்னளவில் இழுத்துக்கொள்) என்று கூறி அழுதனர். அதற்குப் பின்வரும் மறுமொழி மேகத்தின் பின்ஞலிருந்து வந்தது:

அந்த அப்தீ ஹக்கா (நீ எனது சொந்த அடிமை)

இவ்விதம் இறைவனல் தனது சொந்த அடிமையாக ஏற்றுக்கொள்ளப்பட்ட ஆலிம் புலவருக்கு இறைவன் ஒரே ஒரு குறையைத் தவிர்த்து மற்ற எல்லாநலன்களையும்நிறைய நல்கி உள்ளான். எனினும் ஆண் மகவு இல்லா அக்குறையை பெண்வழிப் பேரன் மூலம் நிறைவும் செய்துள்ளான். அவரை ஓர் ஆலிமாகவும், ஹாபிலாகவும், ஹாஜியாகவும், புலவராகவும், நூலாசிரியராகவும், வணிகராகவும், லட்சாதிபதியாகவும் ஆக்கி இறுதியாக அவரைத் தன்னுடைய சொந்த அடிமையாகவும் ஏற்றுக்கொண்டான். இவ்வாறு இறைவனின் அருள்தன்மைநிறைவுறப்பெற்ற அவ்வடிகளார் இன்று கீழக்கரையிலே கீழ்க்கரையின் கலங்கரை விளக்கம் போன்று விளங்கி, அறிவுக்கதிர் பரப்பி, அல்லாஹ்வின் பாதையில் தம்முடைய எஞ்சிய வாணளைச் செலவழித்து வருகின்றனர். தம் வயதின்எழுபத்தைந்தாவது மைல் கல்லை அடைந்திருக்கும் அன்ஞர் நூருண்டு வாழ்ந்து நூல்பலயாத்துப் பணி பல புரிய எல்லாம் வல்ல இறைவன் நல்லருள் பாலிப்பாஞக!

# தக்கலை பீர்முகம்மது சாகிபு

படைத்தான் படைப்பெல்லாம் மனுவுக்காக
மனுவைப் படைத்தான் தனை வணங்க

என்று இறைவன் மனிதனுக்கு அளித்த எஜமானத் தன்மையையும் அத்துடன் மனிதனின் கடமையையும் மேலே கூறிய அடிகளில் இரத்தினச் சுருக்கமாக எடுத்துரைத்தார் தென்காசி தந்த கவிக் குரிசில் ஒருவர். அவர் கவிக் குரிசில் மட்டுமல்ல, ஞானிகளின் கோமானுமாவார். அவர் 'வேத குல வாவாஞ்சி பேரனை வேந்தரெனும் சிறுமலுக்கரீன்ற பாலன்.' அன்னாரின் பெயர் பீர்முகம்மது சாகிபு என்பதாகும். தென்காசிவாழ்ந்த தொல்புகழ் படைத்த முஸ்லிம் பெருங்குடியிற் தோன்றிய அன்னார் எக்காலை தோன்றினாரென்றோ யாரிடம் கல்வி பயின்றாரென்றோ நாம் திட்டமாக அறியோம். கீழக்கரை வாழ்ந்த சதக்கத்துல்லா அப்பா அவர்களும் தென்காசியில் தோன்றிய இந்த ஞானப் பெருமகனாரும் சமகாலத்தவர்கள் என்று தெரியவருவதால் இன்னார் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவரென்று உய்த்துணர இடமுள்ளது. அவரின் இளமையில் பல விந்தைகள் நிகழ்ந்ததாகவும் கூறப்படுகிறது.

இளமைப் பருவத்திலேயே இல்லம் நீத்து வெளிப் போந்த பீர்முகம்மது சாகிபு 95 ஆண்டுகள் வனம், மலை ஆகியவைகளிலும் வட மலையாளத்தைச் சேர்ந்த கெபிகளிலும் உறைந்து இறைவனை வணங்கி நின்றனர். பின்னர் யானைமலைப் பகுதியொன்றில் அன்ன பானமற்றுப் பதினைந் தாண்டுகள் நிஷ்டையில் ஆழ்ந்திருந்தனர். இம்மேதகை ஆங்கு உறைந்த பகுதியே இன்று பீர்மேடு என்று வழங்கப் பட்டு வருகிறது.

இம் மேதகை யானைமலையில் வந்து வணங்கிக்கொண்டி ருப்பது அக்காலத்தே கொச்சி நாட்டை ஆண்டுவந்த மன்ன ருக்குத் தெரியவந்ததும் அவர் மாறுவேடம் புனைந்து அன்னா ரிடம் வந்து அவரது அறவுரைகளைச் செவிமடுத்துத் துறவி யாகிவிட்டாரென்றும் அக்காலத்தில் திருவாங்கூரை அர சோச்சிவந்த முத்துச்சாமித் தம்பிரான் என்னும் மன்னர் அவரையணுகி அன்னாரைத் தம் தலைநகராகிய திருவிதாங் கூரில் கொண்டுவந்து வைத்து அவரின் அடிபணிந்து ஒழுகி வந்தாரென்றும் கூறுவர். அன்னார் தற்கலை என்னும் ஊரில் வாழுங்கால் முத்துச்சாமித் தம்பிரானின் அருமை மகன் இறந்துவிடவே அவனை உயிர்த்தெழச் செய்தனரென்னும் கர்ண பரம்பரையான கதையொன்றும் வழங்கிவருகிறது.

அன்னார் தற்கலை என்னும் ஊரில் வாழ்ந்துவரும் பொழுது நெசவு வேலை செய்து வாழ்ந்துவந்தனர். அங்கு ஏழ்மைக் குடியில் பிறந்து வளர்ந்த ஒரு மாது சிரோண் மணியை மணந்து இல்லறத்தைச் செவ்வனே நடத்திவந்த னர். அன்னார் பள்ளிவாயிலுக்குத் தொழ வராது ஞானக் கருத்துக்களை உரைத்து வருவதைக் கண்டு அன்னாரின்மீது வெறுப்புற்ற சிலர் சதக்கத்துல்லா அப்பா அவர்களுக்கு மடல் வரைந்து அம் மனிதரை நேர்பெறச் செய்யவேண்டு மென்று வேண்டிக்கொண்டனர். அதன்படி சதக்கத்துல்லா அப்பா அவர்கள் தற்கலை வந்து பீர்முகம்மது சாகிபு அவர் களைச் சந்தித்து உரையாடியபொழுது அன்னார் இறைவனின் அருள்பெற்ற மகான் என்பதை உணர்ந்து அன்னாருக்குப் பெரும் மதிப்புச் செய்தனர். இதன்பின்தான் தற்கலை ஊர் முஸ்லிம்களுக்கும் அன்னாரின் மகத்துவம் நன்கு தெரிய வந்தது.

அன்னார் இவ்வுலகில் முந்நூறு ஆண்டுகள் வாழ்ந்திருந்த னர் என்று கூறப்படுகிறது. அதன்பின் ஒரு வெள்ளி இரவு இம் மண்ணுலகை நீத்துப் பொன்னுலகை எய்தினர், அவர் களின் அடக்க இடம் இன்றும் தற்கலையில் இருந்துவரு கிறது. அங்கு மக்கள் திரள் திரளாக வந்து போய்க்கொண் டுள்ளார்கள். ஆண்டுதோறும் அவர்களின் விழா (கந்தூரி) ரஜப் என்னும் அரபித் திங்களில் நடந்துவருகிறது. அப் பொழுது அம் மேதகை இயற்றிய நூல்கள் படிக்கப்படு கின்றன.

அவர்கள் இயற்றிய நூல்கள் பதினெண்ணுயிரம் பாக்கள் நிறைந்தவை என்று கூறுகிருர்கள். திருநெறி நீதம், பிஸ்மில் குறம், ரோசு மீசாக்கு மாலை, மஃரிபத்து மாலை, ஞானமணி மாலை, ஞானப் புகழ்ச்சி, ஞானப்பால், ஞானப் பூட்டு, ஞானக்குறம், ஞானரத்தினக் குறவஞ்சி, ஞான ஆனந்தக் களிப்பு, திருமெய்ஞ்ஞான சரநூல், ஞான நடனம், ஞான முச்சுடர்ப் பதிகங்கள், ஞான உலக உருலை, ஞான சித்தி, ஞானத் திறவுகோல், ஞான விகடச் சமர்த்து, ஞானக்கண், மிகுராசு வளம் ஆகியவை அன்னர் இயற்றிய நூல்களாகும். இவற்றில் ஞான உலக உருலை மறைந்துவிட்டது. அதைத் தவிர அன்னரின் மற்ற நூல்களை எல்லாம் நூல் வடிவிலே மக்கள் காண்பதற்கு உதவியவர்களில் முக்கியமானேர் அன்னரின் மாணவர்களான காலங்குடியிருப்பு பெரிய மீரான் கனிப் புலவரும் குலசேகரன் பட்டினம் காதிரியாப் புலவருமே யாவர்.

'திருநெறி நீதம், என்ற நூலில் எழுவகைப் பிறப்பு பற்றி அன்னர் பாடியுள்ள கவிதைகள் யாவரும் அறிந்து வைக்கவேண்டிய அற்புத உண்மைகளை வெளியிடுகின்றன. அதிலுள்ள ஒவ்வொரு கவியும் தத்துவ ரகசியங்கள் பற்றியும், முக்தி எய்த மனிதன் கையாள வேண்டிய வழிமுறைகள் பற்றியும் விளக்குகின்றது. எனினும், அன்னரின் கவிதைகள் பெரும்பாலும் மறை பொருளாகவே தோன்றுகின்றன. எடுத்துக்காட்டாக,

> இருட்டும் இருட்டும் இருட்டினில் கூட்டி இருட்டதனில்
> இருட்டுப் பிறந்த வகையேது சொல்லவ் விருட்டது சென்று
> இருட்டுப் பவள மரகதம் வெள்ளை இலங்கும் ஒளி
> இருட்டினிற் காண வெளிதோன்றி நின்றங்கு இலங்கியதே.

என்ற ஞானப் பாலிலுள்ள கவிதையைக் கூறலாம்.

அன்னர் இஸ்லாம் வகுத்துள்ள நான்கு படித்தரமான ஷரீஅத்து, தரீக்கத்து, ஹக்கீகத்து, மஃரிபத்து என்னும்

*சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு நிலைகளையும் கைவரப் பெற்றனர் என்பது ஞான மணிமாலையில் அன்னார் பாடியுள்ள பின்வரும் கவியால் அறிய வருகிறது.*

சிறுமலுக்கர் அகமகிழ்ந்த செல்வன் இரு
கண்ணற்றவன்
பெறுவி நந்தியருள் பொதிந்த பீர்முகம்ம தெனும்
பயல்
ஷறகு நான்குவழி ஈராறு சமயநீதி கண்டவன்
அறைவன் அன்புபெறும் தீனோர் ஈடேறும் பரிசிங்
கியம்புவான்.

*இவ்விதத் தன்மைகளெல்லாம் அன்னாருக்கு குரு உபதேசம் கிடைத்தபின்தான் கிட்டிற்று என்று அன்னார் மற்றொரு கவியில் அறைகின்றார்கள்:*

*இவ்வாறு நான்கு நிலைகளையும் அன்னார் கைவரப் பெற்ற போதினும், அவர்கள் 'ஞானப்புகழ்ச்சி'யில் மிகவும் பணிவோடு ஷரகுக்காக வேண்டி அவற்றைப் பாமரர்க்கு எடுத்துரைக்காது மறைப்பதாகவும் பின்வரும் கவியில் கூறுகின்றார்கள்.*

அவ்வல் அஹதாக நின்ற மரம்
ஆதி றகுமத்தாய்ப் பூத்துப் பூத்து
வவ்வற் கொடியாகப் படர்ந்து காய்த்து
பகுதி அஹதாகக் காலியாமே
சொல்லத் தகுமல்ல இப்பொருளை
சுருட்டி மறைக்கிறேன் ஷரகுக்காக
எல்லை யறிந்துன்னை வணங்க வல்லார்க்(கு)
இரங்கி இருப்போனே துணை செய்வாயே.

*அவர்கள் ஞானமணி மாலையில் இறைவனை அகக்கண்ணால் காண்பதற்கான அழகிய வழியை ஒரு கவியில் எளிய முறையில் எடுத்தியம்புகின்றார்கள். இல்லல்லாஹு*

என்னும் சொல்லை வாயால் சொல்லாது மௌனத் தியானமாகத் தோத்திரம் செய்து வந்தால் இரு புருவங்களினிடையே இறைவனின் தரிசனம் கிட்டும் என்று அவர்கள் கூறுகின்றார்கள். அக்கவி வருமாறு:

இல்லெனு நிரம்பி நின்ற எழுத்தினைக் கமலத்
துள்ளே
மெல்லவே இருத்தி வாங்கி வெறுப்பினை அகல
நீக்கிச்
சொல்லினும் சொல்லாவண்ணம் தோத்திரம் செய்
வீராகில்
கல்லெனும் நயனத்தூடே கதிரவன் ஒளியதாமே.

தமிழகத்திலே பதினெண் சித்தர்கள் பாடலெனப் புகழுடன் நிலவிவரும் பெரிய ஞானக்கோவையில் அம்மேதகை பாடிய ஞானரத்தினக் குறவஞ்சியும் இடம்பெற்றுள்ளது. சிங்கன்—சிங்கி ஆகியவர்களிடையே நடைபெறும் உரையாடல்கள் போன்று அமைந்துள்ள அது அபூர்வமான ஞானக் கருத்துக்களைக் கொண்டதாக அமைந்துள்ளது.

தன்னுள் விளங்கும் தவமென்ன சொல்லடி சிங்கி—
[அது
தன்னை மறந்து தவத்தில் இருப்பது சிங்கா
என்ன விதமாகத் தன்னை மறப்பது சிங்கி—அது
ஒன்றைப் பொருந்தி ஒடுங்கி இருப்பது சிங்கா
என்னவிதமாக ஒன்றைப் பொருந்தலாம் சிங்கி—
[அது
எல்லா மறந்து இருளாய் இருப்பது சிங்கா.

இவ்வாறு எளிய இனிய முறையில் பாடித் தன்னை மறந்து இறைவனின் நினைவிலே தன்னை மூழ்கடித்துத் தன்னை இறைவனளவிலே அழித்துக்கொள்ளும் தவமே மேலான தவம் என்று அவர்கள் எடுத்தியம்புகின்றனர்.

மனிதனுடைய மூச்சு எந்தெந்த நிலையில் எந்தெந்த அளவில் வெளியேறுகிறது என்பதை அன்னார் பாடிய திருமெய்ஞ்

ஞான சரநூல் எடுத்தியம்புகிறது. கர்ப்பம் தன்னிலுள்ள குழந்தை ஆணு பெண்ணு என்பதை அறிவதற்குக் 'கர்ப்பிணி யின் மூக்கின் வலத் துவாரத்தில் மூச்சு எப்பொழுதும் தங்குதடையற்று வேகமாக ஓடிக்கொண்டிருந்தால் பிறக் கும் குழந்தை ஆணாகப் பிறக்கும் என்றும் இடப் பக்கம் அவ்விதமே ஓடிக்கொண்டிருந்தால் பிறக்கும் குழந்தை பெண்ணாகப் பிறக்கும் என்னும் அனுபவவுரையை அன்னார் பின்வரும்கவியில் எடுத்தியம்புகின்றனர்.

சொல்லக்கேள் கர்ப்பிணியாள் கர்ப்பம் தன்னில்
சூல் ஆணோ பெண்ணோ என்றுன்னைக் கேட்டால்
வல்லகலை சூரியனில் வலமே கேட்கில்
வளர்ந்திருக்கும் பாலகன்தான் ஆணேயாகும்
அல்லதவன் சூனியத்தில் நின்று கேட்கில்
ஆணாகும் அதன் காலம் அற்றுப் போகும்
நல்லகலை சந்திரனில் பூரணம் தான்
நாரியள்சூல் பெண் என்று நாட்டுவாயே.

புறப் புலன்களை ஒடுக்கி அக அழுக்கைக் கழுவ எந் தெந்தப் படித்தரங்களில் எந்தெந்தத் திக்றுகளைச் செய்ய வேண்டுமென்பதைப் பற்றி அன்னார் பாடிய 'பிஸ்மில் குறம்' எடுத்துரைக்கிறது. அதில் மனிதனின் மகோன்னதத் தன் மையைப்பற்றி அன்னார் பாடியுள்ள ஈற்றடிகள் அற்புதமாக அமைந்துள்ளன.

தன்னை அறிந்தல்லவோ தனது பொருள் அறிந்தால்
தானே தான் தானே தான் தம்பிரானும் ஆகும்

என்று அவர்கள் பாடும்பொழுது நம் புருவங்கள் மேலேறுகின்றன. நம்முடைய அறிவுக்கண் வெளிச்சம் பெறு கின்றது.

அன்னார் தொழுகையின் அவசியத்தைப் பற்றி 'பிஸ்மில் குறம்' என்னும் நூலில் கூறும் பாக்கள் இறைவனைத் தொழ வேண்டுமென்பது அவசியமா, இறைவனை நினைந்துகொண்டு நற் கருமங்கள் ஆற்றிவந்தால் போதாதா என்று கூறும் போலி ஞானிகளுக்கு நல்ல வாயாப்பாக அமைந்துள்ளன.

*அழகும் இனிமையும் ஒருசேர அமைந்த அந்த அபூர்வ கண்ணிகளைக் கீழே தருகிறேன்-*

தெளிவான தீன்குலத்தில் உள்ளவரே கேளும்
தெவிட்டாமல் தொழுதுகொண்டு வணக்கம் செய்ய

தொழுகை இல்லாதெவரெனினும் தோசிப் பெரும் [பாவி
தொட்டாலும் முழுகவேணும் துடக்கதிகக் [கொடுமை
தொழுது வந்தார் வணக்கமவர் தொடுத்துவந்தா [ரில்லை
தோகையர்கள் வாழ்ந்துமல டிருப்பதுபோல் உவமை
தொழுகாமல் செய்யுமவர் வணக்கம் முழுதெல்லாம்
தோகையர்கள் ஆளனில்லா தீன்றெடுத்த பாலன்
தொழுதுவந்தார் வணக்கமவர் செய்துவந் தாரில்லை
தோப்பில்லாக் கனியருந்தித் தீர்ந்த பசியாகும்
தொழுதுவந்தார் வணக்கமவர் தொடுக்கா தாரின் [னம்
தோப்புக்குள்ளே கனிகளில்லாத் தூருமரம் போலே
உள்ளுக்குள்ளே வணக்கம் செய்வேன் என்றுரைப் [பார் வெகுபேர்
உள்வணக்கம் என்றோதும் கள்ளர்களே கேளும்
உள்ளுக்குள்ளே நினைவாலே உன்மனைவி யோடே
ஒன்றுபடச் சேர்ந்ததனுல் உனக்குப்பிள்ளை [யுண்டோ
அள்ளிஅள்ளிக் கையாலே அசனம் உண்டாற்போலே
அனுதினமும் நினைத்துப்பசி அடங்குவதும் உண் [டோ

வெள்ளாண்மை செய்வதுபோல் நினைத்து முடியாது
வெகுதூரம் நடவாமல் நினைத்து முடியாது
கொள்வகையும் கொடுவகையும் கொடுக்கல் வாங்க
[லில்லை
உள்ளுக்குள்ளே நினைத்ததனால் ஒன்றும் முடியாது.

*இவ்விதம் அருமை அருமையான கருத்துக்களை எளிய இனிய உவமைகள்மூலம் மக்களின் மனத்தில் பதியும்வண்ணம் எடுத்தியம்பிய அம் மேதகை ஒவ்வொருவரும் ஒரு சற்குருவைத் தேடிக் கண்டுபிடித்து அவரிடம் தீட்சை பெற்று ஒழுகவேண்டுமென்று பின்வரும் கண்ணிகளில் இசைக்கின்றார்.*

வழியான குருவில்லாத வணக்கம் முழுதெல்லாம்
வையகத்தில் புருடனில்லாள் வாழ்ந்த சுகமொக்கும்
தெரியாத குருமாரின் திருமொழி கேட்பதுதான்
தெரிவையர்கள் 'குசரு'வைச் சேர்ந்திருந்த
[துவமை
சரியான குருவில்லாத வணக்கம் உளதெல்லாம்
சாவலில்லாக் கோழிமுட்டை இட்டதுபோல் உவமை
சொர்ப்பனத்தில் வந்துகுரு சொன்ன உபதேசம்
சொர்ப்பனத்தில் சேர்ந்த பெண்ணு மதலையீன்ற
[துவமை
இப்படியே அறிந்தல்லவோ தொழுது செய்வார்
[வணக்கம்
இதயமறியக் குருமாரை எங்கும்தேடிப் பாரும்
தெருவீதி எங்கும் அலைவார்கள் குருமார்கள்
திருவருள் நிறைந்தபேரைத் தேடக் கிடைக்காதே

... ... ... ... ... ... ... ...

... ... ... ... ... ... ... ...

அரிய உபதேசம் செயயும் அருள்குருமார் தன்னில்
அதிலும் இரண்டு விதமும் உண்டு அறியவகை
சொல்வேன்

பீரான பீர்பெரிய பீருசாதா உண்டும்
பீருசாதா வேசம்பூண்ட கருமுசாதா உண்டும்
கருமுசாதா தன் செயலைக் கருமத்திஞல் அறிய
காசினியில் உள்ளவர்க்குக் கருத்தில்வரச் சொல்
[வேன்

காரணங்கள் ஒருகோடி கதைகளெல்லாம் உரைப்பர்
கைபிடித்துக் காட்சி செய்வார் காணும் அந்தப்
[படியே

மெய்யாக ஆதிஇறை வேறில்லை நாமென்பார்
எங்தெந்தக் கருமம் அவர் நல்லதில்லை என்பார்
செய்யும்வகை நன்மைதின்மை அவன்செயல்தான்
[என்பார்

ஜெயமான தொழுகைசறகு ஏதுநமக் கென்பார்
வையகத்தில் சரீஅத்தின் வளமைஎது என்பார்
வரம்அதிக மகரிபத்தில் ஆகிப்போஞேம் என்பார்.
ஐயமில்லை ஆசைபாசம் அவன்செயல்தான் என்பார்
ஆசைதீரும் இடத்தில்ஆதி அருள்நிலைதான் என்
[பார்

செய்யும் இருபேரிணங்கி ஆசைதீர்ந்த தென்ருல்
எப்போதும் இருபேர்க்கும் இறையருள்தான் என்பார்
பையப்பையக் கொழுகிஆசை கொடுத்து அச்சம்
[தீர்த்து

பத்தினியை அறுதலியைப் பழக்கிகரும் செய்வான்

எத்தனை செய்தாலும் முழுக்கேது நமக்கென்பான்
இனிமேலும் ஆகிறத்தில் என்பிணைநீ என்பான்.
சுட்ட முட்டாப் பாவிக்குபி ராம்கருமுசாதா
சொன்னது பொய்யாகும் இருபேரும் குபிராகும்.

*அம்மேதகை இயற்றிய மற்றொரு நூலான 'ஞானப் புகழ்ச்சி' என்பது அவர்களின் ஞானமேதையை மட்டு மின்றி, கவிதா மேதையையும் கவினுறக் காட்டுகிறது.*

*இறைவனின் திருமுன் நின்று அவர் தமது பிழைகளையும் குறைகளையும் கூறி உள்ளமுருக, உடலுருக அவனிடம் அடைக்கலம் தேடும் தன்மை அனைவருள்ளத்தையும் நெகிழ்விப்பதாக உள்ளது.*

தந்தையிலி தாரமிலி தானவனும் நீயே
தண்மை கொடெவர்க்குமொரு தாபரமும் [நீயே
மைந்தரிலி அன்னையிலி மன்னவனும்நீயே
மண்ணிலடி யார்க்கிரணம் வழங்குவதும் நீயே
சிந்தைதனில் இடறுதனைத் தீர்த்தநின் னவநீயே
தேட்டமறிந் தெனக்குதவி செய்பவனும் நீயே
அந்தமிலி நீஎனக்கோர் இழிவுவராமல்
ஆதியே யானுன் அடைக்கல மதானேன்

*மக்களின் மனத்தைக் கவர்வதற்கு ஒரு முக்கிய கருவியாகக் கவிதையிலே அமைந்திருப்பது ஓசை. இனிய நிகழ்ச்சிகளை விளக்குவதற்கு மெல்லோசையையும், கடிய நிகழ்ச்சிகளைக் காட்டுவதற்கு வல்லோசையையும், பயன் படுத்துவது புலவர் மரபு. அதனை இம்மேதகை அவர்க ளும் அப்படியே பின்பற்றியுள்ளனர். அம்மேதகையின் நூல்களில் பெரும்பாலான வற்றிற்கு செவ்வல்மாநகரம் M. A. நெய்னார் முகம்மதுப் பாவலர் விளக்கவுரை எழுதியுள்ளார்.*

*அம்மேதகை தாம் எழுதிய ஞானப்புகழ்ச்சி என்னும் நூலில் ஓரிடத்தில்*

'முத்தொடு பவளம் பச்சை முதலொளி புலனும்
[கூட்டிச்
சத்தியாய்ச் சிவமாய் இந்தத் தாரணிதன்னில்'

*என்றும், மற்றோரிடத்தில்*

'இறைவனை அலதுவேறிலை எனுமிலெளஹினில்
[எழுதிய கலமெனதுள்
அறைதனில் உருகி நின்றருவ மோடுரு விலைந்தரி
[ஹரி சிவநமவென்று'

*என்றும் கூறி இருப்பதிலிருந்து அன்னார் இந்துக்களின் கடவுள்களாகிய சத்தி, சிவன், ஹரி ஆகியோரைப் போற்றப் புகழ்கின்றார் என்பதற்கில்லை. அன்னார் அவற்றில் எல்லாம் அரும்பெரும் உட்கருத்துக்களை வைத்தே பாடியுள்ளனர். முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களின் பெருவழியைப் பின்பற்றிக் கிடைத்த பேற்றினை ஞானமேதையாகிய அன்னார் பல இடங்களில் நன்றியுடன் குறிப்பிடுகின்றனர். தம்மை இறைவன் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களின் அடிதழீஇ ஒழுகும் முஸ்லிமாகப் படைத்ததற்காக அவனை மேலாம் காலும், கீழாம் தலையுமாக ஆயிரமாயிரம் ஆண்டுகள் தவம்செய்து வணங்கினாலும் தம் நன்றிக்கடனை ஆற்ற இயலாது என்ற கருத்தை*

ஆதம்பெறும் மக்களெல்லாத்திலும் நமை அன்பு
[கொண்டே
வேதநபி உம்மத்தாக்கின அந்தவெகு நன்றிக்கு
பாதங்கள் மேலும் சிரங்கீழுமாய்ப் பத்துநூறுயிரம்
[ஆண்டு
ஓதித்தவம் செய்தாலும் போதாது அவன் அன்று
[உவந்ததற்கே.

அன்னார் பண்இசைத்துப் பாடும்பொழுது முஸ்லிம்களின் உள்ளங்கள் பரவசமடைகின்றன. அவர்களின் அறிவுக்கண்கள் திறக்கின்றன. 'ஆம், பீர் மூகம்மது, வலியுல்லாவே. ஆம், ஆம். அதில் ஐயமின்று' என்று கூறியவண்ணம் தங்களையும் இறைவன் முஸ்லிமாகப் படைத்ததற்காக குப்புற வீழ்ந்து இறைவனுக்குக் கோடி கோடி நன்றி உரை கூறும் நிலையில் அவர்கள் ஆகிவிடுகின்றார்கள்.

# ஞானியார்சாகிபு

இன்பத் தம்பதிகளின் எழில் வாழ்விற்கோர் எடுத்துக் காட்டாகக் கோட்டாறு மாநகரில் சில நூற்றாண்டுகளுக்கு முன் சைகு அபூபக்கர் சாகிபு அவர்களும் அவர்களின் அருமைத் துணைவியார் சையிது மீரான் பீவி அம்மையாரும் வாழ்ந்துவந்தனர். அவர்கள் எல்லாப் பேறுகளும் ஒருங்கமையப் பெற்றிருந்த போதினும் மக்கட் பேறில்லாததால்

* கல்வியுண்டென்னினும் கவினுண் டென்னினும்
செல்வம் உண்டென்னினும் தெருளுண்டென்னினும்
நல்வரம் உடையவர் எனினும் நானிலத்
தில்வரும் மகவிலர் இருந்தும் இல்லராம்

என்பதை உன்னி யுன்னி உளம் வெதும்பி இறைவனிடம் இரு கரமேந்தி தம் குலத்தை வாழ்விக்க ஒரு தனயனைத் தந்தருளுமாறு பல்லாண்டுகளாக இறைஞ்சி வந்தார்கள். அவர்களின் இறைஞ்சுதலை இறைவனும் ஏற்று அம்மங்கை நல்லாரின் மணி வயிற்றிலே ஒரு மாமகனையும் உற்பவிக்கச் செய்தான். ஒருநாள் அம் மாதரசி வைகறையில் கண் மலர்ந்ததும் தம் அருமைக் கணவரை நோக்கி 'நாதா, இரவு நான் ஓர் இன்பக் கனவு கண்டேன். நிறை மதியானது என் மடிமீது வீற்றிருந்து விளையாடக் கனவு கண்டேன்' என்று நவின்றனர். அதைக் கேட்டதும் சைகு அபூபக்கர் சாகிபு அவர்களின் செங்கமலக் கண்கள் மலர்ந்தன. புன்னகை தம் பொன்னிதழ்களில் மின்ன 'நல்லது, நமக்கு நற்குலக் கனி ஒன்றை நாயன் தந்தருளப் போதுமானவன்' என்று நவின்றார்கள். அன்னார் கூறியவண்ணமே ஹிஜ்ரி 1167—ல் அம் மங்கை நல்லாரின் கரு முதிர்ந்து அவர்களின் அன்பின்

---

* இஃது ஐதுரூசு நயினார்ப் புலவர் பாடிய நவமணி மாலையில் உள்ள ஒரு செய்யுள்.

திருவுருவாக, ஆசையின் அருங் கனியாக ஓர் ஆண் மகவு பிறந்தது. குழந்தை பிறந்த ஏழாம் நாள் அக் குழவியைத் தாய் தந்தையர் நீராட்டி அதற்கு சைகு முகிய்யித் தீன் மலுக்கு முதலியார் என்று திருப் பெயரிட்டார்கள். அக் குழவியே பின்பு வளர்ந்து வயதெய்தி ஞானியார்சாகிபு என்று ஞாலம் புகழும் நாத நாதாந்த வேதாந்தராய் விளங்கியது.

ஞானியார் சாகிபு இளமை எழில் மாருத இளவலாக இருக்குங்கால் சையிது ஜமாலுல் மிஹ்ஹுரிய்யி என்ற மகான் ஒருவர் துறவிக் கோலம் புனைந்து கோட்டாறு வந்து அந் நகரப் பள்ளிவாயிலில் சில நாட்கள் தங்கித் தாமே தம் முடைய உணவைச் சமைத்துண்டும் இரவில் பள்ளியுட் சென்று கதவை மூடிக்கொண்டு தியானத்தில் ஈடுபட்டும் இருந்துவந்தார். ஒருநாள் அம் மகானை ஞானியார் சாகி பின் அருமைத் தந்தையார் தம் மனைக்கு விருந்துண்ண அழைத்துவந்தார். அப்பொழுது பதினென்கு ஆட்டைப் பருவத்தை எட்டிப் பிடித்துக்கொண்டிருந்த ஞானியார்சாகிபு அங்கு நின்றுகொண்டிருப்பதை அம் மகான் கண்டதும் 'சைகு முகிய்யித்தீன் மலுக்கு முதலியாரே, நீங்களும் வாருங்கள். உணவருந்துவோம்' என்று அவருடைய இயற் பெயர் கூறி அவரை உணவருந்த அழைத்துச் சென்றதைக் கண்டதும் அங்குநின்றவர்களின் புருவங்கள் வியப்பால்மேலே றின. தாம் அவரை முன்பு எப்போதேனும் பார்த்திராத போதினும் தம்முடைய இயற் பெயர் எவ்வாறு தெரிந்தது என்று ஞானியார் சாகிபும் வியப்புக் கடலில் மூழ்கினர்.

அதன்பின் அம் மகான் அவ் விளைஞருடன் உணவருந்தி விட்டு பள்ளிவாயிலினுட் சென்று கதவைச் சாத்திவிட்டு தியானத்தில் ஆழ்ந்திருந்தனர். ஞானியார் சாகிபும் அம் மகானின் கண்களில் தென்படாவண்ணம் அவர் பின்னே மறைவாகச் சென்று பள்ளிவாயிலிலுள்ள கற்றூண் அருகில் மறைந்திருந்து அன்னூர் செய்யும் தியானங்களை இமை கொட்டாது கவனித்துக்கொண்டிருந்தனர். பின்னர் அம் மகான் நிஷ்டை கலைந்து பார்க்கும்பொழுது தமக்குப் பின்னல் ஞானியார் சாகிபு வீற்றிருப்பதைக் கண்டு கடும் சினம் கொண்டு 'வெளியிற் போ' என்று அதட்டினர். ஞானி யார் சாகிபு அன்னூரின் கால்களில் வீழ்ந்து தம்மீது கருணை

காட்டுமாறு வேண்டியும் அம் மகான் இரங்காததுபோல் பாவனை செய்து அவரின் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளினார். அம் மகான் அவரின் கழுத்தைப் பிடித்ததும் ஞானியார் சாகிபின் கைகள் கற்றூணைத்தான் கட்டிப் பிடித்தன. அப்பொழுது அவரின் கன்னங்களில் கண்ணீராறு கரை புரண்டோடியது. அவரின் வாய் 'என்னைக் காக்கும் கடன் தங்களுடையதேயன்றி வேறில்லை. நான் ஒருகாலும் தங்களை விடேன்; வெளியிற் போகேன். அபயமளித்து என்னை ஆட்கொள்ளுங்கள்' என்று அழுது கெஞ்சியது. இதைக் கண்டு அம் மகானின் உள்ளத்திலும் இரக்க நீர் சுரந்தது. அவரை வாழ்த்தி அவருக்குத் தீட்சை தந்து அறவுரை நல்கி ஒரு நாளைக் குறிப்பிட்டு அந்நாளில் மணன் மேற்குடிச் சத்திரத்தில் வந்து தம்மைக் கண்டு கொள்ளுமாறு கட்டளையிட்டு அன்றிரவே அவ்விடத்தை விட்டும் அகன்று விட்டார்.

பின்னர் ஞானியார்சாகிபு ஆசான் அருளிய அறவுரைப் படித் தாமும் நடந்து பிறருக்கும் அறிவுறுத்தச் செய்த தோடல்லாது வனங்களுக்குச்சென்று புற்பூண்டுகளையுண்டு நிட்டையிலிருப்பதும் பின்னர் இல்லம் மீள்வதுமாகவும் தம் வாணாளைக் கழித்துவந்தனர். இவ்வாறு இரண்டாண்டுகள் உருண்டோடின.

பின்னர் தமக்கு அறவழி காட்டித்தம்மை ஆட்கொண்ட ஆசானின் ஆணைப்படி அன்னார் குறிப்பிட்ட அந் நன்னாளில் மணன்மேற்குடி சத்திரத்திற்குக் கதிரவன் மேற்றிசையில் மறைந்து இரவின் ஆட்சி இவ்வுலகில் பரவிக் கொண்டிருக்கும் வேளையில் வந்து சேர்ந்தனர். அங்குத் தம் ஆசானைக் காணுதபொழுது அன்னாருக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கோர் அளவில்லை. அக்காலை அன்னாரின் ஆசான் அங்குத் திடீரெனத் தோன்றி 'இந்நேரம்வரை உம்மைச் சோதிப்பதற்காக மறைந்திருந்தேனே யன்றி வேறில்லை' என்று கூறினர். அதன்பின் ஞானியார்சாகிபு அவர்களுக்குப் பலவித ஞானக் காட்சிகளையெல்லாம் காட்டி அன்னாரை நோக்கி 'நீவிர் கமுதி சென்று அங்குத் தம் மாயா ஜாலங்களால் மக்களை மயக்கி வருத்திவருகிற விஸ்தாரம் சையிது முகிய்யித்தீனையும் பூசுபையும் நல்வழியிலாக்குவீராக' என்று கட்டளையிட்டுவிட்டு அவ்விடத்தை விட்டும் அகன்றனர்.

ஆசானின் ஆணையைத் தலைமேற்கொண்டு கழுதிக்குச் சென்ற ஞானியார்சாகிபு ஆங்குக் கூலிவேலை செய்து சின்னாட்களைக் கழித்துவந்தனர். ஒருநாள் சையிது முகிய்யித்தீனும் யூசுபும் அபிராமம் சந்தைக்குச் சென்று தங்களுக்கு வேண்டிய நூல் முதலியவற்றை வாங்கிக்குவியலிட்டு அங்கு நின்றுகொண்டிருந்த ஞானியார் சாகிபு அவர்களை நோக்கி 'நீர் எவ்வளவு பளு சுமப்பீர்' என்று வினவினர். அதற்கு ஞானியார் சாகிபு 'நீங்கள் எவ்வளவு வைப்பினும் சுமப்பேன்' என்று மறுமொழி பகர்ந்தனர். அன்னாரின் இம் மறுமொழி அவர்களிருவரையும் அளவற்றவியப்பிலாழ்த்தியது. அவரைச் சோதிப்பதற்காக ஐந்தாறு பேர்கள் சுமக்கக்கூடிய சுமைகளை அவரின் தலைமீது ஏற்றினர். அவற்றை அந்த மெல்லிய உருவினர் எவ்விதச் சிரமமுமின்றிச் சுமந்து வருவதைக் கண்டதும் அன்னவர்களின் முந்தைய வியப்புப் பன்மடங்கு அதிகமாகியது. அவர்களிருவரின் அறிவுக் கண்களும் இப்பொழுது வெளிச்சம் பெற்றன. தங்களின் சுமைகளைச் சுமந்து வருபவர் சாதாரண மனிதரல்ல, ஒரு மகானென்பதை உணர்ந்தனர். அன்னாரிடம் அபயம் தேடி மன்னித்தருளுமாறு வேண்டி அன்னாருக்கு அளவற்ற மரியாதைகள் செய்தனர். ஞானியார்சாகிபு அவர்களும் அவ்விருவரையும் மன்னித்து அவர்களை நல்வழிப்படுத்தினர். அக்கணத்திலிருந்து அவ்விருவரும் தங்களின் மாயா ஜாலங்களையும் விட்டொழித்து இறைவனின் நல்லடியார் குழுவில் ஒருங்கு சேர்ந்தனர்.

பின்னர் ஞானியார்சாகிபு அவர்கள் சையிது முகிய்யித்தீனின் வேண்டுகோளுக்கிணங்கி அவரின் வீட்டிலேயே சிலகாலம் தங்கியிருந்தனர். அப்பொழுது அன்னாரின் வாயிலிருந்தும் மெஞ்ஞானத் திருப்பாடல்கள் ஆற்றுப் பெருக்கு போன்று வெளிவந்தன. அவற்றுள் இரு செய்யுட்களை ஈண்டுக் கூறுதும், கேண்மின்.

வந்திருந்த உனை யானும் என்மனது
  வந்து கொண்டுற வணங்கிலேன்
வாறு நாலினிடை நீ இருந்ததனை
  வாசி மீதிலுற வைத்திலேன்

எந்தவாறுநீ எனக்கு நின்பதம்
இசைப்பதோ இனமும் அறிகிலேன்
ஏகனுனவன் எவர்க்கும் நாதமதில்
இச்சை முத்தென இருந்தவா !
சிந்தைமீறு தொழில் அந்தமான பொருள்
செயலினுலுற அறிந்திலேன்
செல்வனே மவுத்தாகு நாளினில்
செய்வதேதென அறிந்திலேன்
தொந்த நேர்மையது கண்டுநின்றபெரி
யோர்க்குத் தொண்டு செய்துவந்திலேன்
துய்யநாத பெரியோனே என்னுடைய
துயரை மாற்றி அருள்செய்குவாய்.

*

உரைத்தான் கருத்தி லுறைந்தானல் மத்தினி
[லூான்றியவன்
மறைத்தான் பொருளை மதிகாலிற் கூட்டி மகிழ்ந்
[தவன்ருன்
நிறைத்தான் சரணத்தை நிச்சயமான நினைவி
[லுன்னி
மறைத்தா னதுகண் டறிவோர்க்கு ஞானம் வசப்
[படுமே.

*இவ்விதமான அமுதக்கவிகளைக் கமுதியில் சொரிந்து அங்குப் பலருக்குத் தீட்சை நல்கிவிட்டு மேலப்பாளை யம் எழுந்தருளிய ஞானியார் சாகிபு அவர்கள், அங் குச் சிலநாள் தங்கிவிட்டுப் பின்னர் கோட்டாற்றிற்கு வந்தருளினர். அங்குப் பலவித வணக்கங்களில் ஈடுபட்டுக் கந்தூரியும் செய்தார்கள். இதைக்கண்ட பொறுமைச்*

காரர்களின் உள்ளம் பொச்சரிப்புற்றது. அவர்கள் சையிது முகம்மதுபுகாரிந்தங்கள் என்னும் பெரியாரை அணுகி, ஞானியார் சாகிபு அவர்களைப் பற்றி இல்லாததும், பொல்லாததும் கூறினர். அவற்றை எல்லாம் உண்மையென நம்பிய சையிது முகம்மது புகாரித்தங்கள் ஞானியார் சாகிபு அவர்களைத் தம்மிடம் வந்து போகுமாறு அழைத்தனர். அவ்வழைப்பை ஏற்று ஞானியார் சாகிபு அவர்களும் சையிதுமுகம்மது புகாரித்தங்களின் இருப்பிடத்திற்கு எழுந்தருளினர். அவர்களின் அருளொழுகும் திருவுருவைக் கண்டதும் சையிது முகம்மது புகாரித்தங்கள் தங்களை அறியாமல் தங்களின் இருப்பிடத்திலிருந்து எழுந்து எதிர்சென்று அவர்களைக் கட்டித் தழுவி தம்முடன் இருக்கச் செய்து சில ஞானூர்த்தங்களை அன்னாருடன் பேசினர். அப்பொழுதுதான் ஞானியார் சாகிபு அவர்களின் மகாத்மியம் சையிதுமுகம்மது புகாரித்தங்களுக்குத் தெரிய வந்தது. அவர்கள் பின்னர், அன்னார்மீது படுதூறு கூறிய பொறாமைக்காரர்களுக்கு அம்மேதகையின் மாண்பினை எடுத்துரைத்து நெருப்புடன் விளையாட வேண்டாமென்று எச்சரிக்கை செய்து அனுப்பி வைத்தார்கள்.

அதன்பின்னர் அன்னாரின் மகாத்மியத்தை உணர்ந்து மக்கள் முதல் மன்னர் ஈறாக எல்லாரும் மரியாதை செய்தனர். சேதுபதி மன்னர் கோட்டாற்றிற்கு வந்து அவர்களைக் கண்டு சென்றார். திருவாங்கூர் மகாராஜா அன்னாருக்கு அளவற்ற மரியாதை செய்து வந்தார்.

அக்காலத்தில் நாகர்கோவிலுள்ள படையணித் தளபதியான முகியயித்தீன் கானின் மனைவியார் தாம் அணிந்திருந்த நகைகளை ஓரிடத்தில் வைத்துக் குளித்துவிட்டு வந்து பார்க்கையில் அவற்றில் ஒரு விலையுயர்ந்த நகை மட்டும் காணப்படவில்லை. அதனை அந்த வீட்டிலுள்ள குழந்தைகளுக்கு ஓதிக்கொடுத்துவந்த ஷகீது லெப்பையின் மகன் எடுத்துத் தன் தந்தையின் கையில் கொடுத்துவிட்டதாகக் குற்றம் சாட்டினார்அவர். இவ்வழக்கு அரசன் முன்னிலையிலும் விசாரணைக்கு வந்தது. விசாரணையின் போதும் ஷகீது லெப்பையின்மீதே களவுக்குற்றம் உறுதிப்படுத்தப்பட்டு அவர் சிறைத் தண்டனை

விதிக்கப்பட்டார். தம் கணவர் அநியாயமாகச் சிறை வைக்கப்பட்டதை உணர்ந்து பெரிதும் உளம் வருந்திய ஷகீது லெப்பையின் மனைவி ஞானியார் சாகிபு அவர்களிடம் இச்செய்தியை எடுத்துரைத்துத் தங்களைக் காத்தருளுமாறு வேண்டிநின்றனர். அப்பெண்மணியின் அவல நிலையையும், அநியாயமாக ஷகீது லெப்பை சிறைத் தண்டனை விதிக்கப்பட்டிருப்பதையும் அறிந்த ஞானியார் சாகிபு அவர்கள் நேரே திருவாங்கூர் மகாராஜாவின் அரண்மனைக்குச் சென்றனர். அங்கு நம்பூதிரிகள் வேத பாராயணம் செய்து கொண்டிருப்பதைக் கண்ட ஞானியார் சாகிபு 'நீங்கள் பிழையாக ஓதுகின்றீர்கள்' என்று இருமுறை கூறினர். அவர்கள் கூறியது அந்நம்பூதிரிகளின் செவியில் விழாததால் மூன்றுவது முறையாக ஞானியார் சாகிபு அவர்கள் அவ்விதம் உரத்துக் கூறினர். அதன்பின் அந்நம்பூதிரிகள் அவசரம் அவசரமாகத் தங்களின் சுவடிகளைப் புரட்டிப்பார்த்ததும் உண்மையில் அவர்கள் தவறாகவே வேதம் ஓதியது அவர்களுக்குத் தெரியவந்தது. பின்னர் மகாராஜா ஞானியார் சாகிபு அவர்களை நோக்கி, 'அடிகளார் எழுந்தருளிய காரணம் யாதோ' என்று வினவினர். உடனே ஞானியார் சாகிபு அவர்கள் மகாராஜாவை நோக்கி 'மன்னவ, நும் செங்கோல் நெறி பிறழ்ந்துவிட்டது. ஷகீதுலெப்பை அநியாயமாகச் சிறைவைக்கப்பட்டுள்ளார். உடனே அவரை விடுதலை செய்க' என்று கூறினர். அடுத்த கணமே ஷகீது லெப்பையும் விடுதலை செய்யப்பட்டார். பின்னர் அந்நகை ஒரு மாட்டின் குளம்பில் குத்துண்டிருந்து எடுக்கப்பட்டது.

ஞானியார் சாகிபு அவர்கள் செய்துகாட்டிய விந்தைகள் பல. அவை எல்லாம் அன்னாரின் மெய்ஞ்ஞானத் திருப்பாடல்களின் முகவுரையில் பொறிக்கப்பட்டுள்ளன.

ஞானியார் சாகிபு அவர்கள் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களின் முன்மாதிரியைப் பின்பற்றி கழுதியிலுள்ள தம் மாணுக்கர்களில் ஒருவரான மஹ்தூம்பிள்ளை என்பாரின் திருமகளை மணம் புரிந்து இல்வாழ்க்கை நடத்தி வந்தனர். பின்னர் முகிய்

யித்தீன் பிள்ளை அவர்களின் இரண்டு பெண்மக்களில் ஒரு வரை ஞானியார் சாகிபு அவர்களும், மற்றொருவரை அவர் களின் தம்பியும் கடிமணம் செய்தனர். அவர்கள் மூலம் அவர்களுக்கு வழித்தோன்றல்களும் தோன்றின.

தாங்கள் இறைவனின் திருச்சமுகத்தை அடையவேண் டிய நாள் நெருங்கிவிட்டது என்பதை அறிந்த ஞானியார் சாகிபு அவர்கள் அச்செய்தியைத் தங்களின் தம்பிக்கும், மாணுக்கர்களுக்கும் தெரியப்படுத்தினர். அச்செய்தியை அறிந்ததும் அவர்கள் அனைவரும் அனலிடைப்பட்ட புழுப் போல் துடித்தனர். அன்னாரின் தம்பியார் மூர்ச்சையுற்றுக் கீழே வீழ்ந்துவிட்டார். பின்பு மூர்ச்சை தெளிந்ததும் அவ ருக்கும் மற்ற மாணவர்களுக்கும் அரிய அறவுரைகள் நிகழ்த்தித் தாம் வருகிற வெள்ளிக்கிழமை இரவு இவ்வு லகை நீப்பதாகவும், தமக்குப்பின் தம் மாணுக்கர்கள் அனை வரும் தம் தம்பியை அனுசரித்து எல்லா அலுவல்களையும் ஆற்றி வருமாறும் கூறினர். அதன்பின் தாங்கள் கூறிய வண்ணமே ஹிஜ்ரி 1209—ஆம் ஆண்டு ஜமாதில் அவ்வல் திங் கள் பிறை பதினைன்கில் ஞானியார் சாகிபு என்னும் நாமத் துடன் ஞானக்கதிர் வீசிய அம்மேதகை அற்பமான இவ்வு லக வாழ்வைத் துறந்து அழியாப் பேருலக வாழ்வை எய் தினர். அவர்களின் அடக்கஸ்தலம் இன்றும் கோட்டாற் றில் காட்சி வழங்கிக்கொண்டுள்ளது.




சுல்தான் அப்துல்காதிறைக் கண்டீர்களா, சுல்தான் அப்துல்காதிறைக் கண்டீர்களா என்று ஒரு கிழவர் தம்மிடம் வருவோர் போவோரையெல்லாம் விசாரித்துக்கொண்டிருந்தார். எந்த சுல்தான் அப்துல்காதிறு என்று வினவின், 'என் மருமகன் சுல்தான் அப்துல்காதிறு. என் மைத்துனர் நெய்னுமுகம்மதுவின் மைந்தர்' என்று மறுமொழி பகர்ந்தார் அந்த வயோதிகர். வந்தவர்களெல்லாம் 'நாங்கள் காணவில்லையே, நாங்கள் காணவில்லையே, என்ன செய்தி' என்று அந்த வயோதிகரையே திரும்ப வினவினர். ''என் அருமை மகளை அவருக்கு மணம் முடித்துவைக்க வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்துகொண்டிருந்தேன். அச்சமயம் அவர் யாரிடமும் யாதொன்றும் சொல்லாமற் கொள்ளாமல் எங்கேயோ சென்றுவிட்டார். அவரைத்தான் இதுகாறும் தேடிக்கொண்டுள்ளேன். காணவில்லை. குமரும் பெருங் குமராக ஆகிக்கொண்டுள்ளது. இளமையிலிருந்தே அவருக்கென மணம் பேசிவைக்கப்பட்ட பெண் அவள். இந்நிலையில் என்செய்வதென்றே எனக்குவிளங்கவில்லை'' என்று கூறினார் அம் முதியோர். இவ்வாறு தம் மருமகனைப் பற்றி வருவோர் போவோரிடம் அவர் விசாரிப்பதும் அவர்களிடம் தம் உளக் கவலைகளை எடுத்துரைப்பதுமாகப் பல தினங்கள் உருண்டோடின. ஒருநாள் அவர் எந்த மருமகனைத் தேடிக் கொண்டிருந்தாரோ அந்த மருமகனே அவரின் முன் திடீரெனத் தோற்றம் வழங்கினார். அப்பொழுது அம் முதியவரின் மனம் பரிதியைக் கண்ட செங்கமலம் போன்று மலர்ந்தது. 'தம்பி, தாங்கள் இதுகாறும் எங்குச் சென்றிருந்தீர்கள்; தாங்கள் துறவியாகிவிட எண்ணமா' என்று வினவினார். அதற்கு மருகர் யாதொரு மறுமொழியும் பகரவில்லை. விறுவிறுவென்று தம் மாமனாரின் மனையினுள் புகுந்தார். தமக்குக் கடிமணம் செய்ய நிச்சயிக்கப்பட்டிருந்த அக் கன்னிப் பெண்ணை அணுகி 'மச்சி, இறைவன்மீது ஆணையாக நான்

உன்னை ஒருபோதும் மணம்முடித்துக்கொள்ளப்போவதில்லை' என்று கூறிவிட்டு வேறு எம்மொழியும் கூருது அவ்விடத்தை விட்டும் நீங்கி வந்தவழியே திரும்பிவிட்டார். இது நிகழ்ந்தது தொண்டியிலே காஜியாராகப் புகழுடன் வாழ்ந்துவந்த அவருடைய மாமஞரின் திருமனையில். அப்பொழுது சுல்தான் அப்துல்காதிறுக்கு வயது பதினேழு.

'ஏர்தரு மதனவேள் எறிமலர்க் கணையும், வார்தரும் கூந்தலார் வடிவிழிக் கணையும்' ஏறப்பெருத எழிலுறு மேனியராய் மாமஞரின் திருமனையை விட்டு நீங்கிய சுல்தான் அப்துல்காதிறின் கால்கள் விறுவிறெனக் கீழக்கரை நோக்கி அவரைச் சுமந்து சென்று ஆங்குத் தைக்காசாகிபு அவர்கள் நடத்திவந்த பள்ளியின்முன் அவரைக் கொண்டுவந்து நிறுத்தின. பள்ளியில் நுழைந்த சுல்தான் அப்துல்காதிறு, தைக்கா சாகிபு அவர்களை அணுகித் தமக்கு மார்க்கக் கல்வி பயிற்றுமாறு வேண்டி நின்ருர். அவரின் முகத்தில் காட்சி வழங்கிய அருளையும் அவரின் கண்களிலே தோற்றம் வழங்கிய ஒளியையும் கண்டு அவற்ருல் பெரிதும் ஈர்க்கப்பட்ட தைக்கா சாகிபு அவர்கள் அவருடைய வேண்டுகோளுக்கு இணங்கினர். அப் பள்ளியில் அவர் ஓதிக்கொண்டு வருங்கால்தான் பிற்காலத்தில் புலவர் நாயகம் என்னும் புகழ்ப் பெயர் பெற்று விளங்கிய செய்கப்துல்காதிறு நயினர் லெப்பை ஆலிமும் அங்குக் கல்வி பயின்றுவந்தார்.

சுல்தான்அப்துல்காதிறு அங்குக்கல்வி பயின்றுவருங்கால் தம் நாஇச்சைகளையெல்லாம் மறுத்து ஊரின் வெளியே சென்று அங்கு வளர்ந்திருக்கும் சோற்றுக் கற்ருழையைப் பிடுங்கி உண்டு தம் பசியைப் போக்கிவந்தார். இச் செய்தி ஒருநாள் தைக்காசாகிபு அவர்களுக்குத் தெரியவந்ததும்அன்ஞர் அவர்மீது இரக்கமுற்று ஒரு செல்வந்தரை அவருக்கு உணவளித்து வருமாறு பணித்தனர். அவரும் அதற்கணங்கி அவ்வாறே செய்துவந்தார். ஒருநாள் அவரின் வீட்டில் கோழியறுத்துச்சமைத்து வீட்டிலுள்ளோர் அனைவரும் சாப்பிட்டுவிட்டு சுல்தான் அப்துல்காதிறுக்கு வெறும்சோற்றை வைத்திருந்தார்கள். பள்ளியிலிருந்து வந்த சுல்தான் அப்துல்காதிறு அவர்கள் கோழி அறுத்துச் சாப்பிட்டுவிட்டு தமக்கு வெறும் சோற்றை வைத்திருப்பதனுல் பாதகமில்லை என்றும் இனிமேல் அவர்கள் தமக்கு எதனையும் ஒளிக்காமல்,

மறைக்காமல் சமைத்து நன்ருகச் சாப்பிடலாமென்றும் தமக்குத் தரவேண்டிய அவசியமே இல்லையென்றும் வெறும் சோறு மட்டும் தமக்குப் போதுமென்றும் கூறியதும் தாம் மறைத்துவைத்த செய்தி அவருக்கு எவ்வாறு தெரியவந்தது என்று அவ் வீட்டினருக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. இதுமுதல் அவர்கள் அவரைப் பெரிதும் மதித்து உபசரிக்க லாயினர்.

ஒருநாள் அவர் மற்ற மாணவர்களுடன் சேர்ந்து தைக்கா சாகிபு அவர்களிடம் திறந்த வெளியில் அமர்ந்து பாடம் கேட்டுக்கொண்டிருக்குங்கால் திடீரென மழை பொழியத் துவங்கிவிட்டது. உடனே மற்ற மாணவர்கள் எல்லாரும் அக்கம் பக்கத்திலுள்ள கட்டடங்களிற் போய் ஒதுங்கிக்கொண்டார்கள். ஆனால் தைக்கா சாகிபு அவர் களும் சுல்தான் அப்துல்காதிறும் தாங்களிருந்த இடத்தை விட்டு இம்மியளவேனும் நகராது அமர்ந்திருந்தனர். அவ் விருவர்மீதும் ஒரு துளி மழையேனும் விழவில்லை; அவர் கள் வீற்றிருந்த இடம் நனையவுமில்லை.

பின்னர் ஒருதடவை தைக்கா சாகிபு அவர்கள் மாண வர்களுக்குப் பாடம் சொல்லிக்கொடுத்து வருங்கால் வாயை மூடியவர்கள் ஈடேற்றம் பெற்ருர்களென்று ஒருநூலில்வந்த பெரு மொழிக்குத் தெளிவான விளக்கம் விரிவாக நல்கினர். அதுமுதல் சுல்தான் அப்துல்காதிறு தாமும் ஈடேற்றம் பெற விரும்பி வாயை மூடியவர்தாம். பின்னர் அவர் வாயைத் திறந்து யாதொரு மொழியும் பேசவில்லை; இதுமுதல் அவர் தம் உளக் கருத்தை

'சுட்டிக் காட்டியும் எண்ணிற் றெருகுத்தும்
எட்டிக் காட்டியும் எழுதிக் காட்டியும்'

ட்டார்.

அங்கு ஓதித் தேர்ந்து ஆலிம் என்னும் பட்டத்தைப் பெற்றபின் ஒரு ஞானதேசிகரைக் கண்டு தீட்சை பெற விரும்பிய சுல்தான் அப்துல்காதிறு ஆலிம் ஹிஜ்ரி 1228—ல் 'உலகை முற்றும் துறந்து மறைபல கடந்து பற்றற்ற எவை யும் பயன்பட ஒழுகி'த் தைக்காசாகிபு அவர்களின்பள்ளியை

விட்டு நீங்கித் திரிசிரபுரத்தை நோக்கி அடியெடுத்து வைத தார். அப்பொழுது அன்னாரின் பள்ளித் தோழர் செய்கப் துல் காதிறு நெய்னார் லெப்பை ஓடோடி வந்து அவரின் கரம்பிடித்து 'தாங்கள் எங்குச் சமாதியடையவிரும்புகின்றீர் களோ அங்கு எனக்கும் இடம் தரவேண்டும்' என்று வேண்டி னார். அதற்குச் சுல்தான் அப்துல்காதிறு 'சரி' எனக் கூறு மாப் போன்று தலையை அசைத்தார்.

இதன்பின் திரிசிரபுரத்தை நோக்கி வந்துகொண்டிருந்த சுல்தான் அப்துல்காதிறு ஆலிமை யாரோ பின்தொடர்ந்து வருவது போன்று தோன்றியது. திரும்பிப் பார்த்தார். ஒருவன் வந்துகொண்டிருந்தான். அவனைத் திரும்பிப் போய்விடுமாறும் தம்மைப் பின்தொடர்ந்து வரவேண்டா மென்றும் எவ்வளவோ சமிக்ஞை செய்தார். அவன் கேட்க வில்லை. அதன்பின் அவனை அருகழைத்து 'நீ என்னைப் பின் தொடர்ந்து வருகின்றாயே. அவ்விதமானால் நான் செய்கின் றாற்போல் நீயும் செய்யவேண்டி வருமே' என்று மணலில் எழு திக் காண்பித்தார். 'சரி, அதற்கென்ன, நானும் அவ்வாறே செய்கிறேன்' என்று அவன் மறுமொழி பகர்ந்தான். இதன் பின் தம் வழியே சென்ற சுல்தான் அப்துல் காதிறு ஆலிம் தம்முன்னே ஓர் அழகிய மங்கை எதிர்ப்படுவதைக் கண்டு அவளை ஓடோடிச் சென்று கட்டியணைத்து முத்தமிட்டார். இதைக்கண்ட அவனும் பெரிதும் மகிழ்ச்சியுடன் அவ்விதமே செய்தான். அதன்பின் அவ்வழியே சென்ற அவர்களின்முன் கொல்லனின் உலைக்களம் ஒன்று எதிர்ப்பட்டது. அதில் கொல்லன் ஒருவன் பழுக்கக்காய்ந்த இரும்பொன்றை வைத்து அடித்துக்கொண்டிருந்தான். அங்கு விறுவிறுவென உள்ளே நுழைந்த சுல்தான் அப்துல்காதிறு அங்கிருந்த அந்த நெருப்புப் பிழம்பை எடுத்து முத்தமிட்டார். அவரைப் பின்தொடர்ந்து வந்தவன் இதைக் கண்டதும், 'ஐயோ, இஃது என்னால் முடியாது' என்று கூறி அவ்விடத்தை விட் டும் வெருண்டோடி விட்டான்.

இதன்பின் திரிசிரபுரம் வந்தடைந்த சுல்தான் அப்துல் காதிறு அங்கு 'ஓங்கிய அறிவால் உயர்ந்த ஆலிமாக' விளங் கிய ஷாம் சாகிபு அவர்களை அடைந்து

மாட்சிமை தருநெறி வகைநலம் துலங்கத்
தீட்சை பெற்றுச் சிறந்தன பெற்றுத்

தனிநிலை ஒருமையைத் தாங்கி இருவினைத்
துனியினை ஒருவி மும்மலம் தொலைத்து
நாற்குணம் தெரிவித்து ஐம்புலன் அடக்கி
ஏற்கும் உட்பகை ஆறையும் எறிந்து
பாதகம் ஏழையும் பசையறப் பறித்து
மேதகு தவத்தை'

மேற்கொண்டனர். அக்காலை பகலெலாம் நோன்பாகவும், இரவெலாம் தொழுகையாகவும் அன்னாரின் வாணாள் கழிந்து வந்தது. நீர்நசையும், ஊண் நசையும் ஒருங்கே நீக்கி வயிற்றிற்கு யாதொன்றும் கொடாது பலநாள் விரதம் காத்து வந்தனர். அவர் ஷாம் சாகிபின் பாத நிழலில் தங்கியிருக்குங்கால், இதயத்தை இறைவன்பால் முற்றிலும் ஈடுபடுத்தும் றியாலத் என்ற கல்வியைப் பயின்றனர். இதன்பின் இத்துறையில் உச்சத்தை அடைய விரும்பிய அன்னார், மக்கள் செறிந்த திரிசிரபுரத்தைவிட்டு நீங்கி மலைப்பொதும்பை நோக்கி வெருண்டோடினார். இவ்விதம் வெருண்டோடிய அன்னார் சிக்கந்தர் மலையை அடைந்து அங்குள்ள பொதும்பொன்றில் உலக எண்ணங்களை விரட்டியடித்து இறைவனைப் பற்றிய ஒரே எண்ணமே தங்களின் ஒவ்வோர் அணுவிலும் தங்கி இருக்கும் நிலையில் நாற்பது நாட்கள் யோக நிஷ்டை (கல்வத்) யில் அமர்ந்திருந்தனர். அதன்பின் அறந்தாங்கியூருக்கு அடுத்த கலகம் என்னும் சிற்றூரில் மீண்டும் ஒரு திங்கள் தனித்து யோக நிஷ்டையில் ஈடுபட்டிருந்தனர். இதன்பின் தொண்டிக்கு எழுந்தருளிய சுல்தான் அப்துல் காதிறு ஆலிம் தம் மாமனார் இம்மண்ணுலகை நீத்துப் பொன்னுலகை அடைந்த செய்தியை உணர்ந்து, 'தம் மாதுலர் அடங்கிய வாழைத் தோப்பினும் ஏதம் ஒன்றணுகா ஈரிரு திங்களும்' மேலும் தொண்டியிலுள்ள மரக்காயர் தோப்பில் பல நாட்களும் ஊண் உறக்கமற்று யோகநிஷ்டையில் அமர்ந்திருந்தனர்.

இதன்பின் தம்மை அழித்து இறைவனுடன் ஒன்றுபடும் நிலையை அடைந்த அன்னார் பித்தர்போன்று தலைவிரி கோலமாய்ப் பதாகை அணிந்து பற்பல இடங்களிலும் சுற்றித்

X திரிந்து சதுரகிரியிலும், பழுமலையிலும், நாகமலையிலும், யானைமலையிலும் இன்னும் ஏனைய மலைகளிலும், இருளடை வனங்களிலும், விலங்குசெறி கானகங்களிலும் பல்லாண்டுகள் தனித்துத் தியானத்தில் ஈடுபட்டிருந்தனர். அங்குச் சருகும், கிழங்கும், தழையும், குழையும், கருகும் கனியும், காயும் புசித்துத் தம் உயிரைத் தம் உடலை விட்டும் ஓடி விடாது பாதுகாத்து வந்தனர். சிலபொழுது மரங்களில் மேலாம் காலும், கிழாய் தலையுமாகத் தொங்கி இறைவனைப் பல்பட வணங்கியும் வந்தனர். இவ்வாறு ஏழாண்டுகள் கழிந்தன.

இதன்பின் வனவாசம் நீங்கி உள்நாட்டில் புகுந்த அன்னார் நாகூர் வந்து அங்கு அடங்கப்பட்டுள்ள ஷாகுல் ஹமீது ஆண்டகையின் தறுகாவிற்குச் சிறிது தொலைவில் மரியாதையுடன் நின்று

திக்குத்திகாந்தமும் கொண்டாடியே வந்து
தீன்கூறி நிற்பர் கோடி
சிம்மாச னுதிபர்களதை யேந்தியேவந்து
ஜெய ஜெயா என்பர்கோடி
அக்கனருள்பெற்ற பெரியோர்கள் ஒலிமார்கள்
அணிஅணி யாகநிற்பர் கோடி
அஞ்ஞான வேரறுத்திட்ட மெய்ஞ்ஞானியர்
அணைந்தருகு நிற்பர் கோடி
மக்கநகராளும் முகம்மதி றசூல்தந்த
மன்னரே என்பர் கோடி
வசனித்து நிற்கவே கொலுவீற் றிருக்கும்உன்
மகிமை சொல வாயுமுண்டோ
தக்கபெரியோ னருள்தங்கியே நிற்கின்ற
தவராஜ செம்மேருவே

X 'பாதுகைசேர் சயமேவு தாளும்' என்று நான்மணி மாலையில் கூறப்பட்டிருப்பது காண்க.

தயைவைத் தென்னையாள சற்குணங்குடிகொண்ட
சாகுல் கமீதரசரே.

என்று ஆண்டகையின் புகழை வியந்து வியந்து கவி இயற்றி உவகை விழிநீர் சொரிந்தார்.

இதன்பின் காரைக்கால் சென்ற அன்னார் அங்குள்ள குப்பை மேடுகளில் தங்கித் தம் காலத்தைக் கழித்து வந்தனர். அங்குள்ள மக்கள் குப்பைகளைக் கொண்டுவந்து கொட்டுவதையும் பொருட்படுத்தாது அங்குத் தங்கியிருந்த அன்னாரைச் சில ஆலிம்கள் அணுகி, அவர் தொழாது தூய்மையற்ற இடத்தில் தங்கி போலித் துறவி வேடம் புனைந்திருப்பதாகக் குறை கூறினர். உடனே அன்னார் தண்ணீர் கொணரச் செய்து வுலுச் (தொழுவதற்கு முன் உடலைத் தூய்மைப் படுத்தல்) செய்து அங்கேயே தொழுதனர். ஆனால் தொழத் துவங்கியவர் தொழத் துவங்கியவர் தாம். மூன்று நாட்கள் உணர்வற்று நின்ற நிலையிலேயே நின்று தொழுதுகொண்டிருந்தார். இதைக்கண்டு மக்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை. அவரைக் குறை கூறிய ஆலிம்கள் அவரின் மகாத்மியத்தை உணர்ந்து அவரைப் போற்றிப் புகழ்ந்தனர். இந்நிலையில் அவரும் அவ்வூரை விட்டு நீங்கிவிட்டார்.

இதன்பின் குணங்குடி மஸ்தான் என்னும் புனை பெயர் பூண்டு பற்பல இடங்களிலும் சுற்றித் திரிந்தனர். ஒரு நாள் கானத்தின் நடுவே ஒரு மரத்தின் கிளையில் மேலாம் காலும் கீழாந்தலையுமாகத் தொங்கிக் கொண்டிருப்பதை அவ்வழியே சென்ற ஒருவன் கண்டு அருகில் உள்ள சிற்றூரில் கூறவே அச்சிற்றூர் முழுமையும் திரண்டு அன்னாரைப் பார்க்க வந்தது. நாளுக்கு நாள் அக்கூட்டம் அதிகப்படவே அன்னாரின் ஆசான் அவருக்குக் காட்சி நல்கி 'மக்கள் இங்கு உன்னை முத்தியடைய விடமாட்டார்கள். ஆதலின் நீ சென்னை செல்' என்று அருளிச் செய்து மறைந்தனர். அதன்மேல்

கண்டா காவரும் களிகூர்ந்(து) உள்ளம்
தொண்டராயத் தொழுகத் தோற்று மாதவராய்ப்
பன்னுடவரும் பலன்பெறத் தரிசனம்

தன்ஞல் உயர்தவம் தாங்(கு) உருவினராய்
மண்ணுணர் வினும்சில வதியுணர் வினும்சில
தண்ணுணர் வினும்சில நடையயில் கையராய்
நேர்மை யினுள்ள நேர்ந்தவர் எவர்க்கும்
ஓர்மைபுரியும் உயர்தேசிகராய்ப்
பொன்னே மாநிதியைப் போற்றலிற் போற்றும்
சென்னைமா நகரம் சிறப்பொடு புகுந்தார்.

*சென்னை மாநகரம் புகுந்த அன்ஞர் பல விந்தைகள் செய்து காட்டினர் என்றும் கப்பல்கார மீருப் பிள்ளை என்பார் அவரை விருந்துக்கழைத்தார் என்றும் விருந்துண்ணச் சென்ற அவரை வாயிலிருந்தவர்கள் அவரின் அலங்கோல நிலையைக்கண்டு உள்ளே அனுமதிக்க மறுத்தனர் என்றும் எனினும் அவர்களறியாது அவர் உள்ளே சென்று அங்குப்பலபேருக்கும் சமைத்துவைத்திருந்த உணவு அத்தனையையும் சாப்பிட்டு 'இன்னும் பசிக்கிறது சோறுபோடு' என்று கூறியதாகவும் கப்பல் மீருப்பிள்ளை அதன்பின் மஸ்தானின் மகாத்மியத்தை உணர்ந்து பெருமதிப்பளித்தனர் என்றும், வந்திருந்த விருந்தினர் அனைவரிடமும் மஸ்தானின் மகாத்மியத்தை எடுத்துரைத்து அவர்களிடம் மன்னிப்புக் கோரி அடுத்தநாள் அவர்களுக்கு விருந்தளித்தனர் என்றும் கூறுவர்.*

*இச்செய்தி அக்காலே சென்னையில் வாழ்ந்து வந்த ஆற்காட்டு நவாபின் செவியிலும் பட்டது. அவர் மஸ்தானின் மகாத்மியத்தை நேரில் சோதித்தறிய எண்ணங்கொண்டிருந்தார். இச்சமயத்தில் நள்ளிரவில் நவாப் தம் படுக்கையில் அமர்ந்திருந்தக்கால், அரண்மனையைச் சுற்றியுள்ள எத்தனையோ கட்டுக்காவல்களை எல்லாம் கடந்து மஸ்தான் கம்பளிப் போர்வை ஒன்றை அணிந்தவராய் தம்முன் நிற்பதைக் கண்டதும் நவாபுக்குத் தூக்கிவாரிப் போட்டது. அச்சமயத்தில் வாயிற்காப்போர் ஓடோடி வந்து, 'நவாப் அவர்களே, நாங்கள் எவ்வளவோ முயன்றும் இவரைத் தடுக்கமுடியவில்லை. வாளிஞல் வெட்டியும் பார்த்தோம். எனினும் அவர் வீழ்ந்தாரில்லை. உள்ளே மடமடவென்று வந்து விட்*

டார்' என்று கூறிநின்றனர். அதன்பின் நவாப் வாயிற்காப் போர்களைப் போகச் சொல்லிவிட்டு மஸ்தானை ஆசனத்தில் அமர்த்தி அவரிடம் தீட்சை பெற்ருர்.

இதன்பின் நாளுக்கு நாள் மஸ்தானின் பேரும் புகழும் பல்கிக்கொண்டு வந்தன. இதைக் கண்டு பொருமையுற்ற சிலர் அன்ஞரின் நற்பெயரை எவ்வாற்ருனும் கெடுத்து விட வேண்டும் என்ற எண்ணத்துடன் அவரிடம் சில இளம் அழகிகளை அனுப்பிவைத்து அவர்களின் மாயாஜாலங்களை எல்லாம் பயன்படுத்தி அவரைத் தங்களின் வலையில் சிக்கவைத்துக் கெடுத்து விடுமாறு சொல்லி அனுப்பினர். ஆனல் சென்ற அழகிகளோ அவரை எவ்வாற்ருனும் கெடுக்க இயலாது அன்ஞரிடம் சரண் அடைந்து நேர்வழி பெற்றனர். அதன்பின் அக்குறும்பர்கள் நல்லவர்கள் போன்று மஸ்தான் முன்தோன்றி மஸ்தான் அவர்களின் லங்கோட்டைச் சோதித்துப் பார்த்த பொழுது அதில் ஒருதுளி இந்திரிய மேனும் வடிந்திருக்கவில்லை. அதன்பின் அவர்களில் ஒருவன் மற்ருெருவனின் காதோடு காதாக 'இவர் ஆண்மையற்றவர் போல் தோன்றுகிறது' என்று கூறிஞன். இது மஸ்தானின் செவிப்பட்டதும் அன்ஞரின் கண்கள் சிவந்தன. கடும் சினத்துடன் 'நாஞ ஆண்மையற்றவன்' என்று கூறித் தம் தொடையில் ஓங்கி அடித்தனர். அப்பொழுது அன்ஞரின் வீரியம் மிகுந்து அவர்கள் அணிந்திருந்த லங்கோடு படார் என்று தெறித்தது. அப்பொழுது மஸ்தான் அக்குறும்பர்களை நோக்கி 'ஆண்மையற்றவன் விலாயத்தை (மகான்தன்மையை) அடைய முடியாது' என்று கூறினர்.

ஒருநாள் அவர் சென்னையில் ஒரு வீதி வழியே சென்று கொண்டிருந்தக்கால் தம் கண்முன் எதிர்ப்பட்ட ரொட்டிக் கிடங்கை அணுகி ஒரு சிமிட்டாவில் நெருப்புத் தருமாறு வேண்டினர். அதன் அதிபன் அவரை நோக்கி நகைத்து 'உம்மைத்தான் மக்கள் பெரிய மஸ்தான் என்று கூறுகின்ருர்களே. நீர் உண்மையான மஸ்தானுக இருப்பின் உமக்குச் சிமிட்டா எதற்கு? கையினுலேயே நெருப்பை எடுக்கலாமே' என்று ஏளனமாகக் கூறிஞன். இதைக் கேட்ட மஸ்தான் அவர்கள் பெரிதும் வெகுண்டு 'நீ உன் வேலையைப்பார். அதிகம் பேசாதே. நாளை இந்நேரம் உன் அடுப்பு இங்கு எரியாது' என்று சமிக்ஞையால் சாபமிட்டுவிட்டு அவ்விடத்தை விட்

டும் அகன்றனர். அவ்விதமே அவன் அடுத்தநாள் திடீரென மாரடைப்பால் மாண்டுவிட்டான். அவனுடைய உலையிலுள்ள தீயும் நீறுபட்டது.

இதன்பின் மஸ்தான் அவர்கள் மக்களுடன் கலந்து உறவாடவும் செய்தனர். தங்கள் கையால் தச்சுவேலை செய்து அதில் வரும் வருமானத்தை ஏழை எளியவர்களுக்கு அறம் செய்து வந்தனர். சிலபொழுது மக்களின் முன் தோன்றுவதும் மற்றும் சில பொழுது மக்களின் கண்களை விட்டு மறைந்து விடுவதுமாக அன்னாரின் வாழ்நாள் சிலகாலம் கழிந்து வந்தது.

சென்னைக்கு மஸ்தான் அவர்கள் முதன் முதலாக வந்த பொழுது ராயபுரத்தில் முட்புதர்களும், மூங்கில் காடுகளும், சப்பாத்திக் கள்ளியும் நிறைந்த ஓரிடத்தில் வந்து தங்கி நாற்பது நாட்கள் யோக நிஷ்டையில் ஈடுபட்டிருந்தனர். இதைக் கண்ட அவ்விடத்தின் உரிமையாளரான பாவாலெப்பை என்பாருக்கு மஸ்தான்மீது அளவற்ற பற்று ஏற்பட்டது. அவர் மஸ்தான் அவர்கள் தங்கித் தவம் செய்ய ஒரு சிறு கட்டடமும் எழுப்பினர். மஸ்தான் அவர்கள் அவ்விடத்திற்கு வந்ததிலிருந்து அங்கிருந்த நச்சுப் பூச்சிகளெல்லாம் அவ்விடத்தை விட்டும் அகன்றுவிட்டன. அந்த முட்புதரினூடேயே மஸ்தான் அவர்கள் மூன்றாண்டுகள் சிறிது பால்மட்டும் அருந்தியவராய் யோக நிஷ்டையில் அமர்ந்திருந்தனர். இச்சமயத்தில் அவர்கள் முகிய்யித்தீன் ஆண்டகையின் பெயரால் ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்தனர். அதற்குச் சென்னையிலுள்ள செல்வர்களும், வறிஞர்களும் நான்முந்தி நீமுந்தி என்று வந்து விருந்துண்டனர். எல்லாரும் விருந்துண்டு முடிந்ததும்

> பரமுத்தன் குணங்குடித் தெருவில்வரும் பவனி
> பார்த்துவருவம் வாருங்கள்

என்ற கீர்த்தனையைப் பாடிய வண்ணம் வீதிகளெல்லாம் சுற்றி இறுதியாக அவர்கள் அங்கப்பநாயக்கன்தெருவிலுள்ள மஸ்ஜிதெ மஃமூர் என்ற பள்ளிவாயிலை வந்தடைந்தனர். அங்கு மக்களெல்லாம் அவர்களைச் சூழ்ந்து அவர்களுக்குப் பெரும் மரியாதை செய்து தங்களுக்காக இறைவனிடம்

இறைஞ்சுமாறு வேண்டி நின்றனர். அவ்விதமே அன்னாரும் செய்துவிட்டு மீண்டும் தம் தபோவனத்தை நண்ணி அங்கு வணக்கத்தில் ஈடுபட்டிருந்தனர். தொழுதவர்களாகவும், நோன்பு வைத்தவர்களாகவும், இறைவனளவிலேயே முற்றிலும் சாய்ந்தவர்களாகவும் இருந்தனர். அவர்களின் தபோவனம் மக்களுக்கு மனஓய்வு தேடும் இடமாக அமைந்திருந்தது. இரவு பகல் எந்நேரமும் மக்கள் அங்குக் குழுமி இருந்தனர். தங்களின் நாட்டங்களை அன்னாரிடம் தெரியப்படுத்தி அவற்றை நிறைவுறப் பெறுவதற்காக மக்கள் கூட்டம் காணிக்கைகளைச் சுமந்து கொண்டு அங்கு வந்து குவிந்த வண்ணமாகவே இருந்தது. அவற்றைப் பெறுவதற்காக அங்கு வந்து குழுமி இருந்த ஏழை எளியவர்களுக்கு மஸ்தான் அவர்கள் அவற்றைப் பகிர்ந்தளித்து வந்தனர். இவ்வாறு பன்னிரண்டாண்டுகள் உருண்டோடின. அதன் பின் மஸ்தான் சாகிபு அவர்கள் ஹிஜ்ரி 1254-ஆம் ஆண்டு ஜமாதியுல் அவ்வல் திங்கள் 14-ஆம் நாள் திங்கட்கிழமை வைகறையில் இம்மண்ணுலகை விட்டு மறைந்து பொன்னுலகை அடைந்தனர். அப்பொழுது அவர்களுக்கு வயது நாற்பத்தேழு. இதனையே செய்கப்துல்காதிறு நெய்னார் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் தாம் பாடிய வாயுறை வாழ்த்தில் பின்வருமாறு வாயாரக் கூறுகின்றார்.

பாவா லெப்பை எனும்பிர பலவான்
காவாந் தோட்டத்தில் கதிநலம் பெறுவான்
மக்கள் உவந்து மனப்பொருத் தம்கொண்டு
எக்காலும் புகழ்பெற இனிதின் நல்கிய
தலத்தினைத் தைக்கா வாகத் தகைத்து
நலத்தொடு கல்வத்து நாட்டிப் புகுந்தார்
அயனம் ஒருமூன்றும் அதனுள் தனித்தும்
பயனுறும் யோகப் பண்பின் இருந்தார்.
அரவம் முதலாய் ஊர்வன அடைபட்டு
உரைவ உணராது உணர்வினின் நின்ற
நிலையே புதுமை நிரம்ப விளக்கக்

கலையே கலையாக் கண்ணொடு வெளிவந்து
ஊங்கும் முரீதின் உயர்வழி அவரது
தாங்கும் காதிரிய்யாத் தன்னை
ஆக்கிய முகிய்யித்தீன் ஆண்டவர் பேர்க்கொரு
தேக்கரும் பாத்திகாச் சிறப்பிற் செய்தார்
நாடின பேர்க்குளக் கருணை நல்கியும்
நினைத்த காரியம் நிறைவேறப் படுத்தியும்
தனைத்தொடர் பவக்கா வனமுறை தொகுத்தும்
சிலபகல் யாரும் தெரிய இருந்தும்
சிலபகல் தெரிந்தும் தெரியா திருந்தும்
பின்னர் தம்மிடம் பிடித்த நோன்புடனே
நன்னர் பயப்ப நயந்து அடைந்தனரால்
கண்ட கண்டிதமாய் நாளினைக் கணித்தும்
கொண்ட கண்டிதமெய் யோகம் கொண்டும்
துண்டிடு கண்டும் தூயபால் சிறிதும்
கொண்ட பொழுதும் கொள்ளாது மிகுதியும்
ஒருவர்க்கும் காணு ஒதுக்கமும் பதுக்கமும்
இருவர்க்கே காணும் ஏகமும் ஆகத்
தூங்காது தூங்கிச் சுகத்தொடு தன்னிலை
நீங்காது இருந்த நிலைமைஎன் சொல்வேன்!
பதையாது இம்முறை பன்னிரண் டாண்டும்
சிதையாது இருந்த சிந்தைஎன் சொல்வேன்!!
அரிது அரிதம்ம! அகம்ஒரு நிலைபடல்
அரிது அரிதம்ம!! அருமைஎன் சொல்வேன்!!!

*பாவாலெப்பையின் தோட்டத்தை அவரின் சந்ததியிடமிருந்து முனியப்ப பிள்ளை பாபு வாங்கினுர். அதன்பின்*

முனியப்பபிள்ளை பாபு இறந்துவிடவே அவரின் மகன் கேசவபிள்ளை மிகவும் நொடித்துப்போய் அவ்விடத்தை விற்க விரும்பினார். ஏற்கனவே திருத்துறைப் பூண்டியி லிருந்து சென்னை வந்து பஞ்சு வாணிபம் செய்துவந்த காதர்மஸ்தான் என்பவர் குணங்குடி மஸ்தான் உயி ரோடிருக்கும்பொழுது அன்னாரை அணுகி அவர்களுக்கு வேண்டிய பணிவிடைகள் செய்துவந்தார். அவரும் இப் பொழுது இறந்துவிடவே அன்னாரின் மனைவி குப்பம் மாள் முன்வந்து கி. பி. 1860 ல் அவ்விடத்தை விலைக்கு வாங்கி அதில் அமைந்துள்ள கட்டடத்தையும் சிறிது விரிவுபடுத்திக் கட்டினார். அவரின் பேரப்பிள்ளைகள் தாம் இன்று சென்னை ராயபுரத்திலுள்ள குணங்குடி மஸ்தான் தறுகாவின் பரிபாலன கர்த்தாக்களாக விளங் குகின்றனர்.

மஸ்தான்சாகிபு அவர்கள் நாளாசரியில் பாடிவைத் திருந்த பாடல்களை அன்னாரின் அன்புறு பக்தர்களில் ஒருவரான சீயமங்கலம் அருணாசல முதலியார் இனிது கேட்க அன்னார் அதற்கு இணங்கி அவரிடம் நல்கினர். அவற்றை செய்கப்துல்காதிர் நெயினார் லெப்பை ஆலிம் அவர் கள் கருத்துச் சிதையாது செப்பனிட்டுக் கொடுத்தனர். இதனையே செய்கப்துல்காதிர் நெய்னார் லெப்பை ஆலிம் அவர்கள் மேற்படி வாயுறை வாழ்த்தில்

சொல்லும் அதுவே பொருளும் அதுவே
புல்லும் தொகையும் புணர்ப்பும் அதுவே
அன்றி ஒன்றும் அமைத்தேன் அல்லன்

என்று அஞ்சுதலோடும், பக்தியோடும் அறைகின்றார்கள். மேலும் குணங்குடி மஸ்தானைத் தம் 'வித்தையிற்றேழன்' என்று அதில் அவர்கள் வெளிப்படுத்திய போதினும், அம் மஸ்தான் சாகிபு அவர்கள்மீது பாடிய ஒருபா ஒருபஃதில்

ஆதியினிடத்து இரந்து அன்பினெடும் என்பிழை
அகன்றொழிய அருள் புரிகுவீர்' என்றும்

வெருஉருவம் உளம் உடைய நுமது அடியார் துயர் [அகல
விழிகருணையால் நோக்கியே
வேதா குணங்குடியின் நாதா அருந்தவ
விநோதா புரந்தருள்கவே

என்று பண்ணிசைத்து தம்மை அன்னாரின் அடியவர் என்றும், எனவே தம்மை ஆண்டருளுமாறும் வேண்டுவதிலிருந்து மஸ்தான்சாகிபு அவர்களின் மகாத்மியம் நன்கு விளங்க வருகிறது.

குணங்குடி மஸ்தான் அவர்களின் பாடல்கள் எளிய தமிழில் உயரிய ஞானக் கருத்துக்களை விளக்கும் அருட்பாக்களாக விளங்குகின்றன. அவற்றில் காணப்படும் சொற்களின் எளிமையும், பொருளின் இனிமையும் ஞான வழியில் ஈடுபட்டுள்ளவர்களைப் பரவசப்படுத்துகின்றன. ஹிஜ்ரி 1207ல் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள குணங்குடி என்ற ஊரில் பிறந்த அன்னார் தம் ஊரின் பெயரை அழகிய முறையில் தம் பாடல்களில் பயன்படுத்தியுள்ளார்.

இணங்கு மெய்ஞ்ஞானப் பேரின்பக் கடலின்
இன்னமு(து) எடுத்து எமக்களிப்போன்
பிணங்கிய கோச பாசமா மாயைப்
பின்னலைப் போர்த்(து) எறிந்திடுவோன்
வணங்கிய தவத்திநோர்க்(கு) அருள்புரிய
வள்ளலாய் வந்த மாதவத்தோன்
குணங்குடி வாழும் முகிய்யித் தீநைம் என்
குருபதம் சிரத்தின் மேற் கொள்வாம்

என்னும் கவியில் 'குணங்குடி வாழும் முகிய்யித்தீனும் என்குரு' என்று அன்னார் கூறும்பொழுது குணங்குடியில் வாழும் என் குருவாகிய முகிய்யித்தீன் என்ற பொருள் படக் கூறவில்லை. அப்படிக் குணங்குடியில் அவருக்கு முகிய்யித்தீன் என்று யாரும் குருவாக இருக்கவு

மில்லை. 'குணங்குடி வாழும் முகிய்யித்தீனும் என்குரு' என்று அவர்கள் கூறும்பொழுது நற்குணங்கள் குடிவாழும் குத்புநாயகம் முகிய்யித்தீன் ஆண்டகையாம் என் குரு நாதர் என்று பொருள்படக்கூறி ஜைலான் நகரில் பிறந்து பகுதாது நகரில் அடங்கப் பெற்றுள்ள அம்மேதகையையே குறிப்பிடுகின்றார்களேயன்றி வேறில்லை.

இவ்விதம் அந்தச் சொற்றொடரை அருமையான முறையில் பயன்படுத்தியே தம் ஆன்மீக குருநாதராகிய முகிய்யித்தீன் ஆண்டகை அவர்கள் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் முன்னே வரவும், அவர்கள் பின்னே வரவுமாகத் தமக்குக் காட்சி நல்கவேண்டும் என்ற கருத்தை உள்ளடக்கி

வரிசை நபி வரிசை மிகவுள்ளநீர் பின் தொடர
வள்ளல் இறசூல் வருகவே
வளரும் அருள்நிறை குணம் குடிவாழும் என்னிரு [கண்
மணியே முகிய்யித் தீனே

என்று பாடுகின்றார்கள்.

உலகை முற்றிலும் துறந்த அந்த மெய்ஞ்ஞானியார் உலகில் எல்லாவற்றையும் துறந்தார். மாடுமனைகளையும், வீடுவாசல்களையும், ஊண், உறக்கங்களையும் துறந்து அன்னார் ஓடிவரும்பொழுது பரதேசிகள் சட்டி எடுப்பதும் தொல்லை என்று தம் கையிலிருந்த சட்டியையும், கீழே போட்டு உடைத்த அன்னாருக்கு நான் என்னும் அகங்காரத்தைத் துறப்பதுதான் பெரிதும் சிரமமாக இருந்தது. எனவே

மெய்யாக நான் எனலும் நான் நான் எனக் [குளறும்
வெட்கம் தனக்கு அழுவனே

என்று அழுது புலம்புகின்றார். மற்றோரிடத்தில்

தான் செத்திருந்து உலக முழுதும் அரசாளும்
தத்துவம் எனக்கருள் புரியவும்
நான் சாமுன் நான் சாவ நாடினேன்
நான் சாமுன் நான்சாவ அருள்புரியவும்

என்று கூறி தான் என்ற அகங்காரத்தைத் தமக்கு நீக்கிய இறைவனின் திருவருளை இறைஞ்சி வேண்டுகின்றார். இவ்வாறு பாடிவரும் பொழுது தஞ்சாவூர் என்ற சொல்லையும் நன்முறையில் முதன்முதலாகப் பயன்படுத்திக் காட்டுகின்றார்.

பக்தியோகம், கர்மயோகம், ராஜயோகம், ஞானயோகம் ஆகியவை அனைத்தும் கைவரப்பெறப் பெரும்பாடுபடுகின்றனர் அன்னார்.

சிவராஜயோகம் தெளிந்த திறத்தினர்க்கு
எவரைச் சரியிடுவது எந்தாய் நிராமயமே

என்று பண்ணிசைக்கின்றனர்.

மேலும் மனோன்மணிக் கண்ணியில் அவர் தம்மைத் தலைவனாகவும் இறைவனைக் காதலியாகவும் வைத்துப் பாடும் கண்ணிகள் அற்புதமாக அமைந்துள்ளன.

பச்சைப் பருப்புமுதல் பருப்பில் பத்துவகை
[கடைவேன்
வச்ச நறு நெய்யுருக்கி வார்ப்பேன் மனோன்
[மணியே
முட்டை பொரிப்பேன் முழுக்கோழி தான்
[பொரிப்பேன்
தட்டைப் பீங்கானில் வைத்துத் தருவேன்
[மனோன்மணியே
ஆட்டுக்கறியும் கொள்வேன் அதில் அனந்தம்
[வகைசமைப்பேன்

கூட்டுக்கறியும் பண்ணிக் கொடுப்பேன்
[மனோன்மணியே

குட்டிக் கறிதானும் குழம்பு பண்ணித் தாளித்தோர்
சட்டிக் கறியேனும் தருவேன் மனோன்மணியே
பால் பழமும் தேனும் பலகார வர்க்கங்களும்
மேலும் மேலும் பரப்பி விடுவேன் மனோன்மணியே

என்று பாடுகின்றனர்.

இவ்வாறு பாடிவரும் மஸ்தான் சாகிபு தம்மீது காதல் கொண்டு தம்மை நாயகனாக ஏற்றுக்கொள்ளுமாறு இறைவனை வேண்டும்பொழுது

என்னைவிட்டால் மாப்பிள்ளைமார் எத்தனையோ
[உன்றனுக்கே
உன்னை விட்டால் பெண் எனக்கு உண்டோ
[மனோன்மணியே

என்று கூறும் அடிகள் அற்புதமாக அமைந்துள்ளன.

மஸ்தான் சாகிபு அவர்களின் பாடல்களிற் சில தத்துவக் கருத்துக்கள் நிரம்பியவையாகவும் மற்றும் சில அறவுரைகள் நிரம்பியனவாகவும் அமைந்துள்ளன. மேலும்

வாழுகிறோம் என்றே வலக்காரம் பேசில் ஐயோ!
ஏழாம் நரகுக்கு இரைகாண் நிராமயமே!!

என்றும்

ஈடெனக்கு யார்என்றே எதிர்பேசும் மட்டியுடல்
நீடூழிகாலம் நிலையோ? நிராமயமே!!

என்றும் இடித்து நம்மனோர்க்கு அவர் அறிவுறுத்திச்செத்துப் போகும் கட்டைகளாகிய நமக்குப் பெருமை எதற்கென்று கூறுமாற் கூறுகின்றார்.

உடம்பாகிய தோற் பாவையை மூச்சு என்னும் கயிற்றால் இறைவன் ஆட்டுகின்றான் என்றும் அந்தக்கயிறு அறுந்து

*படுமுன் ஒவ்வொருவனும் இறைவனை அறிந்துகொள்ள வேண்டுமென்ற கருத்தை*

சூத்திரப்பாவை கயிறற்று வீழுமுன்
சூட்சக் கயிற்றினைப் பாரடா—அதி
சூட்சக் கயிற்றினைப் பாரடா

*என்று அவர் உங்களுக்கும் எனக்கும் அறிவுறுத்துகின்றார். மேலும் இப்பாட்டின் சரணங்களில் உலக வாழ்வின் நிலையாமையையும் உலகத்தில் ஒருவன் தேடும் பொருள்களானவை*

மாத்திரையேனும் எமன் வரும் அப்போது
மற்றொன் றுதவாது உதவாது தவாது

*என்று ஆணித்தரமாக அறைகின்றார்.*

*மஸ்தான் சாகிபு அவர்களின் பாடல்கள் அருட்கவி என்பதற்கு அவற்றின் ஓட்டமே நற் சான்றாகும். வன்மையான மொழிகளால் அமைந்து அவை எவ்விதத் தங்குதடையும் இன்றி வெள்ளப் பெருக்கு போன்று வெளிவருகின்றன. எடுத்துக்காட்டாகப் பின்வரும் கவியைக் கூறலாம்.*

ஐயோ எனைப்போலும் மாபெரும் பாவி இவ்
வகிலத்தில் எங்கும் இலையே
அநியாயம் அநியாயம் என் பெரும் பாதகம்
ஆர்பால் எடுத்தோ துவேன்
மையான கன்னியர் வலைக்குள் அகப்பட்ட
மாபாவி தீபாவி யான்
மருபூபு சுபுகானி யானஉமை நாடாத
மடமை குடிகொண்ட பாவி
பொய்யான வாழ்வதனை மெய்யாக நம்பிஉன்
பொன்னடி மறந்த பாவி

பொல்லார்கள் நேசமே அல்லாது நல்லோர்கள்
புறக்கணித் திட்ட பாவி
னையுமோர் பொய்யுலக ளுகியே உமதடிமை
நாயினும் கடை யாவனே
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகிய்யித் தீனே

இவ்வாறு தம்மை இகழ்ந்து பாடும் மஸ்தான் சாகிபு அவர்கள் ஒருசில செய்யுட்களில் முக்கால் பங்கு அரபிச் சொற்களைக் கலந்தே பாடியுள்ளனர். மேலும் அன்னாரின் கவிகளில் அவர்களின் ஊரின் சூழலில் இன்றும் வழங்கப்படும் சில நடப்புச் சொற்களான மட வாப்பாக்குடிக்கி, வெங்கம் பயல், நாற்றக் கருவாடு, தட்டைப் பீங்கான் முதலியவைகளும் விரவியுள்ளன. மேலும் அன்னாரின் பாடல்களில் நாட்டு வழக்கிலுள்ள எளிய உவமைகளும் சொற்றொடர்களும் நிரம்பி அவற்றை அழகு செய்கின்றன.

கைக்குள் வெண்ணெயை வைத்து நெய்க்கழுத
[பாவி

என்று ஓரிடத்தில் நைந்துருகுகிறார்.

கற்பக விருட்சத்தினடியிலே காஞ்சிரங்
காய்தேடி நின்ற பாவி

என்று அடுத்தஅடியில் கரைந்துருகுகிறார்.

குருடர்கள் யானையைக் கண்ட கதைபோலச்சற்
குருவை அறியாத பாவி

என்று அதற்கடுத்த அடியில் அழுது புலம்புகின்றார்.

மஸ்தான் சாகிபு அவர்களின் பாடல்களில் சில இடைச்செருகல்கள் இடைக்காலத்தில் புகுந்துவிட்டன என்றும் மனோன்மணிக் கண்ணி, நந்தீஸ்வரக் கண்ணி ஆகியவை அவ்வித இடைச்செருகல்களாக இருக்குமென்றும் சிலர் கருதுகின்றார்கள்

ஆதி அந்தம் கடந்த உமையாள்தன் பாதம்
அகண்ட பரிபூரண மாம்ஜயர் பாதம்
சோதி அந்தம் கடந்த கணபதியின் பாதம்
தொழு திறைஞ்சிக் கரம்குவித்துப் போற்றி [செய்து
வாதிஅந்தம் கடந்த நந்திபாதம் என்றும்
வாலை மனோன்மணி அம்மை பாதம் என்றும்
ஓதி அந்தம் கடந்து அண்டம் இரண்டதாக
ஒன்றும் அறியா வறிஞன் உரைசெய்தானே

*என்று மனோன்மணிக் கண்ணியின் இறுதியிலும்*

உமையாளு மையா உவந்தடிமை கொள்ளும் [வண்ணம்
எமையாளு மையா விறையே நந்தீஸ்வரனே

*என்று நந்தீஸ்வரக் கண்ணியிலும் அவர் கூறியிருப்பதைக் கண்டு அவர்கள் அவ்வாறு கருதுகின்றார்கள். ஆனால் மற்றும் சிலர் அவற்றிற்கு நேரிடையான பொருள் கொள்ளக்கூடாதென்றும் அவற்றிற்கு மறைவான பொருளை வைத்தே மஸ்தான் சாகிபு அவர்கள் பாடியிருக்கவேண்டும் என்றும் இயம்புகின்றார்கள். தங்களின் இவ் வாதத் திற்கு ஆதாரமாக செய்கப்துல்காதிறு நெய்னார் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் தாம் பாடிய ஒரு பா ஒரு பஃதின் இறுதியில்*

பெரியோர் கருத்தைப் பெயர்த்தறிய லாக
வுரியோர் எவைக்கும் உரியோர்—பெரியோர்க்குச்
சொல்லும் பொருளும் தொடரா(து) இரண்டாகும்
புல்லும் பொழுதிற் பொருள்

*என்று பாடியுள்ள வெண்பாவையும் எடுத்துக் காட்டுகின்றனர்.*

மஸ்தான் சாகிபு அவர்கள் தமிழில் மட்டும் புலமை பெற்றிருக்கவில்லை. அரபியிலும் பெரும் புலமை பெற்றிருந்திருக்கின்றனர். அவர்கள் அரபியில் பல கவிகள் இயற்றியுள்ளார்கள். அவை ஹிஜ்ரி 1245—ல் எழுதப்பட்டுள்ளன. அவற்றின் தலைப்பில் 'இவை தொண்டிப் பட்டினம் சுல்தான் அப்துல்காதிறு மஸ்தான் சாகிபு, குணங்குடி அவர்களால் இயற்றப்பட்டன' என்று பொறிக்கப்பட்டிருப்பதிலிருந்து அன்னாருக்கும் தொண்டிப்பட்டினத்துக்கும் இடையேயுள்ள தொடர்பு நன்கு தெரியவருகிறது.

இறைவனிடம் வாரத்தில் ஒவ்வொரு நாளும் இறைஞ்சும் இறைஞ்சற் பாக்களாக அவர்கள் பல பாக்கள் இயற்றியுள்ளனர். அவையனைத்தும் ஞானக் கருவூலமாக அமைந்துள்ளன. அவற்றில் சில வரிகள் வருமாறு:

இலாஹீயா இலாஹீயா இலாஹீ
பி பிஸ்மில்லாஹி அஹதின் யா இலாஹீ
இலாஹீ குந்த கன்ஸன் ம∴பி தாத்தின்
அமாஅன் முத்லகாத்தின் யா இலாஹீ
இலாஹீயா பகாஅல் கிபுரியாயி
வசுப்ஹானல் பகாயி வயா இலாஹீ

இவற்றின் பொருள் என்னவெனில் 'இறைவனே, தனியோனாகிய உன்னுடைய திருப் பெயரைக் கொண்டு நான் இதனைத் துவங்குகின்றேன். நீ மறை பொருளாக இருந்தாய்; யாராலும் உணர இயலாத பொருளாக இருந்தாய். நிலையான மகத்துவத்தை யுடைய இறைவனே, உன்னுடைய நிலையான தன்மையை நான் போற்றிப் புகழ்கின்றேன்' என்பதேயாகும்.

மேலும் அன்னார் தம் தாய்வழிப் பாட்டனாராகிய முல்லா ஹுஸைன்மீது அரபியில் சரம கவியும் பாடியுள்ளனர். முல்லா ஹுஸைன் ஹிஜ்ரி 1159-ல் தேவி பட்டினம்

சென்றிருந்தபோது அங்கு இறந்தனர். இறந்த அவர்களின் உடலை வேதாளையிலிருந்து அப்பொழுது அங்குவந்ததோணியில் ஏற்றித்தொண்டிக்குக் கொணர்ந்து, அங்குள்ளபெரியபள்ளிவாயிலில் அடக்கம் செய்யப்பட்டது. இன்றும் அன்னாரின் அடக்க ஸ்தலம் அங்குக் கம்பீரமாகக் காட்சிவழங்கிக்கொண்டுள்ளது. குணங்குடி மஸ்தான் தம் பாட்டனார்மீது பாடிய அச்சரம கவியில் அவருடைய உடல் திறப்புக்காரர் கட்டிய பள்ளியில் அடக்கம் செய்யப்பட்டிருப்பதாகவும் அன்னார் பல விந்தைகள் செய்து காட்டியுள்ளனர் என்றும் கூறியுள்ளனர். குணங்குடி மஸ்தான் திறப்புக்காரர் கட்டிய பள்ளி என்று கூறுவதுதான் இப்பொழுது பெரிய பள்ளிவாசல் என்று வழங்கப்படுகிறது. அந்தச் சரம கவியில் அவர்கள்

வநிஸ்பத ஹாதா ஷெய்கி நஸ்ப முஹம்மதி

என்று கூறியிருப்பதிலிருந்து முல்லா ஹுஸைன் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களின் வழிவழிப் பேரர் எனத்தெரியவருகிறது. மேலும் முல்லா ஹுஸைனின் வம்சாவளியை ஆராயும்பொழுது அன்னார் ஹுஸைன் (ரலி) அவர்களின் வழித்தோன்றல் என்று நன்கு விளங்கவருகிறது. இதிலிருந்து குணங்குடி மஸ்தான், அவர்களின் தாய்வழியிற் பார்த்தோமானால் அண்ணல் நபியவர்களின் வழிவழித் தோன்றல் என்பது வெள்ளிடைமலை. பெரும்பாலான மகான்கள் பாத்திமா என்னும் பெயர் படைத்த மாதரசிகளின் மணி வயிற்றில் தோன்றியது போன்று குணங்குடி மஸ்தான் அவர்களும் பாத்திமா என்னும் ஒரு மங்கையர் திலகத்தின் அருமை மகவாகவே இவ்வவனியில் அவதரித்துள்ளனர். அப்துல்காதிறு என்னும் அழகுசால் திருப்பெயரிடப்பட்ட பலர் வலி(மகான)மார்களாக ஆகியிருக்கின்றனர். இறைவனின் திருவுளப் பொருத்தமோ என்னவோ குணங்குடி மஸ்தான் அவர்களுக்கும் அவர்களின் தாய் தந்தையர்கள் சுல்தான் அப்துல்காதிறு என்றே பெயர் சூட்டியுள்ளனர்.

தந்தை வழியில் பார்த்தோமானால் அன்னாரின் தந்தை நெய்னுமுகம்மது சாகிபு அவர்கள் பொன்னரிய மாலை என்னும் புகழ்ப் பெயர்பெற்ற காவியம் இயற்றிய சீரிய புலவர் மின்னு நூருத்தீன் என்னும் நாவலரின் வழித்தோன்றல் என்று தெரியவருகிறது. மின்னு நூருத்தீன் என்னும் அம்

மேலவர் நபிகள் பெருமானின் இறுதிநாள் அறவுரைகளை யெல்லாம் தொகுத்துப் பொன்னரிய மாலை என்னும் பெயரு டன் ஒரு நூலை இயற்றியுள்ளனர். அந்நூல் இனிமைமிகுந்த செந்தமிழ்க் கவிகளால் நிரம்பியுள்ளது. சான்றுக்காக ஒன் றைக் கீழே தருகிறேன்.

ஆராகிலும் தம்மைப் பெருகக் காணில்
அதுபோல் அவர்க்கிலை பெருங் கேடுதான்
ஓரா தொருவனுக்கே அஞ்சுங்கள்
உலகெலாம் சேர உமக்(கு) அஞ்சுமே
சீராவுள 'கஹுஅத்து'ச் செய்வீராகில்
சீமான் தனமுள்ள சீமானுவீர்
வீராதி வீரமா முறுசல் நபி
விரைந்து மார்பேற்றிக் கொள்ளுமென்றார்

இவ்வித அருமைசால் கவிகளை இயற்றிய அன்னார் கலைக் கடலின் கரை கண்டவர் என்றும் கோவிற் கதவுகள் தாமா கவே திறக்கும்வண்ணம் அறம் பாடிய அற்புதர் என்றும் செய்கப்துல்காதிறு நெய்னார் லெப்பை ஆலிம் அவர்கள் குணங்குடி மஸ்தான் அவர்கள்மீது பாடிய வாயுறை வாழ்த் தில் கூறுகின்றனர்.

மின்னு நூருத்தீன் புலவர் துவக்கத்தில் தவறான வழி யில் ஈடுபட்டு காமப்பித்தராய்த் திரிந்தார். அவருடைய நடை, உடை, பாவனைகளும் இந்துக்களுடையவை போன் றிருந்தனவே யொழிய முஸ்லிம்களுடையவைபோன்றில்லை. அவருடைய தங்கையையோ அக்காலத்தில் மதுரையில் காஜியாராக இருந்த காதி ஹுஸைன் என்னும் பேரறிஞ ருக்கு மணம் முடித்துக் கொடுக்கப்பட்டிருந்தது. பெரிய இசை வல்லுனராக விளங்கிய மின்னு நூருத்தீன் ஒருநாள் தங்கையைப் பார்க்கச் சென்றக்கால் அங்கு யாழ் வாசித் தார். அதைக் கேட்டு மெய்ம்மறந்துபோன அவருடைய தங்கை அரிசியை அரித்து அடுப்பிலிருந்த பானையில் போடு வதற்குப் பதிலாக அடுப்பிலே போட்டுக்கொண்டிருந்தார். இதைக் கண்டு அறிவுத் தெளிவுபெற்ற மின்னு நூருத்தீன்

தம் தங்கையே நாம் இசைக்கும் இந்த யாழின் இசையைக் கேட்டு இவ்வாறு மெய்ம்மறந்து செயலாற்றுவதாயிருந்தால் மற்றப் பெண்கள் என்னதான் செய்யமாட்டார்கள், ஆதலின் இந்த யாழிசையினால் இன்னும் எத்தனையோ பெண்கள் கெட்டுப்போக ஏதுவாகும் என எண்ணி அந்த யாழை அக்கணமே அவ்விடத்திலேயே போட்டு உடைத்து இனிமேல் இசையை ஏறிட்டும் பார்ப்பதில்லை என்று அவ்விடத்திலேயே ஆணையிட்டார். இதனையே செய்கப்துல்காதிறு நெய்னார் லெப்பை ஆலிம் புலவர் அவர்கள் மேற்படி வாயுறை வாழ்த்தில்

அலைவா யுளமருண் டரித்த வரியினை
உலைவாய்ப் பெய்யா தொருபுறம் பெய்யும்
தங்கையைக் கண்டு தகாதென யாழொடு
சங்கீத முயற்சியைத் தகர்த்துவிட் டெறிந்தவர்

என்று கூறுகின்றனர்.

இதன்பின் தீட்சை பெற்று நேர்வழி பெறுவதற்காகத் தம் மைத்துனர் காதி ஹுஸைனிடம் மின்னா நூருத்தீன் புலவர் சென்றக்கால் அன்னாரின் தவறான செய்கைகளைக் கேட்டு அவர்மீது பெரிதும் வெறுப்புற்றிருந்த காதி ஹுஸைன் அவரைக் கண்டதும் தம் காலிலிருந்த செருப்பைக் கழற்றி அவர்மீது வீசி எறிந்தார். அதனைக் காதி ஹுஸைனிடம் சேர்த்து அவரின் நல்லாசியைப் பெற விரும்பிய மின்னா நூருத்தீன் புலவர் அதனைக் கையிலெடுத்தால் காதிஹுஸைன் தாம் அவரை அந்தச் செருப்பாலேயே அடிக்க வருவதாகத் தவறாக எண்ணிக்கொள்வாரோ என்று அஞ்சி அதனைத் தம்வாயால் கௌவிக்கொண்டுவந்து அவரிடம் சேர்த்துத் தம்மை மன்னித்து ஆட்கொள்ள வேண்டுமென்று இறைஞ்சினார். அவ்விதமே ஹாதி ஹுஸைனும் பெருமனத்துடன் மன்னித்து அவருக்கு அறவழியைக் காட்டி ஆட்கொண்டனர். இதனையே மின்னா நூருத்தீன் புலவர் தாம் பாடிய பொன்னரிய மாலையில்

மத்தால் தயிறுடைந்(து) உறுநெய்யான
வாறுபோலவே மூன்றேடறு

பத்தாம் வயதிலே உபாத் திறசூல்
பக்குவப்பட்ட பயணம் தன்னைக்
கத்தா அருள்கொண்ட காதிஹுஸைன்
*கபுசின் பொடிஉளக் கருத்திலொரு
வித்தாய் விளங்கிய விளக்கினாலே
மின்னாநூருத்தீன் விளம்பலுற்றேன்

என்று கூறுகின்றார். மேலும் காதிஹுஸைனுடைய பெருமையைப் பற்றிக் கூறும் பொழுது

புருக்கானின் வேதப் பொருளொழிந்து புன்சொல்
பெருக்கான வல்லமொழி பேசான் —மருக்கானக்
கூடலாங் காதிஉசைன் கொள்கை யெழுதப் பனை
[யின்
ஏடெலாம் போதா தெமக்கு

என்று கூறி வாயாருகிறார்.

இதன்பின் நேர்வழி பெற்ற மின்னாநூருத்தீன் புலவர் தம்முடைய தவறான வழிகளை ஏறிட்டும் பாராது பள்ளி வாசல் செல்வதும், இறைவனை வணங்குவதுமாகத் தம் காலத்தைக் கழித்து வந்தார். ஒருநாள் அவர் ஒரு நீர்த் தேக்கத்தின்முன் அமர்ந்து 'வுலூ'ச் செய்து கொண்டிருந்தக்கால், அவர் முன்பு தொடர்பு கொண்டிருந்த காசி அவ்வழியே பல்லக்கில் சென்றாள். இவரைக் கண்டதும் பெரிய பண்டிதையாகிய அவள் ஏளனச் சிரிப்புடன்

'முன்னே முணுமுணு பின்னே முணுமுணு
என்ன முணு முணுடா மின்னா'

என்று வினவினாள். யார் இவ்வாறு 'அடா' போட்டு ஏளனமாக வினவுவது என்று ஏறிட்டுப்பார்த்த மின்னாநூருத்தீன் புலவர் தம் காமக் கிழத்தி பல்லக்கில் கலகலவெனச் சிரித்தவண்ணம் செல்வதைக் கண்டு

* கபுசு — செருப்பு

தாம் தம் வேதவாக்கியங்களைக் கூறி 'வலு' செய்ததாக வும், மனிதர்களின் முன்னும்பின்னும் வந்து முணுமுணுப் பது ஈ தான் எனவுமான கருத்துக்களை உள்ளடக்கி அவள் அவரை ஒரு தடவை 'அடா' என்று அழைத்ததற்குப் பகர மாக அவளை நான்கு தடவைகள் அடீ என்று அழைத்து சிலேடைப்பட 'ஆமடீ, அல்லவோடி, ஓம் அடீ, ஒக்கு மடீ' என்று சட்டெனப் பதிலுரைத்தனர். அதைக் கேட்ட தும் அத்தாசியின் முகத்தில் ஈயாடவில்லை.

இந்த மின்னு நூருத்தீன் புலவரின் தந்தையின் பெயர் பீர் ராவுத்தர் என்றும், அவரின் தந்தையார் மீரான்கனி அண்ணாவியார் என்றும் தெரியவருகிறது. மீரான்கனி அண்ணாவியார்க்கு இளமையில் கல்வி வராமையால் அவ ரின் தந்தையார் அவரை வீட்டைவிட்டு அடித்துத் துரத்தினரென்றும், அவர் காட்டிற்போய் உறங்கும் பொழுது கிலுறு (அலைஹி) அவர்கள் கனவில் தோன்றி வாயில் உமிழ்ந்தனரென்றும், அதுமுதல் அவர் அறிவுத் தெளிவு பெற்றவராய் அருக்கான் மாலைச் சுருக்கம் முத லிய நூல்களை இயற்றினர் என்றும் தெரிய வருகி றது.

மீரான்கனி அண்ணாவியாரின் தந்தையாரின் பெயர் செய்குக்கனி என்பதாகும். அவரின் தந்தையார்தாம் 'நாளெட்டில் வென்றான்' என்னும் சிறப்புப் பெயர் பெற்ற பீருகான் ஆவார். அவர் அடைபட்ட ஆலயத் தின் கதவுகளைக் கவிபாடி எட்டுநாட்களில் தாமாகவே திறக்கச் செய்வதாக ஆணையிட்டு அவ்விதமே செய்து காட்டியதன் காரணமாக நாளெட்டில் வென்றான் என் னும் சிறப்புப்பெயர் அன்னாருக்குக் கிடைத்தது என் றும் கூறுவர். அவரின் தந்தையார்தாம்

நபிகள்தம் பெருமான் நல்லொளி மேனியில்
தழீஇய பெயரர்தம் மெழீஇய சரிதம்
கனியெனத் தேனெனக் கண்டென இயற்றுபு
காரணத் தொருபெயர் கனகாபி சேக
மாலைஎன் றுக்கிய மாண்புடைப் புலவர்

புவியெலாம் கனக கவிராயர் என்னும்
மெய்வரும் செய்கு நயினூர் கான்......

ஆவார். அவரின் பிறந்தகம் இராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த ராஜகெப்பீரம் என்னும் சிற்றூராகும். கனகாபிஷேகமாலை என்னும் அந்நூலை மதுரை வாழ் கொந்தாலகான் என்னும் வள்ளல் வேண்டிக் கொண்டதற்கேற்ப ஹிஜ்ரி 1058 ல் அவர் இயற்றினூர். அது முப்பத்தைந்து படலங்களும், 2791 திருவிருத்தங்களும் உள்ள பெருநூலாகச் சமைந்துள்ளது. உசைனூர் சகீதான படலத்தில் ஹுசைன் (ரலி) அவர்களின் சிரத்தை மாபாவி ஒருவன் தன் கரவாளால் கொய்து சென்றதும் ஹுசைன் (ரலி) அவர்கள் ஏறி இவர்ந்துவந்த குதிரை போர்க்களத்தில் புகுந்து செய்த சேதங்களைப் பின்வரும் கவியில் அழகாகப் பாடுகின்றூர் கனக கவிராயர்.

கோடை செய்துடன் எழுகோடா கோடிஎண்
கோடையின் இடியொன்றுய்க் கூடி ஆர்த்தெனக்
கோடையார்த்(து) அநேகரைக் கொன்ற தந்தமார்
கோடையாரானை போல் மிதித்தும் கொன்றது.

மேலும் ஹுசைன் (ரலி) அவர்களின் மரணச் செய்தியைக் கேட்டு மக்கள் அடைந்த அவல நிலையைப் பின்வரும் கலைச் சொல்லோவியங்களால் கவினுறத் தீட்டுகின்றூர் அப் பெரும் புலவர்.

வலையினில் படுமான் போலும் கரைபடும் மச்சம் [போலும்
நிலைகெடக் குழியில் வீழ்ந்த நிறக்கரி போலும் [தீயின்
உலையின் வாய் உறுப்படக்கி போலவும் அரவின் [வாயில்
தலையுறு தவளை போலும் பூனைவாய் எலியே [போலும்

ஐயிடை ஈக்கள்போலும் அளற்றிடை வேழம்
[போலும்
வெய்ய தூண்டில் எனும்முள்ளை விழுங்கிய மீன்
[கள் போலும்
ஐயறுமனத்தீயோர் பால் அங்கடன் பட்டோர்
[போலும்
நெய்அழல் மீதிற்போலும் நெஞ்சு நொந்துருகினூர்
[கள்.

இவ்வித அருமை அருமையான கவிகளை யாத்து அவனிக்கீந்த புலவர் மரபின் புலவராகவும் குணங்குடி மஸ்தான் சாகிபு இவ்வுலகில் தோன்றி தம் தாய்வழிப் பாட்டனூராம் முகம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்களின் அறநெறியைத் தம் தந்தை வழிப் பாட்டனூர்களாகிய புலவர் பெருமக்களின் புலமையினுல் உலகில் பறை முழக்கினர். மஸ்தான் என்னும் பார்ஸி மொழியின் பொருளாகிய மையலாகியவர் என்பதற்கேற்ப அன்னூர் இறைவனின்மீது அடங்காக் காதலுற்லு, மையலாகி பித்துப்பிடித்தவர் போன்று அலைந்து திரிந்து அமரத்வம் பெற்ற அருமைக் கவிகளை அவனிக்கு ஈன்று சென்றனர். அவர்களின் உடன்பிறந்தார்களின் சந்ததிகள் இன்று குணங்குடியில் வாழ்ந்துவந்த போதினும், குணங்குடி மஸ்தானின் புகழ்ச் சந்ததிகளாக அன்னூரின் திருப்பாடல்கள் இன்று தமிழ் கூறும் நல்லுலகு முழுவதும் முழங்கி எத்தனையோ மஸ்தான்களை உற்பத்தி செய்து வருகின்றன. மஸ்தான்களின் நாயகமாக விளங்கும் அம்மேதகையின் திருப்பாடல்கள் இன்று இவ்வுலகின் எட்டுத் திக்கும் எதிரொலித்து முரசு கொட்டிக் கொண்டுள்ளன. இன்று எங்குச் சென்ற போதினும்

போவோம் குணங்குடிக் கெல்லோரும்—புறப்படுங்கள்
போவோம் குணங்குடிக் கெல்லோரும்

என்ற இன்ப இசையே முழங்கிக் கொண்டுள்ளது.

# அனுபந்தம் 1

அரபி, பார்ஸி, உர்து ஆகிய மொழிகளிலிருந்து 411 சொற்கள் தமிழில் குடியேறிக் கலந்துள. அவற்றில் சிலவற்றை கீழே காண்க.

| | தமிழ் | அரபி |
|---|---|---|
| 1. | அமுல் | அமல் |
| 2 | அசல் | அசல் |
| 3. | ஆஜர் | ஹாளிர் |
| 4. | கைதி | கைதி |
| 5. | கஜானு | ஹஸானு |
| 6. | மஹஜர் | மஹ்ளர் |
| 7. | ஜாமீன் | ளாமின் |
| 8. | திவான் | தீவான் |
| 9, | தாவா | த:.வா |
| 10. | ஜில்லா | ஸில்லா |
| 11. | தாலூகா | தஅல்லுகா |
| 12. | நகல் | நகல் |
| 13. | வஜா | வள:. |
| 14. | ஜப்தி | ளப்தி |
| 15. | அமீனு | அமீனு |
| 16. | மசோதா | மஸவ்தா |
| 17. | முன்ஸீப் | முன்ஸிப் |
| 18. | வக்கீல் | வகீல் |

| | தமிழ் | அரபி |
|---|---|---|
| 19. | இஞும் | இன்ஆம் |
| 20. | ஷரத்து | ஷரத் |
| 21. | ஷரா | ஷர∴ |
| 22. | ஜாபிதா | ளாபிதா |
| 23. | மாசூல் | மஹ்ஸூல் |
| 24. | வசூல் | வசூல் |
| 25. | மிராசு(தார்) | மீரா∴த் |
| 26. | பிர்கா | ∴பிர்கா |
| 27. | வாரிசு | வாரி∴த் |
| 28. | ஹத்து | ஹத் |
| 29. | பக்கிரி | பகீர் |
| 30. | ரத்து | ரத் |
| 31. | ருஜூ | ருஜூ∴ |
| 32. | ராஜி | ராளீ |
| 33. | லாயக் | லாயிக் |
| 34. | பாக்கி | பாக்கி |
| 35, | தாயத்து | த∴வீஸ் |
| 36. | மராமத்து | முரம்மத் |
| 37. | ரையத்து | ரஈயத் |
| 38. | ஜவாபு | ஜவாப் |
| 39. | பதில் | பதல் |
| 40. | கம்மி | கம்மீ |
| 41, | அல்வா | ஹல்வா |
| 42. | ஷர்பத்து | ஷர்பத் |
| 43. | கேசரி | கீஸரீ |
| 44. | ஜூப்பா | ஜூப்பா |

| | தமிழ் | அரபி |
|---|---|---|
| 45. | கமிஷ் | கமீஸ் |
| 46. | பைஸல் | பைஸல் |
| 47. | தகராறு | தக்ரார் |
| 48. | கடுதாசி | கிர்தாஸ் |
| 49. | ரசீது | ரசீது |
| 50. | தாக்கல் | தாகில் |
| 51. | பசலி | பஸல் |
| 52. | மாமூல் | ம∴மூல் |
| 53. | மாஜி | மாஸி |
| 54. | மைதானம் | மைதான் |
| 55. | உருமாலை | ருமால் |
| 56. | காலி | காலி |
| 57. | வகையரு | வகைரு |
| 58. | தினுசு | ஜினுசு |
| 59. | முலாம் | முலாம் |
| 60. | ஆபத்து | ஆபத் |
| 61. | கிஸ்து | கிஸ்து |

| | தமிழ் | பார்ஸி |
|---|---|---|
| 62. | கச்சேரி | கச்சேரி |
| 63. | கிஸ்தி | கிஷ்தி |
| 64. | குமாஸ்தா | குமாஷ்தா |
| 65. | சலான் | சாலான் |
| 66. | மனு | மனு |
| 67. | தர்காஸ்து | தரஹ்வாஸ்த் |

| | தமிழ் | பார்ஸி |
|---|---|---|
| 68. | தஸ்தாவேஜு | தஸ்தாவேஸ் |
| 69. | ராஜிநாமா | ராஜிநாமா |
| 70 | வாபஸ் | வாபஸ் |
| 71. | பிராது | பர்யாத் |
| 72. | புகார் | புகார் |
| 73. | சிரஸ்தார் | ஷரிஸ்ததார் |
| 74, | சௌகிதார் | சௌகீதார் |
| 75. | டபேதார் | தபஃதார் |
| 76. | கோஷ்பாரா | கோஷ்வாரா |
| 77. | தாசில்தார். | தஹ்ஸீல்தார் |
| 78. | பட்டா | பட்டா |
| 79. | தர்பார் | தர்பார் |
| 80. | ஜமாபந்தி | ஜமஃபந்தீ |
| 81. | யாதாஸ்து | யாத்தாஷ்து |
| 82. | சாவி(பதர்) | ஸாபீ |
| 83 | ஜமீன்தார் | ஸமீன்தார் |
| 84. | ரஸ்தா | ரஸ்தா |
| 85: | கோஷா | கோஷா |
| 86. | பர்தா | பர்தா |
| 87. | சந்தா | சந்தா |
| 88. | நாசூக் | நாஸிக் |
| 89. | தபேலா | தப்லா |
| 90. | நகரா | நகார் |
| 91. | சவாரி | சவாரி |
| 92. | தராசு | தராஸு |

| | தமிழ் | பார்ஸி |
|---|---|---|
| 93. | பயில்வான் | பஹில்வான் |
| 94. | குஸ்தி | குஸ்தி |
| 95. | தம் (மூச்சு) | தம் |
| 96. | கரார் | கரார் |
| 97. | பஞ்சாயத்து | பஞ்சாயத்து |
| 98. | சுமார் | ஷுமார் |
| 99. | சாமான் | சாமான் |
| 100. | குர்சி | குர்ஸீ |
| 101. | தயார் | தையார் |
| 102. | கூஜா | கூஸா |
| 103. | ஷபாஷ் | ஷாபாஷ் |
| 104. | குர்மா | குர்மா |
| 105. | புலவு | புலாவ் |
| 106. | பிரியாணி | பிர்யாணி |
| 107 | ஜாங்கிரி | ஜியாங்கீரி |
| 108. | பூந்தி | பூந்தி |
| 109. | நாஞகத்தா | நாணகதாயீ |
| 110. | பூரி | பூரி |
| 111. | குலாப்ஜான் | குலாப்ஜான் |
| 112. | குல்லா | குல்லா |
| 113. | பைஜாமா | பாய்ஜாமா |
| 114. | சிப்பாய் | சிபாஹி |
| 115. | பாரா | பாரா |
| 116. | ஹவல்தார் | ஹவால்தார் |
| 117. | சுபேதார் | ஸுபாதார் |

| | தமிழ் | பார்ஸி |
|---|---|---|
| 118. | ஜமேதார் | ஜம:.தார் |
| 119. | சர்தார். | சர்தார் |
| 120. | நீலம் | நீலம் |
| 121. | பந்தோபஸ்து | பந்தோபஸ்து |
| 122. | காக்கி | காக்கி |
| 123. | பரவா(இல்லை) | பரவா |
| 124. | ஜல்தி | ஜல்தி |
| 125. | ஜரிகை | ஸர் |
| 126. | மேஜை | மேஸ் |
| 127. | பேஷ் | பேஷ் |
| 128. | ரகம் | ரகம் |
| 129. | மோஸ்தர் | மோஸ்தர் |
| 130. | காகிதம் | காஅஸ் |
| 131. | அலாதி | அலாஹிதா |
| 132. | சிபாரிசு | சிபாரிஷ் |
| 133. | பராரி | பராரி |
| 134. | பைஸல் | பைஸல் |
| 135. | சர்க்கார் | சர்க்கார் |
| 136. | ஷோக் | ஷௌக் |
| 137. | டாறு | டாறு |
| 138. | பூரா | பூரா |

# அனுபந்தம் 2

## 1 புராணம்

சீறாப்புராணம் ... உமறுப்புலவர்
முகிய்யித்தீன் புராணம் ... பத்ருத்தீன்புலவர்
திருக்காரணப் புராணம் ... செய்கப்துல் காதிர்
[நெய்னார்லெப்பை ஆலிம்
புத்குஷ்ஷாம் புராணம் ... ,,
நாகூர்ப் புராணம் ... குலாம்காதிறு நாவலர்
தீன்விளக்க புராணம் ... வண்ணக்களஞ்சியம்
மூசா நபி புராணம் ... முகம்மது நூருத்தீன்
சின்னசீறா ... பனீஅகுமது
[மரக்காயர்
சீறா 2 வதுவால்யூம் ... மொன்னு முகம்மது
[காதிரிசுத்தாரி

## 2 நாயகம்

குத்பு நாயகம் ... செய்கப்துல் காதிர்
[நெயினார்லெப்பை ஆலிம்
இராஜ நாயகம் ... வண்ணக்களஞ்சியம்
ஆரிபு நாயகம் ... குலாம்காதிறு நாவலர்
ஷாதலி நாயகம் ... முகம்மது முகிய்யித்தீன்
[புலவர்

## 3 கலம்பகம்

மக்காக்கலம்பகம் ... செய்கப்துல் காதிர்
நெய்னார் லெப்பை
மதீனக்கலம்பகம் ... ஜவரத்னசாமி
நாகைக்கலம்பகம் ... ஜவாதுப்புலவர்

பகுதாதுக் கலம்பகம் — குலாம்காதிறு நாவலர்
மதீனுக் கலம்பகம் — ,,
குவாலீர்க் கலம்பகம் — ,,
பதாயிகுக் கலம்பகம் — ,,
திருமதீனத்துக் கலம்பகம் — பிச்சை இபுராகீம் புலவர்

# 4 அந்தாதி

நாகையந்தாதி — செய்கப்துல்காதிறு நெயினுர் [லெப்பை ஆலிம்
திருமக்காத் திரிபந்தாதி — குலாம்காதிறு நாவலர்
திருமதீனத்தந்தாதி — பிச்சை இபுராகீம் புலவர்
மதீனத்தந்தாதி — ஜவாதுப்புலவர்
திருநாகூர்த் திரிபந்தாதி — செய்கு தம்பிப் பாவலர்
திருக்கோட்டாற்றுப்
பதிற்றுப் பத்தந்தாதி — ,,
திருமதீனத்து வெண்பா
அந்தாதி ... பிச்சை இபுராகீம் புலவர்
திருமதீனத்து யமகவந்தாதி— ,,
திருமதீனத்துப் பதிற்றுப் பத்தந்தாதி ,,

# 5 திருப்புகழ்

திருப்புகழ் — காசிம்புலவர்
சந்தத் திருப்புகழ் — அப்துல் காதிறுப் புலவர்
முகியயித்தீன் ஆண்டவர்
[திருப்புகழ்—செய்யிது முகியயித்தீன் கவிராஜர்
நவரத்தினத் திருப்புகழ் — அசனுலெப்பை
ஆதமலை திருப்புகழ் — பிச்சை இபுராகீம் புலவர்

# 6 பிள்ளைத்தமிழ்

நபிநாயகம் பிள்ளைத்தமிழ் — செய்யிது அனபியா [சாகிபு
றசூல் நாயகப் பிள்ளைத்தமிழ்— மீருன் சாகிபுப் புலவர்

நத்ஹறொலி ஆண்டவர்கள் பிள்ளைத்தமிழ் —பிச்சை இபுராகீம்புலவர்

நபிநாயகம் பிள்ளைத்தமிழ் — பீர்முகம்மதுப் புலவர்

முகிய்யித்தீன் ஆண்டவர் பிள்ளைத்தமிழ் — ஜவாதுப்புலவர்

முகிய்யித்தீன் பிள்ளைத்தமிழ் — செய்யிது முகிய்யித்தீன் [கவிராஜர்

நாகூர்ப்பிள்ளைத்தமிழ் — ஷாஹுல் ஹமீதுப் [புலவர்

நாகூர்ப்பிள்ளைத்தமிழ் — ஆரிபுநாவலர்

நாகூர்ப்பிள்ளைத்தமிழ் — பிச்சை இராகீம்புலவர்

முகிய்யித்தீன் ஆண்டவர் காரணப் [பிள்ளைத் தமிழ் ... அப்துல்காதிறுப்புலவர்

செய்குதாவூது வலியுல்லா பேரில்...

[பிள்ளைத்தமிழ் ... சொர்ணகவி நயினுமுகம்மது பாவா புலவர்

நபிகள்நாயகம் பிள்ளைத்தமிழ் ... செய்குமீரான் புலவர்

பாத்திமா நாயகி பிள்ளைத்தமிழ்... ,,

கோட்டாற்றுப் பிள்ளைத்தமிழ் ... செய்குதம்பிப் பாவலர்

## 7 மாலை

நவமணிமாலை ... ஐதுறூசு நயினார்ப் புலவர்

கனகாபிஷேகமாலை ... கனக கவிராயர்

திருமணிமாலை ... செய்கப்துல்காதிர் [நெய்னார்லெப்பை ஆலிம்

அடைக்கலமாலை ... அப்துல்காதிறு புலவர்

மிகுராசுமாலை ...

அகந்தெளியுமாலை ... முகம்மது ஹம்ஸாலெப்பை

அதபுமாலை ... சாமுநெயினுலெப்பை

அபூஷஹ்மா மாலை ... செய்தக்காதிப் புலவர்

... சாமுநயினு லெப்பை

இராஜமணிமாலை ... பக்கீறு மதாறுப்புலவர்

கல்வத்துமாலை ... காளை அசன் அலிப்புலவர்

கல்வத்துநாயகம் இன்னிசை மாலை... சதாவதானி செய்கு தம் [பிப் பாவலர்

சுபுஹான மௌலீது மாலை — காளை அசன் அலிப்புலவர்

தமீமன்சாரிமாலை — செய்குலெப்பை

தீதாறுமாலை — செய்கு பீர்முகம்மது

தோகைமாலை — சிகாபுத்தீன் சாகிபு

நஸீஹத்துல் மூமினீன் மாலை — காதர்முகையதீன் புலவர்

பலுலூனசுகாபி மாலை — கொத்தலஹான் புலவர்

பன்னிரண்டு மாலை ... செய்கப்துல்காதிர் [லெப்பை

கோத்திரமாலை ... செய்கப்துல்காதிர் [நெய்னார் லெப்பை

மஹ்பூப் சுப்ஹானிமாலை ... பிச்சை இபுராகீம் புலவர்

முகிய்யித்தீன் ஆண்டவர்மாலை... பிச்சை இபுராகீம் புலவர்

அஜபுமாலை ... குஞ்சுமூசுப்புலவர்

தூதுரையின்மாலை ... ,,

ஸலாத்துமாலை ... ,,

சமுத்திரமாலை — குலாம்காதிறு நாவலர்

பகுதாதுப் பாமாலை ... பிச்சை இபுராகீம்புலவர்

சின்ன ஹதீது மாணிக்கமாலை... ஷாம்ஷிஹாபுத்தீன் வலி

புகாரிமாலை ... காதர் சம்சுத்தீன்புலவர்

பெரிய ஹதீது மாணிக்கமாலை... ஷாம் ஷிஹாபுத்தீன் வலி

பொன்னரியமாலை ... மின்னுநூறுத்தீன் புலவர்

மகிழ்மணிமாலை ... முகம்மது முகிய்யித்தீன் -[புலவர்

மணிமுத்துமாலை ... முகம்மதப்துல்காதிறு

மாணிக்கமாலை ... செய்யிது முகிய்யித்தீன் [கவிராஜர்

முகியித்தீன்மாலை ... பக்கீறுமதாறுப்புலவர்

முதுமொழிமாலை ... உமறுப்புலவர்

நளினமொழிமாலை ... நெய்னுமுகம்மதுப் புலவர்
பெண்புத்திமாலை ... முகம்மது ஹுசைன்புலவர்
காரணமாலை (சீறுநாடகம்)— சேகுதம்பிப்புலவர்
தவுபாமாலை —அஹ்மது மஹதி மவுலாசாகிபு
பிக்ஹுமாலை — காதிறுமுகிய்யித்தீன் அண்ணு [வியார்
ஏகதெய்வ ஸ்தோத்திரமாலை— சையிதுமுகம்மது ஆலிம் [புலவர்
அனபி மதுஹபின் பறுலுமாலை— முகம்மதுமீரா லெப்பை
சரீஅத்துமாலை — செய்கப்துல்காதிர் லெப்பை

தரும ஷபாஅத்துமாலை — செய்கப்துல்காதிறுப்புலவர்
கியாமத் அடையாளமாலை — கருசா உமறுகத்தாபு புலவர்
மகாமதிமாலை — கவிஞர் எம். எம். காதிர்

# 8 படைப்போர்

செய்தத்துப் படைப்போர் ... குஞ்சுமூசுப் புலவர்
இறவுசுல்கூல் படைப்போர் ... ,,
இந்திராயன் படைப்போர் ... அசன் அலிப் புலவர்
இபுனியன் படைப்போர் ... ,,
உச்சி படைப்போர் ... ,,
காசீம் படைப்போர் ... அப்துல்காதிறு [இராவுத்தர்
சக்கூன் படைப்போர் ... வரிசை முகிய்யித் [தீன் புலவர்
வடோச்சிப் படைப்போர் ... ,,
ஹுசைன் படைப்போர் ... காளை அசன் அலிப் புலவர்
தாகிப் படைப்போர் ... அசன் அலிப் புலவர்

# 9 நாமா

நூறுநாமா — செய்யிது அகுமது மரக்காயர்

அலிநாமா — செய்யிது முகம்மது அண்ணாவி [யார்
இபுலீசுநாமா — செய்யிது அபூபக்கர் புலவர்
தொழுகை உறுதிநாமா — சாமுநெய்னு லெப்பை
மிகுராஜுநாமா — மதாறுசாகிப் புலவர்
இறுஷாதுநாமா — ஷாமுனு லெப்பை

# 10 மசலா

நூறுமசலா
ஆயிரமசலா — வண்ணப் பரிமளப் புலவர்
வெள்ளாட்டிமசலா — செய்கப்துல்காதிறு லெப்பை

# 11 அம்மானை

நபி அவதார அம்மானை— கவிக்களஞ்சியப்புலவர்
பப்பரத்தியார் அம்மானை — செய்யிது மீராப்புலவர்

# 12 ஏசல்

நபிநாயகம் பேரில் ஏசற்... [கண்ணிகள் ஷாஹுல் ஹமீதுப் புலவர்
முகிய்யித்தீன் ஆண்டவர்-
பேரில் தாய்மகள் ஏசல்— ,,

# 13 சிந்து

எண்ணெய்ச் சிந்து — மரக்காயர்புலவர்
பூவடிச்சிந்து — காஸிம் அசனலிப் புலவர்
பயஹாம்பர் அவதாரப்பல — மதுரகவி செய்கப்துல் [வர்ணச் சிந்து [காதிறுப் புலவர்

ஒலிநாயகர் அவதாரச் சிந்து—முகம்மது இபுராகீம்லெப்பை
அபுருப ரெத்தின அலங்காரச்சிந்து — பலவித்வான்கள்
கப்பற் சிந்து — ஹம்ஸா லெப்பை

# 14 தாலாட்டு

பஞ்சரத்தினத்தாலாட்டு — காஸீ அசனலிப்புலவர்

# 15 கும்மி

திருக்காரணச் சிங்காரக்கும்மி — மதாறுப்புலவர்
காரண அலங்காரக்கும்மி ... தம்பிசாகிபு புலவர்
கும்மிப்பாட்டு ... காதிறு முகிய்யித்தீன்
சீவிய சரித்திரக் கும்மி ... முகிய்யிதீன் நாவலர்
மெய்ஞ்ஞானக் கும்மி

# 16 கோவை

மும்மணிக்கோவை — குலாம்காதிறு நாவலர்
ஆசாரக்கோவை ... அப்துல் மஜீது புலவர்
[illegible]கோவை — செய்குதம்பிப்பாவலர்
நாகைக்கோவை — ,,

# 17 திருப்பாடற்றிரட்டு

குணங்குடி மஸ்தான் திருப்பாடற்றிரட்டு
ஞானியார் சாகிபு ,,
மோனகுரு செய்குமஸ்தான் ,,
மெய்ஞ்ஞானத் திருப்பாடற்றிரட்டு பீர்முகம்மதுசாகிபு

# 18 பலபாடற்றிரட்டு

| | |
|---|---|
| பலவித்வான்கள் பாடிய | பலபாடற்றிரட்டு |
| செய்கப்துல்காதிர் நெய்னார்லெப்பை | ,, |
| ஐதுறூசு நெயினார்ப் புலவர் | ,, |

# 19 நாடகம்

| | | |
|---|---|---|
| தையார் சுல்தான் நாடகம் | | |
| ,, | — | முகம்மதிபுராகீம் சாகிபு |
| அலிபாதுஷா நாடகம் | ... | வண்ணக்களஞ்சியம் |

# 20 ஞானப்பாடல்கள்

| | | |
|---|---|---|
| திருநெறிநீதம் | தற்கலை | பீர்முகம்மதுசாகிபு |
| பிஸ்மில்குறம் | ,, | ,, |
| ரோசுமீசாக்குமாலை | ,, | ,, |
| மஃரிபத்துமாலை | ,, | ,, |
| ஞானமணிமாலை | ,, | ,, |
| ஞானப்புகழ்ச்சி | ,, | ,, |
| ஞானப்பால் | ,, | ,, |
| ஞானப்பூட்டு | ,, | ,, |
| ஞானக்குறம் | ,, | ,, |
| ஞானரத்தினக் குறவஞ்சி | ,, | ,, |
| ஞானஆனந்தக் களிப்பு | ,, | ,, |
| திருமெய்ஞ்ஞானச் சரநூல் | ,, | ,, |
| ஞான நடனம் | ,, | ,, |
| ஞான முச்சுடர்ப் பதிகங்கள் | ,, | ,, |
| ஞான உலக உருளை | ,, | ,, |
| ஞானசித்தி | ,, | ,, |

| | | |
|---|---|---|
| ஞானத்திறவுகோல் | ,, | ,, |
| ஞானவிகடச் சமர்த்து | ,, | ,, |
| ஞானக்கண் | ,, | ,, |
| மிகுராசு வளம் | ,, | ,, |
| ஞானந்தரத்தனம் | — | அப்துல்கனி |
| வேதபுராணம் | ... | பெரிய நூஹ்வலி |
| மெய்ஞ்ஞானத்தூது | ... | செய்கு முஸ்தபா ஆலிம் |

# 21 பல்வகை

| | | |
|---|---|---|
| நாயகமான்மிய மஞ்சரி | ... | சதாவதானி சேகுதம்பிப் [பாவலர் |
| நீதிவெண்பா | ... | ,, |
| புகழ்ப்பாவணி | ... | அசனுலெப்பை |
| நாகூர் காரணச் சதுர்ப்பிரபந்தம் | ... | அப்துற்—றஹ்மான் |
| குறமாது | | |
| மகுபூபுகாதல் | | |
| மெய்ஞ்ஞானச் சதகம் | ... | முகிய்யிதீன் சாகிபு |
| துஆயிரப்பு | | |
| சீராகீர்த்தனம் | — | செய்யிது அபூபக்கர் புலவர் |
| சொர்க்கநீதி | ... | செய்கப்துல்காதிர் நெயினுர் [லெப்பை |
| மதுரவாக்ய கீர்த்தனுரஞ்சிதம் | — | பீர்முகம்மதுப் புலவர் |
| கையறுநிலை | — | ஆரிபுநாவர் |
| சங்கீத சிந்தாமணி | — | ஷாஹுல் ஹமீது புலவர் |
| திருமண வாழ்த்து | — | உமறுப்புலவர் |
| மழைப்பாட்டு | — | நயினுர்முகம்மது பாவாபுலவர் |
| புலவராற்றுப்படை | — | குலாம்காதிறு நாவலர் |

# அனுபந்தம் 3

## நன்றியுரை

தமிழகம் முழுதும் பொலிவுற்றுச் சிறந்த பல்வேறு புலவர்களின் மறைந்து கிடந்த வரலாறுகளையும், அவர்களின் அமுதூறும் பாக்களையும் தமிழ் மக்களின் முன் தொகுத்துக் கூற முன்வந்த எனக்குப் பல பெரியார்களும், நண்பர்களும், இளவல்களும் உதவிசெய்ய முன்வந்தனர். அவர்களின் உதவியின்றேல் நான் இந்நூலை இத்தகையதாய் வெளிக் கொண்டு வந்திருக்க இயலாது. அவர்களுக்கு நான் என்றென்றும் கடமைப்பட்டுள்ளேன். அவர்களின் பெயர்கள் வருமாறு:

முகம்மது பந்தர் எம். ஜி. முகம்மதலி மரக்காயர், ஷெஊர் எஸ். காதிர்அலி மரக்காயர், கீழக்கரை செ. மு. சையிது முகம்மது ஆலிம் புலவர், மதுரை எஸ். சையிது அஹ்மது (மஹ்தி), எம். ஏ. நெய்னுன் முகம்மதுப் பாவலர், காயல்மாநகரம்புலவர்ம.கு.சையிதுஇபுராஹீம்சாகிபு, பிரபு மு. செ. அப்துர் ரஹ்மான் சாகிபு, எம். கே. எஸ். டி. சையிது இஸ்மாயீல் சாகிபு, செ. இ. புகாரி ஆலிம்சாகிபு, எம்.கே.எஸ். முகிய்யித்தீன்இபுராஹீம்சாகிபு பி.ஏ.பி.எல்., எஸ். எஸ். எம். ஷைகு அலி, எஸ். இ. முகம்மது இக்பால், எம்.கே. அஹ்மது லெப்பை, கே டி.எம். சேகனு லெப்பை. திண்டுக்கல் காதர் மீராப்புலவர், இளையாங்குடி டி. எஸ், இப்ராஹீம் அலி, சென்னை—பெரம்பூர் என். முகம்மது இஸ்மாயீல் சாகிபு, எம். முகம்மது இஸ்மாயீல் சாகிபு, கே. டி. எம். அஹ்மது இப்ராஹீம் சாகிபு பி. ஏ. பி. எல்., இளையாங்குடி பி. என். பி. அப்துர் ரஹீம், மேலப்பாளையம்

ஹாஜி, ஹாபிலு சைகுமீரான்புலவர், அதிரை கே. எஸ். நூர்முகம்மது அண்ணாவியார், மீசல் பள்ளிவாயில் பேஷ் இமாம் க. இ. ச. முகம்மது இபுராஹீம் லெப்பை, ஷெயூர் அ. மூகம்மதுகனி, நாகூர் சித்திஜுனைதா பேகம், காரைக் கால் ரஷீதுப் புலவர், பூவாறு எம். ஏ. சையிது முகம்மதுப் புலவர், புதுமனை எஸ். ஆர். அமானுல்லா பி.ஏ.பி.டி., நாகூர் ஆரிப் நாவலர், பேராசிரியர் கா. அப்துல்கபூர் எம்.ஏ., ஆர். பி. எம். கனி பி. ஏ. பி. எல்., திருச்சி 'மதனீ' சாகிப், மதுரை வி. எம். ஏ. பாச்சாஜான் சாகிபு, சென்னை சர் காஜி விகாயத்துல்லா சாகிபு, மௌலவி எச். எம். ஷம்சுத்தீன் சாகிபு, புலவர் ஆபிதீன், கவிஞர் சாரண பாஸ்கரன், அருப்புக்கோட்டை முகிய்யித்தீன்பிச்சை, கோட்டாறு கவிஞர் எம்.எம். காதிர், குணங்குடி மஸ்தான் தர்காவின் தற்போதைய ட்ரஸ்டி தஸ்தகீர் சாகிபு ஆகி யோர்களாவர்.

இவர்களுள் பி. என். பி. அப்துர் ரஹீம் அவர்கள் எம னேசுவரம், பரமக்குடி ஆகிய ஊர்களுக்குச் சென்று ஜவா துப்புலவரைப்பற்றிய செய்திகளைச் சேகரித்து அனுப்பியும், மீசல் முகம்மது கனி அவர்கள் துப்படைக்காக் கோட் டைக்கே சென்று வண்ணக் களஞ்சியப் புலவர் அடக்கப்பட் டிருக்கும் இடத்தை நேரில் பார்த்து அவரைப் பற்றிய செய்திகளைத் தொகுத்தும், அருப்புக்கோட்டை முகிய்யித் தீன் பிச்சை அவர்கள் எட்டயபுரம் சென்று உமறுப்புலவர் அவர்களைப்பற்றிய செய்திகளைக் சேகரம்செய்தும் அனுப்பி வைத்தனர். முகம்மது பந்தர் எம்.ஜி. முகம்மது அலி மரக்கா யர்அவர்கள் தம் நீண்டநாள் ஆராய்ச்சியின் பயனாகக் கண்ட றிந்த செய்திகளைத் தந்துதவியதோடு இதுகாறும் மக்கள் வெகு ஆவலுடன் தேடித் திரிந்த உமறுப்புலவர் அவர்களின் காலம் பற்றிய அபூர்வச் செய்யுள் ஒன்றையும் தந்துதவினர்.

மேலும் அவ்வூர் இ. ஜி. முகியித்தீன் சாஹிப் அவர்களும், மௌலவி ஹாஜி அப்துல்பாஸித் சாஹிப் (லத்தீபியீ) அவர்களும் மேற்படியூர் உயர்நிலைப் பள்ளி உர்து முன்ஷி ருக்னுத்தீன் அப்ஸர் அவர்களும், தமிழில் விரவிக்கிடக்கும் அரபி, பார்ஸி சொற்களைப் பெரிதும் சிரமப்பட்டுச் சேகரித்து அனுப்பிவைத்தனர்.

கீழக்கரை செ. மு. சையிது முகம்மது ஆலிம் புலவர் அவர்கள் புலவர் மணிகளைப் பற்றித் தமக்குத் தெரிந்த செய்திகளைக் கூறியதோடல்லாது நான் அவர்களைப் பல தடவை வேண்டிக்கொண்டதன்பேரில் தங்களின் வரலாற்றையும் தந்துதவினர்.

மேலும் பேராசிரியர் எம். எம். இஸ்மாயீல் எம்.ஏ.பி.எல்., பேராசிரியர் டாக்டர் மா. இராசமாணிக்கனார் எம்.ஏ.எம்.ஓ.எல்.பி.எச்.டி., பேராசிரியர் அப்துல்காதர் எம்.ஏ.பி.டி., எம். அப்துல் வஹ்ஹாப் சாகிபு எம்.ஏ.பி.டி.எச்., எம். சையிது முகம்மது, மதுரை எஸ். எஸ். அப்துல்லா பி.ஏ., புலவர் செல்வராசனார், சென்னை எம். எஸ். முகம்மது தம்பி, 'மணிவிளக்கு' நிர்வாகி ஏ. கே. அஹ்மது இபுராஹீம், 'முஸ்லிம் முரசு' உதவி ஆசிரியர் எஸ். கே. ஜி. அப்துல்காதிர், துக்காச்சி ஓ. இ. முகம்மதுஷரீப்சாகிபு, கோவிந்தக்குடி ஹமீது சுல்தான், சென்னை இல்லல்லாஹ், எம். ஏ. எம். அஸீஸுர்ரஹ்மான் பி. ஏ. (ஹானர்ஸ்,) செய்துங்கநல்லூர் எம். ஏ. கனி, உத்தமபாளையம் எம். காதர்சுல்தான் பி.ஏ., மதுரைநத்தம் பி. அப்துல் ஜப்பார் பி.ஏ.பி.எல்; ஆகியோர் முஸ்லிம்தமிழ்ப்புலவர்கள்பற்றித் தங்களிடமிருந்த நூல்களைஎனக்கு உதவினர். இவர்களுக்கெல்லாம் என் நன்றி உரித்தாகுக.

இந்நூலில் கூறப்பட்டிருக்கும் புலவர்களின் வரலாறுகள் அனைத்தும் முழுத்தன்மை வாய்ந்தவை என்று நான் கூற

இயலாது. இந் நூலில் கூறப்பட்டிருக்கும் செய்திகளைத் தவிர இன்னும் எவ்வளவோ செய்திகள் மறைந்து கிடக்கலாம். அவற்றைத் தெரிந்தவர்கள் எனக்கு எழுதியனுப்பினால் அடுத்த பதிப்பில் சேர்த்துக்கொள்ளச் சித்தமாயுள்ளேன். தவறுகள் இருப்பின் எழுதியனுப்பினால் நன்றியுடன் மறு பதிப்பில் திருத்திக்கொள்கிறேன்.

நான் இந்நூலில் குறிப்பிட்டிருக்கும் புலவர்களையன்றி இன்னும் எத்தனை யெத்தனையோ புலவர் மணிகளின் வரலாறுகள் மறைந்து கிடக்கின்றன. அவற்றை வெளிக்கொணர இளவல்கள் முன்வரவேண்டுமென்று வேண்டிக்கொள்கின்றேன்.

இறுதியாக மேலே குறிப்பிடப்பட்ட இத்தனை பேர்களையும் எனக்கு உதவி புரியுமாறு செய்து என் எண்ணத்தை இனிதே நிறைவேற்றித்தந்த எல்லாம்வல்ல இறைவனுக்கு நான் மீண்டும் ஒருமுறை என் நன்றியைச் செலுத்திக்கொள்கிறேன்.

அப்துற்—றஹீம்

# அனுபந்தம் 4

## உமறுப்புலவர் அவர்களின் காலம்

*உமறுப் புலவர் அவர்களின் மரபினர்களுள் ஒருவரா கிய திண்டுக்கல் கா. பீ. அப்துல்கரீம் நாவலர் அவர்கள் வீட்டிலிருந்த பரம்பரை வரலாற்றுச் செய்யுட்களிலுள்ள உமறுப் புலவர் அவர்களைப் பற்றிய செய்யுள் இது. இறுதி யாகத்தான் நம்மைக்குக் கிட்டியதால் இங்குப் பொறித்துள் ளோம். வருமாறு:*

ஓராயிரம் ஹிஜிரி யைம்பத்திரண்டு ஷஅபான்
ஒப்பற்ற தேதி ஒன்பதில்
பாராரும் புகழுற்ற நாகலா புரமதில்
பரிமளக் குறைஷிக் குலத்தில்
பேராளன் மாப்பிள்ளை முகம்மது நெயினார்
பிள்ளை யீன்ற கவிஞன்
சீராளன் உமறு அறுபத்து மூன்றெட்டில் *
சேர்ந்தான் சுவர்க்க நலமே.

**இங்கு 'எட்டில்' என்பது எட்டய புரத்தில் என்பதைக் குறிக்கும்.*

*இதில் உமறுப் புலவர் அவர்கள் ஹிஜ்ரி 1052—ஆம் ஆண்டு ஷஃபான் திங்கள் 9-ஆம் தேதி ஆகிய ஒப்பற்ற நன் னளில் நாகலாபுரத்தில், வாசனைப் பொருள் விற்கும் குறை ஷிக்குலத்தில், மாப்பிள்ளை முகம்மது நெய்னார் பிள்ளையின் மகனாகத்தோன்றி, 63 ஆண்டு காலம் இவ்வுலகில் வாழ்ந்து ஹிஜ்ரி 1115-ஆம் ஆண்டில் எட்டய புரத்தில் வைத்து விண்ணுலகெய்தினர் என்பது அறியக் கிடக்கின்றது.*